# ASHTANGA HRIDAYA

A Compendium of Ayurvedic System of Medicine

OF ACHARYA VAGBHATA

TRANSLATED INTO TAMIL

BY

Ayurveda Bhushan

Pandit M. DURAISWAMI AIYANGAR, A. K. A. C.

*Diplomaed Ayurvedic Medical Practitioner, Chief Physician-in-Charge,*
*K. P. D. Ayurvedic Hospital, Editor of the "Vaidya Kalanidhi", The Tamil Medical J*
*Translator of "Sarngadhara Samhita", "Kadambari",*
*"Megha Sandesa", &tc., &tc., and Vice-President, All-India Ayurveda Mahamand*

---

**VOL. II.**

CHIKITSA AND KALPA STHANAMS.

WITH FULL NOTES.

---

MADRAS:

**THE "VAIDYA KALANIDHI" OFFICE.**

1920.

# அஷ்டாங்க ஹ்ருதயம்

**ஆசார்ய வாக்படரால்**

ஸம்ஸ்கிருதத்தில் இயற்றப்பட்ட பிராசீன வைத்தியக் கிரந்தத்தின்

தமிழ் மொழி பெயர்ப்பு.



ப்ளோமா என்னும் அதிகாரப்பத்திரம் பெற்ற ஆயுர்வேத சிகித்ஸகரும், சென்னை
எஸ். கே. பி. டி. ஆயுர்வேத தர்ம வைத்தியசாலையின் தலைமை வைத்தியரும்,
"வைத்தியகலாநிதி" யென்னும் தமிழ் வைத்தியப் பத்திரிகையின் ஆசிரியரும்,
"சார்ங்கதர ஸம்ஹிதை," "காதம்பரீ" "மேகஸந்தேசம்"
முதலிய ஸம்ஸ்கிருதக் கிரந்தங்களை மொழி பெயர்த்தவரும்,
நிகில பாரத ஆயுர்வேத மஹாமண்டலத்தின் உப
அக்கிராஸனாதிபதியுமான

ஆயுர்வேத பூஷணம்
பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார் ஏ. கே. ஏ. ஷி.
அவர்களால் மொழிபெயர்க்கப் பெற்றது.
மேற்படியரால் இயற்றப்பெற்ற
விரிவான டிப்பணியுடன் கூடியது.

சிகித்ஸா-கல்ப ஸ்த்தாநங்கள்.



[இரண்டாம் புத்தகம்.]



சென்னை:
"வைத்திய கலாநிதி" ஆபீஸ்.
1920.

பெரும்பாலும் கபதோஷத்தில் ஆரம்பித்து, அப்பால் பித்தம் அல்லது வாததோஷம் வரையிலும் ஸம்பந்தித்திருப்பது இயல்பு. 1,1½.

மதாத்யயத்திற்குச் சில ஸமயம் மதுபானமே பரிஹாரம்.

ஹீநயோகமாகவோ, மித்யாயோகமாகவோ, அதியோகமாகவோ மதுபானம் செய்து யாதொரு வியாதி உண்டாகின்றதோ, அது அதே மத்யத்தை ஸம அளவாக உபயோகிப்பதால் நிவ்ருத்தியாகும்; மத்யம் விஷத்திற்குள்ள குணங்களைப் பெற்றிருப்பதால் இங்ஙனம் சிகித்ஸை செய்வது உசிதமாகும். ஆனால் தீக்ஷ்ணம் முதலிய குணங்கள் விஷத்தில் மிகவும் அதிகரித்திருக்கின்றன; ஆகவே ஒருவித விஷத்தின் ஸம்பந்தத்தினாலான கோளாறுக்கு மற்றொருவித விஷம் தேவையாகும்,[1] 2-3½.

மிதமிஞ்சிய மதுபானத்தினால் மதாத்யயம் உண்டாகும் வகை.

இயற்கையிலேயே தீக்ஷ்ண குணமும், உஷ்ண வீர்யமும், குடலிற் சென்று புளித்துக் காந்தலை யுண்டு பண்ணும் தன்மையுமுள்ள மத்யத்தை மிதமிஞ்சிக் குடிப்பதால் குடலிலுள்ள அன்னரஸ நீரானது எரிக்கப்பட்டு க்ஷாரத் தன்மையை அடைந்துவிடுகிறது. அவ்விதம் காந்தி விகாரமடைந்த அன்னச்சத்தானது அக்னி மாந்த்யம், நாவறட்சி, மூர்ச்சை, ஜ்வரம், தேஹத்தின் உட்புறத்தில் அழற்சி, தலைச்சுற்றல் இக்கோளாறுகளை யுண்டுபண்ணும். மத்யபானத்தினால் தூண்டப்பட்டு மேலோங்கிய ஆமதோஷத்தினால் ஸ்ரோதோமார்க்கங்களில் வாயு தகையப்பட்டுப் போகும்; அவ்வாயுவானது சிரஸ்ஸிலும், அஸ்ந்திகளிலும், ஸந்தி பாகங்களிலும் மிகக் கடுமையான வேதனையை உண்டு பண்ணும். 4-6.

மதாத்யயத்திற்கு மதுபானமே பரிஹார முறை.

ஆம விகாரங்களுடன் கூடிய அவ்வித மறுபான ஸம்பந்தமான தோஷம் பக்குவ நிலைமை யடைந்ததும் உணவு முதலியவற்றில் விருப்பம் ஏற்பட்டு தேஹத்திலும் இலாகவமுண்டானால் நன்கு முறைப்படி பக்குவம் செய்யப்பட்ட மதுவையே அளவறிந்து உபயோகிக்க அவ்விகாரங்கள் ஒழியும். க்ஷாரமானது அவ்வஸ்துவின் சேர்க்கையினால் எளிதில் மதுரத்தன்மையைப் பெறுகின்றது. அவ்விதம் மதுரத்தன்மையை யுண்டுபண்ணும் அம்லவஸ்துக்களுள் மத்யம் சிரேஷ்டமானது. தோஷங்களைக் கழித்துத் தள்ளுவதற்கும் போதுமான சக்தியுடையது. முற்கூறிய தீக்ஷ்ணம், உஷ்ணம் முதலிய வீர்யாதிகளாலும், தீபநம் முதலிய குணங்களாலும், அடிக்கடி உபயோகித்து ஸாத்மியமாகப் போயிருக்கும் தன்மையினாலும் அந்த மத்யமே இப்பிணியாளிக்குக் கோளாறடைந்துள்ள தாதுக்களைச் சரியான நிலைமைக்குக் கொண்டுவருவதிற் சிறந்த வஸ்துவாம். 7-9.

மதாத்யயம் ஔஷதஸேவையால் சாந்தமாகும் கால அளவு.

மதாத்யயத்தைப் போக்குவதற்கு ஏழு நாட்களாவது எட்டு நாட்களாவது ஔஷதம் உபயோகிக்க வேண்டும். சரீரத்திலும் விபரீதமான மார்க்கங்களில் வியாபித்துள்ள மத்யமானது இவ்வளவு காலத்திலேயே பக்குவமடைந்து ஜீர்ணமாய்விடும். 10.

ஏழெட்டு நாட்களுக்குப் பிறகும் தொடர்கிற மதாத்யயத்திற்கு சிகித்ஸை.

மதாத்யயம் இங்ஙனம் ஏழெட்டு நாட்கள் பரிஹார முறையைச் செய்தும் நிவ்ருத்தியாகாமல் தொடருமானால், அப்பிணியாளிக்கு அவனது நிலைமைகளுக்கு ஏற்ற ஔஷதங்களைப் பக்குவம் செய்து உபயோகிக்க வேண்டும் 11.

1. விஷத்திற்கும் மதுவுக்குமுள்ள தீக்ஷ்ணாதி குணங்களைப்பற்றி முதற் புஸ்தகத்தில் 342-ம் பக்கம் பார்க்க.

அவற்றுள் வாததோஷம் மேலோங்கிய மதாத்யயத்தில் அடியில் வருமாறு சிகித்ஸை செய்ய வேண்டும். (1) கொடிமாதளை, புளி, இலந்தை, மாதளை, ஓமம், குரசாணியோமம், கொட்டைக்கரந்தை, ஜீரகம், த்ரிகடு, த்ரிலவணம், இஞ்சி, சூலத்தில் குத்தி வாட்டியெடுத்த இறைச்சிகள், பசுமையான கீரைகள், ஸ்நேஹம் கலந்த மாப்பண்டங்கள் இவற்றோடு மாப்பண்டங்களாலான மத்யத்தைக் கொடுக்கலாம். (2) உஷ்ண வீர்யமும், ஸ்நிக்த்தகுணமும், அம்ல லவண ரஸங்களும் நிரம்பியவைகளும், கொழுக்கச் செய்யுங் குணமுடையவைகளுமான மாம்ஸரஸங்களும் ஹிதமானவையாம். மாம்பழம், காட்டு மாம்பழம் இவற்றின் கதுப்புகளைக் கொண்டு பக்குவம் செய்யப்பெற்ற ராக காண்டவங்களும்[1] இப்பிணியாளருக்கு ஏற்றவையாகும். மிருதுவாகவும், விசித்திரமாகவும், உண்பதற்கு உவப்பாகவும் பக்குவம் செய்யப்பெற்ற கோதுமைப் பணியாரங்களும், உளுந்துப் பணியாரங்களும் ஏற்றவையே; இஞ்சியின் பிஞ்சு, முதிர்ந்த இஞ்சி, காராமணி, சுக்தம்,[2] மாம்ஸம் இவைகளடங்கியதும், நறுமணம் பொருந்தியதும், இலவணரஸம் கலந்ததும், குளிர்ச்சியாயிருப்பதும், மிகப் பழகியதுமான அச்சவாருணி யெனப்படும் அச்ச ஸுரையும்[3] அநுகூலமானது; மாதளம்பழ ஸ்வரஸமும், ஹ்ருஸ்வ பஞ்சமூல க்வாதமும்[4], சுக்கு, கொத்தமல்லிவிதை இவற்றின் கஷாயமும், தெளிவான மோர்-ஸுக்தம்-[5] தண்ணீர் இவற்றாலான காடியும் ஹிதமானவையாம்; அப்யஞ்ஜநம், நலங்குப்பொடி முதலியதைத் தேய்த்தல், ஸ்நாநம் செய்தல், வெப்பந்தரக்கூடிய கனமான போர்வையைப் போர்த்தல், அகிற்கட்டையை எரித்து அதிலிருந்தெழும்பும் அடர்த்தியான தூமத்தைப் பிரயோகித்தல், அகிற்கட்டையின் சந்தனக்குழம்போடு குங்குமப் பூவையும் கலந்து கனமாக தேஹத்தில் பூசுதல் என்கிற இவைகளும் அநுகூலம் தரும். பருத்த ஸ்தனங்களோடும், துடைகளோடும், கடிப்ருஷ்டங்களோடும் விளங்கும் மனதுக்கினிய மங்கையர்கள் யௌவனப் பருவத்துக்கு இயல்பான உஷ்ணம் பொருந்தி திரண்டுருண்ட அங்கங்களைப் பெற்றவர்களாய், ஆனந்தத்துடன் ஆலிங்கனம் செய்து, வாத மதாத்யய ரோகியின் தேஹத்தைப் பிடித்து சுகமாக மர்த்தனமும் செய்யலாம். 12—18½.

வாத மதாத்யய சிகித்ஸை

பித்தம் உபரியாயுள்ள மதாத்யயத்தில் சர்க்கரையினாலாகிய மத்யத்தை அதிக ஜலம் சேர்த்து விளாவி, சிறிது தேனும் கலந்து உபயோகிக்கலாம். மாதளம் பழம், பேரீச்சம்பழம், பிரப்பம்பழம், திராக்ஷை, ஈச்சம்பழம் இவற்றின் சாற்றோடும் அவ்வித மத்யத்தைப் பருகலாம். அங்ஙனமே மாதுளஞ்சாறு முதலியதோடு கூடிய பானகத்தையும் சர்க்கரை, மாவின் தெளிவு நீர் இவற்றைக் கூட்டி, நன்றாகக் குளிரச்செய்து உட்கொள்ளலாம். மதுர த்ரவ்ய வர்க்கத்தைச் சேர்ந்த வஸ்துக்களைக் கஷாயமிட்டு, அக்கஷாயங்களோடு மத்யத்தைக் கலந்து, சிறிது தேனும் கூட்டி பானம் செய்யலாம். முயல், வெள்ளாடு, வெண் தித்திரி யென்னும் பறவை இவற்றின் மாம்ஸ ரஸங்களோடும், சிறுகாராமணி, பயறு, நெல்லிக்கனி, புடல், மாதளை இவற்றின் இரஸங்களோடும், சம்பா அரிசி

பித்த மதாத்யய சிகித்ஸை.

1. ராக-காண்டவங்கள்—முதற்புத்தகம் 21-ம் பக்கம் பார்க்க.

2. சுக்தம்-முதற் புத்தகம் 42-ம் பக்கம் பார்க்க.

3. அச்ச ஸுரை-முதற் புத்தகம் 19-ம் பக்கம் பார்க்க.

4. ஹ்ருஸ்வ பஞ்சமூலம்-முதற் புத்தகம் 64-ம் பக்கம் லகுபஞ்ச மூலத்தைப் பார்க்க.

5. ஸுக்தம்-சுக்தம்.

அன்னத்தையும் காரரிசி அன்னத்தையும் புஜிக்கலாம், நாவறட்சியும் உடலழற்சியு முள்ள மதாத்யய ரோகியானவன் குளிர்ந்த ஜலத்தையாவது, அதிக கருப்பஞ் சாறு கலந்த மதுவையாவது, திராக்ஷையின் சாற்றையாவது பானம் செய்து இடம் விட்டுப் பெயர்ந்த கப பித்தங்களைக் கிளப்பி வாந்தி செய்துவிடவேண்டும் பிறகு தர்ப்பணம் முதலிய ஸம்ஸர்கீ[1] என்கிற முறையும் மிகவும் அனுகூலமாம்; அவ்விதம் செய்ய மிச்சமுள்ள தோஷங்களைப் பக்குவம் செய்வதற்கான ஜாடராக்னி விருத்தியடையும். பித்த மதாத்யயத்தில் காஸமும், இரத்தம் துப்புதலும், விலாப்பக்கங்கள், ஸ்தனங்கள் இவற்றில் நோவும், அழற்சியோடு நாவறட்சியும், இருதயத்திலும் மார்பிலும் ஒருவாறுகுமட்டலும் உண்டாகுமாஞல் சீந்திற்கொடி, பத்ரமுஸ்தை யென்கிற சிறுகோரைக் கிழங்கு இவற்றின் ஸ்வரஸத்தில் சுக்த்தையும் சேர்த்து உட்கொள்ளலாம்; தித்திரி யென்னும் சிறு பக்ஷியின் இறைச்சியை உணவாகவும் கொடுப்பது நலம். வாதமும் பித்தமும் அதிகரித்து மிகக் கடுமையான நாவறட்சி யுண்டாயிருக்குமாயின் தோஷங்களை ஒழுங்கான வழியில் கொண்டு வரக்கூடியதும், குளிர்ச்சி பொருந்தியதுமான திராக்ஷா ரஸத்தைப் பானம் செய்யக் கொடுக்கலாம்; இது ஜீர்ணமான பிறகு இனிப்பும் புளிப்பும் கலந்த வெள்ளாட்டின் மாம்ஸ ரஸத்தோடு உணவுகளை யுண்ணலாம். மதாத்யயத்திஞல் நீர் வெட்கை யுண்டாகையில் தேஹத்திலுள்ள மேதஸ் என்னும் கொழுப்பைக் காப்பதற்காகச் சொற்ப அளவான மத்யத்தில் அதிக தண்ணீரை விளாவி அதைப் பருகலாம்; கோரைக் கிழங்கு, மாதளை, பொரி நெல் ஊறிய ஜலம் இவற்றையாவது, நரிப்பயறு, இடி கொள்வோர் இவற்றின் கஷாயத்தையாவது, பேய்ப்புடல், அல்லிக்கிழங்கு இவற்றின் கஷாயத்தையாவது, இயற்கையிலேயே குளிர்ந்த தண்ணீரையாவது பருகலாம். மதுபானத்தை மிதமிஞ்சி செய்வதால் தேஹத்திலுள்ள நிர்மலமான தாது க்ஷீணமடைய, உடற்சூடு ஓங்கி யதிகரிக்க, எவன் தொண்டையும், உள் தவடைகளும், உதடுகளும் உலர்ந்து நாக்கை யிழுத்துக் கொண்டு துடித்து வருந்துகிருஞே, அவனுக்கு இரவில் திறந்த வெளியிற் காற்றில் வைத்திருந்த குளிர்ந்த நீரைக் கொடுத்துப் பருகச்செய்யலாம். இலந்தம்பழம், மாதளம் பழம், புளி, காடி, காடியின் தெளிவு நீர் இவ்வைந்தும் பஞ்சாம்லம் எனப்படும்; இப்பஞ்சாம்லத்திஞல் வாயின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் பூச்சிடலாம்; இது உடனே நாவறட்சியைப் போக்கும். மதாத்யயத்திஞல் ஸம்பவித்த அவ்வுஷ்ணமானது பித்தத்திஞலும் உஷ்ணத்திஞலும் இன்னும் அதிகரித்து சர்மத்தின் மீது விசேஷமாகப் பரவி கொடிய அழற்சியையுண்டுபண்ணும்; இதில் மிகவும் குளிர்ச்சி பொருந்திய வஸ்துக்களைக் கொண்டு சீதோபசார முறையை நிறைவேற்ற வேண்டும்; அவ்விதம் செய்தும் தாபம் அடங்காமற்போஞல், ரோஹிணீ யென்கிற ஸிரையைக் கீறி இரத்த மோக்ஷணம் செய்யலாம். 19—33.

கப மதாத்யய சிகித்ஸை.

(1) கபம் மேலோங்கிய மதாத்யயத்தை வமனத்திஞலும் லங்கனத்திஞலும் பரிஹரிக்கவேண்டும். (2) சுக்கு, மல்லிகை, வெட்டிவேர், காஞ்சொறி இவற்றுள் ஏதேனும் ஒன்றின் கஷாயத்தை நன்கு குளிரச்செய்து குடிக்கலாம் (3) ஆமதோஷம் நீங்கி பசியுள்ளவனுக்கு ஏற்ற காலத்தில் அதிக தேன் சேர்த்து சர்க்கரையிஞலான மத்யத்தையா

1. ஸம்ஸர்கீ - இப்புத்தகத்தில் 14-ம் பக்கம் பார்க்க.

வது, நன்றாகப் பழகிய திராக்ஷாஸவத்தை யாவது பருகக் கொடுக்கலாம்; ரூக்ஷமாகவும் தர்ப்பண குணமுள்ளவையுமான சரக்குக ளோடு கூடியதும், ஓமம் சுக்கு இவை சேர்ந் ததுமான அரிஷ்டத்தையாவது ஸீதுவையா வது உட்கொள்ளச் செய்யலாம். (4) உஷ்ண வீர்யமும் கடுரஸமும் கலந்து, சிறிது நெய் சேர்த்து, மிகவும் திரவமாகப் பக்குவம் செய் யப்பெற்ற சொற்ப அளவான குளுத்த யூஷ மென்னும் கொள்ளுக் குழம்போடு யவான் னத்தையும் கோதூமான்னத்தையும் புஜிக்கச் செய்யலாம். (5) புளிவஞ்சி, புளி, புடல், த்ரி கடு, மாதளை இவைகளைக் கூட்டி பக்குவம் செய்த உலர்ந்த முள்ளங்கியின் கஷாயத்தோ டாவது, செம்மறியாட்டின் மாம்ஸரஸத் தோடாவது ஜாங்கல ஜந்துக்களின் மாம்ஸ ரஸத்தோடாவது போஜனம் செய்விக்கலாம். (6) சுக்கு, மிளகு, ஈரமான இஞ்சித்தாறு இவைகளை மிகுதியாகக் கூட்டி, கொடிமாதளை யின் சாறு முதலியவற்றால் அம்லமாகச் செய்து, ஏதேனும் தகுந்த ஸ்நேஹத்திற் சேர்த்துப் பொரித்து ஈரப்பசை யற்றதாகச் செய்து, மூங்கிற்குருத்து - பெருங்களாக்காய் இவற்றையும், பசுமையான கருவேப்பிலை முத லிய வாஸனையிலைகளையும் சேர்த்து, நற்சுவை யதிகரிக்குமாறு அதிக அஷ்டாங்க லவணத் தையும் கூட்டி விதம் விதமான முறைகளில் கடைந்து பக்குவம் செய்யப்பெற்றதான மாம் ஸத்தை அவரவருடைய ஜாடராக்னியின் நிலைமைக் கேற்றவாறு புஜித்து, மிகப் பழகிய மாதவம் என்கிற[1] மத்யத்தைப் பருகலாம். 34—40½.

**அஷ்டாங்க லவணம்.**

சர்க்கரை, ஸௌவர்ச்சல லவணம், ஜீரகம், புளி, புளிவஞ்சி இவை வகைக்கு ஒரு பங்கு, இலவங்கப் பட்டை, ஏலம், மிளகு இவை வகைக்கு அரைப்பங்கு, இவற்றைச் சேர்த்து இடித்து வைத்துக்கொள்ளவும். இது அஷ் டாங்க லவணம் எனப்படும். இது கபாதிக மான மதாத்யயத்தில் ஸ்ரோதஸ்ஸுகளைச் சுத்தம் செய்வதற்கும், ஜாடராக்னியை விரு த்தி செய்வதற்கும் அனுகூலமான ஔஷதம். 41, 42.

**கபமதாத்ய யத்தைத் தணியச்செய்யு முபாயங்கள்.**

ரூக்ஷமாகவும் உஷ்ண வீர்யமாகவு முள்ள பூச்சுகளாலும், அக்குண முள்ள நீர்களில் ஸ்நானம் செய்வதாலும், அத்தகைய போஜனங்களாலும், லங்கன த்தினாலும், சிற்றின்பத்திற் பற்றுள்ள ஸ்தீ ரீகளோடு கூடுவதாலும், இரவிற் கண் விழிப் பதாலும் கபாதிகமான மதாத்யயம் சீக்கிரத் தில் தணிந்து விடும். 43, 43½.

**ஸங்நிபாத மதாத்யய சிகித்ஸை.**

தனித்தனியே ஒவ்வொரு தோஷமும் மே லோங்கி யிருப்பதால் ஸம்ப விக்கும் மதாத்யயத்திற்கான சிகித்ஸைகள் கூறப்பட் டன. அச்சிகித்ஸா கிரமங் களையே மிகுந்துள்ள மற்றப் பத்துவிதமான ஸந்நிபாத மதாத்யயங்களிலும் அததற்கேற்ற வாறு பகுத்தறிந்து நிறைவேற்ற வேண் டும்.[1] 44½.

---

1. தேனைக்கொண்டு பக்குவம் செய்யப்பட்ட மத் யம் மாதவம் எனப்படும்.

1. இதற்குமுன் வாதாதிகமான மதாத்யயம், பித்தாதிகமான மதாத்யயம், கபாதிகமான மதாத்யயம் என்று கூறப்பட்டவைகளை யெல்லாம் வாதம் அதி கரித்த ஸந்நிபாதம், பித்தாதிகமான ஸந்நிபாதம், கபாதிகமான ஸந்நிபாதம் என்று முறையே ஸந்நி பாத ஸம்பந்தமான மதவிகாரங்கள் என்றறியவும். வாதாதிகமான ஸந்நிபாத மதாத்யயத்திலும் பித்தாதி கமான ஸந்நிபாத மதாத்யயத்திலும் கூறப்பட்டுள்ள சிகித்ஸைகளே வாத பித்தாதிகமான ஸந்நிபாதம தாத்யயத்திலும் செய்யவேண்டியவையாம். இவ்விதமே மற்றவைகளிலும் என்றறிக.

பத்துவிதமான ஸந்நிபாத மதாத்யயங்களாவன:— (1) ஒரு தோஷம் அதிகமாகவும் இரண்டு தோஷங் கள் மத்யமமாகவும் பிரகோபித்த மதாத்யயம். (2) இரண்டு தோஷங்கள் அதிகரித்தும் ஒரு தோஷம் மத்யமமாகவுமுள்ள மதாத்யயம். (3) ஒரு தோஷம்

எல்லா மதாத்யயங்களுக்கும் ஏற்ற ஔஷதம்.

இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, திப்பிலி, மிளகு, ஜீரகம், கொத்தமல்லி விதை, ஈச்சம்பழம், இலுப்பைப்பூ, ஏலக்காய், தேவதாரு இவற்றின் கஷாயத்தில் சர்க்கரை சேர்த்து, விளாம்பழச்சாற்றையும் கூட்டி, கர்ப்பூரத்தினால் வாஸனையேற்றி பக்குவம் செய்யவும். இப்பானகம் இருதயத்திற்கு ஹிதமானது ; எல்லா மதாத்யயங்களிலும் பானம் செய்யத்தக்கது. நாக்கில் நற்சுவையையும் அக்னி தீபனத்தையும் உண்டு பண்ணும். 45—46½.

மதாத்யயத்தில் ஹர்ஷணக்ரியை ஹிதமானது.

மத்யமானது மனதைக் கலக்காமலாவது, தேஹத்தைச் சிரமிக்காமலாவது மதாத்யயத்தையுண்டு பண்ணுவதில்லை ; ஆகவே மதாத்யயத்தில் மனதைக் களிப்பூட்டும் சிகித்ஸை அவசியமெனப்படுகின்றது. 47½.

மத்யத்தினால் க்ஷீணித்தவனுக்குப் பால் சிறந்த பானவஸ்து.

சோதன சிகித்ஸைகளும் சமன சிகித்ஸைகளும் செய்யப்பட்டு, அவற்றாலும் மதாத்யயம் என்கிற தோஷம் நிவ்ருத்தியாகாவிட்டால், மதுபானத்தினால் அழன்றுபோன தேஹமுடையவனும், மேலோங்கிய வாத பித்தங்களோடு கூடியவனுமான அம்மனிதனுக்கு கபம் க்ஷீணித்து, பலஹீனமும் இலாகவமும் ஏற்பட்டிருக்கையில், கடுங்கோடையினால் எரிக்கப்படும் நிலைமையிலுள்ள மரத்திற்கு மழையைப்போல, பால் மிகவும் உபயோகமானது. ஏனெனில் பாலானது மத்யத்திற்கு நேர் எதிரிடையான குணங்களைப் [1] பெற்றது ; ஓஜோதாதுவினுடைய [2] ஸகல குணங்களோடும் பாலின் குணங்கள் ஒத்திருக்கின்றன ; ஆகையால் மதுபானத்தினால் க்ஷீணித்திருப்பவனுடைய தேஹத்தில் க்ஷீணமாயுள்ள ஓஜோதாதுவைப் பால் துரிதமாகப் போஷிக்க வல்லது.[3] 48-50½.

க்ஷீரப் பிரயோகத்தை நிறுத்துவதும் மதுவைச் சொற்பமாயுபயோகிப்பதும்.

பாலைப் பிரயோகித்து மதாத்யயரோகம் நிவ்ருத்தியான பின்பு, சரீரத்தில் வலிவும் உண்டாய் விடுமானால், க்ஷீரப் பிரயோகத்தை நிறுத்திவிட வேண்டும் ; விட்க்ஷயமென்கிற மலக்ஷயத்தினால்[4] உண்டாகும் கோளாறுகளும், த்வம்ஸகரோகத்தினாலுண்டாகும் [5] உபத்திரவங்களும் நேரிடாதபடி. மதுவைச் சிறுகச்சிறுக உபயோகிக்கலாம். 51,52.

---

மத்யமமாகயும் இரண்டு தோஷங்கள் சொற்பமாகவும் பிரகோபித்த மதாத்யயம். (4) ஒரு தோஷம் மிகவும் பிரகோபித்து, இரண்டு தோஷங்கள் சொற்பமாகவும் பிரகோபித்தது. (5) இரண்டு தோஷங்கள் மிகவும் அதிகரித்து ஒன்று சொற்பமாயிருக்கும் மதாத்யயம். (6) ஒரு தோஷம் சொற்பமாகவும் இரண்டு தோஷங்கள் மத்யமமாகவும் பிரகோபித்து வரலாம். (7) எல்லாத் தோஷங்களும் மிகவும் அதிகரித்துப் பிரகோபிக்கும் நிலைமை. (8) எல்லாத் தோஷங்களும் ஒரே அளவில் மத்யமமாகப் பிரகோபித்தல். (9) எல்லாத் தோஷங்களும் சொற்பமாகப் பிரகோபித்த மதாத்யயம். (10) ஒரு தோஷம் சொற்பமாகவும், ஒன்று மத்யமாகவும், மற்றொன்று மிக்க அதிகமாகவும் பிரகோபித்த மதாத்யயம். இவை மதாத்யயத்தின் ஸந்நிபாத நிலைமையிலுண்டாகும் 10-வித பேதங்கள்.

1. மத்யத்திற்குள்ள பத்து குணங்களைப்பற்றி முதற் புத்தகத்தின் 342 ம் பக்கம் பார்க்க.

2. ஓஜோதாது—முதற் புத்தகம் 30-ம் பக்கம் பார்க்க.

3. பாலுக்கும் ஓஜஸ்ஸுக்கு முள்ள பொதுவான பத்து குணங்கள்:—மதுரம், சீதம், மிருது, ஸ்நிக்த்தம், பஹலம், ச்லக்ஷ்ணம், பிச்சிலம், குரு, மந்தம், பிரஸன்னம் என்பனவாம்.

4. விட்க்ஷயத்தினால் மத்ய சரீரத்தையும் சிரஸ்ஸையும்பற்றி யுண்டாகும் மதவிகாரங்கள் குறிக்கப்படுகின்றன.

5. த்வம்ஸகம்-மத்ய விகாரத்தினாலானபிணி. "கபம் வாயிலிருந்து ஊறுதல், தொண்டையில் வறட்சி, தொனிகளைச் செவியுற முடியாமை, சோம்பல், நித்ரை, இவை த்வம்ஸகக் குறிகள்" என்று சரகர்.

விட்க்ஷயமும் த்வம்ஸகமும் உபத்திரவமாக உண்டாய் விடுமானுல், கிருதபானமும், க்ஷீரபானமும், ப்ருஹ்மணகுணமுள்ள வஸ்துக்களால் வஸ்திப் பிரயோகமும் நன்மை செய்யக்கூடியவையாம். அப்யங்கமும், நலங்குப் பொடி முதலியவற்றைப்பூசுவதும், ஸ்நாநமும், வாதஹரமான அன்ன பானங்களும் உபயோகிக்கத் தகுந்தவையாம். 53.

விட்க்ஷய-த்வம்ஸகங்களுக்கு சிகித்ஸை.

முறை தவருமல் மிதமாக மதுபானம் செய்பவனுக்கு மத்யத்தினுல் நேரிடக்கூடிய வியாதி யுண்டாகமாட்டாது; ஆகையினுல் இன்ப மளிப்பதற்கே ஏற்ற விதமான அம்மதுபான முறை இங்கு மொழியப்படுகின்றது. ஸுரை யென்கிற யாதொரு மதுவானது அச்வினீ தேவதைகளின் மஹத்தான தேஜஸ்ஸையும், ஸரஸ்வதீ தேவதா ஸம்பந்தமான பலத்தையும், இந்திரனுடைய வீர்யத்தையும், விஷ்ணுவின் பிரபாவத்தையும் பெற்றுளதோ, எது மன்மதனுக்கு மோஹநாஸ்திரமாகவும், பலபத்ரனுக்கு முக்கியமான புருஷார்த்தமாகவும் ஆகின்றதோ, யாகம் முதலிய வைதிகச்சடங்கில் யாதொன்று பிராம்மணர்களுடைய முகத்திலும் அக்னியிலும் ஹோமம் செய்யப்படுகின்றதோ, ஸகல மூலிகைகளும் நிரம்பிய பாற்கடல் தேவாஸுரர்களால் கடையப்படுங்கால் ஸ்ரீ தேவியென்ன சந்திரனென்ன அமுதமென்ன இவற்ரேடு யாதொன்று ஸம்பவித்ததோ, மது—மாதவம்—மைரேயம்—சீது—கௌடம்—ஆஸவம் முதலிய அநேகவிதமான மத்ய ஸ்வரூபங்களாக மாற்றப்படினும் வெறியுண்டாக்கும் இயற்கைச் சக்தியினின்றும் யாதொன்று மாறுவதில்லையோ, விலாஸினிகள் எதைப் பருகி தமது அப்பெயரைப் பொருளுள்ளதாகச்செய்து கொள்கின்றனரோ, குலஸ்த்ரீயும் எதைப் பானம்செய்து மனோதிடமும் தார்ஷ்ட்யமும் மேலிட்டவளாய் மன்மத விகாரங்கொண்ட அங்கங்களால் முனிவரது மனதையும் எங்கேயோ இழுத்து மிகப் பரவசமாகச் செய்ய வல்லவளாகின்ருளோ, கணவனிடம் பிரணயகோபமுள்ள பெண்மணியானவள் எதைப் பருகி நீரலைகளைப் போல் அடிக்கடியும் வளைந்தசையும் தனது புருவ நெரிப்புகளால் விரட்டி மனக்கலக்கத்தைப் போக்கி இருவருடைய மனதையும் ஒரு மனதைப்போலாக்கி இருவருக்கும் இன்பமளிக்கக் கூடிய மனோஹரத் தன்மையைப் பெறுகின்ருளோ, கூட்டங் கூட்டமான அப்ஸர ஸ்த்ரீகள் தமது விருப்பத்திற்கேற்ற வீர புருஷர்களுக்கு மாலையிட்டு ஆனந்த பரவசர்களாக ஆவதற்கு அனுகூலமான போர்க்களத்தில் யாதொரு மதுவைப் பருகிப் போர் வீரர்கள் பிராணனைத் துரும்புபோலக் கருதி மாய்த்துக்கொள்கின்றனரோ, மது-மைரேயாதி அநேக வகையான ஸ்வரூபங்களைப் பெற்ற யாதொரு மத்யத்தை நீடித்த காலமாகப் பன்முறை பானம்செய்தும் மீண்டும் பார்க்கும் போதெல்லாம் அப்பொழுதே புதிதாகக் காண்பதுபோல் மனிதர் எதை உபயோகிக்கின்றனரோ, யாதொன்றைக் கண்டால் மனிதர் மனத் துயரத்தினுலாவது, திகிலாலாவது, மனக் கலவரத்தினுலாவது, பயத்தினுலாவது பீடிக்கப்படுவதில்லையோ, விருந்துண்பது முதலிய கோஷ்டிகளும், பெரிய உத்ஸவச்சடங்குகளும், தோட்டங்களில் சென்று களிகூறுவதும் யாதொரு மத்யமின்றி நன்கு சோபிப்பதில்லையோ, வழக்கமாய் உபயோகிப்பவன் யாதொருஸுரை இல்லாமற்போனுல் எண்ணியெண்ணி ஏக்கங்கொண்டு மிகவும் வருந்த வேண்டி நேரிடுகின்றதோ, தெளிவில்லாமல் அசுத்தமாயிருந்தும் யாதொன்று மனதுக்குத்

துன்ப மின்றி இன்பமே தரும் மதுபான முறை.

திருப்தியைத் தருகின்றதோ, தெளிந்து மிகச் சுத்தமான யாதொரு மத்யம் ஸ்வர்க்கலோக ஸுகத்தை யுண்டுபண்ணுமோ, எதைப் பானம் செய்தால் அச்சமயம் இந்திர பதவியையும் அற்பகமாகக் கருதுகிறானே, எதனுடைய இரஸானுபவமானது இவ்வித ஸுகமுண்டு பண்ணுமென்று குறிப்பிட்டுணர முடியாமல் சுகானுபவத்தால் மாத்திரம் அறியக்கூடியதாயிருக்கின்றதோ, இங்ஙனம் எது வெவ்வேறு நிலைமைகளிலும் மனிதனுக்கினிய மணாட்டியை ஒத்திருக்கின்றதோ, எது தன்னிடம் விருப்பங் கொண்டவனுக்கு மேன்மேலும் அதிகப்பிரீதியை யுண்டுபண்ணுமோ, தேவர்கள்-அஸுரர்கள் - கந்தர்வர் - யக்ஷர்கள் - இராக்ஷஸர்கள்-மானிடர் என்னும் எவரும் பான கோஷ்டியை நடத்துகையில் எதை பிரீதியென்றும், மேலான இன்பமென்றும், இனிய வாக்கென்றும், புஷ்டிதரும் அரும் பொருளென்றும் போற்றுகின்றனரோ அவ்விதமான ஸுரையை முறை தவறாமல் பருக வேண்டும். மேதஸ் என்கிற கொழுப்பு அதிகரிப்பதாலான ஸ்த்தூலரோகமும், வாத-கபங்களாலான வியாதிகளும் மதுபானம் முறைப்படி செய்யப்பட்டால் மனிதருக்கு உண்டாக மாட்டா; முறைப்படி யுபயோகிக்கப்படாமற் போனால் அக்கொடிய வியாதிகள் நிவ்ருத்தியாகமாட்டா. பானம் செய்யக்கூடாத நிலைமையும் சரீரத்திற்குண்டாவதுண்டு; ஆனால் அந்நிலைமையிலும் பல வகையான ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த மிகப் பழகிய மத்யம் உபயோகிக்கக் கூடியதாம். ஆநூபமாம்ஸமாவது ஜாங்கலமாம்ஸமாவது முறைப்படி பக்குவம் செய்யப்பட்டிருந்த போதிலும், அத்துடன் மத்யமும் அநுபானமாக எடுத்துக்கொள்ளப்படாமற் போனால் அம்மாம்ஸம் நன்கு ஜீர்ணமாவது எங்ஙனம்? மிகக் கடுமையான வாதரோகத்தைப் போக்கும் குணமுடைய வெள்ளைப்பூண்டை மதுமாம்ஸங்களின்றி யுபயோகித்தால் அதனால் ஏதும் குணமுண்டாகாது. சரீரத்தில் மறைந்துள்ள சல்யங்களை வெளிப்படுத்துகையிலும், சஸ்திர சிகித்ஸைகளைச் செய்கையிலும் அக்னியினால் சுட்டுச் செய்யப்படும் சிகித்ஸையிலும் வைத்தியரால் உண்டாகும் கடுந்துன்பத்தையும் மதுபானத்தினால் மனிதன் ஸஹித்துக்கொண்டு ஸுகமாயிருப்பான். மத்யமானது ஜாடராக்னியைத் தூண்டி விருத்தி செய்கிறது; நற்சுவையைத் தருகின்றது; மனத்துயரத்தையும் சிரமத்தையும் போக்கி இன்பமளிக்க வல்லது; ஆரோக்கியத்தையும் பலத்தையும் புஷ்டியையும் தரக்கூடிய சிறந்த வஸ்து மத்யத்தினும் வேறொன்றில்லை. ஆகவே பகுத்தறிவுள்ளவனான மனிதன் தனது தேஹ நிலைமையைத் தெரிந்துகொண்டு, உயிருக்குக் கேடு நேரிடாவண்ணம், தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் அடுத்துள்ளவருக்கும் அநுகூலமானதும், சிறந்த தர்மஸாதனமுமான மத்யத்தை விதிப்படி யுபயோகிப்பானாக. 54—75.

இன்பமான மதுபான ரஸாநுபவம்.

ஸ்நானம் செய்து, தேவதைகளையும் அந்தணரையும், பராமாசிரியர்களையும் பணிந்துவிட்டு, பணிவிடை செய்யும் அனைவருக்கும் அவரவருக்கேற்ற கடமைகளை நிறைவேற்றுமாறு நியமனங்களைச் செய்துவிட்டு, அதன் பிறகு போஜனசாலைக்கு அருகில் அமைக்கப் பெற்றதும்--நறுமணங்கமழும் தண்ணீருற்றிக் குளிர்ச்சி பொருந்தியதாகச் செய்யப் பெற்றதுமான பானபூமிக்குச் செல்லவேண்டும். அப்பால் மிருதுவான மேல்விரிப்புகள் முதலியவற்றை நன்கு அமைக்கப்பெற்ற மனோஹரமான சயனத்தின் மீது அமர்ந்துட்கார்ந்து, பணிவிடைக்காரர்களாலும், மித்ரர்களாலும், மங்கையர்களாலும்

சூழப்பட்டவனாய், கட்டியக்காரர்களாலும் சாரணர்கூட்டங்களாலும் கம்பீரமாயெடுத்து வர்ணிக்கப்படும் லோகோத்தரமான தனது கீர்த்தியைச் செவியுற்றவனாய், விலாஸ விசேஷங்களால் விளங்குவதும், விவரித்துரைக்க வியலாது இன்பமளிக்கும் தூர்ய வாத்யங்களாலும் அழகாகக் குலுங்கி யொலிக்கும் சதங்கை நிரம்பிய அரைநூல் மாலைகளாலும் - விளையாடுவதற்கென்று வளர்க்கப்படும் பறவைகளின் இனிய குரல்களாலும் பின் தொடர்ந்து பாடப்பெற்றதும், நடனத்துடன் கூடியதுமான வேசி மங்கையரின் ஸங்கீதத்தைக் கேட்டுக்கொண்டு, பின் கூறப்படுமாறு மதுபானம் செய்யக்கடவன்; மிகவும் கனமான ஸ்தனங்களாலும், கடிப்ருஷ்டங்களாலும் மந்தமாகவும் - பிரபுவின் தர்சனத்தினால் வியாகுலமாகவும் சபலமாகவும் நடந்து வருபவர்களும், மிரண்ட மான்களுடைய கண்களைப் போல் அலைந்தாடும் அழகிய பார்வையுடையவர்களும், யௌவனத்தினாலும் மதுபானத்தினாலும் மதங்கொண்டு விலாஸமான நடையுடைகளைப் பெற்றவர்களும், ஆகவே முனிவர்களுடைய மனதையும் கலக்கக்கூடியவர்களாகவு முள்ள பெண்மணிகளால் ஜலத்தில் நனைத்த விசித்திரமான பட்டாடைகளைக் கொண்டு மறைத்த மாணிக்கச் சொம்புகளிலும் பொற்கலயங்களிலும் ஒரு மிக்க இங்குமங்குமாய் ஆட்டிப் பரிமாறப்படும் அம்மதுவை ஆனந்தத்துடன் அளவறிந்து அருந்த வேண்டும்; மிகவும் குளிர்ச்சி பொருந்திய சிற்றாலவட்டக் காற்றாலும், தாமரையிலைகளை வீசுவதால் வரும் காற்றாலும் நன்கு சீதளமாகச் செய்யப்பெற்ற மத்யத்தைக் கண்ணுறுவதாலேயே மன்மதனுக்கு வசமாய்விட நேரிடுமென்றால், அதைப் பருகினால் அங்ஙனம் ஆவதற்குக் கேட்கவும் வேண்டுமோ? மாம்பழச் சாறு, கர்ப்பூரம், கஸ்தூரி இவற்றால் நறுமணமேற்றப்பட்டதும் நன்கு மலர்ந்து பிரகாசிக்கும் மல்லிகைப்பூவுடன் கூடியதும், படிகமணி மயமான சிப்பியில் ஊற்றப்பட்டு மெல்லிதாக ஆடும் அலைகளோடு கூடியதும், ஆகவே மன்மதனைப்போல் மனதைத் தத்தளிக்கச் செய்யுமியல்புள்ள உருவத்தைப் பெற்றதுமான மத்யத்தைப் பருகுவதற்கு முன்பு இருதயத்திற்கு பலந்தரக்கூடியதான தாளீஸாதி சூர்ணத்தையாவது, ஏலாதி சூர்ணத்தையாவது[1] வயஸ்த்தாபந ரஸாயனத்தையாவது[2] உட்கொள்ளவும்; மதுபானத்திற் பிரியமுள்ள தேவதைகளின் பொருட்டு நன்கு மெழுகிச் சுத்தம் செய்த பூமியின் மீது சிறிது மத்யத்தையும் அதன் பிறகு தண்ணீரையும் நிவேதனம் செய்யவும்; அதன் பிறகு நல்ல மனோதிடமுள்ளவனாய், விசேஷ ஞாபகசக்தி யெனப்படும் உணர்ச்சியைக் கைவிடாதவனாய், உசிதமான உபசாரங்களைப்பெற்று, அச்சமயத்திற்கு அவசியமான எல்லாச் சடங்குகளையும் நிறைவேற்றிக் கொண்டவனாய், நன்கு மலர்ந்த கருநெய்தல் மலர்களைச் சீர்மையினால் வென்றுவிட்ட மணாட்டியின் நேத்திரங்கள் பிரதிபலித்து அதனால் விருத்தி செய்யப் பெற்ற விசேஷ காந்தியையுடையதும், தனது ஸுகந்தத்தினால் இழுக்கப்பெற்ற வண்டுகளால் சூழப்பட்டதும், ஆகவே மனதுக்கினிய மனைவியின் முகத்தைப் போல மனோஹரமாயுள்ளதுமான மத்யத்தை அளவிற்குறையாமலும் அதிகப்படாமலும் பருகுவானாக. இப்படி இர

1. தாளீஸாதி சூர்ணம், ஏலாதி சூர்ணம் இவ்விரு முறைகளும் இராஜயக்ஷ்ம சிகித்ஸையில் கூறப்பட்டிருக்கின்றன.

2. வயஸ்த்தாபந ரஸாயனம் என்கிற ஔஷத முறை உத்தர ஸ்த்தாநத்தில் இரஸாயன விதி அத்தியாயத்தில் கூறப்படுகிறது.

ண்டு சஷகம்[1] மத்யத்தைப் பானம் செய்து, தன்னுடன் இருப்பவர்கள் அனைவருக்கும் ஏற்ற மரியாதைகளைச்செய்து விட்டு, அப்பால் போஜனசாலைக்குச் சென்று, அங்கு வைத்திய ச்ரேஷ்டனுடைய முன்னிலையில் மாம்ஸம், பணியாரங்கள், நெய், இஞ்சி மற்றுமுள்ள பசுமையான காய்கறி கீரைகள், ஸௌவர்ச்சலவணம் முதலியவைகளோடு மீண்டும் இரண்டு மூன்று சிறு ஸரகங்கள்[2] அளவான மதுவை இரவில் மனைவியைத் திருப்தியுறச் செய்வதன்பொருட்டுப் பருகலாம். ஏகாந்தத்தில் இன்பமுற்ற இல்லாளை மடியில் போட்டு மார்பை திருடமாகக் கிரஹிப்பதால் உடலில் மயிர்ச்சிலிர்க்கையுண்டாக, சரீர மெங்கும் வியர்க்க, ஸ்தனங்கள் நடுங்க, அவளுக்குப் பரபரப்புடன் இரண்டொரு ஸரகம் மதுவைப் பருகக்கொடுத்து, இன்பமனுபவித்து, தன் ஜன்மத்தைப் பயன் பெற்றதாகச்செய்து கொள்ளாமற்போனால், பெரும்பாலும் கிலேசம் நிரம்பிய ஸாம்ஸாரிக க்ருத்யங்களைச்செய்து கஷ்டமனுபவிப்பதெதற்கு? பெண்மணியினுடைய வாயின் பரிசத்தினால் முன்னிலும் அதிக பரிமளம் பொருந்தியதும், உருகி ஆஸவரூபத்தைப் பெற்றுள்ள பத்மராக மணியைப்போல் தோற்றுவதுமான ஸரகத்திலுள்ள மதுவை ஸம்போகத்தினால் வாடிய தேஹமுள்ளவள் சிறிதளவு பருகினாலும் மதம் உண்டாய் விடுவதோடு, மன்மத விகாரம் மேலிட்டு ஓஜஸ்ஸும் க்ஷயித்துவிடும்; ஆகவே அவ்விதம் ஓஜஸ் க்ஷீணிப்பதைப் பரிஹரிப்பதற்காகப் படுத்து நித்திரையுற வேண்டும். இங்ஙனம் யோகமறிந்து மதுவைப் பானம் செய்பவன் தர்மார்த்த காமங்களென்கிற த்ரிவர்க்கத்திலிருந்து நழுவியவனாகமாட்டான்; ஸாரமற்றதெனக் கருதப்படும் ஸம்ஸாரத்தில் கிடைக்கக்கூடிய மிகவும் மேலான இன்பத்தைப் பெற்று வருவான்; ஐச்வர்யானுபவம் செய்வதென்றால் இதுவேயாம்; இம்மதுபான ஸௌக்யம் தேவர்களாலும் விரும்பக்கூடியதாம். இவ்வாறு இன்பமனுபவிக்காமலே திரவ்யத்திற்கு ஆபத்து நேரிடுமானால், அப்பொழுது அப்பொருள் பச்சாத்தாபமாகிற அக்னிக்கு விறகு போல் ஆகின்றது; ஸௌகானுபவம் செய்யாதவனை "என்ன போகவான்!" என்று ஏளனமாகக் கூறி, "புதையலைக் காக்கும் பூதம்போல் செல்வத்தை அநுபவிக்காமலே காப்பதற்கென்று இவ்வற்ப பிராணியும் பிரம்மதேவனால் படைக்கப்பட்டானே!" என்று ஜனங்கள் நிந்திப்பார்கள்; ஆகையினால் விஷயங்களில் ஆவல் கொண்டுத் தாவியோடு மியல்புள்ளவையான புலன்களுக்கு சுதந்திரமளிக்காமல் அவற்றைக் கட்டிப் பிடித்தவாறு முறை தவறாமல் மதுவைப் பருகுவது எப்பொழுதும் ஆரோக்கியத்திற்கு அநுகூலமாகும். இங்ஙனம் மொழியப்பட்ட மதுபான விதியானது செல்வம் படைத்த பிரபுக்களுக்கேயாம். எவர்கள் இனி திரவ்யம் செழித்து வளரக்கூடிய நிலைமையில் இருக்கின்றனரோ அவர்கள் தம் தமது யோக்யதைக்கு ஏற்றவாறு ஹிதமான மத்யத்தை மிதமாக அளவறிந்து பானம் செய்யலாம். 76—94.

மதுவை எவ்வளவு பானம் செய்தால் திருஷ்டிகள் சுழலமிடாமல் தலைச் சுற்றல் உண்டாகாதோ, மனதும் கலக்கமுறாமல் ஒழுங்கான நிலைமையில் நிற்குமோ அவ்வளவு மாத்திரம் அருந்திவிட்டு, மனதை அடக்கியாண்டு விவேகத்துடன் நடந்துகொள்ளவிரும்புபவன் அவ்வளவோடு மதுபானத்தை எப்பொழுதும் நிறுத்திக்கொள்ள வேண்டும். 95.

மிதமான மதுபானத்திற்கான அளவு.

1. சஷகம்—பானபாத்திரம்; கோப்பை போன்றது.

2. ஸரகம்—ஒரு வாய் நிரம்ப உட்கொள்ளக்கூடிய மது முதலிய திரவ பதார்த்தத்தின் அளவு கொண்ட பாத்திரம்.

வாத தோஷம் மேலிட்ட மனிதன் அப்யங்கம் செய்துகொண்டு, நலங்குப் பொடிகளைப் பூசி ஸ்நானம் செய்து, தூபங்களால் சரீரத்தை ஸம்ஸ்கரித்துக் கொண்டு, சந்தனம் முதலிய லேபனங்களை யுபயோகித்து, ஸ்நிக்கத்தமாகவும் உஷ்ணமாகவுமுள்ள உணவுகளைப் புஜித்து, அப்பால் மதுவைப் பானம் செய்யலாம். 96.

வாதம் மேலிட்டவருக்கு ஏற்ற மதுபான முறை.

பித்தம் மேலிட்ட சரீரமுள்ளவன் பற்பல சீதோபசாரங்களாலும், மதுரமாகவும் சீதவீர்யமாகவும், ஸ்நிக்கத்மாகவுமுள்ள உணவுகளாலும் உபசரிக்கப்பட்டவனாய் மத்யத்தைப் பானம் செய்துவர தீங்கொன்றும் நேரிடாது. 97.

பித்தம் மேலிட்டிருப்பவனுக்கேற்ற மதுபான முறை.

கபம் மேலிட்டிருக்கும் மனிதன் உஷ்ண வீர்யமும் உஷ்ண ஸ்பர்சமுமுள்ளவஸ்துக்களாலும் உபசரிக்கப்பட்டவனாய், யவதானியத்தினாலும் கோதுமையினாலும் ஆகிய உணவுகளைப்புஜித்து ஜாங்கல மாம்ஸங்களோடும் மிளகுப் பொடியோடும் மதுவைப் பருகலாம். 98.

கபம் மேலிட்டவனுக்கு ஏற்ற மதுபான முறை.

அவற்றுள் வாதப்ரக்ருதியான மனிதனுக்கு மாப் பண்டங்களிலிருந்தும் வெல்லத்திலிருந்தும் ஸந்தானம் செய்யப்பட்ட மதுவும், பித்தப்ரக்ருதிக்கு ஜலம் விட்டு விளாவிய மதுவும், கபப்ரக்ருதிக்கு திராக்ஷையிலிருந்தும், வேம்பிலிருந்தும், தேனிலிருந்தும் ஸந்தானம் செய்யப்பட்ட மதுவும் ஹிதமானதாம். 99.

வாதாதி தோஷங்களுக்கேற்ற மத்யங்கள்.

கபப்ரக்ருதியான மனிதன் மத்யத்தை போஜனத்திற்கு முந்தியும், பித்தப்ரக்ருதியானவன்போஜனத்திற்குப் பிந்தியும், வாதப்ரக்ருதி போஜனத்திற்கு இடையிலும், எல்லா தோஷங்களையும் ஸமநிலைமையில் பெற்றவன் இஷ்டப்படி எந்த நேரத்திலும் மதுபானம் செய்யலாம். 100

வாதாதிதோஷங்களில் மதுபானத்திற்கேற்றஸமயங்கள்,

மதுபானத்தினாலுண்டாகும் வெறிகளிலும் மூர்ச்சைகளிலும் பெரும்பாலும் வாதபித்த ஹரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும். எல்லாவிதமான மதுபான வெறிகளிலும் விசேஷமாகப் பித்தமே அதிகரித்திருப்பதைக் காணலாம் இதில் குளிர்ச்சியான திரவங்களைப் பூசுவதும், இரத்னங்களைப்பூணுவதும், சீதள வஸ்துக்களை மேலே தெளிப்பதும், சிற்றாலவட்டத்தினால் வீசுவதும் ஹிதமாம்; மேலும் சர்க்கரை, திராக்ஷை, கரும்பு, பேரீச்சம்பழம், குமிழம்பழம் இவற்றின் சாறுகள், மதுரத்ரவ்யவர்க்கத்தினால் [1] பக்குவம் செய்யப்பட்ட பால், மாதளம் பழச் சாறு கலந்த மாம்ஸ ரஸங்கள், யூஷங்கள், காரரிசி, செஞ்சம்பா அரிசி, வாற் கோதுமை, ஜீவநீயக்ருதம்,[2] கல்யாணகக்ருதம்,[3] மஹாதிக்தகக்ருதம்,[4] ஷட்பலக்ருதம்,[5] சித்திரமூலம் சேர்த்துக்காய்ச்சிய பால் இவற்றை உபயோகிக்கலாம்; இரஸாயன முறைப்படி திப்பிலியையாவது, சிலாஜதுவையாவது, நெய் தேன் சர்க்கரை இவற்றுடன் கூட்டிய த்ரிபலையையாவது பிரயோகிக்கலாம். மதுபானத்தினாலுண்டாகும் வெறி வெளிப்படையாகக் கண்டால் வாயையும் நாசியையும் கெட்டியாகச் சிறிது

மதுபானத்தினாலுண்டாகும் வெறிகளுக்குப் பரிஹாரங்கள்.

1. மதுரத்ரவ்ய வர்க்கம்-முதற்புத்தகத்தில் 90 வது பக்கம் பார்க்க.

2. ஜீவநீயகணவஸ்துக்களால் பக்குவம் செய்யப்பட்டது.

3. கல்யாணகக்ருதம்-உத்தரஸ்த்தாநத்தில்உன்மாத ப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.

4. மஹாதிக்தகக்ருதம்-குஷ்ட சிகித்ஸையில் கூறப்படுவது.

5. ஷட்பலக்ருதம் - இராஜயக்ஷ்மசிகித்ஸையில் கூறப்படுவது.

நேரம் மூடிவிடுவது நலம்; முலைப்பாலையாவது பருகச்செய்யலாம்; அல்லது அப்பாலை நஸ்யமாகவாவது பிரயோகிக்கலாம்; தாமரைக் கொடி, தாமரைக் கிழங்கு இவற்றைக் கல்கமாகச் செய்து, திப்பிலியையும், கடுக்காயையும் அத்துடன் கூட்டி, தேன் கலந்தாவது உட்கொள்ளலாம்; அல்லது காஞ்சொறிவேரையாவது, கோரைக்கிழங்கையாவது பொடித்துத் தேனுடன் உபயோகிக்கலாம்; அல்லது மிளகு, இலந்தங்கொட்டையின் பருப்பு, வெட்டிவேர், நாககேஸரம் இவற்றைப் பொடிசெய்து குளிர்ந்த ஜலத்தோடாவது உட்கொள்ளலாம்; நெல்லிக்கனிகளின் சாற்றிலாவது, கடுக்காய்களின் கஷாயத்திலாவது பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தையாவது பானம் செய்யலாம். இவ்வெறியில் எந்தெந்த தோஷம் அதிகரித்திருப்பதாகத் தெரியவருகின்றதோ அந்தந்த தோஷத்திற்கு உபசாந்தியாகக் கூறப்பட்டுள்ள சிகித்ஸைகளையும்[1] செய்யலாம். பஞ்சகர்மங்களையும் பிரயோகிக்கலாம்; இரக்தமோக்ஷணமும் செய்யலாம்; விவேக பூர்வகமான விசேஷ ஞானத்தில் புத்தியைச் செலுத்துவதும், விஷயேச்சைகளில் மனம் செல்லாதபடி அடக்குவதும் நலம். 100-109.

**கடுமையான மதுபான வெறிகளுக்குப் பரிஹார முறைகள்.**

மதுபானத்தினாலான வெறி மிகவும் அதிகரிக்கையிலும், பலமான மூர்ச்சைகளிலும் ஸந்யாஸமென்கிற[2] வியாதிக்கு விதிக்கப்பட்டிருக்கும் தீக்ஷ்ணமான நஸ்யம் முதலியதைப் பிரயோகிக்கலாம்; விஷத்தினாலுண்டாகும் வெறிகளிலும் மூர்ச்சைகளிலும் விஷஹரமான சிகித்ஸையைச்செய்யவும். ஸந்யாஸ விகாரங்கள் ஸம்பவித்தால் தாமதமின்றி மிகவும் தீக்ஷ்ணமான நஸ்யத்தையும், அஞ்ஜனத்தையும் பிரயோகிக்கவேண்டும்; நாசியில் தூமத்தை ஊதிச் செலுத்தலாம்; நகங்களின் இடுக்குகளில் ஊசிகளால் குத்தலாம்; மயிர்களை இழுத்துப் பெயர்க்கலாம்; அக்கினியினால் சூடிடலாம்; பற்களால் கடிக்கலாம்; தேளைக் கொட்டவைக்கலாம்; வாயில் காரமாகவும் புளிப்பாகவுமுள்ள திரவங்களை ஊற்றலாம்; பூனைக்காலியிலைகளை உடம்பில் தேய்க்கலாம்; நினைவு வந்து எழுந்த பிறகு வெள்ளுள்ளியின் சாற்றைக் குடிக்கச் செய்யலாம்; கொம்மட்டி மாதளையின் உட்புறச் சோற்றில் காரமும் உப்பும் கலந்து உண்ணச்செய்யலாம்; ஸ்ரோதஸ்ஸுகள் சுத்தியாவதற்காக இலகுவான அன்னத்தைப் புஜிப்பிக்கலாம். வியப்புறச் செய்வதாலும், மனோஹரமான விஷயங்களை நினைப்பூட்டுவதாலும், இன்பமான விஷயங்களைக் கேட்பதாலும், பார்ப்பதாலும், இனிய ஸங்கீதங்களையும் வாத்தியம் முதலியவற்றின் தொனிகளையும் செவியுறுவதாலும், வியாயாமங்களைச் செய்வதாலும் ஸ்ரம்ஸநம்-லேகநம்[1] என்கிற குணங்களையுடைய தூமங்களை மூகரச்செய்வதாலும், இரக்தமோக்ஷணங்களாலும் அவனுக்கு மீண்டும் மூர்ச்சை முதலியவைத் தொடர்ந்து வராதபடி அடிக்கடியும் உபசாரம் செய்துவரவேண்டும். மனக்கோளாறு முதலிய அபாயம் நேரிடாதபடி அவனுடைய மனோநிலைமையையும் கவனித்துப் பரிபாலித்து வரவேண்டும். 110-116.

1. ஸூத்திர ஸ்த்தானத்தில் தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில் ஒவ்வொரு தோஷத்திற்கும் சிகித்ஸாக்ரமங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

2. ஸந்யாஸம்—முதற் புத்தகத்தில் 346-ம் பக்கம் பார்க்க.

1. ஸ்ரம்ஸநம் என்றால் மல-தோஷாதிகளை உள்ளிருந்து நெகிழச் செய்வது, லேகநம் என்றால் தோஷத்தைத் தூண்டிக் கிளப்புவது.

# எட்டாவது அத்தியாயம்.

இனி அர்சஸ் சிகித்ஸிதம் [1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

ஸாதாரண காலத்தில், [2] ஆகாயம் மேகத்தினால் மூடப்படாமலிருக்கையில் அதிக பலஹீனப்படாத அர்சோரோகிக்குக் குடல்களைச் சுத்தம் செய்து இலகுவாகவும், சொற்ப அளவாகவும், மலத்தை மெதுவாக நெகிழச் செய்யுந் தன்மையுள்ளதுமான உணவைப் புஜிக்கச் செய்து, பரிசுத்தமான தேஹத்துடன் ஸ்வஸ்திவாசனம் செய்துகொண்டு, அப்பால் மலமூத்திரங்களை விஸர்ஜனம் பண்ணி, வேறு வியாதிகளால் வருந்தாமலிருக்கின்றானா என்பதைக் கவனித்து, பிணியாளியை இச் சிகித்ஸைக்குபயோகமான பலகைரூபமான சயனத்திலாவது, இதர மனிதனுடைய மடியிலாவது படுக்கச் செய்யவேண்டும்; அப்பொழுது தலை முதலிய முன்னுடல் நிமிர்ந்தாற்போல் அமர்ந்திருக்கவேண்டும்; குதபாகம் சூரியனுக்கு எதிராகவும் ஒழுங்காகவும் நிற்குமாறுப் படுத்திருக்கவேண்டும்; இடுப்பு ப்ரதேசம் சிறிது உயர்ந்திருக்கவேண்டும். பிறகு பிணியாளியை அசையாமல் ருஜுவாக இருக்கச் செய்து, துடைகளை மடக்கி அத்துடைகளுக்கும் கழுத்துக்குமாக பந்தநவஸ்திரத்தினால் பிணைத்துக்கட்டி, பரிசாரகர்களைக் கொண்டு பிணியாளியைத் தாங்கிக் கொள்ளச் சொல்லி, நெய்யை குதத்தில் தடவி, பிறகு யந்திரத்தையும்[1] நெய்யிலிட்டு அதை நேர்மையாக குதத்தினுள் மெள்ள மெள்ள வாட்டமாகச் செலுத்தவேண்டும்; அப்பால் பிணியாளி முக்கி அழுத்துவதால் அர்சஸ் என்னும் மூலமுளை யந்திரத்தில் சிக்கிக்கொள்ள, அதை உற்று நோக்கி, சீலையினால் ஒருவாறு மறைக்கப் பெற்ற முளையையுடைய சலாகையினால் வைத்தியன் மூல முளையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, முறைதவறாமல் ஆர்த்ரார்சஸ்ஸை [2] க்ஷாரத்தினாலேயும், சுஷ்கார்சஸ்ஸை [3] க்ஷாரத்தினாலாகிலும் அக்கினியினாலாகிலும் சுடலாம்; அர்சஸ் பெரிதாயிருந்தால் பிணியாளியும் பலசாலியாயிருந்தால், அந்த அர்சஸ்ஸை சஸ்திரத்தினால் அறுத்து, அப்பால் க்ஷாரத்தினாலாவது அக்கினியினாலாவது சுட்டுவிடலாம். பிறகு ரோகியின் பந்தநங்களை அவிழ்த்து விட்டு, குதத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் நன்றாக ஸ்நேஹவஸ்துக்களை லேபனம் செய்து, அவ்வித ஸ்நேஹம் நிரம்பிய நீண்ட தொட்டியில் படுக்கச்செய்யவும்; அப்பால் அவனை அதிக காற்றோட்டமில்லாத அறையில் ஸுகமாகச் சயனத்தில் அமர்த்தி, ஏற்ற பத்தியக்கிரமங்களைக்கொண்டு உபசாரம் செய்ய வைத்தியன் கட்டளையிடவேண்டும். எத்தனை மூல முளைகள் இருக்கின்றனவோ அவற்றை யெல்லாம் ஒவ்வொரு வாரத்திற்கு ஒன்றாக இங்ஙனம் விலக்கி வியாதிக்ரஸ்தனை யுபசரித்து வரவேண்டும். அநே

*அர்சஸ்வில் சஸ்திர சிகித்ஸை செய்யும் வகை.*

1. அர்சஸ்-மூல வியாதி; அதற்கு அவசியமான சிகித்ஸையைக் கூறுவதால் அர்சஸ் சிகித்ஸை யெனப்படுகிறது.

2. ஸாதாரண காலம்-முதற் புத்தகம் 115-ம் பக்கம் பார்க்க.

1. யந்திரம்-இங்கு முதற் புத்தகத்தில் 182-ம் பக்கத்தில் குறிப்பிட்டிருக்கிற அர்சோயந்திரம் கூறப்படுகிறது. 196-ம் பக்கமும் பார்க்க.

2. ஆர்த்ரார்சஸ்-இதுவே ஸ்ராவ்யர்சஸ் எனப்படும். இதைப்பற்றி முதற் புத்தகம் 347-ம் பக்கம் பார்க்க.

3. சுஷ்கார்சஸ்-முதற் புத்தகம் 346-ம் பக்கம் பார்க்க.

*ஜ்வரத்தில் க்ருதபானத்திற்குப் பிறகு மாம்ஸ ரஸோபயோகம்.*

க்ருதம் ஜீர்ணமாய் விட்டால், பிறகு காரமில்லாத மாம்ஸரஸம் கலந்த அன்னத்தை புஜிக்கச் செய்யலாம்; அவ்வுணவு மிகவும் தேஹபலத்தை உண்டுபண்ணும்; நல்ல வன்மை யுண்டானால் அது தோஷங்களை ஹரிக்கும். ஆகையினாலே கப - பித்தஹரங்களான பயறு - பாகல் முதலியவற்றின் ஸ்வரஸங்கள் நீடித்தகாலமாயுள்ள வாதம் மேலோங்கிய ஜ்வரத்தில் பெரும்பாலும் அனுகூலமானவையல்ல; அவை வயிற்று வலி, உதாவர்த்தம், வயிறு ஸ்தம்பித்துப் போதல் இத்துர்க்குணங்களை யுண்டுபண்ணும்; ஜ்வரத்தையும் விருத்தி செய்யும். 94—95½.

*ஜ்வரத்தில் சோதன சிகித்ஸையும் வமனமும்*

இவ்விதம் செய்தும் ஜ்வரம் சமனமாகா விட்டால், பிணியாளி சோதனசிகித்ஸைக்கு ஏற்றவனாயிருந்தால் அவனுக்கு சோதன சிகித்ஸையைச் செய்ய வேண்டும்; அதில், தேஹவன்மையுள்ள மனிதனுக்கு தோஷம் ஆமாசயத்தைப் பற்றியதானால், அவனது தேஹபலத்திற்குத் தீங்கு நேரிடாவண்ணம்[3] முற்கூறிய வமன முறையைப் பிரயோகிக்கவேண்டும், 96, 97,

*ஜ்வரத்தில் விரேசனௌஷதம் கொடுக்கும் நிலைமை.*

தோஷம் ஆமாவஸ்த்தையிலிருந்து பக்குவ நிலைமையை அடைந்து, ஸ்தம்பித்துக் கொள்ளாமல் தளர்ச்சியடையும்போது, அல்லது விஷத்தினாலாவது மதுபானத்தினாலாவது ஸம்பவித்த ஜ்வரத்திலாவது அடியிற் கூறப்படும் ஔஷதங்களை விரேசநத்திற்காகக் கொடுக்கலாம், 97½.

*ஜ்வரத்தில் த்ரிபலாகுளிகை முதலிய விரேசனௌஷதங்கள்.*

(1) த்ரிபலை, சாமை, சிவதை, திப்பிலி, நாககேஸரம் இவற்றைச் சூர்ணம் செய்து சர்க்கரையும் தேனும் கலந்து குளிகை செய்து விரேசநமாவதற்கு உபயோகிக்கலாம், (2) அல்லது வ்யோஷாதி குளிகையையாவது,[1] கொன்றைப் புளியை திராக்ஷையின் இரஸத்துடனாகிலும் பாலுடனாகிலும் கலந்தாவது விரேசநத்திற்காகக் கொடுக்கலாம். (4) த்ரிபலா சூர்ணத்தையாவது, (5) கழற்சியின் வேரையாவது பாலிற் கலந்து ஜ்வரமுள்ளவன் உட்கொள்ளலாம். 98—99½.

*ஜ்வரத்தில் விரேசநத்திற்குப் பின்பு ஸம்ஸர்கீ கிரமம்.*

நன்கு விரேசநம் ஆனவர்களுக்கு மண்டம்[2] என்கிற திரவான்னம் முதற்கொண்டு முறைப்படி வரிசைக் கிரமமாக[3] ஸம்ஸர்கீ யென்னும்[4] பத்திய முறையை அனுஸரித்து உணவு கொடுக்கவேண்டும். 100.

*ஜ்வரத்தில் சிதைவுற்ற மலத்தைக் கழியச் செய்வதும் கட்டுவதும்.*

ஜ்வரத்தினால் சிதைவுற்ற மலம் கழிந்து கொண்டிருக்குமானால், அதை எப்பொழுதும் அங்ஙனமே கழியும்படி விட்டுவிடவேண்டும்; அந்த மலம் ஆமதோஷம் நீங்கி பக்குவமான நிலைமையில் கோஷ்டத்தில் தங்கியிருந்தாலும்

1. த்ரிகடு, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, கோரைக்கிழங்கு, வாய்விடங்கம், நெல்லிக்காய், சிவதை இவற்றைச் சமயெடையாகச் சேர்த்து, அனைத்துக்கும் ஸமமாகச் சர்க்கரை கலந்து, தேன் விட்டு ஆட்டி செய்யப்படும் குளிகை "வ்யோஷாதி குளிகை" எனப்படும்.

2. மண்டம் — முதற் புஸ்தகம் 47-ம் பக்கம் பார்க்க.

3. மண்டம், பேயா, விலேபீ யென்று வமன விரேசநீயாத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள கிரமம் குறிப்பிடப்பட்டது.

4. ஸம்ஸர்கீ—வமன-விரேசநங்கள் செய்த பிறகு பேயா, விலேபீ முதலிய பத்தியமான உணவுகள் கொடுக்கப்படும் முறைக்கு "ஸம்ஸர்கீ" யென்று பாரிபாஷிகமான பெயர்.

தீங்குண்டுபண்ணும். மலம் மிதமின்றி வெளிப்படுமானால் பாசந சிகித்ஸையினால் அதற்குள்ள ஆமதோஷத்தைப் போக்கியாவது கட்டலாம். ஆமதோஷமுள்ள மலத்தைக் கட்டுவதால் நேரிடக்கூடிய தீங்குகள் தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில் [1] கூறப்பட்டிருக்கின்றன. 101, 102.

ஆம ஜ்வரத்தில் தோஷஹர ஔஷதமுபயோகிக்கக் கூடாது.

எவனொருவன் ஆம ஜ்வரத்தில் அறியாமையினால் அத்தோஷத்தை வெளிப்படுத்துவதற்காக ஔஷதத்தை உபயோகிக்கின்றானோ, அவன் நித்திரையுறும் கருநாகத்தைக் கரத்தினால் பரிசிப்பதாகக் கருதவேண்டும். 103.

ஜ்வரத்தினால் க்ஷீணித்திருப்பவனுக்கு ஏற்ற சோதந சிகித்ஸை.

ஜ்வரத்தினால் தேஹபலம் க்ஷீணித்திருப்பவனுக்கு வமநமும் விரேசநமும் உசிதமல்ல; அத்தகைய க்ஷீண ஸ்திதியிலிருப்பவனுக்கு மலங்களை ஸாதாரணமாய் பாலினாலாவது நிரூஹ வஸ்திகளைப் பிரயோகித்தாவது வெளிப்படுத்தலாம். 101.

பாலை ஸாத்மியமாகப்பெற்ற ஜ்வர ரோகிக்கு அதை உபயோகிக்கும் நிலைமை.

பாலை ஸாத்மியமாகப் பெற்றவனும், [2] கபம் முற்றிலும் க்ஷீணித்துப்போனவனும், தேஹதாபமும்நாவறட்சியுமுள்ளவனும், வாத-பித்தங்களால் பீடிக்கப்படுபவனுமான பிணியாளிக்கு அதிஸாரம் அதிகமாயிருந்தபோதிலும்[3] பால் பத்தியமான உணவாகும். காட்டுத்தீயால் எரிக்கப்பட்ட வனத்தின் தாபத்தைப் போக்கி அதை மழைநீர் மீண்டும் குளிர்க்கச் செய்துவிடுவது போல, லங்கனத்தினால் மிகவும் தபிக்கப்பட்டுள்ள தேஹத்தையும் பால் உயிர்ப்பிக்கச் செய்து ஜ்வரத்தையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். ஆனால் பாலானது தகுந்த ஔஷதச் சரக்குகள் சேர்த்து பக்குவம் செய்யப்பட்டதானாலும், குளிர்ச்சியாயிருந்தாலும், உஷ்ணமாயிருந்தாலும், தாரோஷ்ணமாக விருந்தாலும் அந்தந்த காலநிலைமைகளின் குணாகுணங்களைப் பகுத்தறிந்து உபயோகிக்கப்படவேண்டும்; இல்லையேல் ஜ்வர ரோகியின் உயிரை அது போக்கிவிடலாம். 105—107.

ஜ்வரஹரமான பலவித க்ஷீரபாகங்கள்.

(1) சுக்கு, பேரீச்சம்பழம், திராக்ஷை, சர்க்கரை, நெய் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை ஆறவைத்து, தேன் கலந்து உட்கொள்ள நாவறட்சி, அழற்சி, ஜ்வரம் இவை நிவ்ருத்தியாகும். (2) அங்ஙனமே திராக்ஷை, சிற்றுமுட்டி, அதிமதுரம், நன்னாரி, திப்பிலி, சந்தனம் இவற்றை நான்கு மடங்கு பாலில் காய்ச்சி யெடுத்தாவது உபயோகிக்க முன் கஷாயம் போலவே குணமுண்டுபண்ணும். (3) அல்லது திப்பிலியையே பொடித்துச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது உட்கொள்ளலாம். (4) பஞ்சமூலம்[1] சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகினால் ஜ்வர மடித்தவனுக் குண்டான காஸம், ச்வாஸம், தலைவலி, பக்கச்சூலை இவை நீங்கும்; நீடித்த நாட்களாயுள்ள ஜ்வரமும் போகும். (5) ஆமணக்கு வேரைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகினாலும், (6) பில்வத்தளிரைச் சேர்த்து தாரோஷ்ணத்தை யுட்கொண்டாலும் மலம்

1. ஸூத்திரஸ்த்தானத்தில் 13-வது அத்தியாயம்.

2. ஸாத்மியம்—முதற் புஸ்தகத்தில் 252-ம் பக்கம் பார்க்க.

3. இதற்கு முன் விஷயத்தில், ஜ்வரத்தில் விரேசநத்திற்காகப் பாலை உபயோகிக்கலாம் என்று கூறியிருப்பதால், அதிஸார மிருக்கையிலும் பாலை அந்த நிலைமையிற் கொடுக்கலாம் என்று வற்புறுத்தவே "அதிஸாரம் அதிகமாயிருந்தபோதிலும்" எனக் கூறப்பட்டது.

1. பஞ்சமூலம் — முதற் புஸ்தகத்தில் 64-ம் பக்கம் பார்க்க. (மஹா பஞ்சமூலம்)

அபானவாயு இவை கட்டிப்போனதினுலும், இரத்தங்கலந்த அதிஸாரத்தினுலும், நாவறட்சி - வயிற்று வலிகளோடுகூடிய சீதபேதியாலும் வருந்துகிற ஜ்வர ரோகி அக்கோளாறுகளிலிருந்து நிவ்ருத்தியடைவான். (7) சுக்கு, சிற்றுமுட்டி, கண்டங்கத்திரி, மருதோன்றி, வெல்லம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பால் சோபை, மூத்திரக்கட்டு, மலபந்தம், அபானவாயு கட்டிப்போதல், காஸம், ஜ்வரம் இவற்றைப் போக்கும். (8) வெள்ளைச் சாறடை, பில்வவேர், சாறடை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பால் ஜ்வரத்தையும் சோஷபையையும் நிவாரணம் செய்யும். (9) இலவம் பிசின் சேர்த்து பக்குவம் செய்த பாலையாவது உபயோகிக்கலாம்; அது சீக்கிரம் ஜ்வரத்தைப் போக்கும். 108—113½.

ஜ்வரத்தில் நிருஹ வஸ்தி.

தோஷம் ஆமாவஸ்த்தை நீங்கி பக்வ நிலைமையை அடைந்திருக்கையிலும், பக்வாசயத்தை அடைந்திருக்கையிலும் நிருஹ வஸ்தியைப்[1] பிரயோகித்தால், அதனுல் தேஹவலிமையும், ஜாடராக்னியும் மனத்தெளிவும், நாக்கில் நற்சுவையும் சீக்கிரம் விருத்தியாகும்; ஜ்வரமும் சடிதியில் நிவ்ருத்தியாய்விடும். ஸ்ரம்ஸநம்[2] என்னும் வேலையைச் செய்யக்கூடிய ஔஷதத்தைப் பிரயோகித்தால், அது பக்வாசயத்தை அடைந்துள்ள பித்தத்தையாவது பித்தம் கபம் இவ்விரண்டையுமாவது வெளிப்படுத்தும்; வஸ்தியோ வென்றுல் பக்வாசயத்திலுள்ள மூன்று தோஷங்களையும் கழிக்கும். 114—115½.

ஜ்வரத்தில் அநுவாஸந வஸ்தி.

கப - பித்தங்கள் நன்கு க்ஷீணித்திருப்பவனும், விருத்தியான ஜாடராக்னியை யுடையவனும், மலபந்தமுள்ளவனுமான பிணியாளிக்குக் கழுத்தின் பின்புறம் முதுகு இடுப்பு இவை வலித்திழுக்கப்படுவது போன்ற உணர்ச்சி யுண்டாயிருக்கையில் அநுவாஸநவஸ்தியைப்[1] பிரயோகிக்கவேண்டும். 116.

ஜ்வரத்தில் படோலாதி நிருஹம்.

பேய்ப்புடல், வேப்பிலை, கடுகரோகிணி, ஆமணக்குவேர், மோர் மல்லி, சிற்றுமுட்டி, நெரிஞ்சில், மறுக்காரை, வெட்டிவேர், விளாமிச்சை இவற்றைச் சரிபாதி ஜலம் விட்டு விளாவிய பாலில் சேர்த்து, பால்மாத்திரம் மிகுந்து நிற்கும்படியாகக் காய்ச்சி, கோரைக்கிழங்கு, மறுக்காரை, திப்பிலி, அதிமதுரம், வெட்பாலரிசி இவற்றைக் கல்கமாகக் கூட்டி யெடுக்கவும்; இதில் தேனையும், நெய்யையும் சேர்த்து வஸ்தியாக குதத்திலுள் பீச்சிடலாம். இது ஜ்வரத்தைப் போக்கும், 117—119.

ஜ்வரத்தில் பர்ணி ந்யாதி நிருஹம்.

நரிப்பயறு, பெருவீடுகொள்ளி,[2] மோர் மல்லி, சிறுமல்லி,[3] அதிமதுரம், மறுக்காரை, வெட்டிவேர், கொன்றை இவற்றை க்வாதமாகக் காய்ச்சி, அதிமதுரம், சதகுப்பை, குப்பை மேனி, மறுக்காரை கோரைக்கிழங்கு இவற்றைக்கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும்; அதில் வெல்லம், தேன், நெய் இவற்றையும் சேர்த்து வஸ்தியாகப் பிரயோகிக்கலாம், 120, 120½.

---

1. நிருஹவஸ்தி — முதற் புஸ்தகத்தில் 29-வது பக்கம் பார்க்க.

2. ஸ்ரம்ஸநம் — குடலிலிருந்து மலத்தை மெதுவாக நெகிழச் செய்யும் தன்மை.

1. அநுவாஸநவஸ்தி — முதற் புஸ்தகத்தில் 29, 140, 150 இப்பக்கங்களைப் பார்க்க.

2. பெருவீடு கொள்ளி — இதை இடி கொள் என்றும் சிலர் கூறுவர்.

3. நரிப்பயறு, பெருவீடு கொள்ளி, மோர் மல்லி, சிறுமல்லி இந்த நான்குக்கும் பர்ணீ சதுஷ்டயம் எனப் பெயர்.

ஜ்வரத்தில் ஜீவந்தியாதி அநுவாஸநம்.

ஜீவந்தீ, மறுக்காரை, மேதா, திப்பிலி, அதிமதுரம், வசம்பு, ருத்தி[1] சிற்றரத்தை, சிற்றாமுட்டி, பில்வவேர், சதகுப்பி, தண்ணீர்விட்டான்கிழங்கு இவற்றை ஜலம்விட்டு இடித்து, பால், ஜலம், நெய், தைலம் இவற்றில் ஏதேனும் ஒன்றைச் சேர்த்து பக்குவம் செய்து கொள்ளவும்[2] ; அவரவருடைய தேஹத்தில் ஏற்பட்டுள்ள தோஷங்களின் தன்மைக்கேற்றவாறும், எந்த ஸ்நேஹம் எவரெவருக்கு அனுகூலமா யிருக்குமோ அதை அனுஸரித்தும் ஜ்வரத்தில் இந்த ஸ்நேஹத்தில் எதையேனும் அநுவாஸநமாய்ப் பிரயோகிக்கலாம். 121—122½.

ஜ்வரத்திற்கேற்ற கல்பஸ்த்தாநவஸ்திகள்.

ஸித்தி என்கிற கல்பஸ்த்தாநத்தில் எந்த வஸ்தி முறைகள் கூறப்படப் போகின்றனவோ[3] அவையும் ஜ்வரத்தைப் போக்கக்கூடியன. 123.

நாட்பட்ட ஜ்வரத்தில் நஸ்யப் பிரயோகம்.

ஜ்வரத்தில் விரேசநநஸ்யத்தைப்[4] பிரயோகிக்க வேண்டும் ; அது தலைவலி, தலைபாரம், கபப்பிரகோபம் இவற்றைப் போக்கும் ; இந்த்ரியங்களைத் தெளியச் செய்து சுறுசுறுப்பாக்கும் ; நாக்கில் நற்சுவையைத் தரும். சிரஸ் சூன்யமாயிருப்பதுபோல் தோற்றினால் ஸ்நேஹந நஸ்யத்தைப்[5] பிரயோகிக்கவேண்டும். சிரஸ்ஸில் தாபம் அதிகரித்திருந்தால் பித்த ஹரமான நஸ்யத்தைப் பிரயோகிக்கவேண்டும். 124, 124½.

ஜ்வரத்தில் தூம - கண்டூஷ- கபளங்கள்.

ஜ்வரத்தில் ப்ரதிச்யாயம், வாயின் அரோசகம், சிரோ ரோகம், தொண்டையைப்பற்றிய ரோகம், இவற்றைப் போக்கக்கூடிய குணமுடைய தூமபானங்களையும், கண்டூஷங்களையும், கபளங்களையும், அந்தந்த தோஷங்களின் நிலைமைகளுக்சேற்றவாறு உபயோகிக்கலாம். 125½.

ஜ்வரத்தில் அரோசகஹரமான கல்கம்.

ஜ்வரத்தினால் அரோசகம் உண்டாயிருக்கையில், கொம்மட்டி மாதுளையின் உட்சதையில் நெய்யும் இந்துப்பும் சேர்த்து வாயில் அடக்கிவைத்துக்கொள்ளலாம் ; அல்லது நெல்லிக்கனி, திராக்ஷை, சர்க்கரை இவற்றின் கல்கத்தையாவது வாயில் அடக்கிக்கொண்டிருக்கலாம். 126½.

நாட்பட்ட ஜ்வரத்தில் அப்யங்க-லேப-ஸேகங்கள்.

சர்மத்தைப்பற்றிய நாட்பட்ட ஜ்வரத்தில் அவரவருக்கு (அல்லது அந்தந்த நிலைமைக்கு) ஏற்றவாறு சீதவீர்யமான வஸ்துக்களாலோ உஷ்ண வீர்யமான வஸ்துக்களாலோ தயார் செய்யப்பெற்ற அப்யங்க ஔஷதங்களையும், லேபங்களையும், ஸேசநங்களையும், அஞ்ஜநங்களையும், தூமங்களையும் அப்பிணியாளிகளுக்குப் பிரயோகிக்கலாம். ஆகந்துகஜ்வரங்களிலும் முற்கூறிய அப்யங்க-லேபாதிகளை அங்ஙனமே பிரயோகிக்கலாம். 127, 128.

1. ஜீவந்தீ, மேதா, ருத்தி என்பவைகளுக்கு தேசபாஷையில் பெயர் கிடைப்பதில்லை.
2. தைலத்தையாவது க்ருதத்தையாவது ஜீவந்தி முதலிய ஔஷதிகளையும், பால்-ஜலம் முதலிய வற்றையும் சேர்த்து பக்குவம் செய்த கஷாயத்தில் காய்ச்சியெடுத்து ஜ்வரரோகியின் தேஹநிலைமை முதலியதைக் கவனித்து வஸ்தியில் பிரயோகிக்கவேண்டும்.
3. கல்பஸ்த்தாநத்தில் 4-வது அத்தியாயம் வஸ்தி கல்ப விஷயங்களைக் கூறுவது.
4. விரேசந நஸ்யம்-முதற் புத்தகத்தில் 161-வது பக்கம் பார்க்க.
5. ஸ்நேஹந நஸ்யம் — இதுவே ப்ருஹ்மண நஸ்யம் என்படும் ; இதைப்பற்றிய விவரங்களை முதற் புத்தகத்தில் 161-ம் பக்கம் பார்க்க.

ஜ்வரத்தில் தாபம் அதிகமாயிருக்கையில்

தாபஜ்வரத்தில் ஸஹஸ்ர தௌதக்ருதம்.

ஆயிரந்தடவை கழுவி யெடுத்த நெய்யினால்[1] அப்யங்கம் செய்யவேண்டும். 128½.

(1) ஸுஶ்ருதஸ்தானத்திற்கூறிய மதுர

தாபஜ்வரத்தில் சீதளமான தைல கஷாயாதிகளால் லேபஸ்நாநாதிகள்.

த்ரவ்ய வர்க்கத்திலும், அம்ல த்ரவ்ய வர்க்கத்திலும், கஷாயரஸ வர்க்கத்திலும்[2] மொழியப் பட்டுள்ள அந்தந்த வஸ்துக்களையாவது, சீதவீர்யமாகவும் - பித்த ஹரமானவையுமான சோதநாதிகண ஸங்கிரஹாத்தியாயத்திற் கூறியுள்ள தூர்வாதிகணங்கள் முதலியவற்றைச் சேர்ந்த வஸ்துக்களையாவது[3] க்வாதங்களாகச் செய்தும் கல்கங்களாகச் செய்தும் அவற்றில் பாலையும் சேர்த்துத் தைலம் காய்ச்சி யெடுத்து தேஹத்தில் அப்யங்கம் செய்தால் உடனே தாபம் நீங்கும். (2) அந்த கணங்களைச் சேர்ந்த வஸ்துக்களையே ஒருவாறு நன்கு மசியாமல் இடித்து அரைத்து சிரஸ்ஸிலும் மற்ற அவயவங்களிலும் நன்றாகத் தேய்த்துப் பூசவேண்டும். (3) அந்த கணங்களிற் கூறிய வஸ்துக்களாலான க்வாதத்தையே தேஹத்தில் ஊற்றிவரலாம்; அல்லது அக்கஷாயத்தில் அமிழ்ந்து ஸ்நாநம் செய்யலாம். 129—131½.

1. இது ஸஹஸ்ர தௌதக்ருதம் எனப்படும்; ஜலத்திலோ, அந்தந்த வியாதிகளுக்கேற்ற குணமுள்ள கஷாயாதிகளிலோ ஆயிரந்தடவை குழப்பிக் குழப்பி யெடுக்கப்பட்ட நெய்.

2. மதுர த்ரவ்யவர்க்கம், அம்ல த்ரவ்யவர்க்கம், கஷாயரஸ வர்க்கம் இவற்றின் விவரங்களை முதற் புத்தகத்தில் 90-ம் பக்கத்திற் பார்க்க.

3. தூர்வாதிகணம், ந்யக்ரோதாதிகணம், பத்மகாதிகணம், சாரிபாதிகணம் இவை "தூர்வாதிகணம் முதலிய" என்பதால் குறிக்கப்படுகின்றன; இவற்றின் விவரங்களை ஸுஶ்ருதஸ்தாநம் 15-வது அத்தியாயத்திற் காண்க.

காடி, தண்ணீர், பால், சுக்தம்,[1] நெய்

தாபஜ்வரத்தில் காடி முதலியவற்றால் ஸ்நாந ஸேகாதிகள்.

இவை முதலியவற்றாலும் முற்கூறியவண்ணமே தாபஜ்வரத்தில் லேப-ஸ்நாநாதிகளைச் செய்யலாம். 132.

விளாம்பழம், கொம்மட்டி மாதளையின்

தாபஜ்வரத்தில் கபித்தாதிகளால் லேபம்.

அம்லரஸம், பெருங்குமிழன், வெள்ளிலோத்தி, மாதளை இவற்றை தேஹத்திற் பூசுவதாலும், இலந்தந்தளிரைக் கசக்கி யெடுப்பதால் உண்டாகும் நுரையைப் பூசுவதாலும், ஏதேனும் அரிஷ்டத்திலுண்டாகும் நுரையை தேஹத்தில் தேய்ப்பதாலும் அழற்சி, வலி, மயக்கம், வாந்தி, நாவறட்சி இவை தணிவடையும். 133, 133½.

முன்னால் தோஷோபக்ரமணீயாத்தியாயத்

தாபஜ்வரத்தில் பித்தஹர சிகித்ஸை.

தில் பித்தஹரமான யாதொரு முறை விவரிக்கப்பட்டதோ[2] அதையும் உபயோகித்தால் மிகவும் அழற்சியோடு கூடிய ஜ்வரம் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். 134½.

கிரந்திதகரம், அகில், குங்குமப்பூ, கோஷ்

சீதஜ்வரத்தில் தகராதி அப்யங்கம்.

டம், மாசிப்பத்திரி, கல்லுருவி, ஸரளதேவதாரு, தேவதாரு, நகம் என்னும் கந்தத்திரவ்யம், சிற்றரத்தை, மாசிக்காய், கருங்கச்சோரம், ஏலம், சிற்றேலம், கச்சோரம், முருங்கை, துளஸி, ஜடாமாம்ஸீ, சுக்குநாறிப்

1. சுக்தம்—முதற் புத்தகத்தில் 42-ம் பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க.

2. ஸுஶ்ருதஸ்தாநம், பதின்மூன்றும் அத்தியாயத்தில் 111-ம் பக்கம் பார்க்க.

புல், கடுகு, தசமூலம்,[1] சீந்தில், ஆமணக்கு, சிற்றுமணக்கு, நீர்த்திப்பிலி, காவட்டம்புல், தமாலபத்திரம், நிலவேம்பு, குந்துருகம், கொத்தமல்லிவிதை, ஓமம், சதகுப்பை, உளுந்து, கொள், சித்திரமூலம், புங்கை, தும்பராஷ்ட்ரகம், ஈச்வரமூலி இவற்றாலும், இவற்றைப் போல உஷ்ண வீர்யங்களாகவும் பரிசிப்பதற்குச் சூடாகவுமுள்ள சரக்குகளாலும் தயாரான கஷாயங்களிலும், ஸுரை-ஸௌவீரம் முதலான மதுவகைகளிலும் முற்கூறிய வற்றைப்போன்ற சரக்குகளைக் கல்கமாகவும் சேர்த்துத் தைலம் காய்ச்சவும். இளஞ்சூடாயிருக்கையில் இத்தைலத்தைக்கொண்டு சீத ஜ்வரத்தில் அப்யங்கம் செய்யவும், 135—136¼.

சீதஜ்வரத்தில் நடுக்கத்தைத் தணியச் செய்யும் லேபந-ஸ்வேதநாதி அநேக முறைகள்.

(1) சீதஜ்வரத்தில் முற்கூறிய கிரந்திதகரம் முதலிய ஔஷதச் சரக்குகளை நன்றாக அரைத்து உடம்பிற் பூசலாம். (2) அச் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய இளஞ்சூடான கஷாயத்தினால் தேஹத்தை நனைக்கலாம். (3) அல்லது அக் கஷாயத்தில் அமர்ந்து ஸ்நாநம் செய்யலாம். (4) அங்ஙனமே சுக்தம், கோமூத்திரம், மஸ்து[2] இவற்றைக் காய்ச்சாமலே ஸேசநம் செய்யவும்[3] ஸ்நாநம் செய்யவும் உபயோகிக்கலாம். (5) ஆரக்வதாதி கணத்திற்[4] கூறிய சரக்குகளையும் குடிநீராகப்[5] பக்குவம் செய்து பருகுவதற்கும், அப்யங்கம் செய்வதற்கும், லேபநம் செய்வதற்கும் உபயோகிக்கலாம். (6) விஷம ஜ்வரத்திற்காக இனி கூறப்போகிற[1] அகரு முதலியவற்றாலான தூபங்களையும் சீத ஜ்வரத்திற் பிரயோகிக்கலாம். (7) அக்னி ஸம்பந்தத்தினாலும், அக்னிஸம்பந்தமில்லாமலும் வியர்வையை யுண்டுபண்ணலாம். (8) ஸ்வேதி யென்னும் வியர்வை யுண்டாக்கும் ஔஷதத்தை உட்கொள்ளலாம். (9) கர்ப்பக்ருஹம் என்னும் வீட்டு அறையின் கீழ் அமைத்துள்ள வெப்பமான பிரதேசத்தில் படுத்திருக்கலாம். (10) கனத்த நூற்கம்பளம், கம்பளம், துப்பட்டி இவற்றைப் போர்த்துக் கொள்ளலாம். (11) தூமமின்றி ஜ்வலித்துப் பிரகாசிக்கும் தணல்கள் அடங்கிய அக்னி குண்டத்தை அருகில் வைத்துக்கொள்ளலாம். (12) மதுபானம் செய்யலாம். (12) த்ரிகடுவைப்[2] பொடித்துச் சேர்த்து புளித்த மோரைப் பருகலாம். (13) கொள், நெல், கோத்ரவ தானியம் இவற்றை வேகவைத்து அவற்றிலிருந்து கிளம்பும் ஆவியையும் தேஹத்திற் பரவச்செய்யலாம். (14) குளிரால் நடுக்கமுண்டவன் முற்கூறிய சிகித்ஸைகளைச் செய்து கொள்வதோடு, பித்தத்தை விருத்தி செய்யுங் குணமுடைய[3] வேறு சிகித்ஸையையும் செய்து கொள்ளலாம். (15) கனத்த மார்பையும் பருத்த சரீரத்தையும் உடையவர்களாய், விலாஸமான நடையுடைகளையுடையவர்களாய், யௌவனத்தினாலும் மதுபானத்தினாலும் மதங்கொண்டவர்களுமாயுள்ள மனதுக்கினிய மங்கையர்கள் அப்பிணியாளியை ஆலிங்கனம் செய்து, குளிரும் நடுக்கமும் நீங்கியபின்பு அவர்கள் அவனை விட்டு விலகி விடவும் செய்யலாம். 140—145½.

1. தசமூலம்—முதற் புத்தகத்திம் 123-ம் பக்கம் பார்க்க.
2. மஸ்து — முதற் புத்தகத்தில் 35-ம் பக்கம் பார்க்க.
3. ஸேசநம்—தேஹத்தில் தெளித்தல் அல்லது தேஹத்தை நனைத்தல்.
4. ஆரக்வதாதிகணம் — முதற் புத்தகத்தில் 125-ம் பக்கம் பார்க்க.
5. குடிநீர்—இதே அத்தியாயத்தில் 3-வது பக்கம் டிப்பணியில் இதன் விவரம் காண்க.

1. அடுத்துவரும் 161, 162 - வது ச்லோகங்களின் மொழிபெயர்ப்பிற் கூறப்படும் தூப முறை.
2. த்ரிகடு—சுக்கு, திப்பிலி, மிளகு இவற்றின் கூட்டு.
3. பித்தத்தை விருத்தி செய்வதென்பதால் உஷ்ணத்தை விருத்தி செய்யக்கூடியதென்கிற விஷயம் குறிப்பிடப்படுகிறது.

*ஸந்நிபாத ஜ்வரத்தில் சிகித்ஸை ஆரம்பிக்கும் முறை.*

ஸந்நிபாத ஜ்வரத்தில் தாழ்ந்திருக்கும் தோஷத்தை விருத்தி செய்தும், மேலோங்கியிருப்பதைக் குறையச் செய்தும் தோஷங்களின் கோளாறுகளைப் பரிஹரிக்கவேண்டும்.[1] மூன்று தோஷங்களும் ஒரே சீராக பலம் பெற்றுப் பிரகோபித்திருந்தால், கபஸ்தானத்தில் முதலில் சிகித்ஸையை ஆரம்பித்து[2] முறையே மற்ற தோஷங்களுக்கும் பரிஹாரம் செய்ய முயலவேண்டும். 146½.

*ஸந்நிபாத ஜ்வரத்தின் இறுதியிலுண்டாகும் கர்ணமூல சோதைக்கு சிகித்ஸை.*

ஸந்நிபாத ஜ்வரத்தின் கடைசி நிலைமையில் காதின் மூலப் பிரதேசத்தில் மிகக் கடுமையான ஒரு வீக்கம் உண்டாவதுண்டு. அவ் வீக்கத்தினால் பீடிக்கப்படுகின்றவர்களுள் எவனோ ஒருவனே இவ் வியாதியினின்றும் மீட்சிபெறுவான். இரத்தத்தை வெளிப்படுத்துவதாலும்,[3] க்ருதபானங்களைச் செய்வதாலும், கபஹரமான ப்ரதேஹங்களென்கிற பூச்சுகளிடுவதாலும், நஸ்யப்பிரயோகங்களாலும், கபளங்களாலும்[4] அவ்வவஸ்தையை சீக்கிரம் போக்கிவிடலாம். 147—148½.

*ஜ்வரத்தில் ஸிராவ்யதை செய்யும் நிலைமை.*

முற்கூறிய சீதசிகித்ஸையென்ன, உஷ்ண சிகித்ஸையென்ன, ரூக்ஷ சிகித்ஸையென்ன இவை முதலியவற்றால் எவனொருவனுக்கு ஜ்வரம் தணியவில்லையோ, அவனுக்கு ஜ்வரம் சாகையைப் பற்றியதாயிருக்கக்கூடும்; அப்பொழுது ஜடிதியில் ஒவ்வொரு கையிலும் க்ரமமாக ஸிராவ்யதை செய்யவேண்டும். விஷமஜ்வரத்திலும் வாதாதி தோஷங்களின் நிலைமைகளைப் பகுத்தறிந்து, அதற்குத் தகுந்தவாறு இந்த ஸிராவ்யதையென்னும் சிகித்ஸாமுறையைப் பிரயோகிக்கலாம்; அடுத்தாற்போல கூறப்படும் சிகித்ஸைகளையும் செய்யலாம். 149—150½.

*விஷம ஜ்வரத்தில் படோலாதி க்வாதங்கள்.*

பேய்ப்புடல், கடுகரோஹிணீ, கோரைக்கிழங்கு, கடுக்காய், அதிமதுரம் இவற்றில் மூன்று மூன்று சரக்குகளையோ, நான்கு நான்கு சரக்குகளையோ, அல்லது ஐந்து சரக்குகளையுமோ சேர்த்துக் கஷாயம் காய்ச்சி உபயோகிக்க, அக் கஷாயங்கள் விஷம ஜ்வரங்களைப் போக்கும். 151½.

*விஷம ஜ்வரத்தில் த்ரிபலை முதலியவற்றை யுபயோகித்தல்.*

த்ரிபலையையும், கடுக்காயையும், சீந்திற்கொடியையும், திப்பிலியையும் தனித்தனியாகவும் விஷம ஜ்வரத்திற் பிரயோகிக்கலாம். 152.

*விஷம ஜ்வரத்தில் சேராங்கொட்டையின் பிரயோகம்.*

சேராங்கொட்டையை அந்தந்த முறைப்படி வெல்லம் முதலிய வெவ்வேறு வஸ்துக்களோடு சேர்த்து பக்குவம் செய்தாவது விஷம ஜ்வரத்தில் உபயோகிக்கலாம். 152½.

---

1. ஸந்நிபாதத்தில் மூன்று தோஷங்களும் எப்பொழுதும் ஒருமிக்கக் கோளாறடைந்திருப்பினும், அத்தோஷங்களின் கோளாறில் தாரதமியம் இருக்கக் கூடுமாகையால், அவற்றில் குறைந்த நிலைமையிலிருப்பதை உயர்த்தியும், மேலோங்கி யிருப்பதைக் குறைத்தும் சிகித்ஸை செய்யவேண்டுமென்று கூறப்படுகிறது.

2. ஜ்வரத்தில் ஆமாசயமே முதலில் மிகுதியாக விகாரப்படுவது இயல்பாகையால், அவ்வவயவமே முக்கியமாய் கபஸ்தானம் என்று குறிக்கப்படுகிறது என்றும், ஆகவே அதற்கே முக்கியமாய் சிகித்ஸை முதலில் செய்யப்பட வேண்டுமென்றும் மொழியப்பட்டது என்றறிக.

3. முதற் புத்தகத்தில் 103, 204-ம் பக்கங்களில் குறிப்பிடப்பட்டுள்ள இரத்த மோக்ஷணமுறை.

4. கபளம்—இது கபளக்கிரஹம் என்றும் வழங்கப்படும்; இதைப்பற்றி முதற் புத்தகத்தில் 169-171 பக்கங்களைப் பார்க்க.

என்றைய தினம் ஜ்வரம் வரக்கூடுமோ அந்த தினத்தில் லங்கநசிகித்ஸையையும் ப்ருஹ்மண சிகித்ஸையையும் முறைப்படி பிரயோகிக்கலாம். 153.

விஷம ஜ்வரத்தில் லங்கந-ப்ருஹ்மணங்கள்.

(1) காலையில் வெள்ளுள்ளியை நல்லெண்ணெயிற் கலந்து புஜித்துவிடலாம். (2) போஜனத்திற்கு முன்பு புராணக்ருதத்தையாவது[1] பானம் செய்யலாம். (3) அங்ஙனமே தயிர், பால், மோர் இவற்றையும் பருகலாம். (4) ஷட்பலக்ருதத்தையாவது,[2] கல்யாணக க்ருதத்தையாவது,[3] பஞ்சகவ்ய க்ருதத்தையாவது,[4] திக்தக க்ருதத்தையாவது,[5] வ்ருஷக்ருதத்தையாவது[6] போஜனத்திற்கு முன்பாக உபயோகிக்கலாம். 154, 154½.

விஷம ஜ்வரத்தில் வெள்ளுள்ளி, பால், தயிர், க்ருதம் முதலியவற்றின் பிரயோகம்.

த்ரிபலை, இலந்தை, தழுதாழை இவற்றின் கஷாயத்தில் தயிர் சேர்த்து, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும்; அதில் வெள்ளி லோத்திப்பட்டையைக் கல்கமாகவும் சேர்க்க வேண்டும். அந்த க்ருதம் விஷம ஜ்வரத்தைப் போக்குவதில் சிறந்த ஔஷதம். 155½.

விஷம ஜ்வரத்தில் த்ரிபலாதி க்ருதம்.

(1) ஸுரையையும்,[1] தீக்ஷ்ண வீர்யமுள்ள மதுவையும், மயில் தித்திரியென்னும் பக்ஷி கோழி இவற்றின் இறைச்சியையும், உஷ்ண வீர்யத்தில் நடுத்தரமான வேறுவித மாம்ஸத்தையும் அன்னத்தோடு ஜ்வரம் வருகிற தினத்தில் யதேஷ்டமாய் புஜித்து நித்திரையுறவும். (2) அல்லது அவற்றை மறுபடியும் வமநம் செய்துவிடவும். (3) க்ருதத்தை உத்தம மாத்திரையாகப் பருகி மீண்டும் அதை வாந்தி செய்துவிடலாம். 156—157½.

விஷம ஜ்வரத்தில் ஸுரை முதலியதைப் பருகி வாந்தி செய்தல்.

ஜ்வரம் வரும்போது ஸ்நேஹ - ஸ்வேத சிகித்ஸைகளைச் செய்துவிட்டு, கருஞ்சாறடை, இராமதுளஸி,[2] சிவதைவேர், கடுகரோஹிணி இவற்றைத் தனித்தனியே க்வாதமாகச் செய்து உட்கொள்ளலாம், 158½.

விஷம ஜ்வரம் வருகையில் நீலிந்யாதி க்வாதம் முதலியது.

மனச்சிலை, இந்துப்பு, திப்பிலி இவற்றைத் தைலம்விட்டுத் தேய்த்து விஷம ஜ்வரம் வருகையில் கண்களுக்கு அஞ்ஜநமிடலாம். 159.

விஷம ஜ்வரத்தில் மனச்சிலாதி அஞ்ஜநம்.

பெண்புலியின் கொழுப்பும், காயமும் ஸமபாகமாயெடுத்து, இந்துப்பும், கலந்து இழைத்து விஷம ஜ்வரத்தில் நஸ்யமிடலாம். அவ்விதமே புராணக்ருதத்தையும் சிங்கத்தின் கொழுப்பையும் இந்துப்பையும் கலந்து நஸ்யமிடலாம். 160.

விஷம ஜ்வரத்தில் நஸ்யமிடுதல்.

---

1. புராண க்ருதம்—நீடித்துப் பழகிய நெய்.

2. ஷட்பலக்ருதம் — க்ஷய சிகித்ஸையில் (இராஜயக்ஷ்மா) கூறப்படும் முறை.

3. கல்யாணக க்ருதம் — உத்தரஸ்த்தாநத்தில் உன்மாதப்ரதிஷேதாத்தியாயத்திற் கூறப்படும்முறை.

4. பஞ்சகவ்ய க்ருதம்—உத்தரஸ்த்தாநத்தில் அபஸ்மாரப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.

5. திக்தக க்ருதம்— குஷ்ட சிகித்ஸையில் கூறப்படும் முறை.

6. வ்ருஷ க்ருதம்— இரத்த-பித்த சிகித்ஸையில் கூறப்படும் முறை.

1. ஸுரை—முதற் புத்தகத்தில் 19-ம் பக்கத்தில் இதன் விவரம் காண்க.

2. இராமதுளஸி — இது எலுமிச்சந்துளஸியென்றும் கூறப்படுவதுண்டு.

ஜ்வரத்தில் அபராஜிதாதி தூபங்கள் முதலியன.

(1) சிறுநெரிஞ்சி, வேப்பிலை, வசம்பு, கோஷ்டம், கடுக்காய், வெண்கடுகு, வாற்கோதுமை இவற்றுடன் நெய் கலந்து தணலிலிட்டு அதிலிருந்தெழும் தூமத்தை உட்கொள்ளலாம். (2) பூனையின் மலத்தையும் தணலில் சேர்த்து அதன் தூமத்தையும் உறிஞ்சலாம். (3) குங்கிலியம், வாஸனைப்புல், வசம்பு, ஸர்ஜரஸம்,[1] வேம்பு, எருக்கு, அகில், தேவதாரு இவற்றைக் கொண்டு பிரயோகிக்கப்படுவது அபராஜித தூபம் என்று கூறப்படும்; இந்த தூபத்தை எல்லா ஜ்வரங்களிலும் பிரயோகிக்கலாம். (4) சித்தவிகார சிகித்ஸைகளுக்கான அத்தியாயங்களில்[2] கூறப்படும் தூபநமுறைகளும், நஸ்யமுறைகளும், அஞ்ஜநமுறைகளும், விரட்டுவதும் ஆக இவைகள்கூட இவ்வியாதியில் ஏற்ற சிகித்ஸைகளாம். 161—162½.

விஷம ஜ்வராதிகளில் தைவாச்ரயமான சிகித்ஸை.

தேவதாஸம்பந்தமான சிகித்ஸையும்[3] ஸகல ஜ்வரங்களையும் போக்கவல்லது; விஷம ஜ்வரங்கள் பெரும்பாலும் ஆகந்துக காரணங்களின் ஸம்பந்தத்தினால் உண்டாகின்றன வாகையால், அந்த ஜ்வரங்களை விசேஷமாக இச் சிகித்ஸையினால் போக்கலாம். 163½.

1. ஸர்ஜரஸம்.—மட்டிப்பால் எனப்படும் தூபந வஸ்து.

2. உத்தரஸ்தாநத்தில் கூறப்படுகிற உந்மாத ப்ரதிஷேதாத்தியாயத்திலும், அபஸ்மார ப்ரதிஷேதாத்தியாயத்திலும் விவரிக்கப்படும் தூபநமுறைகள் இங்கு குறிப்பிடப்படுகின்றன.

3. ஹோமம்செய்தல், அர்ச்சித்தல், கோயில்களுக்குச்சென்று இஷ்டதேவதைகளை வழிபாடுசெய்தல், மணி மந்திராதிகளைப் பிரயோகித்தல் முதலியவை தேவதாஸம்பந்தமான சிகித்ஸைகளாம்.

விஷம ஜ்வரம் நிவ்ருத்தியாகாவிடில் ஸிராமோக்ஷணம் செய்தல்.

விஷம ஜ்வரமானது முற்கூறிய சிகித்ஸைகளால் நிவாரணமாகாமற் போனால், அதில் அந்தந்த தோஷம் முதலியவற்றின் நிலைமைகளுக்கேற்றவாறு ஸிராவ்யதையைச் செய்ய வேண்டும். 164.

வாதஜ்வர-விஸர்ப்ப ஜ்வராதிகளின் சிகித்ஸை.

வாதத்தினால் மாத்திரம் உண்டான ஜ்வரத்திலும், விஸர்ப்பம் - கொப்புளங்கள்-அபிகாதம் இவற்றாலுண்டான ஜ்வரங்களிலும் க்ருதபானம் செய்வதும், பனிநீரைப் பூசுவதும், அவ்வித குளிர்ந்த வஸ்துக்களை மேலே ஊற்றுவதும், மாம்ஸரஸத்தைக் குடிப்பதும் உசிதமாகும். அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு முற்கூறிய இரத்தமோக்ஷணம் முதலிய சிகித்ஸாமுறையையும் நிறைவேற்றலாம். 165, 165½.

கிரஹாதிகளாலுண்டாகும் ஜ்வரத்திற்கு சிகித்ஸை.

பூதக்கிரஹங்களால் ஸம்பவிக்கும் ஜ்வரத்தில் பூதவித்யையில் விவரிக்கப்படும் விதமாய்[1] தேவதார்ச்சனை செய்தல், மந்திரங்களைப் பிரயோகித்தல் முதலிய முறைகளை நிறைவேற்றவும். 166.

ஓஷதிகந்த-விஷப்பற்றுகளாலான ஜ்வரங்களுக்கு சிகித்ஸை.

சில ஓஷதிகளுடைய வாஸனையை முகர்ந்ததாலுண்டான ஜ்வரத்தில் பித்தஹரமான சிகித்ஸையைச்[1] செய்யவேண்டும். விஷஸம்பந்தமான ஜ்வரத்தில் விஷஹரமான சிகித்ஸையைப்[2] பிரயோகிக்கவேண்டும். 166½.

1. பித்தஹரமான சிகித்ஸை ஸூத்திரஸ்தாநத்தில் தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

2. விஷஹர சிகித்ஸை — ஸூத்திரஸ்தாநத்தில் 7-வது அத்தியாயத்திலும், உத்தரஸ்தாநத்தில் 36, 37, 38 இவ்வத்தியாயங்களிலும் இவ்விஷயமான விவரங்களைக் காணலாம்.

மனோ விகாரம் முதலியவற்றாலான ஜ்வரங்களுக்கு சிகித்ஸை.

இஷ்டமாகவும் இன்பமாகவுமுள்ள விஷயங்களைப் பூர்த்தி செய்து வைப்பதாலும், நன்மை தீமைகளைப் பகுத்துணரச் செய்தலாலும், அந்தந்த தோஷக் கோளாறுகளுக்கு ஏற்ற பரிஹாரங்களைப் பண்ணுவதாலும் சினம் முதலிய மனோவிகாரங்களால் உண்டாகும் ஜ்வரத்தைப் போக்கலாம். கோபத்தினு லுண்டான ஜ்வரம் சிற்றின்பப் பற்றுதலாலும், காமத்தினு லுண்டானது சினத்தினுலும், பயம் சினம் இவ்விரண்டாலும் ஸம்பவித்த ஜ்வரம் காமக்ரோதங்களாலும், காமக்ரோதங்களால் உண்டானது பய-கோபங்களாலும் தீரும்; சாபத்தீடு, அதர்வணமந்திரப் பிரயோகம் இவற்றுல் உண்டாகும் ஜ்வரத்தில் தேவதாப்ரீதிகரமான சாந்திகர்மங்களை நிறைவேற்றவேண்டும். 167—169,

மனோவிகாராதிகளாலுண்டான ஜ்வரத்தில் உணவளிக்கும் முறை.

முற்கூறிய ஜ்வரங்கள்[1] முதலில் தோஷ ஸம்பந்தமில்லாமல் வெறு ஜ்வரங்களாயிருந்து, அப்பால் தோஷங்களோடு பற்றிப் பரவுகின்றன; ஆகவே தோஷங்களின் தன்மைகளை அனுஸரித்து அந்த ஜ்வரங்களில் ஆஹாரம் முதலியதை யேற்படுத்தவேண்டும். வேறு காரணங்களால் ஜ்வரம் ஸம்பவித்தபோதிலும் வாதம் முதலிய தோஷங்களின் பற்றுதலில்லாமல் ஜ்வரம் தொடர்ந்திருப்பதில்லை. 170, 170½.

ஜ்வரம் வரும் ஸமயத்தை மறப்பது முதலியது.

ஜ்வரம் உண்டாகும் ஸமயத்தையும், ஜ்வரம் வருமென்கிற நினைவையும் இப்பிணியாளிக்கு வேறுவிதமான இனிய விஷயங்களில் மன்தைச் செலுத்திப் போக்கிவிட வேண்டும். மனது கருணைமேலிட்டு மிருதுவாகவும் பரிசுத்தமாகவுமிருந்தால், அதுவே எல்லா ஜ்வரங்களையும் தீர்க்கவல்லது 171½.

ஜ்வரம் நிவ்ருத்தியானதும் அனுஸரிக்க வேண்டிய சிகித்ஸாக்ரமம்.

தேஹத்தில் இயற்கையான வலிமை யேற்படும் வரையில் வியாயாமம், ஸ்நாநம், புணர்ச்சி, குருவாகவும் அஸாத்மியமாகவும் காரதலாகவுமுள்ள உணவு இவற்றையும், ஜ்வரத்திற்குக் காரணமான மற்றவைகளையும் பரிஹரித்துவிடவேண்டும். ஜ்வரம் விட்டிருந்தபோதிலும் எல்லா உணவுகளையும் உடனே உபயோகித்துவிடக்கூடாது; அங்ஙனம் உபயோகித்தால், நிவ்ருத்தியான ஜ்வரம் பலஹீனமாயுள்ள அப்பிணியாளிக்கு மீண்டும் ஸம்பவித்து சீக்கிரம் பிராணபாயத்தை விளைவிக்கும். மறுபடியுமுண்டாகும் அவ்வித ஜ்வரம் எளிதில் உயிர்ச்சேதம் உண்டாக்கும் இயல்பினதாகையால், அதற்கு அந்தந்த நிலைமையைக் கவனித்து ஏற்ற சிகித்ஸையை அடிக்கடியும் செய்துவரவேண்டும். 172—174.

உக்கிரமான ஜ்வரங்களில் மணி - மந்திர- ஔஷதிகளின் பிரயோகம்.

சிறந்த ஔஷதிகளை யுபயோகிப்பதும், இரத்தினங்களைத் தரிப்பதும், ஸுகந்தங்களை யுபயோகிப்பதும், மேன்மக்களென்ன - ஆசார்யர்களென்ன - அந்தணர்களென்ன - தைவமென்ன இவர்களைப் பூஜிப்பதும், மனதுக்கு இன்பமான விஷயங்களை அனுபவிப்பதும் ஆக இவை யாவும் விஷ்ணுவினுல் உண்டாக்கப்படும் உக்கிரமான ஜ்வரத்தையும் தீர்த்துவிடும்.[1] 175.

---

1. [illegible]

1. விஷ்ணுவினிடம் அபசாரப்படுவதால் உண்டாகும் ஜ்வரம் எனப் பொருள்; இது எல்லா ஜ்வரங்களினும் மிகக் கடுமையானது; ஆகவே மற்ற ஜ்வரங்களையும் இதைத்தடுக்கும் அல்லது நிவ்ருத்திக்கும் மணி-மந்திராதிகள் தீர்த்துவைக்கக் கூடியனவென்று இதன் கருத்து

## இரண்டாவது அத்தியாயம்.

இனி இரத்த-பித்த சிகித்ஸை[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

ஸாத்கஸாத்தியமான இரத்த-பித்தம்.

மேல் நோக்கி முகமார்க்கத்தினுல் வெளியாகும் இரத்த - பித்தமும், நல்ல தேஹவலியையுள்ளவனுக்கு ஸம்பவிக்கும் இரத்த-பித்தமும், அதிக வேகத்துடன் உண்டாகாததும், ஒரு தோஷத்தை ஆதாரமாகக்கொண்டு உண்டாவதும், புதிதாக உண்டானதும், எளிதில் நிவ்ருத்திக்கக்கூடிய காலத்தில் ஸம்பவித்ததும், உபத்திரவங்களோடு ஸம்பந்திக்காததும் ஆக இத்தகைய இரத்த-பித்தங்களும் கஷ்டமின்றி பரிஹரிக்கக்கூடியவையாம். 1.

யாப்யமான இரத்த-பித்தம்.

கீழ் நோக்கி குதமார்க்கத்தினுல் வெளியாகும் இரத்த - பித்தமும், இரண்டு தோஷங்களால் உண்டான இரத்த-பித்தமும் யாப்யங்களாகும்.[2] $1\frac{1}{2}$.

அஸாத்தியமான இரத்த-பித்தம்.

அடிக்கடியும் தணிவடைந்து மீண்டும் விருத்தியாய் விடுவதும், ஒரு மார்க்கத்தினுல் வெளியாய்க்கொண்டிருந்து அவ்வழியிலிருந்து மற்றொரு மார்க்கதிற்கிளம்புவதும், அபரிமிதமாய் வெளியாய்க்கொண்டிருப்பதும், ஜாடராக்னி மந்தப்பட்டுள்ளவனுக்கு ஸம்பவிப்பதும், மூன்று தோஷங்களாலுண்டானதும், கீழ்-மேல் இரண்டு வழிகளாலும் வெளிப்படுவதுமான இரத்த-பித்தங்கள் யாவும் சிகித்ஸைக்குத் தகாதவையாம். $2\frac{1}{2}$.

பல விதமான இரத்த-பித்தங்களில் பொதுவான சிகித்ஸா விதிகள்.

தேஹவன்மையுள்ளவனும் மிக்க அதிகரித்த தோஷமுள்ளவனுமான மனிதனுக்கு ஸந்தர்ப்பணத்தினுல்[1] ஏற்பட்டதும், மேல் நோக்கி முகம் முதலியதால் வெளிவருவதுமான இரத்த-பித்தத்தை விரேசந சிகித்ஸையினுல் நிவ்ருத்தி செய்யவேண்டும். குதம் முதலியவற்றின் மூலமாய் கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தை வமநம் செய்வித்து நிவ்ருத்தி செய்யவேண்டும். துர்ப்பலமாயிருப்பவனும் சொற்பதோஷப் பிரகோபத்தைப் பெற்றவனுமான மனிதனுக்கு லங்கநாதிகளால் உண்டான மேல் நோக்கிய இரத்த - பித்தத்தை சமந சிகித்ஸையினுலும்,[2] அதே விதமான மனிதனுக்குக் கீழ் நோக்கியுண்டான இரத்த - பித்தத்தை ப்ருஹ்மண சிகித்ஸையினுலும்[3] நிவ்ருத்தி செய்யவேண்டும். மேலும் முற்கூறிய சிகித்ஸைகளை ஆரம்பிப்பதற்கு முன் அப்பிணியாளிகள் லங்கநத்திற்குத் தகுந்தவர்களா ப்ருஹ்மணத்திற்குத் தகுந்தவர்களா வென்று மற்ற நிலைமைகளையும் பரிசோதித்துப் பார்க்கவும் வேண்டும். 3, 4.

1. நிதாந ஸ்த்தாநத்தில் (முதற் புத்தகத்தில்) விவரிக்கப்பட்டுள்ள இப்பெயர் கொண்ட வியாதிக்குத் தகுந்த சிகித்ஸாக்ரமங்களை விவரிக்கும் அத்தியாயம்.

2. யாப்யம் — முதற் புத்தகத்தில் 9-வது பக்கத்தில்விவரம் காண்க.

1. ஸந்தர்ப்பணம் — முதற் புத்தகத்தில் த்விவிதோபக்ரமணீயாத்தியாயத்தில் (ஸூத்திர ஸ்த்தாநம்) விவரம் காண்க.

2. சமநம்—முதற் புத்தகத்தில் 5, 7-வது பக்கங்களில் பார்க்க.

3. ப்ருஹ்மணம் — த்விவிதோபக்ரமணீயாத்தியாயத்தில் விவரம் காண்க.

மேல்நோக்கிவரும் இரத்த - பித்தத்தில் திக்தரஸமும் கஷாய ரஸமுமுள்ள பதார்த்தங்கள் சமநம் செய்வதற்கு உபயோகமானவை; சுக்கு இல்லாமல் பக்குவம் செய்யப்பட்ட ஷடங்கபாநீயத்தைப்[1] பருகி லங்கநமிருப்பதும் சமநமாகும். 5.

மேல் நோக்கிய இரத்த-பித்தத்தில் சமந சிகித்ஸை.

குதம் முதலியவற்றால் கீழ் நோக்கிய இரத்த - பித்தத்தில் மதுர ரஸத்தைக்கொண்டு ப்ருஹ்மணசிகித்ஸையைச் செய்ய வேண்டும் $5\frac{1}{2}$.

கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தில் ப்ருஹ்மண சிகித்ஸை.

மேல் நோக்கிய இரத்த-பித்தத்தில் முதலில் தர்ப்பணசிகித்ஸையும், கீழ் நோக்கிய இரத்த - பித்தத்தில் முதலில் பேயாவைக் கொடுப்பதும் யுக்தமாகும். 6.

இரத்த - பித்தத்தில் தர்ப்பணமும் பேயாவும்.

உணவுகளைப் போதுமாறு புஜித்துக் கொண்டு பலசாலியாயுள்ளவனுக்கு வெளியாகும் இரத்த-பித்தத்தை, அது அசுத்தமாயிருக்கையில் தடுக்கக்கூடாது; அவ்விதம் தடுத்தால் அவ்வசுத்த ரத்தம் ரோகங்களை யுண்டுபண்ணும்[2]; அங்ஙனமின்றி வேறுவிதமான மனிதனுக்கு[3] வெளிவரும் இரத்த-பித்தத்தைத் துரிதமாமாகத் தடுக்க முயல்வேண்டும்; ஏனெனில் அக்னியைப்போல் அது சீக்கிரம் அபாயம் விளைவிக்கக் கூடியதாம்.[1] 7.

இரத்த - பித்தத்தில் இரத்தத்தை அடக்குவது முதலியது.

வெண் சிவதை, கறுஞ் சிவதை இவற்றை இடித்துக் கஷாயமிடவும். அதில் சர்க்கரை சேர்த்து முறைப்படி லேஹ்யம் தயார் செய்யவும்.[2] அதைப் பாணிதலப் பிரமாணம்[3] இரத்த-பித்தத்தில் உபயோகிக்கவேண்டும். 8

இரத்த-பித்தத்தைத்தடுக்க த்ரிவ்ருத் அவலேஹம்.

(1) வெண்சிவதை, த்ரிபலை, கறுஞ்சிவதை, திப்பிலி, சர்க்கரை, தேன் இவற்றைச் சேர்த்து மோதகம் என்னும் மாத்திரை செய்யவும்;[4] இது ஸந்நிபாதம், மேல் நோக்கிய ரத்த-பித்தம், சோகை, ஜ்வரம் இவற்றைப் போக்கும். (2) வெண் சிவதைக்கு ஸம அளவாய் சர்க்கரையும், அதற்குக் கால்பங்கு திப்பிலியும் சேர்த்து முன்போல் மோதகம் செய்து, அதைப் போலவே உபயோகிக்கலாம். 9, $9\frac{1}{2}$.

இரத்த - பித்தத்தில் த்ரிவ்ருதாதி மோதகம்.

---

1. ஷடங்கபாநீயம் — 3-வது பக்கத்தில் "பித்த ஜ்வரத்தில் உட்கொள்ளத் தகுந்த குடிநீர்" என்பதைப் பார்க்க. (பாநீயம் என்றால் குடிநீர் எனப் பொருள்.)

2. ஸிராவ்யதவிதி அத்தியாயத்தில் (ஸூத்திர ஸ்த்தாநத்தில்) கூறியுள்ள விஸர்ப்பம், வித்ரதி, ப்லீஹரோகம் முதலியவை இதனால் குறிப்பிடப்படுகின்றன.

3. வேறுவித மனிதனுக்கு என்றால்—துர்ப்பலமாயிருப்பவன், போஜனம் செய்யாமல் பட்டினியிருப்பவன் முதலியவர்கள்.

1. ஏதோ ஒரு மூலையிற் சிறிது பற்றிய நெருப்பை உடனே அவிக்க முயலாவிட்டால் அவ்வக்னி எல்லா வீட்டையும் அல்லது ஊரனைத்தையும் எரித்துவிடுவதுபோல், வெளிவரும் இரத்த-பித்தத்தையும் உடனே தடுக்க முயலாவிட்டால் உயிருக்கே அபாயம் நேர்ந்துவிடும்.

2. "லிஹா சதுர்குணா கார்யா சூர்ணாச்ச + +" என்கிற விதிப்படி சிவதை முதலியவற்றின் இடித்த சூர்ணம் ஒரு பங்கானால் சர்க்கரை நான்கு மடங்கு சேர்த்து, பாகுபதத்தில் இறக்கிக்கொள்ளவும்.

3. பாணிதலம்—கர்ஷப் பிரமாணம், என்றால் கால் பல மெடை.

4. சிவதை முதலியவற்றின் சூர்ணம் ஒரு பங்கானால், சர்க்கரை நான்கு மடங்கு சேர்த்து, சிறிதளவு தேன் சேர்த்து இடித்து மோதகங்கள் அல்லது மாத்திரைகளாகச் செய்யவும்.

மருக்காரைக் கனியோடு சர்க்கரையும் தேனும் கலந்து தர்ப்பண முறைப்படி வமநத்திற்குக் கொடுக்கலாம்; சர்க்கரைகரைத்த ஜலத்தையாவது மருக்காரையோடு பருகலாம்; அதி மதுரக் கஷாயத்திலாவது மருக்காரையும் தேனும் கலந்து கொடுக்கலாம்; மருக்காரையும் பாலுமாவது, மருக்காரையும் கருப்பஞ் சாறையுமாவது உட்கொள்ளலாம். 10, $10\frac{3}{4}$.

கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தில் மதநாதிவமநம்.

முற்கூறிய சோதந சிகித்ஸைகளால்[1] குடல் சுத்தி யடைந்தபிறகு விரேசந-வமநாதி சுத்திகளுக்குத் தகுந்தவாறு செய்யவேண்டிய சிகித்ஸா விதியானது, பிணியாளியின் தேஹ பலத்தைப் பாதுகாப்பதற்காக மந்தம் என்கிற கஷாயரூபமான உணவென்ன, பேயா என்கிற குடிநீரென்ன இவை முதலியவற்றை உபயோகிப்பதேயாம்.[2] $11\frac{1}{2}$.

இரத்த-பித்தங்களில் மந்த-பேயாதி பிரயோகங்கள்.

(1) ஜ்வர சிகித்ஸையிற் கூறிய திராக்ஷாதி மந்தத்தையாவது,[3] (2) பித்தஹரமான கனிகளால் பக்குவம் செய்யப்பட்ட மந்தத்தையாவது,[4] உபயோகிக்கலாம். (3) தேன், பேரீச்சம்பழம், ஈச்சம்பழம், சர்க்கரை, திராக்ஷை இவற்றின் கூட்டுமுறையினுலான பஞ்சஸாரம் என்கிற மந்தத்தோடு நெற்பொரிமாவையும் நெய்யையும் சேர்த்து பக்குவம்செய்து அந்த மந்தத்தையாவது உபயோகிக்கலாம். (4) ஜாடராக்னி மந்தப்பட்டிருப்பவருக்கும், அம்லரஸத்தை விரும்புபவருக்கும் புளித்த மாதளையினுலும் நெல்லிக்கனியினுலும் ஆக்கிய மந்தத்தைக் கொடுக்கலாம். 12—$13\frac{1}{2}$.

மேல் நோக்கிய இரத்த-பித்தத்தில் உபயோகிக்கத் தகுந்த மந்தங்கள்.

கீழ் நோக்கிய இரத்த-பித்தத்திற்கு அடியிற் கூறப்படும் பேயாமுறைகள் உபயோகமானவை யென்று விதிக்கப்படுகின்றன:—(1) தாமரை-நைதல் இவற்றின் தாதுகள், சிற்றுமல்லி, ஞாழல். (2) வெட்டிவேர், உதியன், வெள்ளிலோத்தி, இஞ்சி, செஞ்சந்தனம். (3) மருது, காட்டாத்திப்பூ, பில்வப்பழத்தின் உட்சதை, காஞ்சொறி. (4) கிலவேம்பு, வெட்டிவேர், கோரைக்கிழங்கு, (5) சிறுகடலை, சிற்றுமல்லி. (6) மேர்மல்லி, பேய்க்கருப்பு. (7) சிற்றுமுட்டி, நெய், அரேணுகம்; என்கிற ஏழு வகையான முறைகளாம். 14—$16\frac{1}{2}$.

கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தில் உபயோகிக்கத் தகுந்த பேயாக்கள்.

சீதவீர்யமான ஜாங்கல மாம்ஸங்களை[1] முற்கூறிய ஒவ்வொரு பேயாவிலும்[2] சேர்த்துத் தனித்தனியாகப் பக்குவம் செய்து வடித்து, அவ்விதம் வடித்த மாம்ஸரஸத்தில் யவாகூ[3] என்னும் கஞ்சியினங்களைப் பக்குவம் செய்யவும்; அந்த யாவகூ முறைகள் பரிசுத்தி

இரத்த-பித்தத்தில் உபயோகிக்கத் தகுந்த யவாகூ - மாம்ஸ ரஸங்கள்.

1. மேல் நோக்கிய இரத்த-பித்தத்திற்கான (த்ரிவ்ருத் அவலேஹம் முதலியதால்) விரேசந சிகித்ஸையும் கீழ் நோக்கிய இரத்த-பித்தத்திற்கான வமந சிகித்ஸையும் (மதநாதி வமநம்) இங்கு குறிக்கப்படுகின்றன.

2. மேல் நோக்கிய இரத்த—பித்தத்தில் மந்தங்களும், கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தில் பேயாக்களும் உபயோகிக்கத் தகுந்தவையாம்.

3. திராக்ஷாதி மந்தம் என்பதால் திராக்ஷாதி பாண்டம் குறிப்பிடப்படுகிறது. பாண்டத்திற்கே மந்தம் என்கிற விவஹாரமும் உண்டு. (சார்ங்கதர ஸம்ஹிதை மத்யம. 3-ம் அத்தி.) திராக்ஷாதி பாண்டத்தைப்பற்றி 9-வது பக்கத்தில் பார்க்க.

4. திராக்ஷை, நெல்லிக்கனி, குமிழன் முதலியவை பித்தஹரமான கனிகள்.

1. ஜாங்கலம்—இதைப்பற்றி முதற்புத்தகத்தில் 7, 265-ம் பக்கங்களிலும், ஜாங்கல மாம்ஸத்தைப்பற்றி ஷை புத்தகத்திலேயே 51-ம் பக்கத்திலும் விவரம் காண்க.

2. பேயா—இதைப்பற்றி முதற் புத்தகத்தில் 239-ம் பக்கம் டிப்பணியில் விவரம் காண்க.

3. யவாகூ—இதைப்பற்றி முதற் புத்தகத்தில் 240-ம் பக்கம் டிப்பணியில் விவரம் காண்க.

லும் வீர்யத்திலும் சீதளங்களா யிருக்கவேண்டும்; அவற்றில் சர்க்கரையும் தேனும் கலந்திடவும் அங்ஙனமே மாம்ஸ ரஸங்களைத் தனியாக நெய் சேர்த்துத் தாளித்துச் சொற்பம் புளிப்பு சேர்த்தோ அல்லது முற்றிலும் புளிப்பில்லாமலோ உபயோகிக்கலாம்; அவற்றில் சர்க்கரை கலந்தும் பருகலாம். 17—18½.

இரத்த-பித்தத்திற்கேற்ற தானியமும் சாகமும்.

அன்னஸ்வரூப விஞ்ஞாநீய அத்தியாயத்தில்[1] குணத்தில் இலகுவாகவும் வீர்யத்தில் சீதமாகவும் கூறப்பட்டுள்ள சூகதானியங்களும், சிம்பீதானியங்களும், சூக-சிம்பீதானியக் கீரைகளும் இரத்த-பித்தத்தில் உபயோகிக்கச் சிறந்த வஸ்துக்களாம். 19½.

இரத்த-பித்தத்திற்கேற்ற பானவகைகள்.

இதற்குமுன் மொழியப்பட்ட ஷடங்கபாநீயத்தையாவது,[2] இலகுபஞ்சமூலங்களைச்[3] சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது, கொதித்து ஆறிய சுத்த ஜலத்தையாவது, தேன் சேர்த்த ஜலத்தையாவது, கனிவர்க்கங்களைச் சேர்த்து முற்கூறியவாறு காய்ச்சிய ஜலத்தையாவது இரத்த-பித்தத்தில் பருகலாம். 20½.

இரத்த-பித்தத்தில் சில மாம்ஸங்களையுபயோகிக்கும் நிலைமைகள்.

(1) இரத்த-பித்த ரோகிக்கு மலபந்தம் இருந்தால் சக்கிரவர்த்திக் கீரையோடு முயல் மாம்ஸத்தைப் பக்குவம்செய்து கொடுப்பது நலம். (2) அப்பிணியாளிக்கே வாதம் அதிகரித்திருக்குமானால் அத்திப்பழக் கஷாயத்தில் பசநம் செய்த தித்திரி யென்னும் பக்ஷியின் மாம்ஸம் உபயோகிக்கத் தகுந்தது. (3) பூவரசின் கஷாயத்தில் சமைத்த மயிலிறைச்சியையும், (4) ஆலங்கனிக் கஷாயத்திற் பக்குவம் செய்த கோழி யிறைச்சியையும் அங்ஙனமே வாதம் அதிகரித்திருக்கையில் உபயோகிப்பது நலம். 21, 22.

இரத்த-பித்தத்தில் நிதாந வர்ஜநம்.

எதை உபயோகிப்பதால் அல்லது எக்காரியத்தைச் செய்வதால் இரத்த-பித்தம் உண்டாகின்றதோ அவ்வஸ்துவை அல்லது அக்காரியத்தையும் விலக்கிவிடவேண்டும். 22½.

இரத்த-பித்தத்தில் ஆடாதோடையின் விசேஷ உபயோகம்.

(1) ஞாழல் கோபீசந்தனம், வெள்ளிலோத்தி, இரஸாஞ்ஜநம்,[1] தேன் இவற்றை ஆடாதோடையின் சாற்றில் கலந்து உட்கொள்ள இரத்த-பித்தம் நிவ்ருத்தியாகும். (2) அல்லது ஆடாதோடையின் சாற்றில் சர்க்கரையும் தேனும் கலந்தும் உபயோகிக்கலாம். (3) அல்லது ஆடாதோடையின் ஸ்வரஸத்தை அப்படியே பருகலாம். (4) அதைக் காய்ச்சியும் குடிக்கலாம். அது இரத்த-பித்தத்தை உடனே போக்கிவிடும்; ஆடாதோடை இவ்வியாதிக்கு மிகவும் மேலான ஔஷதமாகும். 23—25½.

இரத்த-பித்தத்தில் அநேக வகையான ஔஷதாதி முறைகள்.

(1) பேய்ப்புடல், ஜாதிமல்லிகை, வேம்பு, வெண் சந்தனம், செஞ்சந்தனம், தாமரைக் கிழங்கு (2) வெள்ளிலோத்தி, ஆடாதோடை, அம்மான் பச்சரிசிக் கீரை, கிருஷ்ண ம்ருத்திகை யென்னும் ஒருவித கறுத்த மண், மல்லிகை. (3) தண்ணீர் விட்டான் கிழங்கு, வெளுத்த நன்னாரி, அதி மதுரம். இந்த மூன்றுமுறை

1. அன்னஸ்வரூப விஞ்ஞாநீய அத்தியாயம்—ஸூத்திர ஸ்த்தாநத்தின் ஆறுவது அத்தியாயம்.

2. ஷடங்கபாநீயம்—26-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. இலகுபஞ்சமூலம் - முதற்புத்தகத்தில் 64-ம் பக்கம் பார்க்க.

1. இரஸாஞ்ஜநம்—முதற்புத்தகத்தில் 12-வது பக்கத்தில் விவரம் காண்க.

களில் எதையேனும் கஷாயமிட்டுச் சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொள்ள இரத்த-பித்தம் தீரும். (4) பலாசம்பட்டையைக் கஷாயமிட்டு, நன்ருகச் சூடு ஆறிய பின்பு சர்க்கரையும் சேர்த்து உட்கொள்ளலாம். (5) பசு, குதிரை இவற்றின் சாணத்தைப் பிழிந்தெடுத்து அவற்றின் சாற்றைத் தேனும் நெய்யும் கலந்தாவது குடிக்கலாம். (6) இரத்தம் தோய்ந்துபோய் கட்டிக்கொண்டிருக்குமானல், மாடப்புருவின் மலத்தைத் தேனில் குழைத்து உட்கொள்ளலாம். (7) இரத்தம் அதிகமாய் வெளிவருமானல், ஜாங்கல தேசத்து ஜந்துவின் இரத்தத்தைத் தேனுடன் கலந்து உட்கொள்ளலாம்; (8) அல்லது அந்த நிலைமையில் பித்தநீரடங்கிய ஆட்டின் கல்லீரலைப் பக்குவம் செய்யாமல் புஜிக்கலாம். (9) சந்தனம், வெட்டிவேர், கோரைக் கிழங்கு, நெற்பொரி, பயறு, திப்பிலி, வாற்கோதுமை இவற்றைச் சிற்ருமுட்டியின் கஷாயத்தில் ஊற வைத்து, அக்கஷாயத்தை வடிக்கட்டிப் பருகிவர இரத்த-பித்தம் தீரும். (10) சந்தனக் குழம்பு, தாமரைப்பூ, வெட்டிவேர் இவற்றைப் பழுக்கக் காய்ச்சிய மண்பாத்திரத்தில் தண்ணீரோடு சேர்த்து, அந்த நீர் குளிர்ச்சியான பின்பு, சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொள்ள அதிகமாய் வெளியாகும் இரத்த-பித்தம் நிவ்ருத்தியாகும். (11) கருப்பங்கழிகளைத் துண்டு துண்டாக வெட்டி, நன்கு இடித்து, நூதனமான மட்பாத்திரத்தில் தண்ணீரூற்றி, அதில் ஊறவைக்கவும்; அப்பாத்திரத்தின் முகத்தை, மலர்ந்த தாமரைப் பூக்களால் மூடி, அதன்மேல் வேறு ஏதேனும் மூடியிட்டு, இரவெல்லாம் திறந்த வெளியில் அப்பாத்திரத்தை வைத்திருந்து, காலையில் அந்த ஜலத்தை வடித்தெடுத்துத் தேன் கூட்டி யுட்கொள்ள முற்கூறிய சந்தனக் குழம்பு முதலியதாலான குடிநீரைப் போலவே இதுவும் குணம் செய்யும். (12) பித்த ஜ்வரத்தில் எக்கஷாயங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ அவற்றையும்[1] இரத்த-பித்தத்தில் உபயோகிக்கலாம். 26—33.

இரத்த - பித்தத்தில் பலவிதமான க்ஷீரயோகங்கள்.

முற்கூறிய பலவகையான இக்கஷாயங்களால் ஜாடராக்னி உத்தீபனமாய் கபமும் அடிக்கப்பட்டுப் போன பின்பும் இரத்த-பித்தம் சமநமடையா விட்டால், வாதம் உபரியாயுள்ள அத்தகைய இரத்த-பித்தத்தில் அடியிற் கூறப்படும் க்ஷீரயோகங்களை உபயோகிக்கலாம்: (1) ஆட்டுப்பாலை அதற்கு ஐந்து மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி உட்கொள்ளக்கொடுக்கலாம். (2) பசுவின் பாலையும் ஐந்து மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி யெடுத்து உபயோகித்தாலும் அவ்விதமே குணம் செய்யும். (3) அல்லது பசுவின்பாலை லகுபஞ்ச மூலங்களோடு சேர்த்துக் காய்ச்சி யெடுத்து, சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொள்வதும் நலம். (4) அல்லது ஜீவகம், ருஷபகம், திராக்ஷை, சிற்ருமுட்டி, நெரிஞ்சில், சுக்கு இவற்றில் தனித்தனியாகக் காய்ச்சி யெடுத்த பாலில் நெய்யும் சர்க்கரையும் கலந்து உட்கொள்ளலாம். (5) நெரிஞ்சில், தண்ணீர் விட்டாங் கிழங்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலும், (6) பர்ணிநீ சதுஷ்டயத்தைச்[2] சேர்த்து பக்குவம் செய்த பாலும் வலியுடன் கூடிய இரத்த-பித்தத்தை சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும்; முக்கியமாய் மூத்திர மார்க்கத்திலை வெளியாகும் இரத்த-பித்தத்தைப் போக்கும். (7) குதத்தின் வழியாக வெளியாகும் இரத்த-பித்தத்தில் இலவம்பிசின் சேர்த்துக் காய்ச்சிய பால் விசேஷமாய் ஹிதமானது; (8) ஆலம் விழுதைச்

1. ஜ்வர சிகித்ஸையில் 8-வது பக்கத்திலும், அதற்கு அடுத்த பக்கங்களிலும் விவரிக்கப்பட்டுள்ள கஷாயங்கள்.

2. பர்ணிநீ சதுஷ்டயம் (நான்கு பர்ணிநீ என்கிற மூலிகைகள்) என்பதைப்பற்றிய விவரங்களை 16-வது பக்கத்தில் டிப்பணியில் 3-என்கிற குறிப்பில் காண்க.

சேர்த்துக் காய்ச்சிய பாலாவது, (9) ஆலம் மொட்டுகளைச் சேர்த்துப் பக்குவம் செய்த பாலாவது, (10) சுக்கு, விளாமிச்சைவேர், கருநெய்தல் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலாவது குதமார்க்கத்தினால் வெளியாகும் இரத்த-பித்தத்தில் அநுகூலமானவையாயிருக்கும். (11) இரத்தாதிஸாரத்திலும், இரத்தம் வெளியாகும் அர்சஸ் என்கிற மூலரோகத்திலும் செய்யப்படுகிற சிகித்ஸைகளையும்[1] செய்யலாம். (12) முற்கூறிய கஷாயங்களைப்[2] பாலோடு பருகலாம்; (13) பாலைக் கலந்தே உணவுகளையும் புஜிக்கலாம். 34—38½.

இரத்த - பித்தத்திற்கேற்ற க்ருதபாகங்கள்.

(1) முற்கூறிய இக்கஷாய முறைகளால் க்ருதத்தைப் பக்குவம் செய்தாவது இரத்த - பித்தத்திற் பருகலாம். (2) ஆடாதோடையை ஸமூலமாக இடித்து, எட்டுப் பங்கு ஜலத்தில் சேர்த்து எட்டில் ஒருபங்காகச் சுண்டும்படி அதைக் கஷாயமாகக் காய்ச்சி, அதில் க்ருதத்தைப் பக்குவம் செய்யவும்; அந்த க்ருதத்தில் ஆடாதோடையின் புஷ்பத்தையே கல்கமாகச் சேர்க்கவும்; ஆறிய பிறகு க்ருதத்தில் தேன் சேர்த்து உபயோகிக்கவேண்டும். வாஸா க்ருதம் என்கிற இவ்வௌஷதம் இரத்த-பித்தத்தைப் போக்கும்; பித்தகுல்மம், ஜ்வரம், ச்வாஸ-காஸம், இருதயத்தைப் பற்றிய ரோகம், காமாலை, திமிரம் என்கிற நேத்திரரோகம், தலைச்சுற்றல், விஸர்ப்பம், தொண்டைக்கம்மல் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். (3) பலாச மொட்டுகளின் ஸ்வரஸத்தில், அதன் புஷ்பத்தையே கல்கமாகச் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்யவும்; அதில் தேன் கூட்டி யுட்கொள்ள இரத்த-பித்தம் தீரும்; (4) கழற்சியிலையின் ஸ்வரஸத்தில் பக்குவம் செய்த க்ருதமும் தேன் கலந்து அங்ஙனமே உபயோகிக்கத் தகுந்தது. (5) இரத்தமானது பிசின்போன்றதாகவும், கபத்துடன் கூடியதாகவும், தோய்ந்துபோய் தொண்டையில் தங்கிக்கொள்ளுமானால், நெய்தலின் காம்புகளைச் சுட்டெடுத்த க்ஷாரத்தைத் தேனோடும் நெய்யோடும் கலந்து உட்கொள்ளலாம். (6) அங்ஙனமே தாமரைப் பூவிலுள்ள பொடிகளையும், சாமையின் க்ஷாரத்தையும், இலுப்பைப் பூவின் க்ஷாரத்தையும் தேன் நெய் கலந்து உபயோகிக்கலாம். 39-44.

இரத்த - பித்தத்தில் வஸ்தி முறை.

இரத்த - பித்தம் குதத்தினால் அதிகமாய் வெளிவருமானால், அதற்கு விசேஷமாய் வஸ்திப்பிரயோகமே சிறந்ததென்று விதிக்கப்படுகிறது. 44½.

இரத்த - பித்தத்தில் நஸ்ய முறை.

(1) நாசியினால் வெளிவரும் இரத்த - பித்தத்தைச் சுத்தம் செய்த பிறகு முற்கூறிய கஷாய வகைகளைப் பால் - கருப்பஞ்சாறு முதலியவற்றோடு கலந்து நஸ்யமிடலாம். (2) முற்கூறியவாறு பக்குவம் செய்த பால் முதலானவைகளை நஸ்யமிடலாம். (3) ஜலத்தில் சர்க்கரையைக் கரைத்தாவது அல்லது சுத்த ஜலத்தையாவது நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். (4) மாதளம் புஷ்பஸ்வரஸத்தையாவது, (6) மாங்காயின் ஸ்வரஸத்தையாவது, (7) அறுகம் புல்ஸ்வரஸத்தையாவது நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். 45—46½.

இரத்த - பித்தத்தில் இன்னும் சில பொது சிகித்ஸைகள்.

சீதவீர்யமும் சீதஸ்பர்சமுமுள்ள பதார்த்த வர்க்கத்தைப் பிரதேஹமென்கிற லேபநத்திற்கும், அப்யஞ்ஜநம் முதலியவற்றிற்கும் உபயோகிக்கவேண்டும். மேலும் பித்தஜ்வரத்தில் வெளியிலும் உள்ளும் எவ்வௌஷதமுறைகள் கூறப்பட்டுள்ளனவோ, க்ஷதக்ஷீணத்தில் ஹிதமானவையென்று எம்முறைகள் கூறப்படுகின்றனவோ[1] அவையும் இரத்த-பித்தத்தில் ஹிதமானவையாம். 47,48.

1. இரத்தாதிஸார சிகித்சை இனி வரும் 9-ம் அத்தியாயத்திலும், இரத்தார்சஸ்ஸின் சிகித்ஸை 8-வது அத்தியாயத்திலும் விவரிக்கப்படுகின்றன.

2. இதற்கு முன் 26-வது முதல் 33-வது ச்லோகங்களின் மொழி பெயர்ப்பு வரையில் விவரிக்கப்பட்டுள்ள முறைகளில் அடங்கிய கஷாய வகைகள்.

1. க்ஷதக்ஷீணத்திற்கு அடுத்த காஸசிகித்ஸாத்தியாயத்திலும், இராஜயக்ஷ்ம சிகித்ஸாத்தியாயத்திலும் விவரிக்கப்படும் சிகித்ஸைகளைக் கவனிக்க.

# மூன்றாவது அத்தியாயம்.

இதன்பிறகு காஸசிகித்ஸையை விவரிக்கும் அத்தியாயம் வரையப்படுகின்றது:—

வாதகாஸத்திற்குப் பொதுசிகித்ஸை.

(1) வாதத்தினால் மாத்திரம் ஸம்பவித்த காஸத்தில் முதலில் ஸ்நேஹங்களாலும்[1] வாதஹரமான சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்டு ஸ்நிக்த்தமாயுமுள்ள பேயாவினாலும், யூஷங்களாலும், மாம்ஸரஸம் முதலியவைகளாலும், அவ்விதமான லேஹ்யங்களாலும், அப்யஞ்ஜநங்களாலும்,[2] ஸ்வேதநமுறைகளாலும், ஸேகம் அல்லது பரிஷேகத்தினாலும்,[3] அவ்விதமான திரவங்களில் மூழ்கச்செய்தும் அப்பிணியாளியை உபசரிக்க வேண்டும். (2) மலமும் அபானவாதமும் சிக்குண்ட காஸரோகிக்கு வஸ்திகளைப் பிரயோகித்து சிகித்ஸைசெய்யவும். (3) வாதகாஸத்தில் பித்தமும் ஸம்பந்தப்பட்டிருந்தால் முறைப்படி பக்குவம்செய்த க்ருதங்களையும் க்ஷீரங்களையும் போஜனத்திற்குப் பிறகு உபயோகித்து சிகித்ஸை செய்யவேண்டும். (4) வாதகாஸத்தில் கபமும் ஸம்பந்தித்து வியாதியையுண்டுபண்ணியிருந்தால், ஸ்நேஹ வஸ்துக்களை விரேசநமாகக் கொடுத்து அவ்வியாதியைத் தீர்க்கவேண்டும். 1—2½.

வாதகாஸத்தில் குடூச்யாதி க்ருதம்.

சீந்திற்கொடி, கண்டங்கத்திரி ஒவ்வொன்றையும் தனித்தனியே முப்பதுபலமெடையெடுத்து அவற்றிலிருந்து இரஸம் பிழியவும்; அந்த ஸ்வரஸத்தில் ஒரு பிரஸ்த்தப்பிரமாணம்[1] நெய்யைச் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் வாதகாஸத்தைப்போக்கும்; ஜாடராக்னியையும் உத்தீபநம் செய்யும். 3½.

காஸத்தில் தசமூல க்ருதம்.

யவக்ஷாரம், சிற்றரத்தை, வசம்பு, காயம், வட்டத்திருப்பி, அதிமதுரம், கொத்தமல்லிவிதை, பஞ்சகோலங்கள்[2] இவற்றில் ஒவ்வொன்றையும் இரண்டு சாணமளவில்[3] கல்கமாகப் பிரயோகித்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யை தசமூலகஷாயத்தில்[4] பக்குவம் செய்யவும். இந்த க்ருதத்தை உட்கொள்வதற்கு மண்டத்தை[5] அநுபானமாய் உபயோகிக்க வேண்டும். இது காஸம், ச்வாஸம், இருதயத்தைப்பற்றிய ரோகங்கள், பார்ச்வசூலை, கிரஹணீ, குல்மம் இவற்றையெல்லாம் தீர்க்கும். 4—5½.

வாதகாஸத்தில் சாகலாதி க்ருதம்.

சிற்றரத்தை, தசமூலம், தண்ணீர் விட்டாங்கிழங்கு இவை வகைக்கு ஒரு பலம்; கொள், இலந்தங்கனி, வாற்கோதுமை இவை வகைக்கு இரண்டு குடவம்;[6] ஆட்டின் இறைச்சி அரைத் துலாம்;[7] இச்சர

1. இனி அடுத்தாற்போலக் கூறப்போகிற குடூச்யாதி க்ருதம் முதலிய ஸ்நேஹபாக முறைகள் குறிக்கப்படுகின்றன.

2. தலைமுதல் உடலெங்கும் எண்ணெய் முதலிய ஸ்நேஹங்களைத் தேய்த்துப் பூசுதல்.

3. ஸேகம் அல்லது பரிஷேகத்தைப்பற்றி முதற் புத்தகத்தில் 138, 172 இப்பக்கங்களைப் பார்க்க.

1. பிரஸ்த்தம்—பதினாறு பலங்கொண்ட ஓர் அளவு.

2. பஞ்சகோலம்—இதைப்பற்றி முதற் புத்தகத்தில் 64-வது பக்கத்தில் விவரம் காண்க.

3. சாணம்—மாகத பரிபாஷைப்படி வீசம் பலங்கொண்ட ஓர் அளவு.

4. தசமூலம்—முதற்புத்தகத்தில் 123-ம் பக்கத்தில் டிப்பணியில் இதன் விவரத்தைக் காண்க.

5. மண்டம்—இதைப்பற்றிய விவரத்தை முதற் புத்தகத்தில் 47-ம் பக்கத்தில் மூலமும் டிப்பணியும் பார்க்க.

6. குடவம்—நான்கு பலங்கொண்ட ஓர் அளவு; இது அர்த்தசராவம் (அரைச்சேர்) என்றும் கூறப்படும்.

7. துலாம்—நூறு பலங்கொண்ட அளவு.

க்குகளை ஒரு திரோணப்பிரமாணம்[1] ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும். பிறகு அதில் ஆடகமளவு[2] நெய்யைச்சேர்த்து, அதற்கு ஸமபாகம் பாலையும் கூட்டி, ஜீவநீயகணத்தைச்[3] சேர்ந்த சரக்குகளை வகைக்கு ஒரு பலம் வீதம் சேர்த்துப் பக்குவம் செய்யவும். பிணியாளியின் நிலைமையையும் காலதேசங்களையும் கவனித்து இந்த க்ருதத்தை வாத ஸம்பந்தமான வியாதிகளில் பானம் செய்வதற்கோ, நஸ்யமிடுவதற்கோ, வஸ்தியில் பிரயோகிப்பதற்கோ தகுந்தவாறு உபயோகிக்கலாம். இது ஐந்துவிதமான காஸங்கள்[4], தலைநடுக்கம், யோனியிலும் துடையிடுக்குகளிலுமுண்டாகும் நோய்கள், ஸர்வாங்கவாதம், பக்ஷவாயு என்கிற ஏதேனும் ஓர் அவயவத்தை அல்லது ஒரு பாரிசத்தை ஆச்ரயித்த வாத நோய், ப்லீஹரோகம்,[5] ஊர்த்வாங்கவாதம்[6] இவ்வியாதிகளைத் தீர்க்கவல்லது. 6—9.

**காஸத்தில் விதார்யாதி க்ருதம்.** விதார்யாதி கணத்தின்[7] சரக்குகளைக் கஷாயமிட்டு, அதில் க்ருதம் சேர்த்து, அச்சரக்குகளையே கல்கமாகச் செய்து பக்குவம் பண்ணி, அதை உபயோகிக்கக் காஸரோகம் தீரும். 9½.

1. திரோணம்—முப்பத்திரண்டு சராவம் (32-சேர்) கொண்ட அளவு.

2. ஆடகம்—நான்கு பிரஸ்த்தங்கள் (8-சேர் அல்லது சராவம்) கொண்ட அளவு.

3. ஜீவநீயகணம்—முதற்புத்தகத்தில் 124 ம் பக்கத்தில் இதன் விவரங்களைக் காண்க.

4. ஐந்துவிதமான காஸங்கள்—முதற்புத்தகத்தில் 328-ம் பக்கத்தைப் பார்க்க.

5. ப்லீஹரோகம்—மண்ணீரலைப்பற்றிய வியாதி.

6. ஊர்த்வாங்கவாதம் — தோளுக்கு மேற்பட்ட அவயவங்களைப்பற்றிய வாதரோகம்.

7. விதார்யாதிகணம்—முதற்புத்தகத்தில் 124-ம் பக்கம் பார்க்க.

**அசோகபீஜாதி க்ருதம்.** அசோகவிதை, கழுதைத்தும்பை, வாய்விடங்கம், இரஸாஞ்ஜநம், தாமரைக்கிழங்கு, கறுப்புப்பு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, அசோகவிதை முதலிய சரக்குகளைச் சூர்ணம்செய்து நெய்யிற் கலந்தாவது உட்கொண்டு வெள்ளாட்டுப் பாலையும் காஸரோகி அநுபானமா யுபயோகிக்கலாம். 10,11.

**வாத கபகாஸத்தில் விடங்காதி சூர்ணம்.** வாய்விடங்கம், சுக்கு, சிற்றரத்தை, திப்பிலி, பெருங்காயம், இந்துப்பு, கண்டு பாரங்கி, யவக்ஷாரம், இவற்றைச் சூர்ணம் செய்யவும். வாத கபங்களாலுண்டான காஸத்திலும், ச்வாஸரோகத்திலும், விக்கல் உண்டாயிருக்கையிலும், அக்னி மாந்தியத்திலும் இச்சூர்ணத்தை க்ருதத்திற்குக் கூறிய அளவின்படி[1] நெய் கலந்து உபயோகித்து வரலாம். 12,12½.

**வாதகாஸத்தில் துராலபாதி சூர்ணம்.** காஞ்சொறி, சுக்கு, கிச்சிலிக்கிழங்கு, திராக்ஷை, கற்கண்டு, கடுக்காய்ப்பூ இவற்றைச் சூர்ணம்செய்து வாதத்தினால் உண்டான காஸத்தில் தைலத்துடன் உட்கொள்ளலாம். 13½.

**காஸத்தில் துஸ்பர்சாதி சூர்ணம் முதலியது.** பூனைக்காலி, திப்பிலி, கோரைக்கிழங்கு, கண்டு பாரங்கி, கடுக்காய்ப்பூ, கிச்சிலிக்கிழங்கு இவற்றைச் சூர்ணம்செய்து, பழைய வெல்லமும் எண்ணெயும் கலந்து உட்கொள்ள காஸம் தீரும். திப்பிலியையும் சுக்கையும் பொடிசெய்து வெல்லத்தோடும் எண்ணெயோடும் உபயோகித்தாலும், கண்டு பாரங்கியையும் சுக்கையும் பொடித்து அங்

1. க்ருதமாத்திரை—க்ருதத்தை உத்தமமாத்திரையாக உபயோகிக்க வேண்டுமென்பது கருத்து; க்ருதத்திற்கு உத்தமமாத்திரையைப்பற்றிய விவரம் முதற்புத்தகத்தில் 26-ம் பக்கம் பார்க்க.

னமே உபயோகித்தாலும் முற்கூறிய குண முண்டாகும். 14,15.

காஸத்தில் பிப்பலீ சூர்ணம் முதலியன.

(1) திப்பிலியையும் இந்துப்பையும் பொடி செய்து இளஞ்சூடான ஜலத் துடன் உட்கொள்ளலாம். (2) சுக்கைப்பொடித்து அத்து டன் சர்க்கரையைக் கலந்து தெளிந்த மோருடன் உபயோகிக்கலாம். (3) திப்பிலியையும் அரேணுகத்தையும் சூர்ணம் செய்து தயிருடன் உட்கொள்ளலாம். (4) இலந்தங்கொட்டையின் சூர்ணத்தை மதிரை யென்னும் சாராயத்தோடாவது, தயிருட னாவது, தெளிவான மோரோடாவது உட் கொள்ளலாம். (5) அல்லது திப்பிலியின் சூர் ணத்தையும் இந்துப்பையும் கலந்து நெய்யில் வறுத்தெடுத்தும் புஜிக்கலாம். 16,17.

காஸமும் பீந ஸமுமுள்ளவ னுக்கு தூமபா னம்.

பீநஸத்தோடு காஸரோகமுள்ளவன் முறை ப்படி ஸ்நேஹதூமத்தைப்[1] பானம் செய்யவேண்டும். பா லையும் மாம்ஸ ரஸத்தையும் உட்கொண்டவாறு ச்வாஸ-ஹித்மா ரோகங்களுக்குக் கூறப்படுகிற தூமங்களையும்[2] பானம் செய்ய வேண்டும். 18.

வாதகாஸத் தில் யூஷ-பே யாக்கள்.

(1) நாடுகளில் திரியும் மிருகங்களுடைய அல்லது ஆநூப மிருகங்களு டைய மாம்ஸரஸங்களோ டாவது, உளுந்து அல்லது காஞ்சொறியின் யூஷங் களோடாவது, சம்பாதானியம், வாற்கோ துமை, கோதுமை, கார்அரிசி இவற்றில் ஏதையாவது பக்குவம்செய்து உபயோகிக்க லாம். (2) குராசானியோமம், திப்பிலி, பில் வப்பழத்தின் உட்சதை, சுக்கு, சித்திரமூலம், சிற்றரத்தை, ஜீரகம், சிற்றாமல்லி, பலாசம் பட்டை, கச்சோரம், தாமரைக்கிழங்கு இவற் றால் பக்குவம் செய்யப்பட்டதும், ஸ்நேஹம் அம்லம் இலவணங்கள் சேர்க்கப்பட்டதுமான பேயாவை வாதத்தினால் உண்டான காஸத் தில் உட்கொள்ளலாம்; இடுப்புவலி, இருதய நோய், பக்கச்சூலை, குடல்வலி, ச்வாஸரோகம், விக்கல், இவைகளையும் இந்த யவாங்யாதி பேயா தீர்க்கவல்லது. (3) தசமூலங்களின்[1] கஷா யத்தில் பஞ்சகோலங்களையும்[2] வெல்லத்தை யும் சேர்த்து முன் பேயாவைப்போலவே காஸத்தில் உபயோகிக்கலாம். (4) பாலில் பக்குவம் செய்த பேயாவையாவது எள்ளும் இந்துப்பும்சேர்த்து உட்கொள்ளலாம். (5) மத்ஸியம், கோழி, பன்றி இவற்றின் மாம் ஸங்களில் எதையேனும் நெய்யும் இந்துப்பும் கலந்து உபயோகிக்கலாம். 19—22½.

காஸத்தில் உபயோகிக்கக் கூடிய சாகங் கள், ஸ்நேஹங் கள், காடிகள் முதலியன.

சக்கிரவர்த்திக்கீரை, மணத்தக்காளி, தக ரக்கீரை, ஆரை, கண்டங்கத் திரிக்காய், கண்டங்கத்திரி யிலை, இளசானதும் உலர்ந் ததுமான முள்ளங்கி இந்த சாகங்களும், தைலம் முதலிய ஸ்நேஹங்களும், பால், கருப் பஞ்சாறு, வெல்லம் இவற்றால் செய்த பக்ஷ யங்களும், தயிர், மோரின் தெளிவுநீர், காடி நீர், புளிப்பான பழச்சாறு, மது இவைகளும் காஸத்திற் பருகத் தகுந்தவையாகும். 23—24½.

---

1. ஸ்நேஹதூமம்—இதுவே மிருதுதூமம் எனப் படும்; இதைப்பற்றிய விவரங்களை முதற்புத்தகத்தில் 167,168-ம் பக்கங்களில் பார்க்க.

2. ச்வாஸ-ஹித்மாரோகங்களில் தூமபான முறை யைப்பற்றிய விவரங்களை அடுத்த அத்தியாயத்திற் காண்க.

1. தசமூலம்—முதற்புத்தகத்தில் 123-ம் பக்கத் தில் டிப்பணியைப் பார்க்க.

2. பஞ்சகோலம்—முதற்புத்தகத்தில் 64-ம் பக் கத்தில் விவரம் காண்க.

ஸம அளவான கபத்துடன்கூடிய[1] பித்த காஸத்தில் (1) க்ருதத்தைப் பருகி வமநம்செய்வது ஹித மாகும். (2) மருக்காரை, குமிழன், அதிமதுரம் இவற்றைச் சேர்த்துக் கஷாயமிட்டு அதை யுட்கொண்டும் அவ்விதமே வமநம் செய்யலாம். (3) கிலப்பனங்கிழங்கின் ஸ்வரஸம், கருப்பஞ் சாறு இவற்றில் மருக்காரையையும் அதிமது ரத்தையும் கல்கமாகச் சேர்த்துக் கலக்கியும் வமநம் செய்யக் கொடுக்கலாம். 25,26.

ஸமகபமான பித்தகாஸத்தில் வமநம்செய்தல்.

(1) கபம் சொற்பமாயுள்ள பித்தகாஸத்தில் கருஞ்சிவதையை மதுரத் திரவ்யங்களோடு சேர்த்து விரேசனமாவதற்காக உப யோகிக்கலாம். (2) கபம் மிகுதியாயிருக்கும் பித்தகாஸத் திலோவென்றால் சிவதை யைக் கசப்பான சரக்குகளோடு சேர்த்து விரேசனத்திற்கு உபயோகிக்கவேண்டும். 27.

கபம் சொற்பமாகவும் அதிகமாகவுமுள்ள பித்த காஸங்களில் விரேசநம்.

வமந - விரேகங்களால் தோஷங்கள் பரிஹரிக்கப்பட்ட பிறகு குளிர்ச்சியுள்ளதாகவும், மதுரமாகவும், ஸ்கித்தமாகவுமுள்ள பேயாமுதலிய பத்தியமான உணவுகளைப் புஜிக்கலாம். கபம் அதிகமாகவும் இறுகியுமிருந்தால் உட்கொள்ளப்படும் பேயாமுதலிய உணவு குளிர்ச்சியாகவும், ரூக்ஷமாகவும், கசப்பான சுவையோடு கூடியதாகவும் இருக்கவேண்டும். 28.

காஸத்தில் சோதந சிகித்ஸைக்குப் பிறகு பேயாதி கிரமம்.

(1) சர்க்கரை, நெல்லிக்கனி, தேன், திராக்ஷை, கற்பூரம், நெய்தல் இவற்றின் லேஹ்யம் பித்த காஸத்தில் ஹிதமானது. (2) அதே லேஹ்யத்தில் கோரைக்கிழங்கும் மிளகும் சேர்த்துப் பக்குவம் செய்து கபத்துடன்கூடிய பித்தகாஸத்தில் உபயோகிக்கலாம். (3) வாததோஷத்துடன் கூடிய பித்தகாஸத்தில் அதே லேஹ்யத்தில் நெய்சேர்த்து உட்கொள்ளலாம். (4) ஐம்பது திராக்ஷையையும், முப்பது திப்பிலியையும், ஒரு பலம் சர்க்கரையையும் தேன் சேர்த்து லேஹ்யம் செய்தும் உபயோகிக்கலாம். (5) பாலையே உணவாகப் பருகிக்கொண்டு பசுஞ் சாணத்தின் பிழிந்தெடுத்த சாறையாவது சிறிது உபயோகிக்கலாம். 29,30.

பித்தகாஸத்தில் சில லேஹ்யாதிகள்.

லவங்கப்பட்டை, த்ரிகடு, திராக்ஷை, மோடி, தாமரைக்கிழங்கு, நெற்பொரி, கிச்சிலிக்கிழங்கு, கோரைக்கிழங்கு, சிற்றரத்தை, நெல்லிக்கனி, தான்றிக்காய் இவைகளைச் சூர்ணம்செய்து சர்க்கரை, தேன், நெய் இவை சேர்த்து லேஹ்யம் செய்து உபயோகிக்க இருதயத்தைப் பற்றிய வியாதிகளும் காஸமும் தீரும். 31, 31½.

பித்தகாஸத் தில் லவங்கத்வ காதிலேஹ்யம்.

(1) வாற்கோதுமை, சாமை, கோத்ரவ தானியம் இவற்றில் ஏதேனுமொன்றால் பக்குவம் செய்த அன்னத்தை மதுரமான சுவையுள்ளதாகத் தயார்செய்யப்பட்ட ஜாங்கல மாம்ஸரஸங்களோடும், பயறு முதலியவற்றாலான யூஷங்களோடும், கசப்பான சாகங்களோடும் கனமான கபத்துடன்கூடிய பித்த காஸமுள்ளவன் மிதமாகப் புஜிக்கலாம். கசப்பான சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்ட லேஹ்யங்களில் தேன் சேர்த்தும் அவ்வுணவுகளோடு உபயோகித்து வருவது ஹிதமாகும். (2) கபம் குறைத்தலாயுள்ள பித்தகாஸத்தில் சம்பா அரிசியையும், காரரிசியையும் அன்னமாகச் செய்து மாம்ஸரஸம் முதலியவைகளோடு உபயோகிப்பது ஹிதமாகும். சர்க்கரை சேர்த்த ஜலமும், திராக்ஷையின் ஸ்வரஸமும், கருப்பஞ்சாறும், பாலும் அனுபானமாய் உபயோகிக்கத் தகுந்

பித்த காஸத் திற்கேற்ற சில உணவுகள்.

1. பிறகு அடுத்தாற்போல் சொற்பகபத்துடன்கூடியதும் அதிக கபத்துடன் கூடியதுமான பித்தகாஸத்தில் விரேசநம் செய்யச்சொல்லுவதால், "பித்தகாஸே து ஸகபே" என்கிற மூலவாக்கியத்திற்கு "ஸம அளவான கபத்துடன்கூடிய பித்தகாஸம்" என்பதுதான் சரியான பொருளாகும்.

தவையாம். (3) காகோலீ, க்ஷீரகாகோலீ, சிறுவழுதுணை, கண்டங்கத்திரி, மேதா, மஹாமேதா, ஆடாதோடை, சுக்கு இவற்றைச் சேர்த்து மாம்ஸ ரஸத்தையும், பாலையும், பேயாவையும், யூஷத்தையும் பக்குவம் செய்து பித்தகாஸத்தில் உபயோகிக்கலாம். (4) திராக்ஷை, திப்பிலி, திருணபஞ்சமூலம்[1] இவற்றை ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; இக்கஷாயத்தில் பாலைச் சேர்த்துக் காய்ச்சியெடுத்து, ஆறியபிறகு தேனும் சர்க்கரையும் கலந்து அதைப் பருகலாம். (5) அக்காஷாயத்தினாலேயே பேயாவைப் பக்குவம் செய்து, நன்கு குளிர்ந்த பிறகு தேன் சேர்த்துப் பருகலாம். 32—36½.

பித்த காஸத்தில் சட்யாதி ஸ்வரஸம்.

கச்சோரம், வெட்டிவேர், கண்டங்கத்திரி, சுக்கு, சர்க்கரை இவற்றின் சூர்ணத்தை ஜலத்தில் சேர்த்து நன்றாகப் பிசைந்து வடிக்கட்டி, நெய் கலந்து பித்த காஸத்தில் உபயோகிக்கலாம். 37½.

பித்த காஸத்தில் சர்க்கராதி க்ருதம் முதலிய முறைகள்.

சர்க்கரை, ஜீவகம், நரிப்பயறு, பெரு வீடு கொள்ளி (அல்லது இடி கொள் வேர்), பூனைக்காலி இவற்றைக் கல்கமாகச் செய்து, எட்டு பங்கு பால் சேர்த்து, எட்டிலொரு பங்கு நெய் கூட்டி பக்குவம் செய்யவும்; இந்த க்ருதத்தைப் பானம் செய்யவும், போஜனங்களில் கூட்டி யுண்ணவும், லேஹ்யம் பக்குவம் செய்யவும் உபயோகிக்கலாம். சர்க்கரை முதலிய இவற்றின் சூர்ணத்தையே லேஹ்யமாகச் செய்தும் உபயோகிக்கலாம்; அல்லது அவற்றைக் கஷாயமிட்டும் பருகலாம். இந்த முறைகள் பித்த காஸத்தைப் போக்கும். 38—39½.

1. திருணபஞ்சமூலம்—முதற் புத்தகத்தில் 64-ம் பக்கத்தில் விவரம் காண்க.

கப காஸமுள்ளவருக்கு தேவதாரு தைலம் முதலியது.

தேவதாருக் கட்டையை எரியச் செய்து, அதிலிருந்து பொசியும் தைலத்தை கபகாஸமுள்ளவன் த்ரிகடுவையும் யவக்ஷாரத்தையும் சிறிது பொடித்துச் சேர்த்து முதலிற் பருக வேண்டும். இதனால் ஸ்நிக்த்தமான பிறகு மேல் முகமாய் வமநமும், கீழ் முகமாய் விரேசநமுமாகும்படி சிகித்ஸை செய்யவேண்டும்; முறைதவறாமல் மூர்த்த விரேகமும் செய்விக்கவேண்டும்.[1] நல்ல தேஹவலிமையுள்ளவனுக்குத் தீக்ஷ்ண வீர்யமுள்ள விரேசந ஔஷதங்களைக் கொடுத்து, அப்பால் வாற்கோதுமை, பயறு, கொள் இவற்றில் எதையேனும் சேர்த்துச் சமைத்த அன்னத்தைக் காரம் அதிகமாகச் சேர்த்து, நெய் முதலிய ஸ்நேஹ வஸ்துக்களைச் சேர்க்காமல் உஷ்ணமாகவே இப்பிணியாளிக்குப் புஜிக்கக் கொடுக்கலாம். தகரைக்கீரை, கத்திரி, கண்டங்கத்திரி, யவக்ஷாரம், திப்பிலி இவற்றைப் பொடித்துச் சேர்த்த ஜாங்கல மாம்ஸ ரஸங்களையும்,[2] பிலேசய மாம்ஸரஸங்களையும்[3] கொடுத்து உபசரிக்கலாம். எள், கடுகு, வேம்பு இவற்றின் எண்ணெய்களாலும் ஸம்ஸர்க்க க்ரியைகளைச்[4] செய்யலாம். தசமூல கஷாயத்தையாவது, வெந்நீரையாவது, மதுவையாவது, தேன் கலந்த தண்ணீரையாவது குடிக்கச் செய்யலாம். தாமரைக்கிழங்கு, கொன்றை வேர், பேய்ப்புடல்வேர் இவற்றையாவது

1. மூர்த்த விரேகம்—இதன் விவரத்தை முதற் புத்தகத்தில் 162-ம் பக்கத்தில் பார்க்க.

2. ஜாங்கலமாம்ஸரஸம்— ஜாங்கல தேசத்திலுண்டாகும் மிருகபக்ஷி முதலியவற்றின் மாம்ஸரஸம். ஜாங்கலம் என்பதைப்பற்றி முதற் புத்தகத்தில் 51-ம் பக்கத்தில் விவரம் காண்க.

3. முதற் புத்தகத்தில் 50, 52-வது பக்கங்களைப் பார்க்க.

4. ஸம்ஸர்க்க க்ரியை—இதுவே ஸம்ஸர்ஜீ யென்றும் கூறப்படும்; இதன் விவரத்தைப்பற்றி இதே புத்தகத்தில் 14-வது பக்கம் பார்க்க.

ஜலத்தில் இடித்துச் சேர்த்து இரவில் உளற வைத்து, சிறிது தேன் சேர்த்து மூன்று வேளைகளிலும் உணவுண்ணுகையில் சீத கஷாயமாகப் பருகலாம். 40—44½.

கபகாஸத்தில் சில லேஹ்யம் முதலிய முறைகள்.

(1) திப்பிலி, மோடி, சுக்கு, தான்றிக்காய்; (2) மயிலிறகு, கோழியிறகு, இவற்றை எரித்தெடுத்த மை, யவக்ஷாரம்; (3) பேய்த் தும்மட்டி, மோடி, கருஞ்சிவதைவேர், தேன்; இந்த மூன்று முறைகளில் எதையேனும் லேஹ்யமாகப் பக்குவம் செய்து உபயோகிக்க நன்மையுண்டாகும். (1) மிளகுப் பொடியைத் தேனில் கலந்து உபயோகிக்கலாம். (2) அகிற் கட்டையை இழைத்து அதையும் தேனோடு கலந்து உட்கொள்ளலாம். (3) கண்டங்கத்திரி, கத்திரி, கரிசிலாங்கண்ணி, தகரையிலை, குதிரையின் சாணம், கருந்துளஸி இவற்றுள் ஏதேனும் ஒன்றின் ஸ்வரஸத்தைக் கிரஹித்துத் தேன் கலந்து கபகாஸத்திற் பருகலாம். 45—48.

வாத-கபகாஸத்தில் தேவதார்வாதி லேஹ்யம் முதலியன.

(1) தேவதாரு, கச்சோரம், அரத்தை, கடுக்காய்ப்பூ, பூனைக்காலி விதை; (2) திப்பிலி, சுக்கு, கோரைக்கிழங்கு, கடுக்காய், நெல்லிக்கனி, கற்கண்டு; (3) நெற்பொரி, கற்கண்டு, கடுக்காய்ப்பூ, நெல்லிக்கனி, நெய்; இந்த மூன்று முறைகளில் எதையேனும் ஒன்றை லேஹ்யமாகச் செய்து, தேனையும் எண்ணெயையும் சேர்த்து வாத தோஷத்தோடு கூடிய சிலேஷ்ம காஸத்தில் உட்கொள்ளலாம். 49, 50.

காஸ-ச்வாஸங்களில் தாடிமாதி குடயோகங்கள்.

(1) உலர்ந்த மாதளம் வித்து இரண்டு பலம், சுக்கு, திப்பிலி, மிளகு இவை வகைக்கு ஒரு பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டு பலம் வெல்லம் சேர்த்துக் கலந்து உபயோகிக்கலாம். இது காஸ-ச்வாஸங்களையும் பீநஸத்தையும் போக்கும் குணமுடையது; ரோசநம்,[1] தீபநம்,[2] ஸ்வர்யம்[3] என்கிற குணங்களும் இதற்குண்டு. (2) வெல்லம் இரண்டு பலம், யவக்ஷாரம் அரைக் கால் பலம், மிளகு கால் பலம், திப்பிலி அரைக் கால் பலம், மாதளம் வித்து ஒரு பலம்; இவற்றையும் முன்போலவே பக்குவம் செய்து உபயோகிக்க ச்வாஸங்கள் தீரும். 51, 52.

கபகாஸத்திற்குத் தகுந்த க்வாதங்கள்.

(1) ஜ்வர சிகித்ஸையிற் கூறப்பட்ட பாசந குணமுள்ள[4] பத்யாதிக்வாதத்தையும்[5] கடுக்காய்ப்பூ சூர்ணத்தைக் கலந்து உட்கொள்ளலாம். (2) அல்லது ஓமம், சிவதைவேர், தும்மட்டிக்காய், கோரைக் கிழங்கு, தாமரைக்கிழங்கு, திப்பிலி இவற்றைப் பசுவின் மூத்திரத்திலாவது ஜலத்திலாவது இடித்துச் சேர்த்துக் காய்ச்சி அந்த க்வாதத்தையாவது கபகாஸமுள்ளவன் பருகலாம். 53, 53½.

கபகாஸத்தில் பிப்பலீ கல்கம்.

எண்ணெயிற் பொரித்தெடுத்த திப்பிலியைக் கால் பல மெடை கல்கமாய் அரைத்து, அதிற் சிறிது கற்கண்டுப் பொடியையும் கலந்து, கொள்ளை வேகவைத்த ஜலத்தில் கூட்டி, கபகாஸத்தைத் தீர்ப்பதற்குப் பருகலாம். 54½.

---

1. ரோசநம்—அரோசகத்தைப் போக்கி நற்சுவைகளை யுணருமாறு நாக்குக்கு இயற்கைச் சக்தியை விருத்தி செய்யும் வஸ்து.

2. தீபநம் — பசியை விருத்தி செய்தல்.

3. ஸ்வர்யம் — கண்டத்தொனியை செம்மைப் படுத்தக்கூடியது.

4. பாசநம் — உணவுகளை நன்கு ஜீர்ணம் செய்யுமாறு குடலின் சக்தியை விருத்தி செய்வது.

5. பத்யாதி க்வாதம்—ஜ்வர சிகித்ஸையில் 61, 63-வது பத்தியங்களின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

தசமூலங்களைச்[1] சேர்த்துக் காய்ச்சிய கஷாயம் ஆடகப் பிரமாணம்[2] தேவை; அதில் ஒரு பிரஸ்தம்[3] நெய் சேர்த்து, அடியிற் குறிப்பிடப்படுகிற சரக்குகளில் வகை ஒன்றுக்குக் கால்பலம் வீதம் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும்; அவையாவன: தாமரைக்கிழங்கு, கிச்சிலிக் கிழங்கு, பில்வவேர்ப்பட்டை, துளஸி, த்ரிகடு, காயம் இவைகளேயாம். பேயா வென்கிற குடிநீர் இதற்கு அநுபானம். இந்த க்ருதம் வாத-கபஸம்பந்தமான காஸம் முதலிய ரோகங்களைத் தீர்க்கவல்லது. 55, 56.

வாத-கபகாஸத்தில் தசமூல க்ருதம்.

(1) கருநொச்சியிலைச் சாற்றில் பக்குவம் செய்த க்ருதம் காஸ ஹரமானது. (2) வாய்விடங் ஸ்வரஸத்தில், க்ருதம் சேர்த்து, த்ரிகடுவையும் கல்கமாகக் கூட்டி பக்குவம் செய்து உபயோகிக்க அதுவும் காஸத்தைப் போக்கும். 57.

காஸத்தில் நிர்குண்டீ-விடங்க க்ருதங்கள்.

வெள்ளைச்சாறடை, இங்குபத்ரி, ஸரள தேவதாரு, தகரை, சீந்திற்கொடி, பேய்ப்புடல், கண்டங்கத்திரி, நாய்த்துளஸி இவற்றின் சாற்றையும் பாலையும் கலந்து, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும்; இதற்கு த்ரிகடுவைப் பொடித்து கல்கமாகச் சேர்க்கவேண்டும். இந்த க்ருதத்தை உபயோகிப்பவர் காஸம், விஷம ஜ்வரம், க்ஷயம், அர்சோரோகம் இவற்றால் வருந்த நேரிடாது. 58.

காஸாதிகளில் புநர்நவாதி க்ருதம்.

கண்டங்கத்திரியை வேர் காய் இலைகளோடு முற்றிலும் இடித்து இரஸம் பிழிந்து, ஆடகப்பிரமாணம் அந்த ஸ்வரஸமெடுத்து, அதில் ஒரு பிரஸ்தம் நெய் சேர்த்துக் காய்ச்சவும்; சிற்றுமுட்டி, த்ரிகடு, வாய்விடங்கம், கிச்சிலிக் கிழங்கு, மாதளை, ஸௌவர்ச்சல லவணம், யவக்ஷாரம், முள்ளங்கி, நெல்லிக்கனி, தாமரைக்கிழங்கு, வெள்ளைச்சாறடை, கண்டங்கத்திரி, கடுக்காய், ஓமம், சித்திரமூலம், ருத்தியென்னும் ஓஷதி, திராக்ஷை, சவியம், சிவப்புச்சாறடை, காஞ்சோறி, புளிவஞ்சி, கடுக்காப்பூ, கீழாநெல்லி, கண்டுபாரங்கி, அரத்தை, நெரிஞ்சில் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து இந்த க்ருதத்தைப் பக்குவம் செய்ய வேண்டும்; இதை எல்லா விதமான காஸங்களிலும், ச்வாஸங்களிலும், விக்கல்களிலும் உபயோகிக்கலாம். 59—61½.

ஸர்வ காஸங்களிலும் கண்டகார்யாதி க்ருதம்.

கண்டங்கத்திரியை ஸமூலமாய் இடித்து, நான்கு திரோணம் ஜலத்தில் சேர்த்து, அதை ஒரு ஆடகமாக வற்றும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டி யெடுக்கவும். த்ரிகடு, அரத்தை, சீந்தில், சித்திரமூலம், கர்க்காடகச்ருங்கி, கண்டுபாரங்கி, கோரைக் கிழங்கு, கிரந்திதகரம், பூனைக்காலி இவற்றை வகைக்கு அரைப்பலம் வீதம் சேர்த்து இடித்துச் சூர்ணம் செய்து அக்கஷாயத்தில் சேர்க்கவும். பிறகு அதில் நெய் பதினாறு பலமும், அழுக்கில்லாமல் சுத்தம் செய்த கற்கண்டு நாற்பது பலமும் சேர்த்து, மறுபடியும் அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். லேஹ்யம் கரண்டியில் பற்றிக்கொண்டு பாகுபதமாக வரும்போது தீயிலிருந்து எடுத்து அதை ஆறவைக்கவும். பிறகு திப்பிலியையும் மூங்கிலுப்பையும் வகைக்கு ஒரு சராவமளவு அதில்[1] பொடித்துச் சேர்ப்பதோடு, ஒரு சராவம் பழகிய தேனையும் சேர்த்துக் கூட்டிக்கொள்ளவும்.

காஸாதிகளில் வியாக்ரியாதி லேஹ்யம்.

1. தசமூலம்—முதற் புத்தகத்தில் 123-ம் பக்கத்தில் விவரம் காண்க.

2 ஆடகம்—இதே அத்தியாயத்தில் 31-ம் பக்கத்தில் டிப்பணியைப் பார்க்க.

3. பிரஸ்தம்—இதே அத்தியாயத்தில் 30 ம் பக்கத்தில் டிப்பணியைப் பார்க்க.

இந்த லேஹ்யம் காஸம், ச்வாஸம், குல்மம், இருதயத்தைப்பற்றிய வியாதிகள், அர்சஸ இவைகளை நிவ்ருத்தி செய்யும். 62—65½.

காஸத்தில் தூமபானம்.

கப காஸத்தில் சமந தூமத்தையும் பானம் செய்யலாம். கபம் மிக்க அதிகரித்த காஸத்தில் சோதந தூமபானமும் செய்யலாம். மனச்சிலை, தாளகம், அதிமதுரம், ஜடாமாம்ஸீ, கோரைக்கிழங்கு இங்குதீமரப் பட்டை[2] இவற்றை, காஸஹரமான முறைப்படி பக்குவம் செய்து தூமபானம் செய்யலாம்.[3] தூமபானம் செய்ததும், கபத்தைத் துப்பிவிட்டு, வெல்லம் சேர்த்துக் காய்ச்சிய பாலை இளஞ்சூடாயிருக்கையில் பருகவேண்டும். இந்த மனச்சிலாதி தூமமானது நீடித்த நாட்களாயுள்ள வாதகபங்கள் மேலிட்ட காஸங்களைத் துரிதமாகப் போக்கும். 66-68.

பல தோஷங்கள் ஸம்பந்தப்பட்ட காஸங்களுக்கு சிகித்ஸைகள்.

(1) கப காஸத்தில் பித்த தோஷத்தினால் தொடரப்பட்ட தமகச்வாஸம் ஸம்பவிக்குமானால், அப்பொழுதுள்ள நிலைமைகளுக்கேற்றவாறு பித்த காஸத்திற்கான சிகித்ஸையைப் பிரயோகிக்கவேண்டும். (2) காஸத்தில் வாததோஷத்தை கபம் தொடர்ந்திருக்குமானால் அதில் கபஹரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும். (3) வாத கபங்களைப் பித்தம் தொடர்ந்திருக்குமானால் பித்தஹரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும்.[1] (4) வாத கபங்களாலுண்டான சுஷ்ககாஸத்தில்[2] ஸ்நிக்த்தமான சிகித்ஸையும், அத்தகைய ஆர்த்ர காஸத்தில்[3] ரூக்ஷணமான சிகித்ஸையும் செய்யவேண்டும். (5) பித்தத்துடன்கூடிய கபத்தினால் உண்டான காஸத்தில் திக்தரஸம் கூட்டிய ஔஷதத்தை உபயோகிக்க வேண்டும். 69—71.

க்ஷத காஸத்தில் லாக்ஷா க்ஷீராதி யோகங்கள்.

(1) காஸத்தினால் மார்பின் உட்புறத்தில் விரணம் உண்டாய்விடுமானால் உடனே கொம்பரக்குப் பொடியையும் தேனையும் பாலோடு கலந்து பருகவேண்டும். இவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு சம்பா அரிசியினலான அன்னத்தைச் சர்க்கரை கலந்து பாலுடன் உண்ணவேண்டும். (2) க்ஷதகாஸரோகியானவன் விலாப்பக்கங்களின் வலி, வஸ்தியென்கிற மூத்திரப்பையில் வலி, பித்தமும் ஜாடராக்னியும் மிகச் சொற்பமாயிருத்தல் இவ் விகாரங்களோடு கூடியவனாயிருந்தால் ஸுரை யென்கிற பானத்துடன் கலந்து அக் கொம்பரக்கைப் பருகச் செய்யவேண்டும், (3) க்ஷத காஸரோகிக்கு மலமும் உடைந்து திரவமாகப் போய்க்கொண்டிருந்தால், கோரைக்கிழங்கு, அதிவிடயம், வட்டத்திருப்பி, வெட்பாலை இவற்றோடு கொம்பரக்கைக் கூட்டிக் கொடுக்கலாம். (4) கொம்பரக்கு, நெய், தேன் மெழுகு, ஜீவநீய கணத்திற்கூறிய சரக்குகள், சர்க்கரை, மூங்கிலுப்பு இவற்றைப் பாலில் சேர்த்துப் பக்குவம் செய்து, நல்ல பசியுள்ளவன் அப்பாலைப் பருகலாம். (5) ஞாழல், தாமரைக்கிழங்கு, கிரந்திதகரம்,

1. சராவம்—இதுவே தமிழில் சேர் என்று வழங்கப்படுகிறது. எட்டு பலம் கொண்டது ஒரு சாரவம் என்று ஆயுர்வேத நூல்களில் கூறப்பட்டுளது; ஆகவே சேர் என்பது சராவம் என்பதின் திரிபென்பது நமது கொள்கை.

2. இங்குதி — இதை இங்குணம் என்ற சிலர்; டாக்டர் நட்கார்னி என்பவர் இதை நாட்டு வாதுமை யென்று எழுதியிருக்கிறார்.

3. ஸுச்ருதஸ்த்ரஸ்தாநத்தில் "தூமபாநவிதி" அத்தியாயத்திற் கூறிய முறை இங்கே குறிக்கப்படுகிறது.

1. பித்த காஸம் முதலியவற்றிற்கு இதற்கு முன் இதே அத்தியாயத்தில் சிகித்ஸைகள் கூறப்பட்டிருக்கின்றன.

2. சுஷ்க காஸம்—கோழை முதலிய திரவம் தொண்டையிலில்லாமலே உண்டாகும் வறட்டிருமல்.

3. ஆர்த்ர காஸம்—கோழை முதலிய திரவம் வெளிவரக்கூடிய இருமல்.

இராஜயக்ஷ்மாவில் மாம்ஸ க்ருதம்.

ஸாதாரண மிருகங்களுடைய நூறு பலம் அளவான மாம்ஸத்தை[1] இரண்டு திரோணம்[2] ஜலத்தில் சேர்த்து எட்டில் ஒரு பங்கு ஜலம் மாத்திரம் மிகும்படி சுண்டக் காய்ச்சி, அக்கஷாயத்தில் ஜீவநீய கணத்தைச் சேர்ந்த சரக்குகளை ஒவ்வொரு பலம் பொடித்துக் கல்கமாகச் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்யவும். 'மாம்ஸ க்ருதம்' எனப்படுகிற இவ் வௌஷதத்தை அப்படியேயாவது மாம்ஸரஸத்துடன் கூட்டியாவது உட்கொண்டுவரலாம்; இது வாத வியாதிகளையும், பித்த வியாதிகளையும் போக்கும்; காஸம், ச்வாஸம், தொண்டைக்கம்மல், க்ஷயம், இருதயசூலை, பக்கசூலை இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 25—27.

இராஜயக்ஷ்மாவில் ஏலாதி க்ருதம் முதலியன.

ஏலம், ஓமம், த்ரிபலை, ஸௌராஷ்ட்ர ம்ருத்திகை,[3] த்ரியூஷணம், சித்திரமூலம், வேப்பம்பிசின், கருங்காலிமரப்பிசின், வேங்கைமரப் பிசின், மாதளம் பிசின், சேராங்கொட்டை, வாய்விடங்கம் இவை ஒவ்வொன்றும் எட்டு பலமெடை தேவை; இவற்றைப் பதினறு மடங்கு ஜலத்தில் சேர்த்துப் பதினறில் ஒரு பங்காக வற்றும்படியாகக் காய்ச்சி யெடுக்கவும்; அப்பால் அதில் ஒரு பிரஸ்த்தம் நெய் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும். பக்குவமான பிறகு மூங்கிலுப்பு ஆறு பலமும், சர்க்கரை முப்பது பலமும், தேன் க்ருதத்திற்கு இரண்டு மடங்கும், த்ரிஜாதகம் மூன்று பலமும் பொடித்துக் கல்கமாகச் சேர்த்துத் துடுப்பால் அனைத்தையும் கிளறி ஒன்ருகக் கூட்டவும். பிறகு இதை முற்பகலில் உட்கொண்டு, பாலை இதற்கு அநுபானமாகப் பருகிவரவேண்டும். இதற்குக் கடுமையான பத்தியம் முதலிய நியமம் ஒன்றுமில்லை. இது இரஸாயனம்,[1] மேத்மம்,[2] சக்ஷுஷ்யம்,[3] ஆயுஷ்யம்,[4] தீபனம்[5] என்கிற குணங்களுடையது; மேஹம், குல்மம், க்ஷயரோகம், பாண்டுரோகம், பகந்தரமென்கிற குதஸ்த்தானத்தி லுண்டாகும் பிளவை இவற்றைச் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யக்கூடியது. முன்னல் க்ஷதகாஸத்தில் கூறியுள்ள க்ருதங்களையும் லேஹ்யங்களையும் க்ஷய ரோகத்திலும் உபயோகிக்கலாம். 28—32½.

லவங்கத்வகாதி சூர்ணம்.

இலவங்கப்பட்டை ஒரு பங்கு, ஏலம் இரண்டு பங்கு, திப்பிலி நாலு பங்கு, சரக்கொன்னை எட்டு பங்கு, சர்க்கரை பதினறு பங்கு; இவ்விதம் சேர்த்து சூர்ணம் செய்து கொள்ளவும். இதை நெய்யும் தேனும் கலந்து உட்கொள்ளவும். பலஹீனனுக்கு இது அனுகூலமான ஔஷதம்; நாக்கில் நற்சுவையைத் தரும்; காஸம், க்ஷயம், ச்வாஸம், பார்ச்வசூலை, கபப் ரகோபம் இவற்றைப் போக்கும். 33, 34.

1. ஸாதாரண ம்ருகங்கள்—பிரஸஹங்கள், பிலேசயங்கள் என்கிற மிருகங்கள். இவற்றின் விவரத்தை முதற் புத்தகத்தில் 50-ம் பக்கம் பார்க்க.

2. திரோணம்—41-ம் பக்கம் பார்க்க.

3. ஸௌராஷ்ட்ர ம்ருத்திகை — இது சிறிது வெண்மையானதும் வாஸனையுள்ளதுமான ஸௌராஷ்ட்ர தேசத்து மண்; இதையே துவரீயென்றும் கூறுவர்.

1. இரஸாயனம்—முதற் புத்தகத்தில் 28, 270-இப்பக்கங்களில் டிப்பணியைப் பார்க்க.

2. மேத்யம்—முதற் புத்தகத்தில் 33-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. சக்ஷுஷ்யம்—முதற் புத்தகத்தில் 38, 48-ம் பக்கங்களைப் பார்க்க.

4. ஆயுஷ்யம்—இதே புத்தகத்தில் 42-ம் பக்கம் பார்க்க.

5. தீபனம் — இதே புத்தகத்தில் 43-ம் பக்கம் பார்க்க.

இராஜயக்ஷ்மாவில் ஸ்வர பங்கத்திற்கு விசேஷ சிகித்ஸைகள்.

தொண்டையின் குரல் குன்றிப் போயிருந்தால் (1) நஸ்யப் பிரயோகம் செய்வதும், தூமபானம் முதலியதைப் பிரயோகிப்பதும் விசேஷ சிகித்ஸைகளாம். (2) அதிலும் வாதஸம்பந்தமான ஸ்வரபங்கத்தில் தகரவிதை, கத்திரி, கரிசிலாங்கண்ணி இவற்றின் ஸ்வரஸங்களால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தை இளஞ்சூடாகவே போஜனத்திற்குப் பிறகு உட்கொண்டுவரலாம்; இந்த க்ருதம் காஸத்தையும் போக்கும், கண்டத்தொனியையும் செம்மைப்படுத்தும். (3) கருங்குறிஞ்சிச் சாற்றால் பக்குவம் செய்த க்ருதத்தையாவது முன்போலவே உபயோகிக்கலாம். (4) இலந்தயிலையை அரைத்து, அக்கல்கத்தையாவது நெய்யிற் பொரித்து, இந்துப்பும் சேர்த்து உட்கொள்ளலாம். (5) அல்லது அதிமதுரம், திராக்ஷை, திப்பிலி, வாய்விடங்கம், மருக்காரை, செருப்படையின் வேர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சியெடுத்த தைலத்தையாவது நஸ்யமிடலாம். (6) நெய் சேர்த்து சர்க்கரான்னத்தைப் புஜித்து ஸுகோஷ்ணமான ஜலத்தை அநுபானமாகப் பருகலாம். (7) அல்லது பாயஸத்தையாவது நெய் சேர்த்து உஷ்ண ஜலத்தின் அநுபானத்தோடு பானம் செய்யலாம். (8) ஸ்நிக்த்தமான ஸ்வேத சிகித்ஸையைப் பிரயோகிக்கலாம். (9) பித்த ஸம்பந்தமான ஸ்வரபங்கத்தில் பாலுள்ள விருக்ஷங்களின் முளைகளைக் கஷாயமாகவும் கல்கமாகவும் சேர்த்துப் பக்குவம் செய்த க்ருதத்தைத் தேன் கூட்டிப் பருகவும்; இதற்குக் கொதிக்க வைத்தாறிய பாலை அநுபானமாகக் கொள்ளவேண்டும். (10) அதிமதுரம் சேர்த்துப் பக்குவமான பாயஸத்தையும் நெய் கலந்து உட்கொள்ளலாம். (11) சிற்றாமுட்டி, மேர்மல்லிகை, பிலப்பனங்கிழங்கு, அதிமதுரம் இவற்றால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தில் இந்துப்பைச் சேர்த்து உட்கொள்ளவும்; இது ஸ்வர்யகுணத்திற்[1] சிறந்தது. (12) வறள்தாமரை, அதிமதுரம், திப்பிலி, கண்டங்கத்திரி, சிற்றாமுட்டி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கடைந்தெடுத்த நெய் நஸ்யமிடுவதற்குச் சிறந்த ஔஷதம்; இதுவும் ஸ்வர்ய குணத்திற் சிறந்தது. (13) மதுரரஸமுள்ள வஸ்துக்களுடைய சூர்ணத்தைத் தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளலாம். (14) கபஸம்பந்தமான ஸ்வரபங்கத்தில் கடுரஸமுள்ள பதார்த்தங்களைப் பசுமூத்திரத்துடன் உட்கொள்ளலாம்; ரூக்ஷமான உணவுகளையே புஜிக்கவேண்டும். (15) சிறு தேக்கு, நெல்லிக்கனி, த்ரிகடு இவற்றைச் சூர்ணம் செய்து தைலத்திலும் தேனிலும் கலந்து உட்கொள்ளலாம். (16) த்ரிகடு, யவக்ஷாரம், சித்திரமூலம், சவியம், கண்டுபாரங்கி, கடுக்காய் இவற்றின் சூர்ணத்தையாவது தேன் கலந்து உபயோகிக்கலாம். (17) வாற்கோதுமையைக் கொண்டும், திப்பிலி, நெல்லிக்கனிகளைச் சேர்த்தும் யவாகூவென்னும் கஞ்சியைப் பக்குவம் செய்து, யமகஸ்நேஹத்தில்[2] சேர்த்துப் பருகலாம். (18) போஜனம் செய்து திப்பிலியையும் சுக்கையுமாவது மென்று விழுங்கலாம். (19) தீக்ஷ்ணமான ஔஷதங்களை யுட்கொண்டு வமனமாவது செய்துவிடலாம். (20) உரத்த குரலோடு பேசியவனுக்குத் தொண்டைக் கமமல் உண்டாயிருந்தால், அவன் மதுரமான வஸ்துக்களால் பக்குவம் செய்யப்பட்டு, சாக்கரையும் தேனும் கலந்துள்ள பாலைக் குடித்துவரலாம். 35—46.

1. ஸ்வர்யம் — இதே புத்தகத்தில் 35-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

2. யமகஸ்நேஹம் — முதற் புத்தகத்தில் 129-ம் பக்கம் பார்க்க.

இராஜயக்ஷ்மாவில் அரோசகத்திற்கு விசேஷ சிகித்ஸைகள்.

(1) அரோசக முண்டாயிருக்கையில் பத்திய வஸ்துக்கள் கலந்த அநேக விதமான சித்திரான்னம் அனுகூலமாயிருக்கும். (2) தேஹம் உள்ளும் புறமும் எப்பொழுதும் நிர்மலமாயிருக்குமாறு செய்து கொள்ளவேண்டும். (3) மனம் கவலையற்று அமைதிபெற வேண்டும். (4) இருதயத்திற்கு வன்மைதரக்கூடியதும், மனதுக்கின்பமுமான ஔஷதத்தை உட்கொள்ளவேண்டும். (5) தினந்தோறும் காலையிலும் மாலையிலுமாக இரண்டு முறை பல் துலக்கவேண்டும்; அப்பொழுதுமுகத்தை நன்கு சுத்தம் செய்யக்கூடிய கஷாயவகைகளால் பற்களையும் வாயையும் கழுவிக் கொப்புளிக்கவேண்டும். (6) ஸ்நிக்த்தமான ஔஷதங்களால் முறைப்படி தூமபானமும்[1] செய்யலாம். (7) தாளிஸாதி சூர்ணமும் தாளிஸாதி வடகமும்,[2] (8) கர்ப்பூரமும் கற்கண்டும் கலந்த சசாங்க கிரணங்கள்[3] என்கிற பக்ஷணவகைகளும் நாக்கில் நற்சுவையை மிகவும் விருத்தி செய்யக்கூடியன. (9) அவற்றுள் வாத ஸம்பந்தமான அரோசகத்தில் அடியில் குறிப்பிடப்படும் சூர்ணத்தை நீர்மோரின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம்; அச் சூர்ணமாவது:—அரேணுகம், திப்பிலி, வாய்விடங்கம், திராக்ஷை, இந்துப்பு, சுக்கு இவற்றின் சூர்ணமேயாம். ஏலக்காய், கண்டுபாரங்கி, யவக்ஷாரம், காயம் இவற்றைக்கூட்டி பக்குவம் செய்த க்ருதத்தோடாவது முற்கூறிய சூர்ணத்தை யுபயோகிக்கலாம். (10) வசம்பின் கஷாயத்தைக் குடிக்கச்செய்து வமனமாவது செய்விக்கலாம். (11) பித்த ஸம்பந்தமான அரோசகத்தில் வெல்லம் கரைத்த நீரை வயிறு நிரம்பவும் குடித்து வாந்தி செய்யலாம். (12) சர்க்கரை, நெய், இந்துப்பு இவற்றைத் தேனில் கலந்தாவது உட்கொள்ளலாம். (13) கப ஸம்பந்தமான அரோசகத்தில் வேப்பம்பட்டைக் கஷாயத்தைப் பருகி வாந்திசெய்யலாம். (14) ஓமம், சரக்கொன்றை இவற்றின் கஷாயத்தையும் பானம் செய்யலாம். (15) தீக்ஷ்ணமான அரிஷ்டங்களில் தேன் சேர்த்தும் பருகலாம்; அல்லது தீக்ஷ்ணமான திராக்ஷாஸவம் முதலிய மதுவகைகளையும் தேன் கலந்துட்கொள்ளலாம். (16) இதற்கு முன் கூறிய அரேணுகாதி சூர்ணத்தையும் உஷ்ண ஜலத்துடன் சாப்பிடலாம் 47—53.

ஏலாதி சூர்ணம்.

ஏலம் ஒரு பங்கு, இலவங்கப்பட்டை இரண்டு பங்கு, நாககேஸரம் மூன்று பங்கு, மிளகு நாலு பங்கு, திப்பிலி ஐந்து பங்கு, சுக்கு ஆறு பங்கு இவ் வளவுப்படி இச்சரக்குகளைக் கூட்டி சூர்ணம் செய்து, அனைத்துக்கும் ஸமபாகம் சர்க்கரை சேர்த்து உட்கொள்ளலாம். இது வாயில் அமிதமாய் உமிழ்நீரூறுதல், அரோசகம், இருதயநோவு, பார்ச்வசூலை, காஸம், ச்வாஸம், மற்றும் தொண்டையைப் பற்றிய வியாதிகள் இவற்றை நிவ்ருத்தி செய்யும். 54, 54½.

யவாந்யாதி சூர்ணம்.

ஓமம், புளி, புளிவஞ்சி, சுக்கு, மாதளம் பழம், இலந்தம்பழம்; இவை ஒவ்வொன்றும் கால் பலமெடையும், சர்க்கரை நான்கு பலமும், கொத்தமல்லிவிதை, ஸௌவர்ச்சலலவணம், ஜீரகம், இலவங்கப்பட்டை இவை ஒவ்வொன்றும் அரைக்கால் பல மெடையும், நூறு திப்பிலியும், இருநூறு மிளகும் சேர்த்து சூர்ணம் செய்யவும். இது ருச்சியம்,

1. ஸ்நிக்த்த தூமமே மிருது தூமம் எனப்படும்; இதைப்பற்றி முதற் புத்தகத்தில் 167, 168-ம் பக்கங்களைப் பார்க்க.

2. தாளிஸாதி சூர்ணம்—அடுத்த 59-ம் பக்கம் பார்க்க.

3. சசாங்க கிரணங்கள்—முதற் புத்தகத்தில் 21-ம் பக்கம் பார்க்க.

க்ராஹி, ஹ்ருத்யம்[1] என்கிற குணங்களிற் சிறந்த ஔஷதம்; மலபந்தம், காஸம், இருதயத்தைப்பற்றிய வியாதிகள், பக்கசூலே, ப்லீஹறோகம், அர்சஸ், கிரஹணீ இவற்றைப் போக்கும். 55—57½.

தாளிஸாதி சூர்ணம்.

தாளிசபத்திரி ஒரு பங்கு, மிளகு இரண்டு பங்கு, சுக்கு மூன்று பங்கு, திப்பிலி நாலு பங்கு, மோடி ஐந்து பங்கு,[2] இலவங்கப் பட்டை அரைப்பலம், ஏலம் அரைப்பலம். இச் சரக்குகளை இங்ஙனம் சேர்த்து சூர்ணம் செய்யவும்; மோடியின் அளவுக்கு எட்டு மடங்கு சர்க்கரையையும் அச்சூர்ணத்திற் கலந்து உபயோகிக்கலாம். இதற்கு தீபனகுணம் உண்டு; காஸம், ச்வாஸம், அரோசகம், வாந்தி, ப்லீஹறோகம், இருதயசூலே, பார்ச்வசூலே, பாண்டுரோகம், ஜ்வரம், அதிஸாரம் இவற்றை நிவ்ருத்தி செய்யும்; குடல் முதலியவற்றில் அடைபட்டுள்ள வாயுவையும் வெளிப்படுத்தும். 58—60.

அதிக உமிழ் நீரூற்றைக்குறைக்கும் முறைகள்.

வாயில் உமிழ்நீர் அதிகமாய் ஊறுகையில் (1) வாற்கோதுமையை எருக்கம் வேர், சீந்திற்கொடி இவற்றின் கஷாயத்திலும் பாலிலும் ஓரிரவெல்லாம் ஊறவைத்தெடுத்து, அதன் மாவையும் அதனாலான பணியாரங்களையும் அப்பிணியாளி புஜிக்கலாம். (2) சரீரத்தில் நல்ல வலிவுள்ளவனை பிணியாளியாயிருந்தால் கார்ப்பும் கைப்புமான வஸ்துக்களை யுட்கொண்டு வமனம் செய்யலாம். (3) ஜாங்கல மாம்ஸத்தைச் சலாகையில் குத்தித் தணலில் வாட்டியெடுத்து உண்ணலாம். (4) ஈரப் பசையின்றி யுலர்ந்து மிகவும் இலகுகுணமுள்ள பக்ஷணங்களைச் சிறுகடலேயைச் சேர்த்துக் காய்ச்சிய இரஸத்தின் அநுபானத்துடன் புஜிக்கலாம். 61, 62.

அமிதமான கபம் முதலியது ஸ்ரவிப்பதற்கு ஏற்ற பரிஹாரம்.

கபமானது அதிகமாக வெளியில் ஸ்ரவித்துக்கொண்டிருந்தால் வாயுவானது கபத்தை மிகுதியாக க்ஷயிக்கச்செய்யும்; விஷப தத்துவமுணர்ந்து நிபுணனுள்ள வைத்தியன் இவ்விதம் வெளிவரும் கபத்தை ஸ்நிக்த்தமும் உஷ்ணவீர்யமுமுள்ள ஔஷதாதிகளாலேயே நிவ்ருத்தி செய்ய வேண்டும். பீநஸத்திலும் வாந்தியிலுங்கூட இம்முறையையே பிரயோகிக்க வேண்டும். 63—63½.

இராஜயக்ஷ்மாவில் பீநஸத்திற்கு விசேஷ சிகித்ஸை.

பீநஸத்தில் விசேஷமாக உத்காரிகா பிண்டங்களைக்கொண்டு[1] ஸ்நிக்த்தமான அப்யங்கங்களையும், ஸ்நேஹஸ்வேதங்களையும் சிரஸ்ஸின் பாரிசங்கள், கழுத்து இவை முதலிய விடங்களில் பிரயோகிக்கவேண்டும். இலவண ரஸமும் அம்லரஸமும் கடுரஸமுமுள்ள மாம்ஸரஸாதிகளை ஏதேனும் ஸ்நேஹ வஸ்துக்களோடு கூட்டியும் பருகலாம். 64, 65.

இராஜயக்ஷ்மாவில் சிரோவேதனை முதலியவற்றிற்கு சிகித்ஸை.

சிரஸ்ஸிலும், தோள்களிலும், தோள்களின் பக்கங்களிலும் வலியுண்டாயிருக்கையில், எந்த தோஷத்தினால் அக்கோளாறுகள் ஸம்பவித்ததாகத் தெரிய வருகின்றதோ அத்தோஷ பரிஹாரத்திற்கேற்ற வண்ணம் சிகித்ஸை செய்யவேண்டும். நீர்வாழும் பிராணிகளின் மாம்ஸங்கள், ஆநூபமாம்ஸங்கள்

1. ருச்யம் என்பதைப்பற்றி இதே புத்தகத்தில் 43-ம் பக்கத்தையும், க்ராஹி, ஹ்ருத்யம் இவைகளைப் பற்றி முதற் புத்தகத்தில் 35 ம் பக்கத்தையும் 37-ம் பக்கத்தையும் பார்க்க.

2. மோடிக்குப் பதிலாக மூங்கிலுப்பு சேர்க்கும்படி சார்ங்கதரன் முதலியவர்கள் கூறுகிறார்கள்.

1. உத்காரிகாபிண்டங்கள் :— எண்ணெய்ப் பசையோடு கூடிய இலுப்பைப் பிண்ணாக்கு முதலியவற்றின் கல்கபிண்டங்கள் இதனால் இங்கே குறிக்கப் படுகின்றன.

இவற்றில் நான்குவிதமான ஸ்நேஹவஸ்துக்களையும்[1] கூட்டி, முறைப்படி நன்கு பக்குவம் செய்த உபநாஹங்களைப்[2] பிரயோகிப்பதும் அக்கோளாறுகளில் உபயோகமானவையெனக் கருதப்படுகின்றன. 66¼.

**இராஜயக்ஷ்மாவில் ஸம்ஸர்க்க தோஷ சிகித்ஸை.**

இராஜயக்ஷ்மாவில் தோஷ ஸம்ஸர்க்கம்[3] விசேஷித்திருந்தால், அப்பொழுது, (1) நந்தியாவர்த்தம், அதிமதுரம், சதகுப்பி, கோஷ்டம், சந்தனம் இவற்றின் கல்கத்தினாலும், (2) சிற்றாமுட்டி, சிற்றரத்தை, எள், அதிமதுரம், கருநைதல், நெய் இவற்றாலும் சரீரத்தில் அவ்வவ்விடங்களில் லேபநம் செய்யவேண்டும். (3) சாறணை, முருங்கை, சிற்றாமுட்டி, தண்ணீர் விட்டாங்கிழங்கு, நிலப்பனங்கிழங்கு இவற்றின் சாற்றால் நஸ்யமிடலாம்; அல்லது அச் சரக்குகளால் தூமபானம் செய்யலாம். (4) அச்சரக்குகளால் பக்குவம் செய்த ஸ்நேஹங்களை ஔத்தரபக்திகமாய்[4] உபயோகிக்கலாம். (5) அப்யங்கம் செய்துகொள்வதற்குச் சிறந்தவை யெனக் கருதப்படும் தைலங்களைக்கொண்டு அப்யஞ்ஜநமும் செய்யலாம். (6) அங்ஙனமே வஸ்தி சிகித்ஸையும் இக் கோளாறுகளிற் சிறந்ததாகும். 67—69.

**இராஜயக்ஷ்மாவில் அசுத்த ரத்தத்தை வெளிப்படுத்தல்.**

க்ஷயரோகத்தினால் வருந்துபவர்களுக்கு எந்த தோஷத்தினால் இரத்தம் கோளாறடைந் திருக்கின்றதோ, அந்த தோஷத்திற்கேற்றவாறு ச்ருங்கம் முதலிய உறிஞ்சும் கருவிகளால்[1] கோளாறடைந்த இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். 69½.

**இராஜயக்ஷ்மாவில் அப்யங்கத்திற்கான ஔஷதங்கள்.**

(1) தாமரைக்கிழங்கு, வெட்டிவேர் சந்தனம் இவற்றின் கல்கத்தில் நெய்யையும் கலந்து தேஹத்தில் பூசுவதும் நலம்; (2) அறுகம்புல், அதிமதுரம், மஞ்ஜிஷ்டி, நாககேஸரம் இவற்றின் கல்கத்தோடாவது நெய் கலந்து உடலிற் பூசலாம். (3) ந்யக்ரோதாதிகணத்தினால்[2] பக்குவம் செய்த தைலத்தினாலாவது, (4) சததௌதக்ருதத்தினாலாவது[3] அப்யங்கம் செய்வதும் பாலாலும், அதிகமதுரம் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தினாலும் அபிஷேகம் செய்வதும் சிறந்தது. 70-71½.

**இராஜயக்ஷ்மாவிலுண்டாகும் அதிஸாரத்திற்கு சிகித்ஸை.**

யக்ஷ்மாவில் ஜாடராக்னியானது பெரும்பாலும் அழிவுறுமாகையால், பிசுபிசுப்பான கசடுகளுடன் அதிஸாரமுண்டாகும்; அவ்வித ரோகிக்கு அதிஸார சிகித்ஸையிலும், கிரஹணீ சிகித்ஸையிலும் கூறப்பட்டுள்ள ஔஷதங்கள் அநுகூலமானவையாம். 72½.

**இராஜயக்ஷ்மாவில் மலத்தினாலான பலம்.**

மிகவும் மெலிவடைந்து வரும் க்ஷயரோகிக்கு மலம் மாத்திரம் முற்றிலும் கழிந்து க்ஷயமடையாதபடிக்குப் பெரு முயற்சியோடு சிகித்ஸை செய்து வர வேண்டும்; ஏனெனில், ஸர்வதாதுக்களும் க்ஷீணித்து

---

1. க்ருதம், தைலம், வஸா, மஜ்ஜை இவை நான்குவித ஸ்நேஹங்கள்.

2. உபநாஹம்—முதற்புத்தகத்தில் 136, 137-ம் பக்கங்களைப் பார்க்க.

3. தோஷஸம்ஸர்க்கம்—இரண்டிரண்டு தோஷங்களின் சேர்க்கையினாலான கோளாறு.

4. ஔத்தரபக்திகம்—போஜனத்திற்குப் பிறகு ஔஷதமுட்கொள்ளும் முறை.

1. ச்ருங்கம் முதலிய இரத்தமோக்ஷணத்திற்கான கருவிகளைப்பற்றி முதற் புத்தகத்தில் 164-ம் பக்கம் பார்க்க.

2. ந்யக்ரோதாதிகணம்—முதற்புத்தகம் 127-ம் பக்கம் பார்க்க.

3. சததௌதக்ருதம்—முதற்புத்தகம் 194-ம் பக்கம் பார்க்க.

வருந்திக் கொண்டிருக்கும் இராஜயக்ஷ்ம ரோகியை மலத்தினுலான பலமே ஒருவாறு தாங்கிவரக்கூடியது. $73\frac{1}{2}$.

இராஜயக்ஷ்மாவில் மாம்ஸ போஜனமும் மதுபானமும்.

முறை தவருமல் மாம்ஸத்தையே புஜித்து, திராக்ஷா ஸவத்தை அநுபானமாகவும் உட்கொண்டு, மலஜலாதி வேகங்களை அடக்காமல் நியமமாயிருந்து வருபவனுடைய தேஹத்தில் இராஜயக்ஷ்மா இடம் பெறுவதில்லை. மாம்ஸங்களைப் புஜித்துக்கொண்டு ஸுரை, மண்டம், மார்த்வீகமது, அரிஷ்டங்கள், மாதவம் [1] என்கிற மத்யம் இவற்றுள் எதையேனும் ஒன்றை அவரவரது தேஹ நிலைமைக்கும் வியாதி நிலைமைக்கும் ஏற்றவண்ணம் அநுபானமாய் உட்கொள்ள இங்ஙனம் மாம்ஸபோஜனம் ஸ்ரோதோமார்க்கங்களிலுள்ள அடைப்புகளை அகற்றவும், சரீரவன்மையையும் புஷ்டியையும் உண்டுபண்ணவும் ஏற்றதாகும். 74-76.

இராஜயக்ஷ்மியை ஸ்நேஹாதிகளில் மூழ்கச் செய்தல்.

எண்ணெயில் நன்ருக உடல் முழுமையையும் அப்யஞ்ஜநம் செய்து வைத்து ஸ்நேஹத் தொட்டியிலும், பால் தொட்டியிலும், தண்ணீர்த் தொட்டியிலும் அம்மனிதனை அமிழ்ந்து குளிக்கச் செய்யவும்; அவற்றிலிருந்து எழுந்த பிறகு மீண்டும் மிச்ரகஸ்நேஹங்களால் [2] அப்யங்கநம் செய்து வைத்து, கைகளால் சுகமாக உடம்பை மர்த்தநம் செய்யவும்; பிறகு சுகமாக உட்காரச் செய்து இன்பமாக உத்வர்த்தநம் [1] செய்யவும். 77, $77\frac{1}{2}$.

இராஜயக்ஷ்மாவில் உத்வர்த்தந சூர்ணமும் ஸ்நாந நீரும்.

(1) ஜீவந்தி, தண்ணீர்விட்டாங் கிழங்கு, மஞ்ஜிஷ்டி, சாறணை, அமுக்கிருங்கிழங்கு, நாயுருவி, தழுதாழை, அதிமதுரம், சிற்ருமுட்டி, நிலப்பனங் கிழங்கு, வெண்கடுகு, கோஷ்டம், வாலுளுவை, ஆளி விதை, உளுந்து, எள், மத்யத்தின் அடியில் படிந்துள்ள திப்பி இவற்றையெல்லாம் ஒருமிக்கப் பொடித்துக் கொள்ளவும்; இவ்வனைத்துக்கும் இரு மடங்கு வாற்கோதுமைப் பொடியைக் கூட்டி, தயிரும் தேனும் விட்டுக் கலந்து விடவும். இதை உத்வர்த்தநத்திற்கு உபயோகிக்கவும். இது சரீரத்திற்குப் புஷ்டியையும், நல்ல நிறத்தையும், வன்மையையும் உண்டுபண்ணும். (2) வெண்கடுகுப்பொடியை உத்வர்த்தநம் செய்து கொண்டு, ஸ்நாநத்திற்குபயோகமான நறுமணமுள்ள வஸ்துக்களையும் [2] மற்றும் உசிதமான மூலிகைகளையும், [3] ஜீவநீயகணத்தைச் சேர்ந்த சரக்குகளையும் [4] சேர்த்து அந்தந்த ருதுக்களின் தன்மைகளுக்கேற்க சுகம் தருமாறு பக்குவமாகக் காய்ச்சப்பட்ட நீர்களைக்கொண்டும் அப்பிணியாளி ஸ்நாநம் செய்யலாம். $78\text{-}81\frac{1}{2}$.

---

1. ஸுரை-முதற்புத்தகம் 40-ம் பக்கம் பார்க்கவும். மண்டம்-முதற் புத்தகதில் 47-ம் பக்கம் பார்க்க. மார்த்வீகம்; அரிஷ்டம் இவற்றைப்பற்றி முதற் புத்தகத்தில் 41-ம் பக்கம் பார்க்க. மாதவம்-முதற் புத்தகத்தில் 20-ம் பக்கம் பார்க்க.

2. மிச்ரக ஸ்நேஹம்—இனி குல்ம சிகிச்ஸையில் கூறப்படும் யோகம்.

1. உத்வர்த்தநம்-எண்ணெய்ப் பசையைப் போக்குவதற்கு உபயோகிக்கப்படும் கஷாய ரஸமுள்ள சூர்ணங்களால் தேய்த்தல். (உத்வர்த்தந சூர்ணம் என்பதை நலங்குப்பொடி யென்பார்கள்.)

2. சந்தனம், அகில் முதலிய வஸ்துக்கள்.

3. கீழா நெல்லி, த்ரியலை முதலியவை இதனுல் குறிக்கப்படுகின்றன.

4. ஜீவநீயகணம்-முதற் புத்தகத்தில் 124-ம் பக்கம் பார்க்க.

*இராஜ யக்ஷ்மாவில் சிறந்த சிகித்ஸைகளின் ஸங்கிரஹம்.*

இந்த ரோகி சந்தனம் முதலிய ஸுகந்தங்களென்ன, புஷ்பஹாரங்களென்ன இவை முதலியவற்றைப் பீடா பரிஹாரத்தின் பொருட்டு அணிந்து கொள்ளலாம். நண்பர்களைக் கண்டு களிப்புறலாம். ஸங்கீதம், வாத்யம் முதலிய மனோஹரமான விஷயங்களைச் செவியுறலாம். வஸ்தி கர்மங்களைச் செய்யலாம். பாலையும் நெய்யையும் பருகி வரலாம். மதுவகைகளையும், மாம்ஸங்களையும் முறைப்படி மிதமாயுட்கொள்ளலாம். அதர்வ வேதத்திற் கூறிய விதிகளை அனுஸரித்து தைவாநுக்கிரஹம் பெறக்கூடிய ஜபஹோமாதிகளையும் நிறைவேற்றலாம். இவை யாவும் இராஜயக்ஷ்ம ரோகிக்கு ஏற்ற சிறந்த சிகித்ஸா கிரமங்களாகும். 82-83½.

## ஆருவது அத்தியாயம்.

சர்தி - ஹ்ருத்ரோக - த்ருஷ்ணாசிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் இனி விவரிக்கப்படுகின்றது:—

*சர்தியில் லங்கநமும் வமநமும்.*

சர்திகள் யாவும் பெரும்பாலும் ஆமாசயம் என்னும் இரைப்பையிலுண்டாகும் ஒருவித அழற்சியுடன் கூடிய கிளர்ச்சியினாலேயே உண்டாகின்றன; ஆகவே முதலில் அதற்கு லங்கநம் செய்வது ஹிதமாகும்; ஆனால் வாத ஸம்பந்தமான சர்தியில் லங்கநம் கூடாது; அங்ஙனம் வாதத்தினாலுண்டான சர்தியில் பிணியாளி நல்ல வலிவுள்ளவனாயிருந்தால், தோஷம் மிகவும் அதிகரித்திருக்குமானால், அடிக்கடியாவது அதிக அளவாகவாவது வாந்தி செய்வானானால் அவனுக்கு வமநம் செய்விக்கவேண்டும். 1, 1½.

*சர்தியில் விரேகமும் சமநமும்.*

வமநம் செய்வித்த பிறகு மதுவகைகளோடாவது, திராக்ஷை முதலிய கனிரஸங்களுடனாவது, பசும் பால் முதலியவைகளோடாவது கிரமமாக இருதயத்திற்கு வன்மை தரக்கூடிய குணமுள்ள விரேசநௌஷதத்தை உட்கொள்ளக் கொடுக்கலாம். அவ்விரேசநமானது மேல்நோக்கிய தோஷத்தைக் கீழ்முகமாகச் செலுத்தி விடுகின்றது. அந்த நிலைமையில் சோதநத்திற்குப் பதிலாய் சமநௌஷதத்தையும் பிரயோகிக்கலாம்; ரூக்ஷமாகவும் துர்பலமாகவுமுள்ள பிணியாளிகளுக்கோவென்றால் சமநௌஷதத்தையே உபயோகிக்க வேண்டும். 2, 3.

*சர்தியில் பத்தியமான ஆஹார-விஹாரங்கள்.*

(1) ஈரப்பசையில்லாமல் உலர்ந்திருப்பதும், மனதுக்கு இரம்யமாயிருப்பதும், ஸாத்மியமானதும்[1], இலகு குணமுள்ளதுமான அன்னம் சர்தியில் பிரசஸ்தமானது. (2) உபவாஸமிருப்பதும் நலமாகும். (3) யூஷங்களும், மாம்ஸரஸங்களும், காம்பலிகங்களும்,[2] கலங்களும்,[3] சாகவர்க்கங்களும்,

1. சர்தி-வாந்தியாதல்; ஹ்ருத்ரோகம்-இருதயத்தைப்பற்றிய வியாதி; த்ருஷ்ணா-நாவறட்சி; இம்மூன்றுவித வியாதிகளுக்கும முறையே சிகித்ஸா க்ரமங்களை விவரிக்கும் அத்தியாயம் எனப் பொருள்.

1. ஸாத்மியம்-முதற் புத்தகத்தில் 69,252-ம் பக்கங்களைப் பார்க்க.

2. காம்பலிகம் - எள்ளுப்பொடியையும், சமைத்த கிழங்குகளை அல்லது சாகத்திற்குபயோகமான வேர்களையும் சேர்த்து பக்குவம் செய்யப்படும் ஒருவித சித்திரான்னம். ["மூலைச்ச திலகல்காந்நபாய: காம்பலிக: ஸ்ம்ருத:" என்று சக்ரதத்தத்தில் அதிஸார சிகித்ஸையில் கூறப்படுகிறது.]

3. கலம்-பில்வத்தின் உட்சதையின் கல்கம், எள்ளுப்பொடி, புளித்த தயிரின் ஆடை இவற்றைக் கூட்டி ஸ்நேஹங்களால் தாளிக்க, அது "கலம்," எனப்படும்; (அதாவது ஒருவித பச்சடி). இதே ஸ்தாநத்தில் ஒன்பதாவது அத்தியாயத்தில் பார்க்கவும்.

லேஹ்யங்களும், நற்சுவையுள்ள வேறு புஜிக்கும் பண்டங்களும், ராக-காண்டவங்களும்,[1] பானகங்களும், ஈரப்பசையற்ற விசித்திரமான பணியாரங்களும், கனிகளும் உபயோகிக்கத் தகுந்தவையாம். (4) சரீரத்தைத் தேய்த்து ஸ்நாநம் செய்வதும், நறுமணமுள்ள கனிகளென்ன மலர்களென்ன உணவுகளென்ன பானங்களென்ன இவற்றிலிருந்துண்டாகும் ஸுவாஸனைகளை அனுபவிப்பதும், பிணியாளி உணவுண்டவுடனே குளிர்ந்த ஜலத்தை திடீரென்று அவனது முகத்தில் தெளிப்பதும் குணந்தரக் கூடியவையாம். 4-6.

வாதசர்தியின் சிகித்ஸை.

வாத தோஷத்தினுலுண்டான சர்திக்கு விசேஷ சிகித்ஸை கூறப்படுகின்றது:—(1) இளஞ்சூடான க்ருதத்தில் இந்துப்பைக் கலந்துட்கொள்ள அது காஸம், இயற்கைக்கு விரோதமான இருதயத்துடிப்பு இவற்றுடன் கூடிய சர்தியைப் போக்கும். (2) த்ரிகடுவும், த்ரிலவணமும்[2] நிரம்பவும் கலந்துள்ள க்ருதமும் அவ்விதமே உபயோகமாகும். (3) மாதளம்பழச் சாற்றுடன் கலந்து பக்குவம் செய்த க்ருதமாவது, (4) சுக்கு, கொத்தமல்லி விதை, தயிர் இவற்றில் பக்குவம் செய்த க்ருதமாவது அங்ஙனமே உபயோகிக்கத் தகுந்தது. (5) ஸம அளவாக ஜலம் சேர்த்துக் காய்ச்சியெடுத்த பாலையாவது பருகலாம். (6) விஷ்கிரங்களுடைய மாம்ஸரஸத்தில் போதிய வளவு புளிப்பும் இந்துப்பும் நெய்யும் சேர்த்து பக்குவம் செய்தாவது உட்கொள்ளலாம். (7) சுக்கு, தயிர், மாதளம்பழச்சாறு இவற்றால் பக்குவம் செய்யப்பட்டதும் ஸ்நிக்த்தமுமான உணவையும் புஜிக்கலாம். (8) ஸ்நேஹத்தில் உப்பைக் கலந்து இளஞ்சூடாயிருக்கையில் வாதஸம்பந்தமான இச் சர்தியில் விரேசநமாவதற்கும் உபயோகிக்கலாம். 7-9½.

பித்த சர்தியின் சிகித்ஸை.

(2) பித்த ஸம்பந்தமான சர்தியில் திராக்ஷையின் ஸ்வரஸம், கருப்பஞ்சாறு இவற்றோடு சிவதையின் சூர்ணத்தை விரேசநமாவதற்காகப் பிரயோகிக்கலாம். (2) தில்வகக்ருதத்தையாவது[1] கொடுக்கலாம். (3) மிகவும் அதிகரித்து கபஸ்த்தாநத்தை அடைந்துள்ள பித்தத்தை இனிப்பும் கைப்புமுள்ள ஔஷதங்களால் மேல்நோக்கி வாந்தி செய்வித்தே வெளிப்படுத்திவிடவேண்டும். (4) இங்ஙனம் சோதநசிகித்ஸை செய்துகொண்டவன் மந்தத்தையாவது, தேன் சர்க்கரைகள் கூட்டிய யவாகூவையாவது நெற்பொரியோடு உட்கொள்ளலாம். (5) பயறு, ஜாங்கலமாம்ஸம் இவற்றாலான வியஞ்ஜனங்களோடு சம்பா அல்லது காரரிசியன்னத்தையாவது புஜிக்கலாம். (6) மட்பாண்டத்தில் காய்ச்சியெடுத்து சுயமாய் நன்றாகக் குளிர்ந்துபோன தண்ணீரைப் பருகலாம். (7) திராக்ஷையின் இரஸத்தில் பயறு, வெட்டிவேர், திப்பிலி, கொத்தமல்லி விதை இவற்றைச் சேர்த்து ஓரிரவெல்லாம் ஊறவைத்து, அப்பால் அச்சாற்றையாவது குடிக்கலாம். (8) அவ்விதமே பக்குவம் செய்த கருப்பஞ்சாற்றையாவது, (9) சீந்திற்கொடியின் ஸ்வரஸத்தையாவது, (10) பாலையாவது பருகலாம். (11) நாவல் மா இவற்றின் தளிர்கள், வெட்டிவேர், ஆலம்மொட்டு, ஆலம்விழுது இவற்றை க்வாதம் செய்தாவது, சீதகஷாயமாகச் செய்தாவது தேன் கூட்டிப் பருக சர்தியையும், ஜ்வரத்தையும், அதிஸாரத்தையும், மூர்ச்சையையும், மிகக் கஷ்ட ஸாத்தியமான

1. ராக காண்டவங்கள்-இவற்றைப்பற்றி முதற் புத்தகத்தில் 21-வது பக்கம் பார்க்க.

2. த்ரிலவணம் ஸௌவர்ச்சலவணம், ஸைந்தவலவணம், பிடாலவணம்.

1. தில்வக க்ருதம்-இனி குஷ்ட சிகித்ஸாத்யாயத்தில் கூறப்படும் க்ருதம்.

நாவறட்சியையும் அக்கஷாயம் நிவ்ருத்திசெய்யும். (12) பயற்றந்தழையைக் கஷாயம் காய்ச்சியாவது, சீதகஷாயமாகவாவது நெல்லிக்கனியின் ஸ்வரஸத்தோடு உட்கொள்ளலாம். (13) இலந்தங்கொட்டை, சர்க்கரை, நெற்பொரி, ஈயின் மலம், திப்பிலி இவற்றை எரித்து மையாகச்செய்து தேனிற் கலந்துட்கொள்ளச் செய்யலாம். (14) கடுக்காயையாவது, (15) திராக்ஷையையாவது, (16) இலந்தம் பழங்களையாவது தேனுடன் கலந்துட்கொள்ளலாம். 10—15½.

கபசர்தியின் சிகித்ஸை.

(1) சிலேஷ்மத்தினுலுண்டான சர்தியில் வேப்பம்பட்டை, திப்பிலி, கடுகு இவற்றைப் பொடித்து இளஞ்சூடான ஜலத்தில்சேர்த்து உட்கொண்டு வாந்தி செய்யலாம். (2) பிணியாளி பலஹீனமாயிருந்தால் இலங்கநம் போடலாம். (3) ஆரக்வதாதி கணத்தின்[1] சரக்குகளைக் கஷாயமிட்டு சூடாறியபிறகு தேன் கலந்து அதைப் பருகலாம். (4) சர்திக்நமான[2] ஔஷதங்களில் அநேக முறை பாவனை செய்யப்பட்ட வாற்கோதுமையை மந்தம்[3] செய்தாகிலும் குடித்துவரலாம். (5) இருதயத்திற்கு பலந்தரக்கூடியதும், கபஹரமுமாயுள்ள அன்னத்தையாவது புஜிக்கலாம். (6) கஞ்சாங்கோரை, படர்புல் இவற்றுடன் ராகங்களையும்[4] கூட்டி புஜிக்கலாம் (7) மனச்சிலையையும், திப்பிலியையும், மிளகையும் பொடித்துக் கொடிமாதளையின் சாற்றிற் கலந்தாவது, விளாம்பழச்சாற்றில் கலந்தாவது, தேன் கூட்டியுட்கொள்ள வமநம் நிவ்ருத்தியாகும். (8) விளாம்பழத்தை த்ரிகடுப் பொடியோடு கலந்தும் உபயோகிக்கலாம். (9) பூனைக்காலியை ஸமூலமாகப் பொடித்துத் தேன் கலந்தாவது உட்கொள்ளலாம். 16—20½.

அருவருப்பான வஸ்துவாலுண்டான சர்திக்கு பரிஹாரம்.

அருவருப்பான அல்லது வெறுக்கக்கூடிய வஸ்துவினுல் ஏற்பட்ட சர்தியானது, அப்பிணியாளிக்கு விருப்பமான வஸ்து முதலியவற்றைக்கொண்டு உபசரித்து வந்தால் நிவாரணமாகும். 21.

கிருமிகளாலுண்டாகும் சர்திக்கு சிகித்ஸை

கிருமிகளால் உண்டாகும் சர்தியானது கிருமிஹ்ருத்ரோகத்திற்குக் கூறப்படும் சிகித்ஸைகளால்[1] நிவ்ருத்தியாகும். மேலும் கிருமியினுலுண்டாகும் மிச்சமுள்ள மற்ற வியாதிகளும் கிருமிஹ்ருத்ரோகத்திற்குக் கூறப்படுகிற சிகித்ஸைகளினுல் ஸ்வஸ்த்தமாகும். 22.

சர்திகளைத் தடுத்துவிட வேண்டியதன் ஆவச்யகதை.

சர்தி அதிகமாயுண்டாவதால் தாதுக்கள் க்ஷீணித்துவிடும்; அதனுல் வாததோஷம் அவசியம் பிரகோபமடைந்து கெடுதி விளைவிக்கும். ஆகையினுல் இவ்வித நிலைமையில் அளவுமீறிய வமநத்திற்குக் கூறப்பட்டுள்ளமுறையை[2] அனுஸரித்து ஸ்தம்பந சிகித்ஸையையும், ப்ருஹ்மண சிகித்ஸையையும் செய்யவேண்டும். வமநஹராமாகப் பக்குவம் செய்யப்பட்ட க்ருதங்களும், லேஹ்யங்களும், மாம்ஸரஸங்களும் உபயோகிக்கத் தகுந்தவையாம். கல்யாணகக்ருதமும், த்ரியூஷண க்ருதமும், ஜீவநீய க்ருதமும் இதற்குத் தகுந்தவைகள். சர்த்தியைப் பரிஹரிப்பதற்கு அனுகூலமான சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட க்ஷீரங்களும், லேஹ்யங்களும் மேல்நோக்கிவரும் வாந்தியைத் தணிக்கக் கூடியவைகளாம். 23,24.

1. ஆரக்வதாதி கணம்—125-ம் பக்கம் (முதற் புத்தகத்தில்) பார்க்க.

2. சர்திக்நம்—வாந்தியைத் தணிக்குங்குணம்.

3. மந்தம்-யூஷபேதம்; முதற் புத்தகத்தில் 145-ம் பக்கம் யூஷவிவரங்களைப் பார்க்க.

4. ராகம்-முதற் புத்தகத்தில் 21-ம் பக்கம் பார்க்க.

1. இனி கூறப்படும் 57½ குறியுள்ள ச்லோகமொழிபெயர்ப்பைப் பார்க்க.

2. முதற் புத்தகத்தில் 144, 145-ம் பக்கங்களில் விவரம் காண்க.

வாத ஹ்ருத்ரோக சிகித்ஸை.

(1) வாதத்தினுலுண்டாகும் ஹ்ருதயரோகத்தில் தயிராடை, காடி, மோர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தை இளஞ்சூடாயிருக்கையில் கறுப்புப்பையும் சிறிதளவு கூட்டிக்கொடுக்கவும். இத்தைலம் குல்மம், வயிற்றுப்பொருமல் இந்நோய்களையும் நிவ்ருத்தி செய்யும். (2) பஞ்சலவணங்களைச்[1] சேர்த்துப் பக்குவம் செய்த தைலமும் அவ்விதமே குணம் செய்யக்கூடியது. 25½.

வாத ஹ்ருத்ரோகத்தில் பில்வாதி தைலம்.

பில்வப்பட்டை, சிற்றரத்தை, வாற்கோதுமை, இலந்தம் பழம், தேவதாரு, சாறடை, கொள், பஞ்சமூலம் இவற்றைக் கஷாயம் காய்ச்சவும். அக்கஷாயத்தில் எண்ணெயைப் பக்குவம் செய்யவும். இத்தைலத்தை நஸ்யமிடவும், பானம் செய்யவும், வஸ்தியில் பிரயோகிக்கவும் உபயோகிக்கலாம். 26, 27.

சுண்ட்யாதி க்ருதம்.

சுக்கு, நெல்லிக்காய், இந்துப்பு, காகோலீ, காயம், தாமரைக்கிழங்கு, கடுக்காய் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதமானது பக்கசூலே இருதயத்தைப்பற்றிய நோவு, குல்மம் இவற்றை நிச்சயமாய் நிவ்ருத்திக்க வல்லது. 28.

பத்யாதி க்ருதம்.

ஐம்பது விதை நீக்கிய கடுக்காய்களையும் இரண்டு பலம் ஸௌவர்ச்சலவணத்தையும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு ப்ரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்து உபயோகிக்க அது இருதயத்தைப்பற்றிய வியாதிகள், ச்வாஸம், குல்மம் இவற்றைப் பரிஹரிக்கும். 29.

1. பஞ்ச லவணங்கள்—முதற் புத்தகத்தில் 62-ம் பக்கம் பார்க்க

புஷ்கராதி கல்கமும் யவாந்யாதி க்வாதம் முதலியதும்.

தாமரைக்கிழங்கு, கச்சோரம், சுக்கு, கொடிமாதளைவேர், கடுக்காய், இவற்றைக் கல்கமாகச் செய்து, யவக்ஷாரம், நெய், ஏதேனும் அம்லம், இந்துப்பு இவற்றுடன் சேர்த்து உட்கொள்ள மார்பிலுண்டாகும் வேதனை, இருதயசூலே இவை நிவ்ருத்தியாகும். குராஸாணி யோமம், இந்துப்பு, யவக்ஷாரம், வசம்பு, ஓமம், சுக்கு இவற்றுலும், பொன்னுலங்காய்,[1] தேவதாரு, கொம்மட்டி மாதளை, கடுக்காய், கச்சோரம், தாமரைக்கிழங்கு இவற்றுலும் பக்குவம் செய்த கஷாயத்தை இளஞ்சூடாயிருக்கையிலேயே பருகினுலும் அவ்விதகுணத்தைக் கொடுக்கும், 30-31½.

பஞ்சகோலாதி கல்கம்.

பஞ்ச கோலங்கள்[2], கச்சோரம், கடுக்காய், சீந்தில், கொம்மட்டிமாதளை, தாமரைக்கிழங்கு, இவற்றை வாருணீயென்கிற மதுவைச் சேர்த்து[3] கல்கமாக அரைத்து யமக ஸ்நேஹத்தில்[4] வருத்தெடுத்து, இந்துப்பு சேர்த்து இருதயசூலே, பக்கசூலே, யோனிசூலே இவைகளிலும், குல்மம், உதரரோகங்கள் இவற்றிலும் மேற்கூறிய கல்கத்தை புஜித்துவரலாம். 32, 33.

1. ஸம்ஸ்கிருத மூல ச்லோகத்தில் "ஸப்தலா தாரு பீஜாஹ்வ + +" என்று இருக்கவேண்டும். ஆனுல் "ஸப்ததிர்தாரு பீஜாஹ்வ + +" என்று பிழைபட அச்சிடப்பட்டதாகத் தோற்றுகிறது. ஆகவே ஸப்தலா என்றே இருக்க வேண்டுமென்பதாகக் கருதி நாம் அதற்கு "பொன்னுலங்காய்" என்று பொருள் கூறினேம்.

2. பஞ்ச கோலங்கள்-முதற்புத்தகம் 23-ம் பக்கம் பார்க்க.

3. வாருணீ-முதற்புத்தகம் 40-வது பக்கம் பார்க்க.

4. யமகஸ்நேஹம்-முதற்புத்தகம் 129-வது பக்கம் பார்க்க.

ஸ்வேதமும் க்ருதபானமும்.

இந்த இருதயரோகத்தில் ஸ்நிக்த்தமான ஸ்வேதங்களைப் பிரயோகிப்பதும், தகுந்தவாறு பக்குவம் செய்யப்பட்ட க்ருதங்களைப் பருகுவதும் ஹிதமாகும். 33½.

த்ருஷ்ணையுடன் கூடிய ஹ்ருத்ரோகத்தில் பானவகைகள்.

ஹ்ருத்ரோகத்தில் நாவறட்சியுண்டானால் இலகுபஞ்சமூலக்வாதத்தை யாவது, சுக்குக் கஷாயத்தையாவது, வாருணீ யென்கிற மதுவின் ஆடையையாவது, தயிரின் ஆடையையாவது, காடியையாவது குடிக்கலாம். 34½.

வாத ஹ்ருத்ரோகத்தில் மாம்ஸரஸங்கள்.

இசிவு, ஸ்தம்பித்துப்போதல், சூலம், ஆமதோஷம், இக்கோளாறுகளாலும் வாத தோஷத்தினாலும் இருதயம் பீடிக்கப்படுகையில் முற்கூறியவாறு இச் சிகித்ஸைகள் ஹிதமானவையாம். ஆனால் இருதயத்திற் படபடத்த நடையும், இசிவும், மூர்ச்சையும் உண்டாகும்போது அவ்வித வாத ஹ்ருத்ரோகத்தில் தித்திரி, சக்கிரவாகப் புள், மயில், வர்த்தகம் என்கிற பக்ஷி, கரடி இவற்றின் மாம்ஸ ரஸங்களை அதிக ஸ்நேஹத்துடன் கூட்டி யுபயோகிப்பது நலம். 35, 36.

ஸ்நேஹ பானங்கள்.

இருதய ரோகமுள்ளவன் பலாதைலத்தையாவது,[1] ஸுகுமாரக க்ருதத்தையாவது,[2] நூறு முறை பக்குவம் செய்த யஷ்ட்யாதி தைலத்தையாவது,[3] மஹாஸ்நேஹத்தையாவது பருகுவது உத்தமம். 37.

மஹா ஸ்நேஹம்.

சிற்றரத்தை, ஜீவகம், ஜீவந்தீ, சிற்றுமுட்டி, கண்டங்கத்திரி, சாறணை, கண்டு பாரங்கி, மல்லிகை, வசம்பு, த்ரிகடு, இவற்றைக் கல்கமாகச் செய்து, நாலு மடங்கு தயிரில் எண்ணெயைச் சேர்த்து, கிடைக்கக்கூடிய அம்ல வஸ்துக்களையும் கூட்டி தைலம் பக்குவம் செய்யவும்.[1] இது மஹாஸ்நேஹம் எனப்படும். இத்தைலத்தைப் பருகினால் வாத ஹ்ருத்ரோகம் நிவ்ருத்தியாகும்; தர்ப்பணம், ப்ருஹ்மணம், பல்யம் என்கிற குணங்களும் இதற்குண்டு. 38, 39.

வாத ஹ்ருத்ரோகாதிகளில் அனுகூலமும் அனுகூலமல்லாதவையுமான உணவு முதலியன.

அதிக படபடப்போடும் இசிவோடும் கூடிய வாத ஹ்ருத்ரோகத்தில், ஜாடராக்னி உத்தீபனமடைந்திருக்கும் நிலைமையில் பால், தயிர், வெல்லம், நெய், ஜல ஜந்துக்களுடைய மாம்ஸம், ஆநூப மாம்ஸம் இவை ஹிதமாகும். வாத ஹ்ருத்ரோகத்தைத் தவிர மற்ற நாலுவித ஹ்ருத்ரோகங்களிலும், ஸ்தம்பித்தல், சைத்தியம் ஆமதோஷம் இந்த லக்ஷணங்களோடு கூடிய வாத ஹ்ருத்ரோகத்திலும் இதே வஸ்துக்கள் வர்ஜிக்கத் தகுந்தவையாம். வாத ஹ்ருத்ரோகத்தில் கபதோஷமும் சேர்ந்திருந்தால் ரூக்ஷ குணமும் உஷ்ண வீர்யமுமுள்ள பதார்த்தங்களைக்கொண்டு சிகித்ஸை செய்ய வேண்டும். 40-41½.

பித்த ஹ்ருத்ரோகத்தில் விரேசனமுறை.

பித்த ஸம்பந்தமான ஹ்ருத்ரோகத்தில் திராக்ஷை, கரும்பு இவற்றின் சாறும், சர்க்கரையும் தேனும், ஈச்சம்பழமும் கூட்டிய விரேசனௌஷதத்தை உட்கொள்

---

1. சிற்றுமுட்டியின் கஷாயத்தில் காய்ச்சி, சிற்றுமுட்டியையே கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்த தைலம்.

2. ஸுகுமாரக க்ருதம்-பிரமேஹ சிகித்ஸையில் கூறப்பட்டிருக்கும் கிருதம்.

3. யஷ்ட்யாதி தைலம்-வாதரக்த சிகித்ஸையிற் கூறப்படுவது.

1. இங்கு கல்கத்திரவ்யங்களுக்கு மாத்திரம் அளவு குறிப்பிடப்படவில்லை. ஆகவே பொது பரிபாஷைப்படி தைலத்துக்கு நாலில் ஒரு பங்கு சேர்க்க வேண்டும்.

வது ஹ்ருத்யமாயிருக்கும். [1] விரேசனமாய் சரீரம் சுத்தமானபிறகு பித்தஹரமான உபசாரம் செய்யப்பட வேண்டும். க்ஷத காஸத்திலும் பித்த ஜ்வரத்திலும் கூறப்பட்டுள்ள விதமாய் சரீரத்திற்கு உள்ளும்புறமும்சோதன முறை செய்யப்பட வேண்டும். கடுகரோகிணீ, அதிமதுரம் இவற்றின் கல்கத்துடன் சர்க்கரையும் கூட்டி ஜலத்துடன் உட்கொள்ள வேண்டும். 42-43½.

பித்த ஹ்ருத்ரோகத்திற்கேற்ற க்ருதபானங்கள்.

(1) யானைத்திப்பிலி, சர்க்கரை, திராக்ஷை, ஜீவகம் ருஷபகம், நெய்தல், சிற்றுமுட்டி, பேரீச்சம்பழம், காகோலீ, மேதா, மஹாமேதா இவற்றைச் சேர்த்து பாலும் ஊற்றி பக்குவம் செய்யப்பட்ட எருமைநெய் பித்த ஹ்ருத் ரோகத்தைப் போக்கும். (2) வறள்தாமரை, அதிமதுரம், தாமரைக்கிழங்கு, கிரந்தி தகரம், தட்டைக் கோரைக்கிழங்கு, சுக்கு, வேலம்பாசி இவற்றைப் பாலில் சேர்த்து, நெய் ஊற்றிக் காய்ச்சி, ஆறியபிறகு தேன் கலந்து, வாத ஹ்ருத் ரோகத்தில் உட்கொள்வது உசிதம். (3) மதுரவர்க்கத்தைச் சேர்ந்த வஸ்துக்களால் பக்குவம் செய்த க்ருதத்தையும் பருகலாம். 44-46½.

மது தைலக வஸ்தி.

அதிமதுரம் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தையும் தேனையும் கூட்டி, அதனால் பித்த ஹ்ருத்ரோகத்தில் வஸ்தியையும் பிரயோகிக்கலாம். 47.

கப ஹ்ருத்ரோகத்தில் வமன சிகித்ஸைகள்.

(1) கபதோஷக் கோளாறுல் உண்டாகும் ஹ்ருத்ரோகத்தில் ஸ்வேத சிகித்ஸை செய்து, கொள், ஜாங்கல மாம்ஸம், தீக்ஷ்ணமான மது, வாற்கோதுமை இவற்றை உண்ணக்கொடுத்து, வேப்பம் பட்டையும் வசம்பும் சேர்த்துப் பக்குவம் செய்த கஷாயத்தைக் குடிக்கச் செய்து வமனம் செய்விக்கவும். (2) வசம்பு, காயம், இந்துப்பு, சவுட்டுப்பு, சுக்கு, ஏலக்காய், குராசானி யோமம், திப்பிலி, யவக்ஷாரம் இவற்றைச் சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொண்டும் வமனம் செய்யலாம். (3) காடி, கொள்ளின் கஞ்சி, பசுவின் மூத்திரம், ஆஸவங்கள் இவற்றோடு மருக்காறையை உபயோகித்தும் வமனம் செய்யலாம். (4) தாமரைக் கிழங்கு, கடுக்காய், சுக்கு, கச்சோரம், சிற்றரத்தை, வசம்பு, திப்பிலி இவற்றின் சூர்ணத்தையும் முற்கூறிய உஷ்ண ஜலம் முதலியவற்றுடன் உட்கொள்ளலாம். (5) கடுக்காய், சுக்கு, திப்பிலி, ஸரள தேவதாரு, சிறு தேக்கு இவற்றைக் கஷாயமிட்டும் உட்கொள்ளலாம். 48-50½.

ரோஹிதகாதி அவலேஹம்.

செம்மரம்பட்டை, அரசம்பட்டை, கருங்காலிப்பட்டை, அத்திப்பட்டை, மருதம்பட்டை, முருக்கம்பட்டை, ஆலம்பட்டை, இவற்றின் கஷாயத்தில் த்ரிகடுவையும் கருஞ்சிவதையையும் பொடித்துச் சேர்த்து லேஹ்ய பாகமாகச் செய்து, இளஞ்சூடான ஜலத்தின் அனுபானத்தோடு உட்கொள்ள கபதோஷத்தினலான ஹ்ருத்ரோகம் தீரும். 51, 52.

கபஹ்ருத்ரோகத்தில் சில ரஸாயன ப்ரயோகங்கள்.

(1) கபகுல்ம சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ள கிருதங்களையும், பலவிதமான க்ஷாரவகைகளையும் [1] இவ் வியாதியிலும் உட்கொள்ளலாம்; (2) சிலாஜதுவையாவது பிரயோகிக்கலாம்; (3) ப்ராஹ்ம ரஸாயனத்தையாவது, (4) ஆமலக லேஹ்யத்தையாவது, [2] (5) அகஸ்திய ஹரீதகீ

1. ஹ்ருத்யம் முதற் புத்தகத்தில் 30,37-ம் பக்கங்களைப் பார்க்க.

1. அடுத்த 14-வது அத்தியாயத்தில் கூறப்படுகிற கிருதங்கள் க்ஷாரங்கள் இவை குறிக்கப்படுகின்றன.

2. சிலாஜதுப் பிரயோகம், ப்ராஹ்ம ரஸாயன முறை, ஆமலக லேஹ்யம் இவற்றின் விவரங்கள் உத்தரகண்டம் 39-வது அத்தியாயத்தில் கூறப்படுகின்றன.

லேஹ்யத்தையாவது [1] உட் கொள்ளலாம். 53, 53½,

போஜனமுட்கொண்டதும் உண்டாகும் ஹ்ருதயசூலைக்கு குஷ்டாதிசூர்ணம்.

எவனுக்கு உணவையுட்கொண்டதும் இருதய வலி அதிகரித்து, அது ஜீர்ணமாகையில் வலி குறைந்து, முற்றிலும் ஜீர்ணமான பிறகு வலியும் சமன மடைகின்றதோ, அவன் அடியிற் கூறப்படும் குஷ்டாதி சூர்ணத்தை உஷ்ண ஜல அனுபானத்தோடு உபயோகிக்கலாம். அம்முறையாவது—கோஷ்டம், வாய்விடங்கம், இந்துப்பு, அட்டுப்பு, வெள்ளிலோத்தி, தேவதாரு, அதிவிடயம், இவற்றைச் சூர்ணம் செய்யவும். 54, 55.

உணவு ஜீர்ணமாகையிலும் ஜீர்ணமான பிறகும் அல்லது எப்பொழுதுமேயுள்ள ஹ்ருதய சூலைக்கு சிகித்சை.

(1) எவனுக்கு உணவு ஜீர்ணமான பிறகு இருதய வலி அதிகரிக்கின்றதோ அப்பிணியாளிக்கு ஸ்நேஹங்களைக் கொண்டு, விரேசனம் செய்விக்கலாம். [2] (2) உணவு ஜீர்ணமாகும் ஸமயத்தில் இருதயவலி அதிகமானல் பல விரேசனம் செய்விக்கலாம். [3] (3) இருதய சூலை எப்பொழுதுமே அதிகமாயிருந்தால் தீக்ஷணகுணமுள்ள மூலங்களால் அங்ஙனமே விரேசனம் செய்விக்கலாம்.[4] 56.

1. அகஸ்திய ஹரீதகீ—காஸ சிகித்ஸையில் கூறப்படுவது.

2. ஸ்நேஹவிரேசனம் - ஆமணக்கெண்ணெய் முதலியதைக் கொடுத்து செய்யப்படும் விரேசனம்.

3. பலவிரேசனம் - திராக்ஷை, வாய்விடங்கம், பேரீச்சு, ஈச்சு, கொன்னை, நெல்லிக்கனி, கடுக்காய், தான்றிக்காய், கம்பில்லகம், வாளம், வெள்ளரி விதை, ஜயபாளம், இவை முதலியவற்றைச் சேர்த்து செய்யப்படும் ஔஷதத்தைப் பிரயோகித்து செய்யப்படும் விரேசனம்.

4. மூலவிரேசனம்—எழிலைப்பாலை, சங்கங்குப்பி, நேபாளம், கருஞ்சிவதை, வெண்சிவதை, முதலியவற்றுவான ஔஷதத்தைப் பிரயோகித்துச் செய்யப்படும் விரேசன சிகித்ஸை.

ஆமாசயத்தில் வாயு பிரகோபிப்பதாலுண்டாகும் ஹ்ருதய சூலைக்கு சிகித்ஸை.

வாயுவானது, அதன் மார்க்கம் அடைபடுவதால் பெரும்பாலும் ஆமாசயத்திற் சென்று, பிரகோபமடையும்;[1] சோதன சிகித்ஸைகளாலும்,[2] லங்கன சிகித்ஸைகளாலும்,[3] பாசன சிகித்ஸைகளாலும்[4] அவ்வாயுவை அநுலோமநமாக [5] வெளிப்படுத்த வேண்டும். 57.

கிருமிஹ்ருத் ரோக சிகித்ஸை.

கிருமிகளாலுண்டாகும் இருதய ரோகத்தில் கிருமிஹரமான ஔஷதங்களை யெல்லாம்[6] உபயோகித்து சிகித்ஸை செய்யலாம். 57½.

த்ருஷ்ணா ரோகத்திற்கான பொது சிகித்ஸைகள்.

த்ருஷ்ணை யென்கிற நாவறட்சி ஸம்பந்தமான எல்லா விகாரங்களிலும் பெரும்பாலும் வாத - பித்த ஹரமான சிகித்ஸா முறை யுக்தமானது. அங்ஙனமே உள்ளும் புறமும் சீதளமான உபசாரமும், சமந - சோதந சிகித்ஸைகளும்[7] ஏற்றவையாம். குளிர்ச்சியான ஆந்தரி க்ஷோதகத்தைத்

1. ஆமாசயத்தில் உணவாவது வாயுவாவது அமிதமாகச் சேரும்போது அவ்வவயவம் விம்மிக் கொண்டு அதற்கு அடுத்துள்ள இருதயத்தைப் பரிசிக்கக்கூடுமாகையால் இரைப்பையில் உணவு முதலியது சேருவதால் இருதய வலியும் உண்டாவது இயல்பு.

2. சோதன சிகித்ஸை - வமன விரேகாதிகள்.

3. லங்கனம் - பட்டிணி கிடப்பது.

4. பாசனம் - உணவு எளிதில் ஜீர்ணமாகும்படி செய்வது.

5. அநுலோமனம் - அபானவாயு முதலியதைக் கீழ் நோக்கி வெளிப்படுத்தல்.

6. கிருமிஹரங்கள் - ஸூத்திர ஸ்தாநம் 15-வது அத்தியாயத்திற்கூறிய அர்க்காதிகணம் முதலியவை.

7. சமநசிகித்ஸையைப்பற்றி முதற் புத்தகம் 118-ம் பக்கத்திலும், சோதந சிகித்ஸையைப்பற்றி 117-ம் பக்கத்திலும் விவரம் காண்க.

தேனுடன் [1] பருகலாம்; பௌமோதகத்திலும்[2] தேன் கூட்டி யுபயோகிக்க அதே குணமுண்டாகும். அக்னியில் பழுக்கக் காய்ச்சிய மண்ணோடுகள், மணல் முதலியவற்றைச் சுத்தமானஜலத்தில் சேர்த்து ஆறிய பிறகு அக்குளிர்ந்த நீரையாவது சர்க்கரை கூட்டிப் பருகலாம். த்ருண பஞ்ச மூலம்[3] சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது உட்கொள்ளலாம். நெற்பொரிமாவைச் சேர்த்து பக்குவம் செய்த மந்தமும்[4] சிறந்ததாகும். வாற்கோதுமையின் பச்சைமாவாலாகிய வாட்யமண்டத்தில்[5] சர்க்கரையும் தேனையும் கூட்டி குளிர்ந்த பிறகு அதை உட்கொள்வதும் நலம். பழகிய சம்பா அரிசியாலும் கோத்ரவ தானியத்தினாலும் ஆகிய யவாகூவையாவது[6] குளிரச்செய்து குடிக்கலாம். குளிர்ந்த நீரில் குளித்து, சீதவீர்யமான திரவ்யங்களால் பக்குவம் செய்யப் பெற்றதும் சர்க்கரையும் தேனும் கலந்து குளிர்ச்சியாக்கப்பட்டதுமான பாலோடு உணவுண்ணலாம். உப்பும் புளிப்பும் சேர்க்காமல், நெய் சேர்த்துத் தாளித்த ஜாங்கல மாம்ஸ ரஸங்களோடும், ஜீவனீய கணச்சரக்குகளின்[7] ஸ்வரஸங்களைக் கூட்டி பயறு முதலியவற்றின் யூஷங்களோடும் அங்ஙனமே போஜனம் செய்யலாம். பாலிலிருந்தெடுத்த நெய்யை சீதவீர்யமான சரக்குகளில் பக்குவம் செய்து நஸ்யமிடுவதும் நலம்; அங்ஙனமே கருப்பஞ்சாற்றில் பக்குவம் செய்த அவ்வித நெய்யையும் நஸ்யமிடலாம். ஸூத்திர ஸ்தானத்திற்கூறிய ரோபண கண்டூஷங்களும், தாஹஜ்வரத்திற் கூறிய லேபாதிகளும் இதில் ஹிதமானவையாம். வேலைகளை யொழித்து அமைதியாயிருந்து, மனமகிழ்ச்சியைப் பெற்றிருப்பதும், நதிகளென்ன பெரிய நீரோடைகளென்ன இவை முதலியவற்றைக் காண்பதும் மனதில் தியானிப்பதும் இப்பிணியில் நன்மை யுண்டாக்கும். 58—65½.

வாத த்ருஷ்ணா சிகித்ஸை.

வாத தோஷத்தினால் உண்டாகும் த்ருஷ்ணையில் வெல்லம் கலந்த தயிர் பிரசஸ்தமானது; சீத வீர்யமானவையும் ப்ருஹ்மணகுணமுள்ளவையுமான மாம்ஸரஸங்களாவது, விதார்யாதிகணச் சரக்குகளின்[1] கஷாயமாவது உபயோகிக்கத் தகுந்தவையாம். 66½.

பித்த த்ருஷ்ணா சிகித்ஸை.

பித்தத்தினால் உண்டாகும் த்ருஷ்ணையில் நன்கு கனிந்த அத்திப்பழச் சாற்றில் சர்க்கரை கூட்டிப் பருகலாம்; அக்கனிகளாலான க்வாதத்தையாவது, அவற்றின் ஹிமகஷாயத்தையாவது,[2] சாரிபாதிகண க்வாதத்தையாவது[3] பானம் செய்யலாம். அங்ஙனமே சீத வீர்யமான திரவ்யகணங்களால் பக்குவம் செய்த சீத கஷாயங்களில்[4] சர்க்கரையும் தேனும் கூட்டி உட்கொள்ளலாம். அவ்விதமே மதுரரஸமுள்ள ஔஷதச் சரக்குகளாலும் பாலுள்ள மரங்களின் பட்டைகளாலும் பக்குவம் செய்யப்பட்ட சீத கஷாயங்களையும் பானம் செய்யலாம். கொம்மட்டிமாதளை, திரா

1. ஆந்தரிக்ஷோதகம் - முதற்புத்தகம் 31-வது பக்கம் பார்க்க.

2. பௌமோதகம்-நிர்மலமானதும் கறுத்து விசாலமுள்ளதுமான கெட்டி பூமியில் விழுந்துள்ள ஜலம்.

3. தருண பஞ்ச மூலம் - முதற்புத்தகம் 64-ம் பக்கம் பார்க்க.

4. மந்தம் - முதற் புத்தகத்தில் 145-ம் பக்கம் பார்க்க.

5. வாட்ய மண்டம் - இதே புத்தகத்தில் 11-ம் பக்கம் பார்க்க.

6. யவாகூ - முதற்புத்தகம் 270-ம் பக்கம் பார்க்க.

7. ஜீவனீயகணம் - முதற்புத்தகம் 124-ம் பக்கம் பார்க்க.

1. விதார்யாதி கணம் - முதற்புத்தகம் 124-ம் பக்கம் பார்க்க.

2. ஹிமகஷாயம் - இதே புத்தகத்தில் 9-ம் பக்கம் பார்க்க.

3. சாரிபாதிகணம் - முதற்புத்தகம் 124-ம்-பக்கம் பார்க்க.

4. சீதகஷாயம்-இதுவேஹிம கஷாயம் எனப்படும்.

கைக்ஷ, ஆல், நீர் வஞ்சி இவற்றின் தளிர்களையும், ஞாழல் வேரையும், தர்ப்ப வேரையும், அதிமதுரத்தையும் ஜலத்தில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சி யுட்கொள்ளலாம். ஜ்வர சிகித்ஸையிற் கூறிய திராக்ஷாதி பாண்டம் அல்லது ஹிம கஷாயத்தையாவது, பஞ்சஸார பானகத்தையாவது [1] பருகலாம். 67-70.

கப த்ருஷ்ணா சிகித்ஸை.

கபதோஷத்தினாலுண்டாகும் த்ருஷ்ணைகளில் வேப்பிலைச் சாற்றை உட்கொண்டு வமநம் செய்யலாம்; அல்லது பில்வவேர், துவரை, பஞ்சகோலம், [2] த்ருண பஞ்சமூலம் [3] இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது, மஞ்சளின் கஷாயத்தையாவது குடிக்கலாம். த்ரிகடு, பேய்ப்புடல், வேப்பிலை இவற்றைக் கூட்டி தேனையும் சர்க்கரையையும் சேர்த்து, பயற்றங் கஞ்சியையாவது பருகலாம். வாற்கோதுமையினாலான அன்னத்தையும், தீக்ஷ்ண கபளத்தையும், தீக்ஷ்ண நஸ்யத்தையும், தீக்ஷ்ண குணமுள்ள லேஹ்யத்தையும் உபயோகிக்கலாம். 71-72½.

ஸந்நிபாத ஆமதோஷ த்ருஷ்ணைகளுக்கு சிகித்ஸை.

ஸந்நிபாத ஸம்பந்தமான த்ருஷ்ணையிலும், ஆமதோஷத்தினாலான த்ருஷ்ணையிலும் முறையே ஸந்நிபாத ஹரமான சிகித்ஸையும், ஆமதோஷ ஹரமான சிகித்ஸையும் உசிதமானவையாம். அவ்விதமே த்ரிகடு, சேராங்கொட்டை, வசம்பு இவற்றை எலுமிச்சம்பழரஸத்தோடாவது, வெந்நீருடனாவது, மஸ்துவென்னும் கஞ்சியோடாவது உட்கொள்ளலாம். 73½.

உணவின்மையினாலான த்ருஷ்ணைக்கு சிகித்ஸை.

உணவின்மையினால் உண்டாகும் த்ருஷ்ணையில் உஷ்ணமான மண்டத்தையும், குளிர்ந்த மந்தத்தையையும் காலமறிந்து உட்கொள்ள வேண்டும். 74.

சிரமத்தினாலுண்டான த்ருஷ்ணைக்கு சிகித்ஸை.

சிரமத்தினாலுண்டாகும் த்ருஷ்ணையில் மாம்ஸரஸத்தையாவது, மதுவையாவது சர்க்கரை கலந்து பருகுவது நலம். 74½.

ஆதபஜ த்ருஷ்ணா சிகித்ஸை.

வெயிலின் ஸம்பந்தத்தினால் உண்டாகும் த்ருஷ்ணையில், சர்க்கரை சேர்த்த மந்தத்தை வாற்கோதுமை, இலந்தங்கொட்டை இவற்றின் திரவச் சத்துகளோடு உட்கொள்ளலாம். எள்ளுப்பிண்ணாக்கு, காடி இவற்றை உடம்பெங்கும் பூசலாம். 75½.

சீத ஸ்நான ஜல த்ருஷ்ணா சிகித்ஸை.

சீத ஜல ஸ்நானத்தினால் உண்டாகும் த்ருஷ்ணையில் மதுவையும் தண்ணீரையும் கூட்டிப் பருகலாம்; அல்லது வெல்லம் கரைத்த ஜலத்தையாவது உட்கொள்ளலாம். 76.

மதுபான ஜ த்ருஷ்ணா சிகித்ஸை.

மதுபானத்தினால் உண்டாகும் நாவறட்சியைப் போக்குவதற்கு, ஸ்நானம் செய்து விட்டு, புளிப்பும் உப்பும் கலந்த மதுவை, அதற்கு அரைப்பங்கு தண்ணீரில் சேர்த்து விளாவி பானம் செய்யலாம். 76½.

ஸ்நேஹஜ த்ருஷ்ணா சிகித்ஸை.

ஸ்நேஹங்களை உபயோகித்து, அதனால் உடற்சூடு அல்லது ஜாடராக்னி மிகக் கடுமையாகப் போய் உண்டாகும் வறட்சியைப் போக்குவதற்கு இயற்கையிலேயே குளிர்ந்துள்ள ஜலத்தைப் பருகலாம். உட்கொண்ட ஸ்நேஹம் ஜீர்ணமாகாமல் உண்டா

1. பஞ்சஸாரம்-முதற் புத்தகம் 31-ம் பக்கம் பார்க்க.

2. பஞ்சகோலம்-முதற் புத்தகம் 23-ம் பக்கம் பார்க்க.

3. த்ருண பஞ்சமூலம்-முதற் புத்தகம் 64-ம் பக்கம் பார்க்க.

கும் த்ருஷ்ணையில் உஷ்ணஜலத்தையும், ஸ்நேஹ பதார்த்தம் ஜீர்ணமாய் ஸம்பவிக்கும் நாவறட்சியில் மண்டத்தையும் பானம் செய்யலாம். 77, 77½.

ஸ்நிக்த்தான் ஹேதுகளாலான த்ருஷ்ணைக்கு சிகித்ஸை.

ஸ்நிக்த்தமான அன்னத்தைப் புஜித்து நாவறட்சி கொண்டவன் பனியைப்போல் குளிர்ந்துள்ள வெல்லம் கரைத்த ஜலத்தைப் பருகலாம்; குருபோஜனம் முதலிய மிதமிஞ்சிய உணவால் நாவறட்சி கொண்டவன் உஷ்ண ஜலத்தைக் குடித்து அவ்வித உணவைக் கல்வி வாந்தி செய்யலாம். 78½.

க்ஷய த்ருஷ்ணை சிகித்ஸை.

க்ஷய ரோகத்தினால் உண்டாகும் நாவறட்சியில் க்ஷய ரோகத்திற்கு ஹிதமான ப்ருஹ்மண குணமுள்ள ஔஷதம் அனைத்தும் உபயோகமுள்ளதாகும். 79.

பலஹீனர் முதலியவருக்கு த்ருஷ்ணை சிகித்ஸை.

இளைத்திருப்பவருக்கும், பலஹீனமாயிருப்பவருக்கும், ரூக்ஷ சரீரமுடையவருக்கும் உண்டாகிற நாவறட்சியில் பாலாவது, செம்மறியாட்டின் மாம்ஸரஸமாவது அனுகூலமானதாகும். 79½.

ஊர்த்வ ச்வாஸத்துடன் கூடிய த்ருஷ்ணைக்கு சிகித்ஸை.

ஊர்த்வ ச்வாஸத்துடன் க்ஷய நாவறட்சியில் க்ஷயகாஸங்களைப் போக்கக்கூடிய குணமுள்ள சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகலாம். 80.

ரோகாதிகளாலுண்டாகும் த்ருஷ்ணைக்கு சிகித்ஸை.

சில ரோகங்களாலும் உபத்திரவங்களாலும் நாவறட்சியுண்டாகையில் சர்க்கரையும் தேனும் கலந்த காடி உட்கொள்வதற்குச் சிறந்த வஸ்துவாம்; மேலும் அந்தந்த ரோகங்களின் தன்மைகளுக்கேற்றவாறு எல்லாவித சிகித்ஸைகளையும் செய்வது நலம். ஏற்கனவே வியாதியினால் இளைத்துப்போனவன் நாவறட்சியினாலும் வருந்தும்போது அவனுக்குத் தண்ணீர் கிடைக்காவிடில், அதனால் சீக்கிரத்தில் மரணமாவது நீடித்த காலம் போராடக்கூடிய கடுமையான வியாதியாவது ஸம்பவிக்கும்; அத்தகையவனுக்கு ஸாத்தியமான அன்ன பானங்களையும் ஔஷதங்களையும் கொடுத்து முதலில் நாவறட்சியைப் பரிஹரிக்க வேண்டும்; அங்ஙனம் த்ருஷ்ணை நிவ்ருத்திக்கப்படுமானால், அதற்கு முந்திய இதர வியாதிக்கும் எளிதில் சிகித்ஸை செய்து விடலாம். 81-83.

---

## ஏழாவது அத்தியாயம்.

இனி மதாத்யய சிகித்ஸையென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—

மதாத்யயத்திற்குப் பொது சிகித்ஸை.

மதாத்யய வியாதியில் எந்த தோஷம் அதிகரித்திருப்பதாகக் காணப்படுகின்றதோ அதற்கு முதலில் சிகித்ஸை செய்ய வேண்டும். மூன்று தோஷங்களும் ஒரே அளவில் கோளாறடைந்திருக்குமானால் கபத்திற்கு முதலிற் சிகித்ஸை செய்து, அப்பால் பித்தத்திற்கும், பிறகு வாதத்திற்கும் சிகித்ஸை செய்யலாம்; அல்லது ஆமாசயம் முதலிய அந்தந்த ஸ்த்தாநங்களின் நிலைமைகளை அனுஸரித்து முதலில் ஆமாசயத்திற்கும், பிறகு பக்வாசயத்திற்கும், அதன்பிறகு வாதாசயத்திற்கும் முறையே சிகித்ஸையைச் செய்யலாம். ஏனெனில் மதாத்யயக் கோளாறனது

கம் மூல முளைகளிருந்தால், அவற்றில் உட்புறத்திலிருப்பவைகளில் வலது பாரிசத்து முளையை முதலிலும், பிறகு இடதுபாரிசத்து முளையையும், அதன் பிறகு குதத்தின் முன்புறத்திலுள்ளதையும் கிரமமாக விலக்கி சிகித்ஸை செய்யவும். 1—9.

அர்சஸ் நன்கு சுட்டு விலக்கப்பட்டதன் குறிகள்.

அர்சஸ் நன்கு சுடப்பட்டுப் போனால் அப்பிணியாளிக்கு அபாநவாயு ஸுகமாய் வெளிப்படும்; உணவில் விருப்பமேற்படும்; ஜாடராக்னி விருத்தியாகும்; தேஹத்தில் மற்ற ஆரோக்கியக் குறிகள் ஏற்பட்டு பிணியாளி ஸுகித்திருப்பான்; தேஹத்தில் இயற்கையான நிறமும் வன்மையும் உண்டாகும். 10.

தாஹாதிகளால் மலமூத்திரங்கள் தடுக்கப்படுவதற்குப் பரிஹாரம்.

(1) இதன் பிறகு சிலருக்கு வஸ்தியென்னும் மூத்திரப்பையில் வலியுண்டாவதுண்டு; அப்பொழுது வெள்ளைச் சாறடை, கோஷ்டம், வாஸனைப்புல், ஜடாமாம்ஸீ, லோஹம், தேவதாரு இவற்றை மிகவும் வழுவழுப்புண்டகல்கமாகச் செய்து நாபிக்கு அடியில் லேபனம் செய்யலாம். (2) மல-மூத்திரங்கள் அடைபட்டுத் தடையுண்டாகுமானால் மாவலிங்கம்பட்டை, பேய்ச்சுரையின் விதை, ஆமணக்கிலை, நெரிஞ்சில், சாறடை, கருஞ்ஜீரகம், வாஸனைப்புல் இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, சிறிது ஸ்நேஹம் கலந்து உஷ்ணமாகவே நாபிக்குக் கீழேயும், இடுப்பைச் சுற்றியும் ஊற்றலாம்; அல்லது அக்கஷாயத்தில் ஸ்நானம் செய்யலாம். (3) அல்லது வாதஹரமான சரக்குகளால் பக்குவம் செய்த பாலையாவது தைலத்தையாவது அவ்விதம் பிரயோகிக்கலாம். (4) மலத்தை உடைத்து வெளித்தள்ளுங் குணமுடைய உணவைப் புஜிக்கலாம். (5) வாதஹரமாகவும் தீபநமாகவுமுள்ள ஸ்நேஹங்களையும் உபயோகிக்கலாம். 11-13.

வீக்கங்கொண்ட அர்சஸ்ஸுகளுக்கு ஸ்வேத சிகித்ஸை.

(1) தாஹசிகித்ஸைக்குத் தகாத மனிதனுக்கு கபவாதங்களால் உண்டானவையும், திமிர்-தினவு-குத்தல்-வலி-வீக்கம் இவைகளோடு கூடியவையும், வெளியில் பிதுங்கி வந்திருப்பவையுமான மூல முளைகளில் ஸ்நேஹத்தைத் தடவி, பில்வவேர், சித்திரமூலம், யவக்ஷாரம், கோஷ்டம் இவற்றால் பக்குவமான தைலத்தை ஊற்றிவரவும்; அல்லது ஸர்ப்பம், பூனை, ஒட்டகம், பன்றி இவற்றின் கொழுப்பினாலாவது லேபம் செய்யலாம். (2) இதன் பிறகு பிண்டஸ்வேத முறைப்படியாவது, திரவஸ்வேத முறைப்படியாவது, அவ்விடத்தில் உஷ்ணமாக ஒற்றடம் கொடுக்கலாம்; மாப்பண்டங்களாலாவது, பிண்டம் போல் செய்த மற்ற ஸ்நிக்த வஸ்துக்களாலாவது, தைலக்ருதங்களைச் சேர்த்தாவது, சிற்றரத்தை கொட்டைக்கரந்தை இவற்றின் பிண்டத்தையாவது, முருங்கப்பட்டைகளையாவது வேக வைத்து அவற்றால் ஒற்றடம் கொடுக்கலாம். 14-17.

வீங்கிய அர்சஸ்ஸில் தூபன சிகித்ஸை.

(1) எருக்கம்வேர், அகில் மரத்திலை, மனிதரின் மயிர்கள், பாம்புத்தோல், பூனையின் சர்மம், நெய் இவற்றைத் துணிவிட்டு, அப்புகையினால் தூபமிடுவதும் அர்சஸ்ஸுகளுக்கு ஹிதமாயிருக்கும்; (2) அங்ஙனமே அமுக்கிறாங்கிழங்கு, துளஸி, கண்டங்கத்திரி, திப்பிலி, நெய் இவற்றைக் கொண்டும் தூபமிடலாம். 18, 18½.

அர்சஸ்ஸில் வர்த்திப்பிரயோகம்.

(1) காடிவிட்டு ஜீமூதபீஜங்களை அரைத்து, அந்த ஜீமூதத்தின் மிருதுவான தாதுகளின் மேல் அதைப்பூசி, வர்த்தியாகச் செய்து, குதத்திலுபயோகிக்க, அது மூளைகளை அழித்து உதிர்த்துவிடும். ஜீமூதத்தின் தாதுகளையும் (?) வேர்களையும் சேர்த்துப் பக்

கம் மூல முளைகளிருந்தால், அவற்றில் உட்புறத்திலிருப்பவைகளில் வலது பாரிசத்து முளையை முதலிலும், பிறகு இடதுபாரிசத்து முளையையும், அதன் பிறகு குதத்தின் முன் புறத்திலுள்ளதையும் கிரமமாக விலக்கி சிகித்ஸை செய்யவும். 1—9.

அர்சஸ் நன்கு சுட்டு விலக்கப்பட்டதன் குறிகள்.

அர்சஸ் நன்கு சுடப்பட்டுப் போனால் அப்பிணியாளிக்கு அபாநவாயு ஸுகமாய் வெளிப்படும்; உணவில் விருப்பமேற்படும்; ஜாடராக்னி விருத்தியாகும்; தேஹத்தில் மற்ற ஆரோக்கியக் குறிகள் ஏற்பட்டு பிணியாளி ஸுகித்திருப்பான்; தேஹத்தில் இயற்கையான நிறமும் வன்மையும் உண்டாகும். 10.

தாஹாதிகளால் மலமூத்திரங்கள் தடுக்கப்படுவதற்குப் பரிஹாரம்.

(1) இதன் பிறகு சிலருக்கு வஸ்தியென்னும் மூத்திரப்பையில் வலியுண்டாவதுண்டு; அப்பொழுது வெள்ளைச் சாறடை, கோஷ்டம், வாஸனைப்புல், ஜடாமாம்ஸீ, லோஹம், தேவதாரு இவற்றை மிகவும் வழுமூண்டகல்கமாகச் செய்து நாபிக்கு அடியில் லேபனம் செய்யலாம். (2) மல-மூத்திரங்கள் அடைபட்டுத் தடையுண்டாகுமானால் மாவலிங்கம்பட்டை, பேய்ச்சுரையின் விதை, ஆமணக்கிலை, நெரிஞ்சில், சாறடை, கருஞ்ஜீரகம், வாஸனைப்புல் இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, சிறிது ஸ்நேஹம் கலந்து உஷ்ணமாகவே நாபிக்குக் கீழேயும், இடுப்பைச் சுற்றியும் ஊற்றலாம்; அல்லது அக்கஷாயத்தில் ஸ்நானம் செய்யலாம். (3) அல்லது வாதஹரமான சரக்குகளால் பக்குவம் செய்த பாலையாவது தைலத்தையாவது அவ்விதம் பிரயோகிக்கலாம். (4) மலத்தை உடைத்து வெளித்தள்ளுங் குணமுடைய உணவைப் புஜிக்கலாம். (5) வாதஹரமாகவும் தீபநமாகவுமுள்ள ஸ்நேஹங்களையும் உபயோகிக்கலாம். 11-13.

வீக்கங்கொண்ட அர்சஸ்ஸுகளுக்கு ஸ்வேத சிகித்ஸை.

(1) தாஹசிகித்ஸைக்குத் தகாத மனிதனுக்கு கபவாதங்களால் உண்டானவையும், திமிர்-தினவு-குத்தல்-வலி-வீக்கம் இவைகளோடு கூடியவையும், வெளியில் பிதுங்கி வந்திருப்பவையுமான மூல முளைகளில் ஸ்நேஹத்தைத் தடவி, பில்வவேர், சித்திரமூலம், யவக்ஷாரம், கோஷ்டம் இவற்றால் பக்குவமான தைலத்தை ஊற்றிவரவும்; அல்லது ஸர்ப்பம், பூனை, ஒட்டகம், பன்றி இவற்றின் கொழுப்பினாலாவது லேகம் செய்யலாம். (2) இதன் பிறகு பிண்டஸ்வேத முறைப்படியாவது, திரவஸ்வேத முறைப்படியாவது, அவ்விடத்தில் உஷ்ணமாக ஒற்றடம் கொடுக்கலாம்; மாப்பண்டங்களாலாவது, பிண்டம் போல் செய்த மற்ற ஸ்நிக்த வஸ்துக்களாலாவது, தைலக்ருதங்களைச் சேர்த்தாவது, சிற்றரத்தை கொட்டக்கரந்தை இவற்றின் பிண்டத்தையாவது, முருங்கப்பட்டைகளையாவது வேக வைத்து அவற்றால் ஒற்றடம் கொடுக்கலாம். 14-17.

வீங்கிய அர்சஸ்ஸில் தூபன சிகித்ஸை.

(1) எருக்கம்வேர், அகில் மரத்திலை, மனிதரின் மயிர்கள், பாம்புத்தோல், பூனையின் சர்மம், நெய் இவற்றைத் துணிவிட்டு, அப்புகையினால் தூபமிடுவதும் அர்சஸ்ஸுகளுக்கு ஹிதமாயிருக்கும்; (2) அங்ஙனமே அமுக்கிருங்கிழங்கு, துளஸி, கண்டங்கத்திரி, திப்பிலி, நெய் இவற்றைக் கொண்டும் தூபமிடலாம். 18, 18½.

அர்சஸ்ஸில் வர்திப்பிரயோகம்.

(1) காடிவிட்டு ஜீமூதபீஜங்களை அரைத்து, அந்த ஜீமூதத்தின் மிருதுவான தாதுகளின் மேல் அதைப்பூசி, வர்த்தியாகச் செய்து, குதத்திலுபயோகிக்க, அது மூளைகளை அழித்து உதிர்த்துவிடும். ஜீமூதத்தின் தாதுகளையும் (?) வேர்களையும் சேர்த்துப் பக்

குவம் செய்த லேஹ்யத்தில் யவக்ஷாரமும் சிறிது கூட்டி, குண்றுமணி, கருணைக்கிழங்கு, பூசினிவிதை இவற்றின் பொடியையும் சேர்ந்து, வர்த்தி செய்து உபயோகிக்க முன் போலவே குணமுண்டுபண்ணும். 19-20½.

அர்சஸ்ஸில் லேபனங்கள்.

(1) கள்ளிப்பாலில் ஊறவைத்த மஞ்சளின் கல்கத்தினுலும், அங்ஙனமே கோழியின் மலம், திப்பிலி, மஞ்சள், குண்றுமணி இவற்றைப் பசு மூத்திரத்தினுல் ஆட்டியும் அர்சஸ்ஸுகளின் மேல்பூச்சிடலாம். (2) வசம்பு, கலப்பைக்கிழங்கு, யானையின் தந்தம், கர்க்காடகச்ருங்கி, கடுக்காய், கோஷ்டம், சேராங்கொட்டை, மயில்துத்தம், முருங்கவிதை, முள்ளங்கி, அலரியிலை, வேப்பிலை, பீலுமூலம்?, பில்வவேர், காயம் இவற்றைக் கள்ளிப்பால் விட்டு அரைத்து லேபநம் செய்யலாம். (3) கோஷ்டம், காட்டுவாகையின் வித்துகள், திப்பிலி, இந்துப்பு, வெல்லம், த்ரிபலை இவற்றை எருக்கம்பாலும் கள்ளிப்பாலும் விட்டு அரைத்து அர்சஸ்ஸுகளின்மேல் லேபநம் செய்யலாம். (4) கள்ளித்தண்டு, பேப்சுரையின் துளிர்கள், புங்கையின் வித்து, செம்மறியாட்டின் சிறுநீர், எருக்கம்பால் இவற்றை அரைத்து, லேபநம் செய்ய அர்சஸ்ஸுகள் நிவ்ருத்தியாகும். இனி கூறப்போகிற அநுவாஸனவஸ்திக்குரிய திப்பிலி முதலிய வஸ்துக்களால் லேபநம் செய்வதும் சிறந்த முறையாம். இதே ஔஷதச்சரக்குகளால் தைலங்களைப் பக்குவம் செய்தும் அவ்விடத்தில் அப்யஞ்ஜனம் செய்யலாம். இங்ஙனம் தூபமிடுவதாலும், லேபனம் செய்வதாலும், அப்யங்கம் பண்ணுவதாலும் குதத்திற் சேர்ந்துள்ள அசுத்தமான இரத்தம் அர்சஸ்ஸுகளிலிருந்து ஸ்ரவித்து வெளியாய் விடுகின்றது. அதன் பிறகு அப்பிணியாளி சுகம் பெறுகிறுன். 21—27½.

அர்சஸ்ஸிலிருந்து இரத்தத்தை ஸ்ரவிக்கச் செய்தல்.

மிகவும் வீங்கியும் கடினமாகவும் விருத்தியாயுள்ள மூல மூளைகளிலிருந்து முற்கூறிய லேபனுதிகளால் அசுத்த இரத்தம் நன்கு ஸ்ரவிக்காமற்போனுல் அட்டைகளைக் கொண்டும், சஸ்திரங்களைக்கொண்டும், ஊசிகளைக்கொண்டும், கூர்ச்சமென்கிற கருவியைக்கொண்டும் அடிக்கடியும் அவ்வித இரத்தத்தை வெளிப்படுத்திவிடவேண்டும். இரத்தம் அசுத்தமாயிருக்கையில் சீதளமாகவும், உஷ்ணமாகவும் ஸ்நிக்த்தமாகவும், ரூக்ஷமாகவுமுள்ள முற்கூறியவற்றைப் போன்ற சிகித்ஸைகளால் அர்சோவியாதி நிவ்ருத்தியாகமாட்டாது; ஆகவே வைத்தியன் இரத்தத்தையே வெளிப்படுத்தவேண்டும். 28—29½.

அர்சஸ்ஸில் தக்ரப்பிரயோகங்கள்.

(1) பாலில் சித்திரமூலத்தைப் பொடித்துச் சேர்த்து, அப்பாலிலிருந்து யாதொரு மோர் உண்டாகின்றதோ, அந்த மோரையே பருகி, அந்த மோரையே அன்னத்துடன் கலந்து உட்கொண்டுவர அர்சஸ்ஸுகள் தீரும். (2) மோரில் செம்மந்தாரை வேரைப் பொடித்துச்சேர்த்து அதைப் பருகிவரவும்; அந்த மோர் ஜீர்ணமான பிறகு பத்தியமான உணவுகளைப் புஜித்து வர அர்சஸ்ஸுகள் தீரும். (3) குதஸ்த்தானத்தில் வீக்கத்தினுலும் வலியினுலும் வருந்தி ஜாடராக்னியும் மந்தமாயிருந்தால், அப்பிணியாளி குல்மசிகித்ஸையில் கூறப்படும் ஹிங்க்வாதி சூர்ணம் முதலியவைகளை யுட்கொள்ளலாம்; இச்சூர்ணங்களுக்கு மோரை அநுபானமாய் உபயோகிக்கலாம். (4) வெல்லம் கலந்த கடுக்காயையும் மோரின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம். (5) கடுக்காய், வாய்விடங்கம், சித்திரமூலம், குடசப்பாலையின் பட்டை இவற்றையாவது மோருடன் புஜிக்கலாம். (6)

வெட்பாலை ஒருபங்கு, திப்பிலி இரண்டு பங்கு, சித்திரமூலம் மூன்று பங்கு, கருணைக்கிழங்கு நாலு பங்கு இவ்விதம் சேர்த்து சூர்ணித்து, அதையாவது மோருடன் உபயோகிக்கலாம். (7) இந்துப்பு, கறியுப்பு, சவுட்டுப்பு, த்ரிகடு, காயம், புளிவஞ்சி இவற்றையாவது பொடித்து மோரோடு உட்கொள்ளலாம். (8) பில்வப் பழம், விளாம்பழம் இவற்றோடாவது, சுக்கு, பிடால லவணம் இவற்றோடாவது, சேராங் கொட்டையோடாவது, ஓமத்தோடாவது மோரைத் தர்ப்பணமாகப் பருகலாம். (9) கொட்டைக்கரந்தை, காயம், சித்திரமூலம் இவற்றையாவது மோரில் கலந்து சாப்பிடலாம். (10) சிறுகிளாப்பழங்களையாவது மோரில் கலந்து அனுபானத்தோடு ஒரு மாஸம் உபயோகித்துவரலாம். (11) வெறும் வயிற்றில் தினந்தோறுமாவது வேண்டிய வளவு மோரைப் பருகிவரலாம். (12) ஜாடராக்னியும் தேஹச்சூடும் மிகவும் குறைந் திருக்கும் அர்சோரோகிக்கு மோரையே எப்பொழுதும் பானம் செய்வதற்குக் கொடுக்கவேண்டும். (13) பிணியாளியின் சரீர பலம், காலம், வியாதியின் ஸ்வரூபம் இவற்றின் நிலைமைகளை நன்குணர்ந்த வைத்தியன் ஏழு நாட்களாவது, பத்து நாட்களாவது, பதினைந்து நாட்களாவது, ஒரு மாஸ காலமாவது மோரை உபயோகிக்கச் செய்யவேண்டும். (14) தினந்தோறும் மாலைநேரத்திலாவது நெற்பொரி மாவை மோரில்கலந்து குழம்புபோல் செய்தும் உட்கொள்ளக் கொடுக்கலாம்; குடித்த மோர் ஜீர்ணமான பிறகு தக்ரபேயா என்கிற மோர்க்கஞ்சியில் இந்துப்பு சேர்த்து பருகச் செய்யலாம். (15) இனி ஏதேனும் ஏற்ற ஸ்நேஹமும் மோரும் கலந்த அன்னத்தைப் புஜிக்கச்செய்து, அதற்கு மோரையே அனுபானமாகவும் உபயோகிக்கச்செய்யலாம். (16) அதிகமாக மோரைக் கூட்டி பக்குவம் செய்த யூஷங்களோடும் அவ்வித மாம்ஸரஸங்களோடும் சம்பா அரிசியினாலான அன்னத்தையாவது மிதமாய் புஜித்துவரச் செய்யலாம். (17) முற்றிலும் வெண்ணெயெடுத்து ரூக்ஷமாயுள்ளது, பாதி வெண்ணெயெடுத்தது, சிறிதும் வெண்ணெயெடுக்காதது என்று மூன்றுவிதமாயுள்ள மோரைப் பிணியாளியின் சரீரதோஷங்களுடையவும், ஜாடராக்னியினுடையவும், தேஹ வன்மையினுடையவும் நிலைமைகளையுள்ளபடியுணர்ந்த வைத்தியன் அர்சோகத்தில் உபயோகிக்கவேண்டும். இங்ஙனம் மோரைப் பிரயோகித்து நிவாரணம் செய்யப்பட்ட மூல மூளைகள் மீண்டும் உற்பத்தியாக மாட்டா; ஏனெனில் அம்மோரைத் தரையில் ஊற்றினாலும் புற்புதரையும் எரித்துவிடுங் குணமுடையது. மோரை உட்கொண்டதால் ஸ்ரோதோமார்க்கங்கள் சுத்தமாய் விடும்; ஆகவே இரஸதாதுவானது இதர தாதுக்களில் தாராளமாகப் பரவி வரும்; அதனால் தேஹத்திற்குப் புஷ்டியும், பலமும், நல்ல நிறமும், அதிக மனக்களிப்பும் உண்டாகும்; வாத-கபஸம்பந்தமான அநேகவித வியாதிகளும் நிவ்ருத்தியாகின்றன. (18) சிறு கண்டங்கத்திரிக்காயை அரைத்து, அக்கல்கத்தை ஒரு பாத்திரத்தினுள் தடவியுலர்ந்த பிறகு, அதில் மோரை ஊற்றி, ஓர் இரவு முடிய அப்படியே அதை ஊற வைத்திருக்கவும்; அர்சோரோகத்தைப் போக்கிக்கொள்ள விரும்பும் பலர் இந்த மோரைக் குடிக்கலாம். 30-44½.

அர்சஸ்ஸில் ராரிஷ்டம்.

கொத்தமல்லி விதை, கருஞ்ஜீரகம், ஜீரகம், கொட்டைக்கரந்தை, திப்பிலி, யானைத்திப்பிலி, ஓமம், கிரந்தி தகரம், கிச்சிலிக்கிழங்கு, குராசாணியோமம், சித்திரமூலம், வாற்கோதுமை இவற்றைச் சூர்ணம் செய்து, நெய் வைத்துப் பழகிய பாத்திரத்தில் சேர்த்து, அதில் மோரை ஊற்றி ஸந்தானமுறைப்

படி பக்குவம் செய்யவும்; அது புளித்தும் காரமாகவும் பக்குவமாகும் வரையில் பாத்திரத்தில் வைத்து வைக்கவும். இது "தக்ராரிஷ்டம்" எனப்படும். இதை யதேஷ்டமாக அர்சோரோகி பானம் செய்து வரலாம். இது அக்னியை தீபனம் செய்யும்; நாக்குக்கு நற்சுவையைத் தரும்; நல்ல நிறத்தையும் தேஹத்தில் உண்டுபண்ணும்; கப-வாதங்களைப் போக்கும்; குதத்திலுண்டான வீக்கத்தையும், தினவையும், வலியையும் நிவாரணம் செய்யும்; சரீரத்தில் பலத்தை விருத்தி செய்யவல்லது. 45—47½.

தக்ரப் பிரயோகத்தில் வேறொரு வகை.

(1) சித்திரமூலப்பட்டையைப் பொடித்து, ஜலம் விட்டு அரைத்து, மண்கலயத்தினுள் பூசி, அக்கல்கம் உலர்ந்த பிறகு, அதில் மோரையாவது தயிரையாவது வைத்திருந்து உட்கொண்டு வந்தால், அது அர்சஸ்ஸைப் போக்கும். (2) கண்டுபாரங்கி, செம்மந்தாரை, சீந்தில், பஞ்சகோலங்கள்[1] இவற்றில் ஒவ்வொன்றின் கல்கத்தையும் முன் போலவே மட்கலயத்தில் தடவி, மோர் அல்லது தயிரை அதில் வைத்திருந்து உட்கொள்ளலாம். 48, 49.

அர்சஸ்ஸில் உபயோகிக்கக் கூடிய பேயா முதலிய முறைகள்.

யானைத்திப்பிலி, வட்டத்திருப்பி, கருஞ்ஜீரகம், பஞ்ச கோலங்கள், தும்புருவென்னும் ஒருவித அசோகஜாதி மரப்பட்டை,[2] ஜீரகம், கொத்தமல்லி விதை, பில்வப் பழத்தின் மத்தியிலுள்ள சோறு இவற்றைச் சேர்த்து, பலாம்லங்களையும்[3] யமக ஸ்நேஹங்களையும் [1]பேயா-யூஷம் [2] இரஸம்முதலியவைகளையும் பக்குவம் செய்து, அர்சோரோகிக்கு உணவாகக் கொடுக்கலாம். யானைத்திப்பிலி முதலிய இதே சரக்குகளைத் தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி, குடிநீரைப் பக்குவம் செய்தும், இவற்றால் க்ருதத்தைப் பக்குவம் செய்தும் பானம் செய்தால் நன்கு அக்னி தீபநமுண்டாகும். 50, 51.

அர்சஸ்ஸை அநுஸரிக்கும் மலபந்தத்திற்குப் பரிஹாரங்கள்.

இது வரையில் அர்சஸ்ஸில் இளகி அல்லது உடைந்து எளிதில் வெளியாகக்கூடிய நிலைமைக்கேற்ற சிகித்ஸா முறை கூறப்பட்டது; இனி மலபந்தத்துடன் கூடிய அர்சோரோகிகளுக்கு ஏற்ற பரிஹாரமுறை கூறப்படும். (1) ஸ்நேஹ பதார்த்தங்களை அதிகமாகக் கூட்டிய மாப்பண்டங்களோடு[3] வாருணியென்னும் மதுவை அதில் சிறிது உப்பையும் சேர்த்து உட்கொள்ளலாம். (2) சீது, தான்யாம்லம் என்னும் கடலைப்புளிப்பு, வாருணி இவற்றைத் தனித்தனியாகவும் உப்பு கலந்து உட்கொள்ளலாம். (3) புங்கந்தளிர்களை யமக ஸ்நேஹத்தில் நன்றாக வறுத்து, மாவையும் தூவி பக்குவம் செய்து போஜனம் செய்வதற்கு முன்பாக புஜித்து வந்தால் அடைபட்டுள்ள அபானவாயுவும் மலமும் தாராளமாய் வெளிப்படும். (4) சுக்கையாவது வட்டத்திருப்பியையாவது வெல்லத்துடன் கலந்து உண்ணலாம். (5) வெல்லம், யவக்ஷாரம், நெய் இவற்றைக் கலந்தாவது உட்கொள்ளலாம். (6) பசு மூத்திரத்தில் ஊறவைத்தெடுத்த கடுக்காயோடு வெல்லத்தையும்கூட்டி புஜிக்கவாவது செய்யலாம். 52-54½.

1. பஞ்சகோலம்—முதற் புத்தகத்தில் 23, 24-ம் பக்கங்களைப்பார்க்க.

2. தும்புரு என்பது ஆங்கிலத்தில் Xanthoxylon alatam எனப்படுகிறது.

3. பலாம்லங்கள்—எலுமிச்சம்பழம், புளிப்பு மாதுளை முதலிய வற்றின் சாறுகள்.

1. யமக ஸ்நேஹம்—முதற் புத்தகம் 119-ம் பக்கம் பார்க்க.

2. பேயா, யூஷம் முதலியவற்றைப்பற்றிய விவரங்களை முதற் புத்தகத்திற் காணலாம்.

3. வாருணீ, சீது இவற்றின் விவரத்தை முதற் புத்தகத்திற் காண்க.

அர்சஸ்ஸில் ஹரீதகீ பிரயோகம்.

ஒரு திரோணப் பிரமாணம் பசு மூத்திரத்தில் இருநூறு கடுக்காய்களைச் சேர்த்து, மூத்திரம் முற்றிலும் சுண்டிப் போமளவும் சமையல் செய்யவும். இதில் தினந்தோறும் இரண்டு கடுக்காய்கள் வீதம் தேனுடன் புஜித்து வரவும். இது கபத்தினால் உண்டாகிற அர்சஸ், குஷ்டம், சோதை, குல்மம், மேஹம், உதரரோகம், கிருமிகள், கிரந்தி, அர்புதம், அபசீ, ஸ்த்தூலரோகம், பாண்டு, ஆமவாதம் இவற்றைப் போக்கும். 55-56½.

அர்சஸ்ஸில் மலங்கழியச் செய்யும் சில முறைகள்.

(1) எவனொருவன் ஆடுதீண்டாப்பாளையின் வேரை கல்கமாக அரைத்து, சிறிது பசு மூத்திரத்தோடு பானம் செய்துகொண்டு, கத்திரிக்காயையும் வெல்லத்தையும் சேர்த்து பக்குவம் செய்து உண்கிறானோ, அவனுக்கு மூல மூளைகள் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். (2) த்ரிபலா கஷாயத்தோடு சிவதை வேர்ப்பொடியையாவது உட்கொண்டுவரலாம். (3) மோருடன் கடுக்காயையாவது புஜித்து வரலாம். (4) நெய்யிற் பொரித்த திப்பிலியையும், கடுக்காயையும் வெல்லத்துடன் கலந்தாவது உபயோகிக்கலாம். (5) அல்லது சிவதை வேரையும் நேபாளத்தையும் அளவறிந்து உண்ணலாம். இவ்வனைத்தும் மலத்தை தாராளமாக வெளிப்படுத்துங் குணமுடையன. குதத்தைப்பற்றி யுண்டான தோஷம் நிவ்ருத்திக்கப்பட்டால், அங்குண்டாகும் மூல முளைகளும் தானே நிவாரணமாகும். (6) மாதளம் பழ ரஸம், ஓமம், குராசானியோமம், வெல்லம், சுக்கு இவற்றையும் மோரையும் கலந்தாவது, (7) வெட்டத்திருப்பியை மோரிற் கூட்டியாவது உட்கொண்டுவர வாத ஸம்பந்தமான மலபந்தம் நீங்கும். (8) சித்திரமூலத்தையும் சுக்கையும் சீது வென்னும் மதுவிற் பொடித்துச் சேர்த்தாவது, (9) அவற்றையே வெல்லத்தினாலான மதுவில் சேர்த்தாவது உட்கொண்டு வரலாம். (10) கொட்டைக்கரந்தை, வட்டத்திருப்பி, ஸௌவர்ச்சல லவணம் இவற்றைக்கூட்டிய ஸுரை யென்னும் மதுவையாவது பருகலாம். 57-61½

அர்சஸ்ஸில் பிப்பலீ வர்த்தமானகம்.

பத்து திப்பிலியையும், அரைப்பலம் எள்ளையும் இடித்து முதலில் ஒரு நாள் பாலோடு உட்கொள்ளவும்; இங்ஙனமே தினந்தோறும் இதற்குப் பத்துத் திப்பிலி வீதம் அதிகமாயெடுத்து எள்ளோடும் பாலோடும் உபயோகித்து வரவும். இதனால் தேஹமும் ஜாடராக்னியும் அர்சோரோகிக்கு பலப்படும். 62½.

அர்சஸ்ஸில் பாடா பிரயோகம்.

காஞ்சொறி வேர், பில்வ வேர், ஓமம், சுக்கு இவற்றில்ஒவ்வொன்றோடாவது பலவற்றோடாவது வட்டத் திருப்பியைக் கலந்து புஜித்துவர அர்சோரோகம் தீரும். 63½.

அர்சஸ்ஸில் அபயாரிஷ்டம்.

கடுக்காய்த்தோல் எட்டு பலம், நெல்லிக்கனி பதினாறுபலம், விளாம்பழத்தின் உட்சோறு பத்து பலம், தும்மட்டிக்காய் ஐந்து பலம், வாய்விடங்கம், சிற்றேலம் இவை வகைக்கு இரண்டு பலம்; இவ்வனைத்தையும் நான்கு திரோணப்ரமாணங்கொண்ட ஜலத்தில் சேர்த்து சமைக்கவும்; நான்கில் ஒரு பங்காகச் சுண்டிய பிறகு வடிக்கட்டி, நெய் வைத்துப் பழகிய மட்பாத்திரத்தில் சேர்த்து, அதில் இருநூறு பலம் வெல்லத்தையும் கரைத்து, பதினாறு பலம் காட்டத்திப்பூவையும் சேர்த்து, பாத்திரத்தின் வாயை அகலால் மூடி, சீலமண் செய்து வைத்துவிடவும். பதினைந்து நாட்கள் சென்றபின்பு, இவ்வரிஷ்டத்தை யெடுத்து உட்கொண்டுவர, ஜாடராக்னி விருத்தி யடையும்; அர்சஸ், கிரஹணீ ரோகம், பாண்டு, குஷ்டம், மஹோதரம் முதலிய வயிற்றைப்பற்றிய வியாதிகள், விஷஸம்பந்தமான கோளாறுகள், ஜ்வரம், சோதை, ப்லீஹ மென்னும் மண்ணீரல் வீக்கம், இருதயத்தைப்பற்றிய கோளாறுகள், குல்மம்,

க்ஷயம், வாந்தி, கிருமி ரோகம் இவைகளும் தீரும். 64-67½.

அர்சஸ்ஸில் தந்த்யரிஷ்டம்

சுத்தமான நேபாளவிதை, தசமூலம்,[1] த்ரிபலே, சித்திரமூலம் இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; நாலில் ஒரு பங்க கச் சுண்டிய கஷாயத்தில் ஒரு துலாம்[2] வெல்லத்தைச் சேர்த்து, முன்பு அபயாரிஷ்டத்திற்குக் கூறிய விதமே மற்றவைகளையும் செய்யவும்[3] அபயாரிஷ்டத்திற்குள்ள குணங்களெல்லாம் இதற்கு முண்டு; ஆனல் மலத்தை அதைவிட அதிகமாய் வெளிப்படுத்துங் குணமுடையது. 68, 69.

அர்சஸ்ஸில் மல சோதநத்திற்கேற்ற தாரலபாரிஷ்டம்

காஞ்சொறி (ஸமூலம்) பதினறு பலம், நேபாளம்-வட்டத் திருப்பி-சித்திரமூலம் - கடுக்காய்-ஆடாதோடை-நெல்லிக்காய்-சுக்கு இவை பிரத்தியேகம் இரண்டு பலம்; இவற்றை இடித்து ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, நான்கில் ஒரு பாகம் மிகும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டி, நூறு பலம் சர்க்கரையையும், முன் அபயாரிஷ்டத்திற்குக் கூறிய விதமாய் மற்றவைகளையும் கூட்டி, மண்பாண்டத்தில் ஊற்றி ஞாழல்-திப்பிலி-சவியம்-நெய்-தேன் இவற்றை அறைத்து, அந்த பாண்டத்தின் மேற் பூசி சீலைமண் செய்து வைக்கவும். 70, 71.

அர்சஸ்ஸில் உபயோகிக்கக் கூடிய க்ருத முறைகள்.

(1) எலுமிச்சம்பழரஸம் முதலியவற்றைச் சேர்த்து, அம்லரஸம் ஏற்றப்பட்ட க்ருதத்தையாவது கீழ்நோக்கி மலம் தாராளமாக வெளியாவதற்காக உட்கொள்ளலாம். (2) சவியம், சித்திரமூலம் இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்திலாவது யவக்ஷாரத்தையும் வெல்லத்தையும் கூட்டி யுபயோகிக்கலாம். (3) மோடியின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்திலாவது தேன், யவக்ஷாரம், சுக்கு இவற்றைக் கலந்து உட்கொள்ளலாம். (4) திப்பிலி, மோடி, கொத்தமல்லி விதை, மாதளை, தயிர் இவற்றைச் சேர்த்து பக்குவம்செய்த க்ருதம் உட்கொள்ளப் படுமானல், அபாநவாயு, மலம், மூத்திரம் இவை தாராளமாய் வெளியாகும். (5) இரண்டு பங்கு பலாசக்ஷாரம் கரைத்த நீரில் ஒரு பங்கு நெய் சேர்த்து, வத்ஸகாதி கணத்தைச் சேர்ந்த சரக்குகளைக் கல்கமாகவும் சேர்த்து, பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் அர்சஸ்ஸைப் போக்கடிக்கக் கூடிய குணமுடையதோடு, தீபநம் என்கிற குணத்திலும் சிறந்தது. (6) பஞ்ச கோலங்கள், கடுக்காய், ஓமம், பிடாலவணம், இந்துப்பு, வட்டத்திருப்பி, கொத்தமல்லி விதை, மிளகு, பில்வவேர் இவற்றைப் பாலில் சேர்த்துக் காய்ச்சி, தயிரையும் சிறிது கூட்டி, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும். அந்த க்ருதம் குதத்திலும், தொடை யிடுக்குகளிலும் உண்டாகும் வேதனையையும், வயிற்றுக் கடுப்பையும், குதம் நெகிழ்ந்து வெளியாய்விடுவதையும், நீர்ச்சுருக்கையும், இரத்தப் பெருக்கையும் சீக்கிரம் நிவ்ருத்திசெய்யும் (7) வட்டத்திருப்பி, ஓமம், கொத்தமல்லி விதை, நெரிஞ்சி, பஞ்சகோலங்கள், பில்வவேர் இவற்றைத் தயிரில் சேர்த்து, நாலு மடங்கு புளியாரத்தையின் ஸ்வரஸத்தில் அனைத்தையும் கூட்டி, க்ருதம்

1. தச மூலம்—முதற் புத்தகத்தில் 123 ம் பக்கம் பார்க்க.

2. ஒரு துலாம்—100-பலம் கொண்ட அளவு.

3. அபயாரிஷ்டத்தில் கூறிய விதம் பதினறு பலம் தாட்டாத்திப்பூவையும் சேர்த்து, நெய் வைத்துப் பழகிய மட்பாத்திரத்தில் பதினைந்து நாட்கள் சீலை மண் செய்து வைத்து, பிறகு எடுத்து உபயோகிக்கவேண்டும் எனப் பொருள்.

பக்குவம் செய்யலாம். இந்த க்ருதம் வயிற்றுப்பொருமல், நீர்ச்சுருக்கு, வயிற்றுக்கடுப்பு, குதம் நெகிழ்ந்து வெளியாய்விடுதல், குதத்தில் வலி, மூலமுளை, கிரஹணீ, வாதரோகங்கள் இவற்றைப் போக்கும் 72-78½.

**மலபந்தமுள்ள அர்சஸ்ஸூக்கு ஏற்ற மாம்ஸ ரஸங்கள்.**

(1) மயில், தித்திரி, லாவம் என்கிற இப்பக்ஷிகளுடைய மாம்ஸ ரஸங்களில் அம்லரஸம் கலந்து நன்றாகத் தாளித்து, மலமும் அபானவாயுவும் சிக்குண்டு அடைபட்டிருக்கையில் உட்கொள்ளலாம். (2) அண்டங்காக்கை, வர்த்தகம் இவற்றின் மாம்ஸரஸங்களையாவது அங்ஙனமே மலச்சிக்கல் முதலியவற்றில் பருகலாம். 79½.

**மலச்சிக்கலுடன் கூடிய அர்சஸ்ஸூக்கு ஏற்ற அன்ன சாகாதிகள்.**

சக்கிரவர்த்திக்கீரை, சித்திரமூலம், சிவதை, நேபாளம், வட்டத்திருப்பி, புளியாரை முதலியவைகளென்ன, கப-வாதஹரமாகவும் இலகு-பேதி என்கிற குணங்களுள்ளவையுமான மற்றுமுள்ள சாகங்களென்ன, இவற்றின் தளிர்களை யமகஸ்நேஹத்தில் சேர்த்து, காயமும் கூட்டி வறுத்து, தயிரின் ஆடையோடு அனைத்தையும் கூட்டி பக்குவம் செய்யவும்; கொத்தமல்லிவிதையையும், பஞ்சகோலங்களையும் மாதளம்பழச் சாறு ஊற்றி கல்கமாகச் செய்துகொள்ளவும். இவ்வனைத்தையும் ஒன்றாகக் கூட்டி, இஞ்சியின் இளந்தளிர்களையும், இஞ்சித் துண்டுகளையும் அவற்றில் சேர்க்கவும்; மனதுக்கு உவப்பான அங்காரதூபத்தினால் அதற்கு ஸூவாஸனை யேற்றவும்[1]; ஜீரகம், மிளகு, பிடாலவணம், ஸௌவர்ச்சல லவணம் இவைகளையும் போதுமாறு கூட்டிக்கொள்ளவும்; இந்த சாகத்தைச்செஞ்சம்பா அரிசியின் அன்னத்தோடு வாததோஷம் மேலிட்டு ரூக்ஷத்தன்மை, அக்னிமாந்த்யம், மலபந்தம் இவற்றுடன் கூடிய அர்சோரோகிக்குக் கொடுக்கவும்; பசு, உடும்பு, செம்மறியாடு, ஒட்டகம் இவற்றின் மாம்ஸரஸங்களை முக்கியமாக இறைச்சியுண்பவருக்கு முற்கூறிய சாகாதிகளோடு மலச்சிக்கல் முதலியதைப் போக்கக் கொடுப்பது நலம். 80-84½.

**மலபந்தத்துடன் கூடிய அர்சஸ்ஸூக்கு ஏற்ற பானங்கள்.**

மதிரா வென்கிற மது, வெல்லம் அல்லது சர்க்கரையாலான சீதுவென்னும் மத்தியம், மோர், காடி, ஏதேனும் அரிஷ்டம், மஸ்து இவற்றில் எதையேனும் பருகலாம்; அல்லது கொத்தமல்லிவிதையாவது, கொத்தமல்லி விதையும் சுக்கையும் கலந்தாவது இடித்துத் தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி அந்த ஜலத்தையாவது பானம் செய்விக்கலாம் அல்லது கண்டங்கத்திரி வேரைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது குடிக்கச் சொல்லலாம். இந்த பானங்களை போஜனம் செய்து முடிந்த பிறகாவது, போஜனத்தின் மத்தியிலாவது உபயோகிப்பது உசிதமாம்; இவை, சிக்கிக்கொண்டு அடைந்துள்ள அபானவாயுவையும் மலத்தையும் வெளிப்படுத்துங் குணமுடையன. 85—86½.

**அர்சஸ் நிவாரணமாதல்.**

மலம், அபானவாயு, கபம், பித்தம் இவை கீழ்நோக்கி வெளிவந்துவிட்ட பிறகு, குதமும் நிர்மலமாய்விட்டால், மூலமுளைகளும் விலக்கப்பட்டுப் போகும்; ஜாடராக்னியும் விருத்தியடையும். 87½.

**அநுவாஸனத்திற்கேற்ற அர்சோரோகிகள்.**

எந்த அர்சோரோகிகள் உதாவர்த்தமுள்ளவர்களோ, எவர்கள் மிகவும் ரூக்ஷத்தன்மையடைந்து அபானவாயு கீழ்நோக்காமல் குடலிலேயே சூழ்ந்து வயிற்று வலியாலும் வருந்துகிறார்

1. பெருங்காயம் முதலியதைத் தணலில் சேர்க்க அதிலிருந்து கிளம்பும் நறுமணமுள்ள புகை இங்கு அங்காரதூபம் எனப்படும்.

களோ அவர்களுக்கு அநுவாஸன சிகித்ஸை செய்வது உசிதம். 88½.

அர்சஸ்ஸில் அநுவாஸனத்திற்கேற்ற பிப்பல்யாதி தைலம்.

திப்பிலி, மறுக்காரை, பில்வவேர், சதகுப்பி, அதிமதுரம், வசம்பு, கோஷ்டம், சுக்கு, தாமரைக் கிழங்கு, சித்திரமூலம், தேவதாரு இவற்றை இடித்து ஜலத்தில் சேர்த்து, தைலம் காய்ச்சவும்; தைலத்திற்கு இரண்டு மடங்கு பாலும் சேர்த்து, பக்குவமாகக் காய்ச்சி யெடுக்கவும்[1] அபாநவாயு அடைபட்டுள்ள அர்சோ ரோகிகளுக்கு அநுவாஸனம் செய்ய இத்தைலம் சிரேஷ்டமானது. குதம் பிதுங்கிப் போதல், வயிற்றுளைத்தல், நீர்ச்சுருக்கு, வயிறுகடுப்பு, இடுப்பு-துடைகள்-ப்ருஷ்டபாகம் இவை பலஹீனப்படுதல், துடையிடுக்குகளிலுண்டாகும் பொருமல் அல்லது வீக்கம், குதத்வாரத்திலிருந்து பிசுபிசுப்பான திரவம் கசிதல், குதத்தில் வீக்கம், அபாநவாயு-மலம் இவை அடைபட்டு வெளிவராமற் போதல், அடிக்கடியுண்டாகும் மலப் போக்கு இவற்றை, இத்தைலத்தைக்கொண்டு அநுவாஸநம் செய்வதால் நிவ்ருத்தி செய்யலாம். 89-92½.

அர்சஸ்ஸில் பஞ்சமூல நிருஹம்.

பஞ்சமூலங்களைக்[2] கஷாயமிட்டு, அக்கஷாயத்திற்கு ஸம அளவு பால் கூட்டி, பசுமூத்திரம்-எண்ணெய்-உப்பு இவற்றையும் சேர்த்து, பிப்பல்யாதி தைலத்திற்குக் கூறிய மறுக்காரை முதலியவற்றின் கல்கத்தையும் கலந்து, நிருஹவஸ்தியை யாவது முற்குறிப்பிட்ட கோளாறுகளில் பிரயோகிக்கலாம். 93½.

## இரக்தார்சஸ் சிகித்ஸை.

இரக்தார்சஸ்ஸில் வாத கபங்களின் அநுபந்தமும் அதன் சிகித்ஸையும்.

இனி இரக்தார்சஸ்ஸுகளுக்கு வாதத்தோடும் கபத்தோடும் உள்ள ஸம்பந்தங்களை கவனித்து, முறையே ஸ்நிக்த்தமான ஔஷதத்தையாவது, ரூக்ஷமான ஔஷதத்தையாவது குளிர்ச்சி பொருந்தியதாகக் கொடுக்கவேண்டும். (1) இரக்தார்சஸ் உண்டானதற்கு ரூக்ஷமான பதார்த்த ஸேவையும் ரூக்ஷமான வேலையும் காரணமாகும் பக்ஷத்தில், அப்பொழுது மலமானது கறுத்தும் வறண்டும் கடினமாகவும் வெளியாகும்; அபாநவாயு வெளியாவதில்லை; இடுப்பிலும் துடைகளிலும் வலியுண்டாகும்; அந்த நிலைமையில் வாத தோஷம் அவ்வியாதியில் தொடர்ந்திருப்பதாய் அறியவும் (2) ஸ்நிக்த்தமும் குருகுணமும் பொருந்திய பதார்த்தங்களின் உபயோகமும், அவ்வித வேலைகளைச் செய்வதும் இரக்தார்சஸ்ஸுக்குக் காரணமானால், அப்பொழுது மலமானது தளர்ச்சியாகவும், வெண்மை அல்லது வெளிறிய மஞ்சள் நிறமாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், பிசுபிசுப்பான பொசிவுடன் கூடியதாகவும் வெளியாகும்; குதம் திமிதப்பட்டிருக்கும்; அவ்வித நிலைமையில் இவ்வியாதியில் கபதோஷம் தொடர்ந்திருப்பதாய் அறியவும். அர்சஸ்ஸிலிருந்து கசியும் இரத்தத்தின் நிறம் முதலிய இலக்ஷணங்களைக் கொண்டும் அது எந்தெந்த தோஷக் கோளாறால் ஸம்பவித்ததென்று உணரலாம். 94-97.

---

1 இங்கே கஷாயம் பக்குவம்செய்ய ஜலத்தைக் கஷாயவஸ்துக்களினும் நாலு பங்காகவும், அதை நாலில் ஒருபாகமாகச் சுண்டக் காய்ச்சி, அவ்விதம் தயாரான கஷாயத்திற்கு நாலில் ஒருபாகம் ஸ்நேஹம் சேர்க்கவேண்டும். கல்கம் தனிப்படக் கூறப்படவில்லையாகையால், கஷாய வஸ்துக்களையே கல்கமாகவும் சேர்க்கவேண்டும்.

2 பஞ்சமூலம்-இங்கு மஹாபஞ்சமூலம் குறிக்கப்படுகிறது. இதைப்பற்றி முதற்புத்தகம் 64-ம பக்கம் பார்க்க.

(1) இரத்தம் தூஷிக்கப்பட்டிருந்தால் சோதந சிகித்ஸையையும், இலங்கநசிகித்ஸையையும் அவரவர்களுடைய தேஹ நிலைமை முதலியவற்றை கவனித்துச் செய்யவேண்டும். தோஷங்களால் இரத்தம் மலினமாயிருக்கையில், அம்மலினத்தன்மை நீங்கும் வரையில் இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். (2) இரக்த மோக்ஷணம் செய்த பிறகு மிச்சமுள்ள தோஷங்களைப் பக்குவம் செய்வதற்காகவும், ஜாடராக்னியைத் தூண்டுவதற்காகவும், இரத்தப்பெருக்கை நிறுத்துவதற்காகவும் திக்த ரஸமுள்ள பதார்த்தங்களைக் கொடுத்து அப்பிணியாளியை உபசரிக்கவேண்டும். (3) ஆம தோஷம் நன்கு க்ஷீணித்திருப்பவனுக்காவது, வாததோஷம் அதிகரித்திருப்பவனுக்காவது அர்சஸ்ஸிலிருந்து இரத்தம் வெளியாகுமானால், ஸ்நேஹத்தைப் பானம் செய்வித்தாவது, அப்யங்கம் செய்வித்தாவது, அதை வஸ்தியில் பிரயோகித்தாவது அந்த இரத்தத்தைச் சுத்திசெய்யவேண்டும். (4) கோடைகாலத்தில் இரத்தத்தில்பித்தம்அதிகரித்துமூலத்திலிருந்து இவ்விதம் ஸ்ரவிக்குமானால், வாத-கபங்களுடைய அநுபந்தம் அதற்குஇல்லாமலிருந்தால்,அந்த இரத்தப்பெருக்கை முற்றிலும் தடுத்துவிடவேண்டும். (5) அர்சஸ்ஸிலிருந்து இரத்தம்கபத்தோடு ஸ்ரவிக்குமானால்உழமண்ணுப்பு, சுக்கு, வெட்பாலையின் பட்டை இவற்றின் கஷாயத்தையாவது, நிலவேம்பு, சுக்கு, காஞ்சொறி, செஞ்சந்தனம் இவற்றின் கஷாயத்தையாவது, மரமஞ்சள், இலவங்கப்பட்டை, விளாமிச்சைவேர் இவற்றின் கஷாயத்தையாவது, மாதளம் பட்டைக் கஷாயத்தையாவது பானம்செய்விக்கலாம். (6) வெட்பாலை மரப்பட்டை, இரஸாஞ்ஜனம், தேன், வாய்விடங்கம் இவற்றை வகைக்கு ஒரு பலம் எடுத்து அரைத்து கல்கமாகச் செய்து, அரிசி கழுவிய தண்ணீரோடு கலக்கியாவது உட்கொள்ளலாம். நாயுருவியையாவது கல்கமாகச் செய்து கழுவு நீரில் கலக்கிப் பருகலாம். 98-103½.

*இரத்தார்சஸ்ஸில் இரக்த மோக்ஷண-லங்கந-பாசந-ஸ்தம்பநாதி சிகித்ஸைகள்.*

ஆந்தரிக்ஷம் என்கிற காங்கோதகத்தில், நூறுபலம் ஈரமான வெட்பாலைப்பட்டையைப் போட்டுக் காய்ச்சவும்; பட்டையிலுள்ள ஸாரமெல்லாம் கஷாயத்தில் இறங்கிய பிறகு, அடியிற் குறிப்பிடப்படும் சரக்குகளை நுண்ணிய சூர்ணமாகச் செய்து அக்கஷாயத்தில் சேர்க்கவும்; அச்சரக்குகளாவன:—மஞ்ஜிஷ்டி, ஞாழல், இலவம்பிசின், எட்டிக்கொட்டை இவை பிரத்தியேகம் ஒவ்வொரு பலம்; இவ்வனைத்துக்கும் ஸம அளவாக வாலுழுவைப் பொடியையும் சேர்க்கவேண்டும்; பிறகு வடிக்கட்டி, கரண்டியில் பூசிக்கொள்ளுமாறு பாகுபதத்திற்கு வரும்படியாகப் பக்குவம் செய்து எடுத்துக்கொள்ளவும். இந்த லேஹயத்தை உட்கொண்டு, அவரவருடைய ஜாடராக்னியின் பலத்திற்கேற்றவாறு பேயா, மண்டம், ஆட்டுப்பால் அல்லது பசுவின் பால் இவற்றையும் பருகிவரலாம்; ஆட்டுப்பாலும் அன்னமும் கலந்து உண்ணவேண்டும். இந்த லேஹ்யம் இரத்தாதிஸாரத்தையும் இரக்தார்சஸ்ஸையும், மேல் நோக்கிய அல்லது கீழ் நோக்கிய பலமான இரக்த பித்தத்தையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். 104-107½.

*குடஜாவலேஹம்-முதல்.*

நூறு பலம் குடசப்பாலையின் பட்டையை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, எட்டில் ஒரு பங்காகச் சுண்டும்படி அதைக் காய்ச்சி, பின் குறிப்பிடப்படும் சரக்குகளைக் கல்கமாகச் செய்து, அதில் சேர்க்கவேண்டும்; அவையாவன:—இரஸாஞ்ஜநம், த்ரிகடுகம், வெள்ளிலோத்திப்பட்டை, உதியம்பட்டை, இலவம்பிசின், சிற்றுமுட்டி,

*குடஜாவலேஹம்—இரண்டாவது.*

மாதளம்பட்டை, பில்வவேர், கர்க்காடகச் ருங்கி, கோரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, காட்டாத்தியின் கனி இவை வகைக்கு ஒரு பலம்; குடசப்பாலைப்பட்டை பத்து பலம்; வெல்லம் முப்பது பலம்; காய்ச்சி வடிக்கட்டிய நெய் இருபது பலம். இவ்வனைத்தையும் முறைப்படி லேஹ்யமாகப் பக்குவம் செய்து, தானியக் களஞ்சியத்தில் பதினைந்து நாட்கள் வைத்திருந்து உட்கொண்டுவர, ஸர்வவிதமான அர்சஸ்ஸுகளையும், கிரஹணீ தோஷத்தையும், ச்வாஸ-காஸங்களையும் போக்கும். 108-111½.

இரக்தார்சஸ்ஸில்பலவிதமான கல்கங்கள்.

(1) வெள்ளிலோத்தி, எள்ளு, இலவம்பிசின், மஞ்ஜிஷ்டி, சந்தனம், கருநெய்தல் இவற்றை அரைத்து, வெள்ளாட்டுப் பாலில் கலந்து, இரக்தார் சோரோகியைப் பருகச் செய்யலாம். அதே பாலோடு சம்பா அன்னத்தைக் கலந்து போஜனம் செய்விக்கலாம். (2) அதிமதுரம், தாமரைக்கிழங்கு, அறுகம்புல், க்ஷீரகாகோலீ, பெருங்குரும்பை இவற்றைச் சூர்ணம்செய்து, சர்க்கரையும் தேனும் கூட்டி, குளிர்ந்த ஜலத்தோடு உட்கொள்ளக்கொடுக்கலாம்; அல்லது வெள்ளாட்டுப் பாலுடனாவது சாப்பிடச்செய்யலாம். (3) வெள்ளிலோத்தி, பெருவாகை, குடசப்பாலைப்பட்டை, மஞ்ஜிஷ்டி, இலவம்பட்டை இவற்றை அரிசிகழுவிய நீருடன் உட்கொள்ளலாம்; அல்லது சந்தனம், நாககேஸரம், அதிமதுரம், வெட்டிவேர் இவற்றையாவது அக்கழுவு நீரோடு உண்ணலாம். (4) ஓமம், வாலுழுவை, வட்டத்திருப்பி, பில்வவேர், சுக்கு, இரஸாஞ்ஜநம் இவற்றின்சூர்ணத்தை வலியும் அதிகஇரத்தப் பெருக்குமுள்ள அர்சஸ்ஸில் ஜலத்துடன் உட்கொள்ளலாம். 112-115½.

இரக்தார்சஸ்ஸில் பலவித க்ருதபானங்கள்.

(1) பாலைக்கீரையையும் கண்டங்கத்திரியையும் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் இரக்தார்சஸ்ஸில் சிறந்த குணந்தரக் கூடியது. (2) அல்லது காட்டாத்திப்பூ, வெள்ளிலோத்தி, குடசப்பாலையின் பட்டை, மறுக்காரை, நெய்தல் இவற்றைக் கொண்டாகிலும் க்ருதம் பக்குவம் செய்யலாம். (3) நாககேஸரம், யவக்ஷாரம், மாதளம்பழஸ்வரஸம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது இரக்தார்சஸ்ஸில் கொடுக்கலாம். (4) சர்க்கரை, தாமரையின் தாது இவற்றுடனாவது, எள்ளோடாவது வெண்ணெயை உபயோகிக்க இரக்தார்சஸ்ஸு தீரும். 116-118.

இரக்தார்சஸ்ஸில் பத்தியமான உணவு முதலியவை.

(1) ஆட்டின் வெண்ணெய், நெய், பால், இறைச்சி இவைகளும், புளிப்புச் சேராதது அல்லது சொற்பப் புளிப்புச் சேர்ந்ததான சக்கிரவர்த்திக் கீரையின் இரஸத்தோடு கூடிய ஜாங்கல மாம்ஸ ரஸமும், செஞ்சம்பா அரிசியினாலான அன்னமும், தயிராடையும், காரரிசியன்னமும், இனிய சுவை பொருந்திய ஸுரையென்னும் மதுவும், அதே குணம் பொருந்திய ஸுராமண்டமும் ஆக இவை யாவும் இரக்தார்சஸ்ஸில் இரத்தப் பெருக்கை நிறுத்துவதற்குச் சிறந்த ஔஷதங்களாம். (2) பேயா, யூஷம், மாம்ஸரஸம் முதலியவைகளில் சேர்த்து பக்குவம் செய்தாவது, தனியாகவாவது வெள்ளுள்ளியைப் புஜித்து வந்தால், அது மிக்க அதிகரித்த இரத்தப் பெருக்கையும் வாதவிகாரத்தையும் போக்கும். 119-121.

*அர்சஸ்ஸில் இரத்தப்பெருக்கான வாதகோபத்தைத் தணிப்பது.*

அர்சோரோகத்தில் இரத்தம் மிதமிஞ்சி வெளியாகுமானால், பெரும்பாலும் வாததோஷம் பிரகோபமடைந்து, வாதார்சஸ்ஸுகள் விசேஷமாய் ஸம்பவிக்கும்; ஆகையினால் அவற்றைப் போக்குவதற்கு பலமான பிரயத்தனம் செய்யவேண்டும். 122.

*அர்சஸ்ஸில் அம்ல-பித்தங்கள் அதிகரித்து ஜாடராக்னியும் குன்றிப்போனால் செய்யும் பரிஹாரம்.*

அம்லமும் பித்தமும் மிக்க அதிகரித்திருப்பதாகக் காணப்படுமானால், கபமும் ஜாடராக்னியும் பலங் குன்றியவைகளாயிருந்தால், அக்கோளாறுகளைத் தணிப்பதற்கு எல்லாவிதமான சீதோபசாரமும் செய்யவேண்டும். 123.

*இரக்தார்சஸ்ஸில் ஸ்நிக்த்தமும் ஸுகோஷ்ணமுமான உபசாரங்களைச் செய்தல்.*

முற்கூறியவாறு செய்தும் கோளாறுகள் நிவ்ருத்தியாகாவிட்டால், பிறகு ஸ்நிக்த்தமாகவும் உஷ்ணமாகவுமுள்ள மாம்ஸரஸங்களைக் கொடுத்தும், இளஞ்சூடான க்ருதங்களை அவபீடக நஸ்யமாகப் பிரயோகித்தும் அப்பிணியாளியை உபசரிக்க வேண்டும். சிறிது உஷ்ணமான தைலங்களையும், பாலையும், க்ருதங்களையும் யதேஷ்டமாக அப்பிணியாளியின் மீது ஊற்றலாம். 124, 124½.

*இரக்தார்சஸ்ஸில் பிச்சாவஸ்தி.*

காஞ்சொறி, தர்ப்பம், ஞாழல், இவற்றின் வேர், இலவம் புஷ்பம், ஆலம் மொட்டு, அரசம் மொட்டு இவற்றை வகைக்கு இரண்டு பலம் அளவாக மூன்று பிரஸ்த்தம் ஜலத்திற் சேர்த்து, அதில் ஒரு பிரஸ்த்தம் பாலையும் கூட்டி, பாலின் அளவுக்குச் சுண்டும்படி கஷாயத்தைக் காய்ச்சி யெடுத்து வடிக்கட்டவும்; பிறகு இலவம் பிசின், மஞ்ஜிஷ்டி, சந்தனம், நெய்தல், ஞாழல், வெட்பாலரிசி, தாமரைப்பூவின் தாது இவற்றை இடித்துக் கல்கமாகச்செய்து, அக்கஷாயத்தில் சேர்த்துக் கொள்ளவும்; அப்பால் நெய்யும் தேனும் அதில் சேர்த்து பக்குவம் செய்துகொள்ளவும். இதைக்கொண்டு வஸ்திப்பிரயோகம் செய்ய வேண்டும். இது பிச்சாவஸ்தி யெனப்படும். ஆஸனக்கடுப்பு, குதம் நழுவி வெளியாவது, இரத்தக்கசிவு, ஜ்வரம் இவைகள் இச்சிகித்ஸையினால் தீரும். 125-128½.

*இரக்தார்சஸ்ஸில் அநுவாஸன வஸ்திக்கு ஸ்நேஹம்.*

அதிமதுரம், வறள்தாமரை, இவற்றின் கஷாயத்தில், இலவம் பிசின் முதலிய முற்கூறிய கல்கத்திரவ்யங்களையும்[1] சேர்த்து, கஷாயத்திற்கு எட்டில் ஒரு பங்கு பாலையும் ஊற்றி, பாலுக்கு இரு மடங்கத்தனை ஸ்நேஹத்தை அதிற் பக்குவம் செய்யவும். இந்த ஸ்நேஹத்தை இரக்தார்சஸ்ஸில் அநுவாஸன வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். 129½.

*சாங்கேரீ க்ருதம்.*

புளியாரையின் ஸ்வரஸத்தில் நெய் சேர்த்துக் காய்ச்சவும்; பிறகு அதிமதுரம், நெய்தல், மஞ்ஜிஷ்டி, பில்வவேர், சந்தனம், சவியம், அதிவிடயம், கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, யவக்ஷாரம், மரமஞ்சள் பட்டை, சுக்கு, ஜடாமாம்ஸி, சித்திரமூலம், தேவதாரு இவற்றைச் சூர்ணம் செய்து கல்கமாகச் சேர்க்கவேண்டும்[2]. இந்த க்ருதம் ஸந்நிபாத தோஷத்தைப் போக்கக்கூடியது; அர்சஸ், அதிஸாரம், கிரஹணீ, பாண்டுரோகம், ஜ்வரம், அரோசகம், நீர்க்கடுப்பு, குதம் நழுவி விடுதல், வஸ்தி யென்னும் மூத்திரப்பையின்

---

1. இதற்குமுன்னுள்ள பிச்சாவஸ்தி முறையிற் கூறப்பட்டது.

2. புளியாரையின் சாறு நாலு பங்கு, நெய் ஒரு பங்கு, கல்கத்திரவியம் வகைக்கு ஒரு பலம்.

பொருமல், வயிற்றுக்கடுப்பு, குதத்திலிருந்து பிசுபிசுப்பான திரவம் கசிதல், மூலத்தில் வலியுண்டாதல் இவற்றில் கொடுப்பதற்கேற்ற சிறந்த ஔஷதம். 130-133.

அர்சஸ்ஸிலுண்டாகும் வலி முதலியதைத் தணிக்குமுபாயம்.

எப்பொழுதுமே ஜாடராக்னியை பலப்படுத்திக் கொண்டே சிகித்ஸையில் நோக்கமாயிருக்க வேண்டுமாகையால், அதற்கு அனுகூலமாகப்புளிப்பையும் இனிப்பையும், சீதத்தையும் உஷ்ணத்தையும் மாற்றி மாற்றி யுபயோகித்து வந்து, அர்சஸ்ஸினால் உண்டாகும் வலி கோளாறுகளை நிவ்ருத்தி செய்யவேண்டும். 134.

உதாவர்த்தத்தில் குதவர்த்திப் பிரயோக முறை முதலியன.

உதாவர்த்தத்தினால் வருந்துபவனுக்கு சீதஜ்வரத்தைப் போக்கக்கூடிய தைலங்களால் அப்யங்கம் செய்து வைத்து, அப்பால் மிகவும் ஸ்நிக்த்தமான பிண்டங்களைக்கொண்டு குதத்தில் ஸ்வேதம் செய்விக்கவேண்டும். (1) சிவதை, கருஞ்சிவதை, நேபாளம், திப்பிலி, வெள்ளைச்சாறணை, மறுக்காரை, இந்துப்பு, கறியுப்பு இவற்றைச் சூர்ணம் செய்து, வெல்லமும் பசுமூத்திரமும் கலந்து ஆட்டி, அவ்வப்பிணியாளியின் கை பெருவிரலின் அளவாக நீண்ட குளிகை செய்து, குதத்தில் சிறிது ஸ்நேஹம் தடவி, அவ்வர்த்தியை உட்செலுத்தி வைக்கவும்; அது மலத்தை அநுலோமநமாக வெளிப்படுத்துங் குணமுடையது. (2) அங்ஙனமே திப்பிலி, மறுக்காரை, ஒட்டடை, கடுகு இவற்றைக்கொண்டும் வர்த்தி செய்து உபயோகிக்கலாம். (3) முற்கூறியவற்றின் சூர்ணத்தையே நாடி யென்கிற குழலின் மூலமாய் குதத்தினுள் ஊதி உட்செலுத்தலாம்[1]. இவையெல்லாம் குடலுக்குள் சென்று, அவைகளும் உள்ளேயே அடைபட்டு மலம் வெளிவராமற் போனால், (4)ஸ்நிக்த்தமாகவும் அதிக தீக்ஷ்ண குணமுள்ளதுமான ஔஷதத்தை வஸ்தியாகப் பிரயோகிக்கலாம்; அவ்வஸ்தியானது இப்பிணியாளியின் குதத்தின் முன் புறத்தைத் தளர்த்தி, மலம்-மூத்திரம்-அபாநவாயு இவற்றையும் அநுலோமமாக வெளிப்படுத்தும். (5) மறுபடியும் அப்படிச் செய்தபிறகுகூட மலம் முதலியது சிக்கிக்கொண்டேயிருந்தால், ரூக்ஷத்தன்மை அதிகரித்தே வாதமும் பிரகோபித்து அதனால் மலமூத்திராதிகள் அடைந்து விடுகின்றன வென்பதையுணர்ந்து வாதஹரமாகவும் ஸ்நேஹரூபமாகவுமுள்ள விரேசன ஔஷதங்களைக் கொடுத்தும், அநுவாஸனம் செய்தும் மலாதிகளை வெளிப்படுத்த வேண்டும். 135-139½.

உதாவர்த்தாதிகளில் கல்யாணக க்ஷாரம்.

த்ரிகடுகம், த்ரிலவணம், [1] த்ரிபலை, நேபாளம், சேராங்கொட்டை, சித்திரமூலம் இவற்றைச் சூர்ணம் செய்து, ஸ்நேஹங்களில் எதையாவது கலந்து, பசுமூத்திரத்தையும் கூட்டி, ஒரு பாத்திரத்தில் அனைத்தையும் ஓர் அகலால் மூடி, சுற்றிலும் விளிம்புகளிலுள்ள சந்துகளைச் சிலைமண் செய்து அடைத்து, பாத்திரத்தினடியில் தீயிட்டு எரிக்கவும்; இவ்விதம் செய்ய உள்ளடங்கிய சரக்குகளிலிருந்து தூமங்கூட வெளிவர முடியாமல் உள்ளேயே சூழ்ந்துகொண்டு,

1 முனை குவிந்ததும் வாயகன்றதுமான குழலை மரம் முதலியவற்றால் மழமழப்பாகச் செய்து, குவிந்த முனையை குதத்தினுள் செலுத்தி, அகன்றதான அடிப் பிரதேசத்தினுள் மருந்தைப்போட்டு, வாயால்பலமாகக் குழலை ஊதவும். குழலின் அடிப்புறம் "ட" மாதிரி வளைந்து மேல் நோக்கியதாயிருக்க வேண்டும். இக்குழலின் நீண்ட முனையை குதத்தில் பிரவேசிக்கச் செய்யவும்; வளைந்த தலை மேல் நோக்கியிருந்தால் ஊதுவதற்கு ஸௌகரியமாயிருக்கும்.

1 த்ரிலவணம்—ஸைந்தவ லவணம், ஸாமுத்திர லவணம், ஸௌவர்ச்சல லவணம் என்பவையாம்.

அச்சரக்குகள் க்ஷாரமாகப் பக்குவமடையும்; இதற்குக் "கல்யாணக க்ஷாரம்" எனப் பெயர். இந்த க்ஷாரத்தை நெய்யிற் கலந்தாவது, உணவில் சேர்த்து மறைத்தாவது உபயோகித்து வருவதோடு, ஸ்நிக்த்தமான போஜனங்களையும் புஜித்துவரவேண்டும். இதனல் உதாவர்த்தம், மலபந்தம், அர்சஸ், குல்மம், பாண்டு, மஹோதரம், கிருமிரோகம் நீரடைப்பு அச்மரீ யென்னும் நீர் த்வாரங்களிலுண்டாகும் கல்லடைப்பு, சோகை, இருதயத்தைப்பற்றிய வியாதிகள், கிரஹணீ ரோகம், மேஹம், ப்லீஹரோகம், வயிற்றுப் பொருமல், ச்வாஸ காஸம் இவைகள் தீரும். 140-143.

பலமான மலபந்தமுள்ள உதாவர்த்தத்திற்கு சிகித்ஸை.

அப்பால், மலம் மிகவும் இறுகிப்போய் கஷ்டப்படும் உதாவர்த்தரோகிகளுக்கு மிகுந்த மலச்சிக்கலுடன் கூடிய அர்சோரோகிகளுக்குக் கூறப்பட்டுள்ள எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். 143½.

அர்சஸ் முதலியவற்றிற்குக் கரஞ்ஜ சுக்தம்.

இரண்டு துலாப் பிரமாணங்கொண்ட புங்கமரப் பட்டையை இடித்து, ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; அது நாலில் ஒருபங்கு கஷாயமாய் மிகும்படியாகக் காய்ந்தபிறகு, அதில் எண்பது பலம் வெல்லத்தைக் கரைக்கவும்; பிறகு எட்டு பலம் த்ரிகடுவையும் நன்றாகச் சூர்ணம் செய்து அதில் சேர்க்கவும். இதை ஒரு மாஸ காலம் பாத்திரத்திலேயே சீலமண்செய்து மூடியிட்டு வைத்திருக்க, சுக்தம் என்கிற காடியாகப் பக்குவமடையும். இது ஜாடராக்னியை விருத்திசெய்து பாசநசக்தியை மிகவும் அதிகரிக்கச் செய்யும்; அநுலோமனமாக வேலைசெய்து, அர்சஸ், ப்லீஹரோகம், குல்மம், மஹோதரம் என்கிற இவற்றையும் நிவ்ருத்தி செய்யவல்லது. 144.

கரஞ்ஜாதி சுக்தம்-இரண்டாவது.

நூறு பலமெடை புங்கம் பட்டையையும், இருநூறு பலம் சித்திரமூலத்தையும், இருநூறு பலம் கண்டங்கத்திரி வேரையும்; மூன்று திரோணம் ஜலத்தில் சேர்த்து, அந்தஜலத்தை நாலில் ஒரு பங்காகச் சுண்டும்படியாகக் காய்ச்சி, அதைவடிக்கட்டி, அதில் நூறு பலம் வெல்லத்தைச் சேர்க்கவும்; பிறகு த்ரிஜாதகம், த்ரிகடு, கிரந்திதகரம், மாதளைவேர், கல்லுருவி, தாமரைக்கிழங்கு, கொத்தமல்லி விதை சவியம், கொட்டைக்கரந்தை, இஞ்சி, புளிவஞ்சி இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்து, நன்கு சூர்ணம்செய்து கல்கமாகச் சேர்க்கவும் கஷாயம் ஆறியபிறகு இருபது பலம் தேனையும், பத்து பலம் பச்சைத் திராக்ஷையையும், பத்து பலம் கொம்மட்டி மாதளையையும் போதுமான அளவு கரும்புத் துண்டுகளையும் சேர்த்து, இதை நெய்வைத்துப் பழகிய பாத்திரத்தில் ஒருமாஸம் ஊற்றி சீலமண்செய்து வைத்திருக்கவும். இது அர்சஸ்ஸுகளை வாளால் அறுப்பதுபோல் அடியோடு அகற்றக்கூடிய சிறந்த சுக்தம் என்னும் காடி; ஜாடராக்னியை தீபநம் செய்வதில் மிகச் சிறந்தது. பாண்டு ரோகம், விஷப்பற்று, மஹோதரம், குல்மம், ப்லீஹரோகம், வயிற்றுப் பொருமல், மூத்திர மார்க்கத்தில் கல்லடைப்பு, நீர்ச்சுருக்கு இவ்வியாதிகளையும் நிவ்ருத்திசெய்யும். 145-148.

பீல்வாதி சுக்தம்.

ஒரு திரோணம் சிறு களாப்பழத்தின் ரஸத்தை வடிக்கட்டி, நெய் வைத்துப் பழகிய பாத்திரத்தில் ஊற்றி, அதில் காட்டாத்திப்பூ, திராக்ஷை, பேரீச்சம்பழம், நெல்லிக்கனி, வட்டத்திருப்பி, அரேணுகம், காஞ்சொறிவேர், புளிவஞ்சி, த்ரிகடு, இலவங்கப் பட்டை, சிற்றேலம், நாகப்பூ, இலந்தங்கொட்டை, லவங்கம், வாய்விடங்கம், மோடி, சித்திரமூலம் இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்துச் சூர்ணம்செய்து கல்கமாகச்

சேர்க்கவும்; பிறகு நூறு பலம் வெல்லத்தையும் கரைத்து, அப்பாத்திரத்தைக் காற்றுப் பிரவேசிக்காத இடத்தில் பதினைந்து தினங்கள் வைத்திருந்து, அப்பால் அதைப் பருகிவர, அர்சஸ்ஸுகளையும், குல்மத்தையும் நிவ்ருத்தி செய்யும்; இந்த சுக்தம் ஜாடராக்னியையும் சீக்கிரம் மிகவும் பலமாய் விருத்தி செய்யும். 149, 150.

தசமூலாதி அவலேஹம்.

தசமூலம், சிவதை வேர், வட்டத்திருப்பி, எருக்கம்வேர், அதிவிடயம், சிறுதேக்கு இவை ஒவ்வொன்றும் பத்து பலமெடையெடுத்து, ஒரு திரோணம் ஜலத்தில் அவற்றை அமிழ்த்தி, கால் பாகமாகச் சுண்டக் காய்ச்சி வடிக்கட்டி, நூறு பலம் வெல்லத்தை அதில் சேர்த்து, த்ரிகடு, சவ்யம், கடுக்காய் இவற்றை வகைக்கு ஐந்து பலமும், சித்திரமூலமும் யவக்ஷாரமும் இரண்டிரண்டு பலமும் சூர்ணம்செய்து கலந்து, கரண்டியில் சூழ்ந்து தேன் பதமாகவரும்வரையில் கிளறியெடுக்கவும். இந்த லேஹ்யத்தை உட்கொள்ள இது குல்மம், ப்லீஹரோகம், அர்சஸ் குஷ்டம், மேஹம், அக்னிமாந்தியம் இவற்றைப் பரிஹரிக்கும். 151, 152.

சித்ரகாதி அவலேஹம்.

ஐம்பது பலம் சித்திரமூலத்தை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, அதை நாலில் ஒரு பங்காகச் சுண்டவைக்கவும்; பிறகு எட்டு பலம் பழைய வெல்லத்தைச் சேர்த்து, மீண்டும் லேஹ்யபதமாகக் காய்ச்சி பக்குவம் செய்துகொள்ளவும்; பிறகு த்ரிகடு, ஜடாமாம்ஸி, கடுக்காய், கோஷ்டம், கோரைக் கிழங்கு, மஞ்சள், வாய்விடங்கம், சித்திரமூலம், ஏலம் இவற்றை ஒவ்வொரு பலமெடுத்து சூர்ணம்செய்து, லேஹ்யத்தில் கூட்டிக் கிளறிவிடவும் இந்த லேஹ்யமானது அர்சஸ், குஷ்டம், ப்லீஹரோகம், குல்மம், மஹோதரம் இவற்றைப் போக்கும். அடிக்கடி இதை உபயோகித்துவந்தால், ஜாடராக்னியும் நன்கு விருத்தியாகும். 153, 154.

வ்யோஷாதி குளிகை.

த்ரிகடு, த்ரிபலை, வாய்விடங்கம், எள், சேராங்கொட்டை, சித்திரமூலம் இவற்றைச் சூர்ணம் செய்து, வெல்லம் கூட்டி குளிகை செய்யவும். இதை யுபயோகித்து வந்தால் அர்சஸ்ஸுகளும் சர்மரோகமும் தீரும். 155.

ஸூரண புடபாகம்.

காருங் கருணைக்கிழங்கு ஒன்று எடுத்து, அதன்மேல் களிமண் பூசி, புடபாக முறைப்படி பக்குவம் செய்யவும். இதை யெடுத்து, மேல் சர்மம் முதலியதை விலக்கிவிட்டு, உப்பையும் எண்ணெயையும் சேர்த்துத் தாளித்து, அர்சஸ்ஸுகளைப் போக்க புஜித்துவரலாம். 156.

ஸூரணாதி குளிகைகள்.

(1) மிளகு ஒரு பங்கு, திப்பிலி இரண்டு பங்கு, சுக்கு மூன்று பங்கு, சித்திரமூலம் நான்கு பங்கு, இவ்வித அளவில் இவற்றைக் கிரஹித்து, காருங் கருணைக்கிழங்கை சித்திரமூலத்தினும் நான்கு மடங்கு அதிகமாகச் சேர்த்து, வெல்லம் கலந்து குளிகை செய்யவும். இக்குளிகைகள் அர்சஸ்ஸை அடியோடு அகற்றும். (2) உலர்ந்த காருங் கருணைக்கிழங்கு பதினாறு பாகம், சித்திரமூலம் அதில் அரைப் பங்கு, சுக்கு இரண்டு பங்கு, மிளகு ஒரு பங்கு; இவ்வளவுப்படி இவற்றை யெடுத்து சூர்ணம் செய்து, வெல்லம் கலந்து ஆட்டி குளிகைகள் செய்யவும். இதுவும் அர்சஸ்ஸைப் போக்குவதற்கு உபயோகமானது. 157, 158.

பத்யாதி சூர்ணம்.

கடுக்காய், சுக்கு, திப்பிலி, புங்கம்வேர், வாய்விடங்கம், சித்திரமூலம் இவற்றை ஸம அளவாகச் சேர்த்து சூர்ணம்செய்யவும்; இச்சூர்ணத்திற்கு ஸமயெடை சர்க்கரையைக்

கலக்கவும். இச்சூர்ணம் படபாக்னியைப் போன்ற வீர்ய முள்ளதாய், வெகு குருவான உணவையும் ஜீர்ணம் செய்யத்தக்கது. 159.

**கனிங்காதி சூர்ணம்.**

வாலுழுவை, மலைப்பணங்கிழங்கு, திப்பிலி, சித்திரமூலம், நாயுருவி விதை, மலைவேம்பு, இந்துப்பு இவற்றை ஸம பாகமாகச் சேர்த்து சூர்ணம் செய்து, வெல்லம் கலந்து குளிகைகள் செய்யவும். இக்குளிகைகள் அர்சஸ்ஸுகளைப் போக்கும். 160.

**ஸைந்தவாதி சூர்ணம் கலந்த தக்ர பானம்.**

இந்துப்பு, சித்திரமூலம், வாலுழுவை, புங்கம்வேர், மஹாநிம்பப் பட்டை இவற்றைச் சூர்ணம் செய்து, மோரில் கலந்து, ஏழு நாட்கள் அந்த மோரை அர்சஸ்ஸுகளை அகற்ற விரும்புபவன் பருகி வரலாம். 161.

**ஒவ்வொரு அர்சஸ்ஸுக்கும் சிறந்த முக்கியௌஷதங்கள்.**

சுஷ்கார்சஸ்ஸுகளில் சேராங்கொட்டையும், ஆர்த்ரார்சஸ்ஸுகளில் குடசப்பாலையின் பட்டையும் சிரேஷ்டமான ஔஷதமாகக் கூறப்படுகின்றன. மோரானது எல்லா அர்சஸ்ஸுகளிலும், எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கத் தகுந்ததாகவும், பலத்தை விருத்தி செய்யக் கூடியதாகவும், மலத்தை நன்கு வெளிப்படுத்துங் குணமுடையதாகவும் கருதப்படுகிறது. 162.

**அர்சஸ்ஸில் பொதுவாக உபயோகிக்கக் கூடியதும் கூடாததும்.**

இறுகி அடைபட்டுள்ள மலங்களை உடைத்து, அவற்றையும் அபான வாயுவையும் அநுலோமமாகக் கொண்டுவருவதற்கு எவை ஏற்றவையோ, ஜாடராக்னியை எவை பலப்படுத்துமோ, அவ்வித குணமுள்ள அன்ன-பானங்களையும் ஔஷதங்களையும் அர்சோரோகி உபயோகிக்க வேண்டும்; இவற்றிற்கு எதிரிடையான குணமுள்ளவைகளை விலக்கிவிட வேண்டும். 163.

**அர்சஸ் முதலியதில் ஜாடராக்னியைப் பாதுகாப்பதன் பிரதானம்.**

அர்சஸ், அதிஸாரம், கிரஹணீ என்னும் இக்கோளாறுகள் பெரும்பாலும் ஒன்றோடொன்று காரணங்களாகயிருந்து, ஒன்றையொன்று உற்பத்திசெய்யு மியல்புடையன. இவை ஜாடராக்னி குன்றிவிடுமானால் உற்பத்தியாகும்; அது விருத்தியானால் அடங்கிவிடுகின்றன; ஆகவே ஜாடராக்னியையே இதில் விசேஷமாகப் பாதுகாக்கவேண்டும். 164.

---

## ஒன்பதாவது அத்தியாயம்.

இனி அதிஸார சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது:—

**அதிஸாரத்தில் பொதுவாக லங்கநம் செய்வது அவசியம்.**

அதிஸாரமானது பெரும்பாலும் ஜாடராக்னியைச் சீரழியச் செய்து, ஆமாசயத்தை ஆச்ரயித்து உற்பத்தியாகின்றது; ஆகையினால் வாதத்தினா லுண்டாகிற அதிஸாரத்திலும் லங்கந சிகித்ஸை செய்வது அநுகூலமாகும். 1.

**அதிஸாரத்தில் வமநம் செய்விக்கும் நிலைமை.**

வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், வாயில் அதிகமாக நீர் ஊறுதல் இவ் விகாரங்களால் வருந்தும் அதிஸார ரோகிக்கு வமநம் செய்விக்க வேண்டும். 1½.

**அதிஸாரத்தில் மலப் போக்கைத் தடுக்கக்கூடாத நிலைமைகள்.**

எந்த தோஷங்கள், மிகவும் அதிகரித்தும் மிதமிஞ்சி பக்குவமானதும் பக்குவமாகாததுமான உணவுகளோடு மிச்ரமாகவும் இருக்கின்றனவோ, அத்தோஷங்கள் அதிஸாரமாகப் புரி

ணமிக்கும், அவ்வித அதிஸாரங்களில் பேதி யாவதை நிறுத்த முயலாமல் உபேக்ஷிப்பதே ஏற்ற சிகித்ஸையாகும்; மிகவும் பொருமிப் பொருமி வெளிவர முயல்பவையும், தனக்குத் தானே இடம்விட்டுப் பெயர்ந்தோடி வெளியாகும் தன்மையனவுமான அவ்வித தோஷங்கள் அதிஸார ரூபமாய் வெளியாய்விடுவதே நலம். ஆமாதிஸாரத்தில் முதலில் மலத்தைக் கட்டுவதற்கு ஔஷதம் பிரயோகிக்கக் கூடாது. 2-3½.

அதிஸாரத்தில் ஹரீதகியைப் பிரயோகிக்கும் நிலைமை.

வயிற்றுப் பொருமல், குருத்வம், வயிற்று வலி, வயிறு ஸ்திமிதமாதல் ஆகிய இக்கோளாறுகளை யுண்டுபண்ணுவதும், வயிற்றில் கட்டுண்டதுமான தோஷத்தின் பற்றுள்ள அதிஸாரத்தில் கடுக்காய் பிராணனைக் காக்கக்கூடிய ஔஷதமாகும். 4½.

மத்திமதோஷமான அதிஸாரத்திற்கேற்ற சிகித்ஸைகள்.

(1) மத்திம தோஷமுள்ள அதிஸார ரோகியானவன், வாஸனைப்புல், திப்பிலி, சுக்கு, வசம்பு, கொத்தமல்லி விதை, கடுக்காய் இவற்றை ஜலத்தில் நன்முகக் குழம்புபோல் காய்ச்சிக் குடிக்கலாம். (2) அல்லது பில்வப்பழம், கொத்தமல்லிவிதை, கோரைக்கிழங்கு, சுக்கு, வெட்டிவேர் இவற்றின் குழம்பையாவது, (3) பிடாலலவணம், வட்டத்திருப்பி, வசம்பு, கடுக்காய், வாய்விடங்கம், சுக்கு இவற்றின் குழம்பையாவது, (4) சுக்கு, கோரைக்கிழங்கு, வசம்பு, திப்பிலி, பில்வப்பழம், வெட்பாலரிசி, பெருங்காயம் இவற்றின் குழம்பையாவது பருகலாம். 5-7.

அற்ப தோஷமுள்ள அதிஸாரத்தில் லங்கநமும் பிறகு அன்ன-பான க்ரமமும்.

(1) அற்ப தோஷமுள்ள அதிஸாரரோகிகளுக்கு உபவாஸம் செய்விப்பதே போதுமான நல்ல சிகித்ஸை. (2) வசம்பையும் அதிவிடயத்தையும் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது, கோரைக்கிழங்கு பர்ப்பாடகம் இவற்றுல் பக்குவம்செய்த ஜலத்தையாவது, வெட்டிவேர் சுக்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது உபவாஸகாலத்தில் உட்கொள்ளலாம். (3)லங்கநம் செய்து நன்கு பசியினுல் வாடி வருந்தும்போது, தகுந்த போஜன காலம் வந்ததும் இலகுகுணமுள்ள அன்னத்தைச் சொற்ப அளவாகப் புஜிக்கச்செய்யலாம்; அப்படிச் செய்வதால் அப்பிணியாளி சீக்கிரத்தில் நற்சுவையையும், ஜாடராக்னிக்கு பலத்தையும், தேஹவண்மையையும் பெற்று சுகமடைகிறுன். (4) பிறகு அவரவருக்கு ஸாத்தியமானபடி மோரையாவது, காஞ்ஜிகமென்னும் காடியையாவது, யவாகூ வென்னும் கஞ்சியையாவது, தர்ப்பணகுணமுள்ள பானகத்தையாவது, ஸுரையையாவது, திராக்ஷா ரஸத்தையாவது கொடுத்து அப்பிணியாளியை உபசரிக்கவேண்டும். (5) இதற்குமேல் பில்வப்பிஞ்சு, கச்சோரம், கொத்தமல்லிவிதை, பெருங்காயம், புளி, மாதளம்பழம், பலாசவிதை, கொட்டைக்கரந்தை, ஓமம், பிடாலலவணம், இந்துப்பு, லகுபஞ்சமூலம், பஞ்சகோலம், வட்டத்திருப்பி ஆகிய க்ராஹி, தீபநம், பாசநம் என்கிற குணமுள்ள சரக்குகளைக்கொண்டு போஜன பதார்த்தங்களைப் பக்குவம்செய்து அப்பிணியாளிக்குக் கொடுக்கலாம்.[1] 8-12½.

வாத-பித்த கபாதிஸாரங்களுக்கு ஏற்ற பேயாமுறைகள்.

(1) மோர்மல்லிகை, சிற்றுமுட்டி, பில்வவேர், சிற்றுமல்லி இவற்றுல் பக்குவம் செய்யப்பெற்றதும், புளிப்பு மாதளம்பழ ரஸத்தினுல் அம்லமாகச் செய்யப்பெற்றதுமான பேயாவை கபமும் பித்தமும் மேலோங்கிய அதிஸாரத்

1. பஞ்சமூலங்களையும், க்ராஹி-தீபநம் முதலியவற்றையும் பற்றிய விவரங்களை முதற்புத்தகத்தின் விஷய அகராதியைக் கொண்டு பார்த்துக்கொள்க.

தில் பருகக் கொடுக்கலாம். (2) கடுக்காய், மோடி, பில்வவேர் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவை அபாநவாதத்தை அநுலோமனமாக வெளிப்படுத்த உட்கொள்ளச் செய்யலாம். 13, 14.

தோஷம் அதிகரித்து மலமும் இறங்கி அடிக்கடி மலங் கழிபவனுக்கு ஏற்ற சிகித்ஸை.

(1) மிக்க அதிகரித்த தோஷமுள்ளவனும், நல்ல ஜாடராக்னி யுடையவனுமான எப்பிணியாளிக்குக் கட்டிக் கட்டியாகவும் சொற்பமாகவும் அதிஸாரம் ஆகின்றதோ, அவனுக்கு-திப்பிலி, வாய்விடங்கம், த்ரிபலே இவற்றின் கஷாயங்களைக் கொடுத்து நன்கு விரேசனம் செய்விக்கலாம். (2) விரேசனமான பிறகு அந்த ரோகிக்கு வாதஹரமாகவும் தீபநமாகவுமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்ட பெயாவைப் பருகக் கொடுக்கலாம். 15, 15½.

ஆம தோஷம்-வயிறு கடுப்புகளுடன் கூடிய அதிஸாரஸத்திற்கேற்ற சிகித்ஸைகள்.

ஆம தோஷம் பக்குவமடைந்து, ஜாடராக்னியும் உத்தீபநமா யிருக்கையில் எவனுக்கு நுரைத்தும், பிசுபிசுப்பாகவும், வலியோடு கூடியதாகவும், கட்டிக் கட்டியாகவும், அடிக்கடியும், சொற்பம் சொற்பமாகவும், மிகச் சொற்ப மலத்தோடுகூட அல்லது மலமே யில்லாமலும், ஆஸனக்கடுப்பை யுண்டு பண்ணிக்கொண்டும் அதிஸாரம் உண்டாகின்றதோ அவன் தயிர், தைலம், க்ருதம், பால் இவற்றுள் எதிலேனும் சுக்கையும் வெல்லத்தையும் இடித்துப்போட்டு அதைச் குடிக்கலாம்; அல்லது இலந்தம்பழங்களை வெல்லத்திலும் தைலத்திலும் சேர்த்து வேகவைத்தாவது உண்ணலாம்; மலபந்தத்திற்குக்கூறியுள்ள சாகவர்க்கங்களை [1] அதிக ஸ்நேஹபதார்த்தங்களுடன் கலந்தாவது புஜிக்கலாம்; அப்படியே ஸ்நேஹங்கலந்த மாம்ஸரஸங்களைத் தயிர் யாதளம்பழரஸம் இவற்றில் பக்குவம் செய்தாகிலும் நன்றாகப் பசியுண்டாயிருக்கையில் உட்கொள்ளச் செய்யலாம். அங்ஙனம் பசித்திருப்பவனுக்கு அடியில் கூறப்படுமவைகளிலும் எதையேனும் கொடுக்கலாம்; எள்ளையாவது, உளுந்தையாவது, பயறையாவது கூட்டி, நன்றாகச் சமைத்தசம்பா அரிசியினாலான அன்னத்தை புஜிக்கச்செய்யலாம்; அல்லது சுக்கு ரஸத்திலாவது, இளசான முள்ளங்கிச் சாற்றிலாவது, வட்டத்திருப்பியின் இரஸத்திலாவது, ஆரைக்கீரையின் சாற்றிலாவது சம்பா அரிசியைப் பக்குவம் செய்து புஜிப்பிக்கலாம்; கள்ளியிலைச்சாறு, ஓமக்கஷாயம், வெள்ளரி ஸ்வரஸம், பாலைக்கீரையின் சாறு, பெறும்பாகல் ரஸம் இவற்றிற் பக்குவம் செய்த சம்பா அரிசியன்னத்தையாவது கொடுக்கலாம்; பசளைக் கீரை, ஜீவந்தி, வாலுழுவை, சக்கிரவர்த்திக் கீரை இவற்றின் இரஸத்திலாவது சம்பா அரிசியைப் பக்குவம் செய்து உபயோகிக்கலாம். சூர்யகாந்தியின் ஸ்வரஸத்திலாவது, செவ்வாமணக் கிலைகளின் ஸ்வரஸத்திலாவது, புளிவஞ்சி ஸ்வரஸத்திலாவது, அவ்விதமே சமைத்துபயோகிக்கலாம்; ஆமை, வர்த்தகம், லோபாகம் என்கிற பக்ஷிகள், மயில், தித்திரி பக்ஷி, கோழி இவற்றின் மாம்ஸரஸத்திலாவது சம்பா அன்னத்தைக் கூட்டி புஜிப்பிக்கலாம். 16-22.

பக்வாதிஸாரத்திற் கேற்ற யவாகூ.

(1) பில்வப்பழம், கோரைக்கிழங்கு, தான்றிக்காய், காட்டாத்திப்பூ, சுக்கு இவற்றை மோரில் சேர்த்து, யவாகூவாகப் பக்குவம் செய்து உபயோகிக்க, பக்வாதிஸாரம் நிவ்ருத்தியாகும். (2) அங்ஙனமே விளா, காஞ்சொறி, கண்டு பாரங்கி, நாக

1. அர்சஸ் சிகித்ஸையிற் கூறப்பட்ட சாக வகைகள்.

மல்லி, ஆல், நறுவிலி, மாதளை, சணல், பருத்தி, இலவை, வாழை இவற்றின் தளிர்களைச் சேர்த்துக் காய்ச்சிய யவாகூவும் பக்வாதிஸாரத்தைப் போக்கும். 23,24.

ப்ரவாஹிகைக்கு ஏற்ற கலங்கள்.

(1) பில்வப் பிஞ்சின் கல்கம், அதற்கு ஸம அளவான எள்ளின் கல்கம் இவற்றை ஸ்நேஹம் கூட்டிய புளித்தத்தயிரின் ஆடையோடு கலக்கிப் பக்குவம் செய்தால், அம்முறை கலம்[1] எனப்படும். இது ப்ரவாஹிகா என்கிற வயிற்றுக் கடுப்பைப் போக்கும். (2) மிளகு, கொத்தமல்லி விதை, ஜீரகம், புளி, கச்சோரம், பிடாலலவணம், மாதளம்பழம், காட்டாத்திப்பூ, வட்டத்திருப்பி, த்ரிபலை, பஞ்சகோலம், யவக்ஷாரம், விளாம்பழம், மாம்பழம், நாவல்பழம், ஓமம் இவை ஸம பாகம், பில்வப்பழம் ஆறு பாகம் இவற்றையெல்லாம் ஒரு மிக்க தயிர், பயறு சமைத்த நீர், வெல்லம், யமகஸ்நேஹம் இவற்றில் கலக்கி பக்குவம் செய்யப்படும் முறை அபராஜித கலம் எனப்படும். தீபநம், பாசநம், க்ராஹி, ருச்யம் என்கிற குணங்கள் இதற்குண்டு; ப்ரவாஹிகையைப் போக்கும், 25-28.

மலக்ஷயத்தில் உபயோகமான சில பத்திய உணவுமுறைகள்.

(1) இலந்தம்பழம், பில்வப்பிஞ்சு இவற்றினுடையவும், சம்பா அரிசி, யவதானியம், பயறு, உளுந்து, எள்ளு இவற்றினுடையவும் கல்கங்களைச் சேர்த்து தாந்யயூஷம்[2] என்கிற ஒருவகையான கனத்த கஞ்சியைப் பக்குவம் செய்யவும்; யமகஸ்நேஹத்தில் அதை ஒரு மிக்கக் கலந்து தாளித்து, தயிரையும் மாதளம்பழரஸத்தையும் சேர்த்துக்கொள்ளவும்; மலம் க்ஷயித்துப்போய்[1], வாய் வறட்சியுற்று வருந்தும் பிணியாளிக்கு இத்துடன் சம்பா அரிசியினாலான அன்னத்தைக் கொடுத்து புஜிக்கச் செய்யலாம். (2) தயிரின் ஆடையை யமகஸ்நேஹத்தில் சேர்த்து, வெல்லமும் சுக்கும் கூட்டித்தாளித்து, அதையாவது அப்பிணியாளிக்குக் கொடுக்கலாம். (3) யமகஸ்நேஹத்தில் பக்குவம் செய்த ஸுரை யென்னும் மதுவையாவது வியஞ்ஜநமாக உபயோகிக்கலாம். (4) வெள்ளுள்ளியின் யூஷத்தை யமகஸ்நேஹத்தில் தாளித்து, எலுமிச்சம்பழரஸம் சிறிது சேர்த்து, அம்லமாகச் செய்து, அதையாவது உட்கொள்ளச் செய்யலாம். (5) யமகஸ்நேஹத்தில் வறுத்தெடுத்த மாப்பண்டங்களில், த்ரிகடுகப் பொடியையும் தூவி, அவற்றையாவது உண்ணச் செய்யலாம். (6) அவ்விதமே உளுத்த மாவையும் நன்றாகப் பக்குவம் செய்து, நெய்யின் மேற் படிந்துள்ள ஏட்டையும் அநுபானமாகக் கொண்டாவது உபயோகிக்கச் செய்யலாம். (7) அல்லது செம்மறியாடு, வெள்ளாடு இவற்றின் குடல் முதலிய உள்ளவயவங்களின் மாம்ஸரஸத்தை நன்றாகப் பக்குவம் செய்து வடிகட்டி, மாதளம்பழரஸத்தைச் சேர்த்து அம்லமாகச் செய்து, கொத்தமல்லிவிதை-ஸ்நேஹம்-சுக்கு இவற்றையும் கூட்டி, செஞ்சம்பா அன்னத்தை இத்துடன் புஜிப்பதோடு, அம்மாம்ஸரஸத்தையும் பருகலாம்; இதை உபயோகிப்பதால் மலக்ஷயத்தினலான கோளாறுகளிலிருந்து அப்பிணியாளி விடுபடுகிறுன். 29-34½.

ப்ரவாஹிகையில் சில சில்லரை முறைகள்.

(1) பில்வப்பிஞ்சு, தைலம், திப்பிலி, சுக்கு இவற்றை நன்றாகத் துவைத்து, வெல்லமும் சேர்த்து லேஹ்யமாகப் பக்குவம் செய்யவும். வலியுடன் கூடிய

1. கலம் என்பது தயிர்ப்பச்சடி முதலியதைப் போன்ற ஒரு வித பாகம்.

2. தாந்ய யூஷம்-பல தானியங்களாலான ஒரு வித குழம்பு.

1. ப்ரவாஹிகையில் மலம் இறுகி க்ஷீணித்து சீதமும் இரத்தமும் மாத்திரம் வெளியாவது பிரவஹித்தம்.

ப்ரவாஹிகாரோகியானவன் அபானவாயுஅடைபட்டிருக்கையில் இந்த லேஹ்யத்தை யுட்கொள்ளலாம். (2)வெள்ளிலோத்திப்பட்டை, காட்டாத்திப்பூ, இலந்த இலை இவற்றைக் கல்கமாக ஆட்டி, தயிரின் ஆடை, தேன், விளாம்பழஸ்வரஸம் இவற்றில் கரைத்து ப்ரவாஹிகையில் பருகலாம்.(3) அபானவாயுவும் மலமும் சிக்கிக் கொண்டும் அதிக வலியும் கடுப்புமுண்டாய் வருந்துபவனும்,பிசுபிசுப்பான இரத்தம் கசிந்துகொண்டு நாவறட்சியினுல் கஷ்டப்படுகிறவனுமான ப்ரவாஹிகாரோகி பாலைவிசேஷமாகப் பிரயோகித்து ஆப்யாயம் செய்யஉரியவனுகிருன்; யமகஸ்நேஹத்தைக் கொடுத்து அதன் மேல் ஸாதாரண பசும்பாலையாவது, தாரோஷ்ணத்தையாவது கொடுக்கலாம். (4) மீண்டும் ஆமணக்கன் வேரைப் போட்டுக் காய்ச்சிய பாலையாவது, (5) பில்பப்பிஞ்சைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது பருகக் கொடுக்கலாம். (6)பாலை அதற்கு மூன்று பங்கு அதிகமான ஜலத்தில் சேர்த்து விளாவி, அதில் இருபது கோரைக்கிழங்குகளை உடைத்துப் போட்டு, பால் மாத்திரம் மிகும்படியாகக் காய்ச்சி யெடுத்துப் பானம் செய்ய வேதனையுடன் கூடிய சீதபேதி நிவ்ருத்தியாகும். (7) திப்பிலியையாவது மிளகையாவது மிக்க மிருதுவாகச் சூர்ணம் செய்து, ஜலத்தில் கலந்து உட்கொண்டால், வெகுநாட்களாகத் தொடர்ந்துவரும் ப்ரவாஹிகை சீக்கிரம் தீரும். (8) சீதப்பெருக்கு இல்லாமல் வலிமாத்திரம் அதிகரித்து அதனுல் வருந்துபவனும், ரூக்ஷமான குடலையுடையவனுமான பிணியாளிக்கு யவக்ஷாரம் கலந்த க்ருதத்தைக் கொடுத்துவரலாம். (9) தயிரின் ஆடை, ஸாரையென்னும் மதுவின் ஆடை இவற்றிலும், தசமூல கஷாயத்திலும், இந்துப்பையும் பஞ்ச கோலங்களையும் கல்கமாகச் சேர்த்துப் பக்குவம் செய்தெடுத்த தைலமானது வயிற்றுக்கடுப்பை அப்பொழுதே நிவ்ருத்தி செய்யும். (10) சுக்கு ஆறு பலம், கிரந்திதகரம் இரண்டு பலம், இந்துப்பு இரண்டு பலம், எண்ணெய் பதினுறு பலம் இவற்றை நாலு மடங்கு தயிரில் சேர்த்துப் பக்குவம் செய்து கொள்ளவும்; இது சீதபேதியைப் போக்கும் (11) மாம்ஸம், பால், நெய் இவை ஒரு வகையில் மலச்சிக்கலையும் வலியையும் போக்கக் கூடியன; பானம் செய்வதற்கும் அநுவாஸனத்திற்கும், அப்யங்கத்திற்கும் உபயோகிக்கப்படுகிற தைலம் மற்றொரு வகையில் அச்செயல்களை நிறைவேற்றக் கூடியதாம்; எங்ஙனமெனில், கோளாறடைந்த வாயு வலியையுண்டுபண்ணும்; அவ்வித வாத விகாரங்களைப் போக்கும் குணமுடைய ஔஷதங்களுள் தைலமே முதன்மையானது. பித்தம் முதலிய இதர தாதுக்களென்னும் தோஷங்களால் நெருக்கி அழுத்தப்படுவதால், இயற்கையிலேயே அசையும் சுபாவமுள்ளதும், பரவியோடும் தன்மையுடையதுமான வாயு தன் ஸ்த்தாநத்தில்[1] இருந்துகொண்டு துன்பம் விளைவிக்கும்; ஆகவே ஜாடராக்னி மந்தமாயிருப்பவனுக்கும் தைலம் முறைப்படி யுபயோகிக்கப் படுமாளுல், அது மிகவும் நன்மையுண்டுபண்ணும்; ஆம், வாதாசயத்தில் தைலம் பிரவேசித்து ஸ்திக்தமாளுல் ப்ரவாஹிகாரோகம் நிலை நிற்கமாட்டாது மலம் க்ஷீணித்து இதர தோஷங்கள் அதனதன் ஸ்த்தாநங்களிலிருந்து நழுவி பலஹீனப்பட்டிருக்கையில், வாததோஷம் மாத்திரம் மிக்க பலம் பெற்றிருக்கையில், குடலிற் கடுப்புடன் வயிற்றுப்போக்குள்ள எந்த ப்ரவஹிகாரோகிதான், உள்ளும் புறமும் தைல முபயோகிக்காமல் பிழைத்திருக்க முடியும்? 35-47.

---

1 பக்குவாசயம் எனப்படும் கோஷ்டத்திலுள்ள ஒரு பாகம் வாதாசயம் எனப்படுகிறது; ஆகவே அது வாத ஸ்த்தாநமாகும்.

(1) குதத்தில் வலியுண்டாயிருக்கையிலும், அந்த அவயவம் நழுவிப் போகையிலும் க்ருதத்தையும் பாலையும் இலந்தம்புளி-புளியாரை இவற்றின் இரஸத்திலும், தயிரிலும், சுக்கின் கல்கத்திலும் பக்குவம் செய்து பிரயோகிக்கவேண்டும். (2) முற்கூறிய இலந்தம் புளி முதலியவைகளை வெகு மிருதுவாகக் கல்கமாகச் செய்து சேர்த்து, கொத்தமல்லி விதை, மிளகு, பிடால லவணம், பஞ்சகோலங்கள், மாதளை இவற்றில் பக்குவம் செய்த க்ருதத்தையும் உபயோகிக்கலாம். (3) தசமூல கஷாயத்திற் பக்குவம் செய்த ஸ்நேஹ வஸ்தியையாவது பிரயோகிக்கலாம். (4) கச்சோரம், சதகுப்பி, கோஷ்டம் இவற்றின் கஷாயத்திற் பக்குவம் செய்த ஸ்நேஹத்தையாவது, (5) வசம்பு, சித்திரமூலம் இவற்றின் கஷாயத்திற் பக்குவமான ஸ்நேஹத்தையாவது வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். (6) மதுர பதார்த்தங்களையும் அம்ல பதார்த்தங்களையும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் பக்குவம் செய்த தைலத்தையாவது க்ருதத்தையாவது ப்ரவாஹிகையிலும், குதம் நெகிழ்ந்து வெளியாவதிலும், மூத்திரம் அடைபடுகையிலும், இடுப்புப் பிடித்தலிலும் அநுவாஸநவஸ்தியாகப் பிரயோகிக்கலாம். (7) நழுவிப்போன குதத்திற்கு ஸ்நேஹங்களை லேபநம் செய்து, மிருதுவான பதார்த்தங்களால் ஸ்வேதநம் செய்து, மெதுவாக அதை உட்செலுத்திவிடவும்; அப்பால் மத்தியில் அமைக்கப்பெற்ற த்வாரத்துடன் கூடிய சர்மத்தினால் கோபணுபந்தம் என்கிற[1] பந்தநத்தையிட்டுக் கட்டிவிடவும்.

குதப்ரம்ச சிகித்ஸை.

(8) மஹா பஞ்சமூலத்தினால் கஷாயம் பக்குவம் செய்யவும்; அதில் பால் சேர்த்து வாதஹரமான கல்கங்களையும்[1] கூட்டி, குடல் நீக்கிய காட்டெலியின் இறைச்சியைச் சமைக்கவும்; அதில் தைலத்தைப் பக்குவம் செய்து[2] பானம் செய்யவும், அப்பங்கம் செய்யவும் உபயோகித்தால் குதநெகிழ்ச்சி நிவ்ருத்தியாகும். 48-53½.

(1) ஆமதோஷத்துடன் கூடிய பித்தாதிஸாரத்தில் தீக்ஷ்ணமும் உஷ்ணமுமான முறைகளை விலக்கி, முன் வாதாதிஸாரத்திற் கூறிய விதமாகவே லங்கந சிகித்ஸையைச் செய்யவேண்டும். (2) அதில் நாவறட்சி யுண்டாகுமானால் நிலவேம்பும் நன்னாரி வேரும் கூட்டி பக்குவம்செய்த ஷடங்க பாநீயத்தைப்[3] பானம் செய்விக்கலாம். (3) பசியுண்டானால் கத்திரி, கண்டங்கத்திரி, தண்ணீர்விட்டாங் கிழங்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, சிற்றாமல்லி, மேர்மல்லி இவற்றின் கஷாயத்திற் பக்குவம் செய்ததும், ஆகவே ஜாடராக்னியைத் தூண்டுந் தன்மையையது மான பேயா முதலிய உணவு அநுகூலமாகும். (4) முற்கூறியவாறு செய்தும் அதிஸாரம் நிற்காமல் தொடருமானால், குடசப்பாலையின் கனியையும், அதன் பட்டையையும், அதிவிட

பித்தாதிஸாரத்திற்கேற்ற சிகித்ஸை.

1. கோபணு பந்தம்—கச்சுப்பட்டையைப் போன்ற இடுப்பில் சுற்றிக் கட்டுவதற்கான வஸ்திரப்பட்டை. நடுவில் கௌபீநம் போல் முன்புறமிருந்து பின்புறமாக இழுத்துக் கட்டுவதற்கேற்ற நடுவில் துவாரத்துடன் அமைக்கப்பட்டுள்ள பந்தந வஸ்திரம்.

1 சிற்றரத்தை, ஆமணக்கு முதலியவை வாதஹரமான சரக்குகள்.

2. சரக்குகளுக்கு நாலு மடங்கு ஜலம் சேர்த்து, நாலில் ஒரு பங்காகக் கஷாயத்தைச் சுண்டவைக்கவும். கஷாயத்தில் நாலில் ஒரு பங்கு ஸ்நேஹமும், ஸ்நேஹத்தில் ஸம அளவு பாலும், ஸ்நேஹத்தில் நாலிலொருபங்கு கல்கத் திரவியமும் சேர்க்கவேண்டும் என்பது பொது விதி.

3 ஷடங்க பாநீயம்—3 வது பக்கத்தில் "பித்த ஜ்வரம் முதலியவற்றில் உட்கொள்ளத் தகுந்த குடிநீர்." என்னும் தலைப்பின் கீழ் "சோரைக்கிழங்கு முதலிய" என்பதலால் குறிப்பிடப்படும் கஷாயம்.

யத்தையும் தேன் சேர்த்து அரைத்துக் கல்கமாகச் செய்து, அரிசி கழுவிய நீரோடு உட்கொள்ளச் செய்யலாம். (5) வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, வெட்பாலையின் பட்டை, மரமஞ்சள், கிரந்திதகரம், சுக்கு இவற்றையாவது தேன் விட்டு அரைத்து, அரிசி கழுவிய நீரோடு உட்கொள்ளச் செய்யலாம். (6) அதிவிடயம், பில்வ வேர், குடசப்பாலையின் பட்டை, வெட்டிவேர், கோரைக் கிழங்கு இவற்றின் கஷாயத்தையும் பருகக் கொடுக்கலாம். (7) அல்லது அதிவிடயம், பெருங்குரும்பை, மஞ்சள், வாலுழுவை, இரஸாஞ்ஜநம் இவற்றின் கஷாயத்தையாவது தேன் கலந்து பானம் செய்விக்கலாம். (8) அல்லது அதிவிடயம், சுக்கு, கோரைக்கிழங்கு, வாலுழுவை, சிறுதேக்கு இவற்றின் கஷாயத்தையாவது தேன் கூட்டி உட்கொள்ளச் செய்யலாம். (9) வெட்பாலரிசி ஒரு பல மெடையெடுத்து, கஷாயமாகக் காய்ச்சி யுட்கொண்டு, மாம்ஸ ரஸத்தையும் எவனொருவன் பருகிவருகிறானோ, அவன் பித்த ஸம்பந்தமான வயிற்றுப் போக்கை சீக்கிரம் நிவ்ருத்தி செய்துகொள்கிறான். (10) இவ்விதமே கோரைக் கிழைங்கையும் கஷாயம் செய்து, அதில் தேன் ஊற்றி பானம் செய்யலாம். (11) இலவம் புஷ்பத்தின் காம்புகளைச் சேர்த்து, ஹிம கஷாயம் பக்குவம் செய்தாவது, அதில் தேன் கூட்டி யுட்கொள்ளலாம். (12) நிலவேம்பு, கோரைக்கிழங்கு, வெட்பாலரிசி, இரஸாஞ்ஜநம் இவற்றின் சூர்ணத்தையாவது, (13) மரமஞ்சள், வெட்டிவேர், பில்வப்பழத்தின் உட்சதை, காஞ்சொறிவேர் இவற்றின் சூர்ணத்தையாவது, (14) எள்ளு, இலவம்பிசின், வெள்ளிலோத்தி, மஞ்ஜிஷ்டி, தாமரை, கருநெய்தல் இவற்றின் சூர்ணத்தையாவது, (15) சுக்கு, காட்டாத்திப்பூ, மாதளம்பட்டை, நெய்தல் இவற்றின் சூர்ணத்தையாவது தேன் கூட்டி, அரிசி கழுவிய நீரோடு உண்ணலாம். 54-63.

பக்வாதிஸார சிகித்சைகள்.

(1) மஞ்சள், வாலுழுவை, வெள்ளிலோத்தி, ஏலக்காய் இவற்றின் கஷாயம் பக்வாதிஸாரத்தைப் போக்கும். (2) ரோத்ராதி கணம், அம்பஷ்டாதி கணம், ப்ரியங்க்வாதி கணம் இவற்றைத்[1] தனித்தனியே கஷாயமிட்டு, அங்ஙனமே பானம் செய்யலாம். (3) பெருவாகைப் பட்டை, அதிமதுரம், ஞாழல், மாதளந் தளிர்கள் இவற்றைக்கொண்டு பேயா, விலேபீ, கலம் என்கிற பச்சடி இவற்றைச்செய்து, தயிரும் மாதளம்பழரஸமும் கூட்டி யுட்கொள்ளலாம். (4) அவ்விதமே விளாம்பழம், பில்வப்பழம், மாம்பழம், இலந்தம்பழம் இவற்றின் உட்சதைகளை யெடுத்து பேயா முதலியவற்றைப் பக்குவம் செய்து உபயோகிக்கலாம். (5) ஆமதோஷம் நீங்கிய பக்வாதிஸாரத்தில் வெள்ளாட்டுப் பாலைக் கொடுக்கவும். (6) அதிஸாரத்திற்குக் காரணமான தோஷம் அதிகமாயிருந்து அதனால் வியாதி நிவ்ருத்தி யாகாவிட்டால், பிணியாளி தேஹ வன்மையுள்ளவனாயிருந்தால் அவனுக்கு விரேசகம் செய்விக்கலாம். 64—66½.

இரத்தம் சலந்த அதிஸாரத்திற்கான சிகிச்சை.

(1) எவனொருவனுக்கு மலமும் இரத்தமும் மாறி மாறி வெளியாகின்றதோ, அவன், முருக்கங்காயைக் கஷாயமிட்டு அதைக் குடிக்கலாம்; அல்லது அதையே பாலுடன் கூட்டிப் பருகலாம்; பிறகு அவரவருடைய சரீரவன்மைக்கு ஏற்றவளவாக இளஞ்சூடான பாலையே அநுபானமாய் பானம் செய்யலாம். இதனால் வயிற்றிலுள்ள மலம் தாராளமாய் வெளிப்படுத்தப் பட்டுப்போனால், அதிஸாரம் முதலிய வயிற்றைப்பற்றிய கோளாறு நிவாரணமாய்விடும்.

---

1 ரோத்ராதி கணம் முதலியவற்றைப் பற்றிய விவரங்களை ஸூத்திர ஸ்தானத்தின் 15-வது அத்தியாயத்திற் பார்க்க.

(2) முருக்கங்காயைப் போலவே கழற்சிக் காயையும் குடலை சோதநம் செய்வதற்காக உபயோகிக்கலாம். 67—69.

வயிற்றுவலியில் அநுவாஸன வஸ்தி.

மலங்களை வெளிப்படுத்திய பிறகு பிணியாளிக்கு ஸம்ஸர்கீ யென்கிற பத்தியோபசாரம்[1] செய்கையில் வயிற்றுவலி தொடருமானால், அவனுக்கு யதோசிதமாக அநுவாஸனவஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும். சதகுப்பி, தண்ணீர் விட்டாங்கிழங்கு, பில்வவேர், அதிமதுரம் இவற்றின் கஷாயத்தில், நாலிலொரு பங்கு நெய்யும், நெய்க்கு நாலிலொரு பங்கு எண்ணெயும், பாலும் கூட்டி பக்குவம் செய்துள்ள க்ருதத்தை இப்பிணியாளிக்கு அநுவாஸனமாகப் பிரயோகிக்கலாம். 70, 71.

நிற்காத அதிஸாரத்தில் பிச்சாவஸ்தி.

இவ்விதமெல்லாம் செய்தும் அதிஸாரம் நிவ்ருத்தியாகாமற்போனால், அப்பால் பிச்சாவஸ்தியை[1] அடியிற் கூறப்படும் ஔஷதத்தைக் கொண்டு பிரயோகிக்க வேண்டும்:—இலவம் பூக்களின் ஈரமான காம்புகளைத் திரட்டி யெடுத்து, பசுமையான தர்ப்பைகளால் அவற்றைச் சுற்றவும்; கறுத்த களிமண்ணால் அதற்கு மேற்பூச்சிடவும். பசுஞ்சாணவறட்டிகளையெரித்து, அவ்வக்னியினால் அதைக் காய்ச்சி யுலர்த்தவும். மேற்பூச்சாயுள்ள மண் உலர்ந்த பிறகு, உள்ளடங்கிய புஷ்பக்காம்புகளை யெடுத்துத் துவைத்து, அதை ஒரு பிடியளவு எடுத்துக் கொள்ளவும்; அதை ஒரு படி பால் சேர்த்து அரைத்து, வடிகட்டி, அதைக்கொண்டு நிரூஹவஸ்தி செய்விக்கவும். பிறகு நதம் என்கிற கந்தத்திரவ்யம், அதிமதுரம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, நெய்யும் தேனும் கூட்டி, பக்குவம் செய்த தைலத்தினால் அப்யங்கம் பண்ணி, ஸ்நானம் செய்து, பாலையாவது, ஜாங்கலமாம்ஸரஸத்தையாவது சேர்த்துக் கொண்டு போஜனம் செய்யலாம். விரேசனமாகவும், ஆஸ்த்தாபநவஸ்தியாகவும் பிரயோகிப்பதற்கேற்ற இம்முறையானது, பித்தாதிஸாரம், ஜ்வரம், வீக்கம், குல்மம், வாதரக்தம், கிரஹணீ இக்கோளாறுகளையும்,பொதுவில் கடுமையான அதிஸாரத்தையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யவல்லது. 72—75.

ஸர்வாதிஸாரத்திலும் குடஜாதி பாணிதம்.

குடசப் பாலையினாலான பாணிதத்தில்[1] வத்ஸகாதி கணத்தின்[2] கல்கத்தையாவது, அம்பஷ்டாதி கணத்தின்[3] கல்கத்தையாவது, தேனையாவது கூட்டி உட்கொள்ள எல்லாவித அதிஸாரமும்[4] நிவ்ருத்தியாகும். 76.

கடுமையான அதிஸாரங்களில் புடபாகமுறைகள்.

வலியுண்டு பண்ணுததும், ஆமதோஷ ஸம்பந்தமில்லாததும்,[5] அக்னி தீபநமுள்ளவனுக்கு உண்டாயிருப்பதுமான அதிஸாரம் இரத்தக்கசிவுடன் கூடியதாயிருந்தாலும், நீடித்த நாட்களாகத் தொடர்வதானாலும், பலவிதமான நிறங்களுடன்

1. ஸம்ஸர்கீ-இதைப்பற்றி இப்புத்தகத்தில் 14-வது பக்கம் பார்க்க.

2. பிச்சாவஸ்தி—நிரூஹவஸ்திக்கான ஔஷதங்களையே சொற்ப அளவில் பிரயோகித்தால், அம்முறை பிச்சாவஸ்தி யெனப்படும்.

1 பாணிதம்—முதற்புத்தகம் 37-ம் பக்கம் பார்க்க.

2 வத்ஸகாதி கணம்—முதற்புத்தகத்தில் 126-ம் பக்கம் பார்க்க.

3. அம்பஷ்டாதி கணம்—முதற்புத்தகத்தில் 127-ம் பக்கம் பார்க்க.

4. எல்லா அதிஸாரம் என்பதால் ஆமாதிஸாரம், பக்வாதிஸாரம், இரத்தாதிஸாரம் முதலிய பலவிதமான அதிஸாரங்களும் குறிக்கப்படுகின்றன.

5. ஆமதோஷம் என்றால் இங்கு சீதம் என்கிற வெளுத்த கோழைபோன்று வெளியாகும் அல்லது உள்ளே தங்கியிருக்கும் மலம் குறிக்கப்படுகிறது.

கூடியதாயிருந்தாலும், அவ்வதிஸாரத்தைப் புடபாக முறைப்படி பக்குவம் செய்த ஔஷதங்களைக் கொண்டு சிகித்ஸை செய்யவேண்டும். (1) பெருவாகையின் பட்டையைக் கல்கமாக அரைத்து பிண்டமாகச் செய்து, அப்பிண்டத்தைப் பெருங்குமிழன் இலைகளால் சுற்றி, அதன்மேல் மண் பூசி, அக்னியில் புடமிட்டு, அதைப் பிழிந்துவரும் ரஸத்தைக் குளிரச்செய்து, அதில் தேனாவது சர்க்கரையாவது கூட்டி அதிஸாரரோகி உட்கொள்வானாக. (2) இதேவிதமாகப் பாலுள்ள மரங்களின் பட்டைகளாலும் அவற்றின் விழுதுகள் அல்லது முளைகளாலும் புடபாக ஸ்வரஸம் செய்து உபயோகிக்கலாம். (3) பெருவாகைப் பட்டையை, நெய் சேர்த்து, நீராவியில் வேகவைத்துத் தேனுடன் உபயோகித்தால், கடுமையான அதிஸாரத்தையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். 77—80.

இரத்தாதிஸாரமும் அதன் சிகித்ஸைகளும்.

பித்தாதிஸாரத்தினால் பீடிக்கப்படும் யாதொருவன் பித்தத்தை நிருத்திசெய்யக் கூடியவைகளையே உபயோகிக்கின்றானோ, அவனுக்குப் பித்தமானது நாவறட்சியோடும் ஜ்வரத்தோடும் கூடிய இரத்தாதிஸாரத்தையும், குதத்தில் கடுமையான அழற்சியோடு கூடிய புண்ணையும் உண்டுபண்ணும்; அதில் (1) தாமரைப்பூ, கருநெய்தல், மஞ்ஜிஷ்டி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டுப் பாலையாவது, (2) அல்லது இலவம் பிசின் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டுப் பாலையாவது உட்கொள்ளக் கொடுப்பது அனுகூலமானதாம். (3) நன்னாரிவேர், அதிமதுரம், வெள்ளிலோத்திப் பட்டை இவற்றைக் கூட்டியாவது, (4) ஆலமரம் முதலியவற்றின்[1] தளிர்களைச் சேர்த்தாவது காய்ச்சிய ஆட்டுப் பாலில் தேனும் சர்க்கரையும் கூட்டிப் பருகுவதற்கும், அன்னத்தில் கலந்து புஜிப்பதற்கும், குதத்தில் ஊற்றி அவ்விடத்தை நனைப்பதற்கும் அதை உபயோகிக்கலாம். (5) அங்ஙனமே மாம்ஸரஸம் முதலியவைகளும்[2] அம்லம் சேராமல் நெய்கூட்டி பானத்திற்கும் அன்னத்துடன் கலந்து உபயோகிப்பதற்கும் அனுகூலமானவை. (6) பெருங்குமிழம்பழத்தினாலான யூஷத்திலும்சொற்பம்அம்லரஸமும் சர்க்கரையும் கலந்து உபயோகிப்பதும் நலம். (7) ஆட்டுப்பால் ஒரு பங்கு, ஜலம் அரைப்பங்கு இவ்விதம் சேர்த்து, விளாமிச்சைவேர், கருநெய்தல், சுக்கு இவற்றையும், சிற்றாமல்லியின் ஸ்வரஸத்தையும் அதில் கூட்டி, பேயாவாக உபயோகிக்க இரத்தாதிஸாரம் தீரும். (8) தேனும் சர்க்கரையும் கலந்த வெண்ணெயையாவது போஜனத்திற்கு முன்பு உபயோகிக்கலாம். (9) இரத்தப் பெருக்கு மிகுதியாயிருந்தால், வெள்ளாட்டினுடையவாவது, மானுடையவாவது இரத்தத்தையே நெய்யிற் பசனம் செய்து மூன்று நாள் உட்கொள்ளவும்; இதற்குப் பால் அனுபானம்; இம்மூன்று நாட்களிலும் பால் கலந்த அன்னத்தையும் புஜிக்க வேண்டும். (10) சாதகபக்ஷியின் மாம்ஸ ரஸத்தைப் பாலைக் கடைந்தெடுத்த நெய்யைப் பருகிக்கொண்டே உட்கொண்டால் ஆரோக்கியம் பெறுவான். (11) தண்ணீர்விட்டாங் கிழங்கின் கல்கத்தைப் பாலில் கலந்து உட்கொண்டு, பாலும் அன்னமுமாக போஜனம் செய்யலாம், அல்லது தண்ணீர்விட்டாங் கிழங்கைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது உபயோகிக்க இரத்தாதிஸாரம் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். 81—88.

1. ஆலமரம் முதலிய என்பதால் முதற்புத்தகத்தில் 127-ம் பக்கத்திற் கூறியுள்ள ந்யக்ரோதாதிகணம் குறிப்பிடப்படுகின்றது.

2. ரஸம் யூஷம் முதலிய திரவான்னங்கள் குறிப்பிடப் படுகின்றன.

*ஸந்நிபாதாதிஸாரத்தில் லாக்ஷாதி க்ருதம்.*

கொம்பரக்கு, சுக்கு, திப்பிலி, கடுகரோகிணி, மரமஞ்சளின் தோல், வாலுழுவை இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை பேயா, மண்டம் இவற்றுடன் கூட்டி யுட்கொள்ள ஸந்நிபாத ஸம்பந்தமான கடுமையாயுள்ள அதிஸாரமும் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். 89,89½.

*இரக்தாதிஸாரத்திற்கேற்ற வேறு சில முறைகள்.*

(1) கறுத்த மண், சங்கு, அதிமதுரம், தேன், இரத்தம், அரிசிகழுவிய நீர் இவற்றைக் கூட்டிக்கொடுக்க இரத்தாதி ஸாரம் நீங்கும்; அல்லது ஞாழலின் சூர்ணத்தை அரிசிகழுவிய நீருடனும், தேனுடனும் கலந்து உபயோகித்தாலும் இரத்தாதி ஸாரம் தீரும். (3) நன்கு முதிர்ந்து கறுநிறமாயுள்ள எள்ளின் கல்கம் ஐந்து பாகமும், சர்க்கரை ஒரு பாகமும் வெவ்ளாட்டுப்பாலில் கலந்து உட்கொள்ளக் கொடுக்க இரத்தாதி ஸாரம் உடனே நிற்கும். (4) சந்தனக் குழம்பில் சர்க்கரையும் தேனும் கலந்து, அரிசிகழுவிய நீருடன் பருகி வருபவனுக்கு நாவற்ட்சி, அழற்சி, மூர்ச்சை இவையும், இரத்தபேதியும் நீங்கும். 90—92½.

*குதம் அழற்சியுற்றால் குளிர்ந்த ஸேக லேபங்கள்.*

குதமானது அழன்றுவது புண்பட்டாவது இருந்தால் அந்த ஸ்த்தாநத்தில் குளிர்ந்த நீர்களை ஊற்றுவதும் குளிர்ந்த வஸ்துக்களை லேபநம செய்வதும் அநுகூலமானவையாம். 93.

*குதப்ரம்சம் முதலியவற்றில் பிச்சாவஸ்திப் பிரயோகம்.*

எப்பொழுது இரத்தமானது சிறுகச்சிறுகவும் அடிக்கடியும் வெகு தடவைகளிலும் வலியுண்டு பண்ணியவாறு வெளியாகின்றதோ, எப்பொழுது அபாநவாயுவும் சிக்குண்டு வெகு சிரமப்பட்டு வெளிப்படுகின்றதோ அல்லது வெளியாகாமாற் போகின்றதோ, அப்பொழுது அப்பிணியாளிக்கு (1) முற்கூறியுள்ள பிச்சாவஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும் (2) சிம்சபாமரத் தளிர்களையும், மலையகத்தித் தளிர்களையும் நன்கு இடித்து, அவற்றுடன் யவதாணியத்தையும் சேர்த்து, கஷாயம் காய்ச்சி, அக்கஷாயத்தில் நெய்யையும் பாலையும் கூட்டி பிச்சாவஸ்தியைப் பிரயோகிக்கவும்; ஊன் தண்ணியைப்போன்ற பசை கசியும் போதும், வயிற்றுக் கடுப்புடன் கூடிய வலியுண்டா யிருக்கையிலும் இவ்வஸ்தியைப் பிரயோகிக்கலாம்; க்ஷதகாஸத்தினால் க்ஷீணித்திருப்பவருக்கு இது பலத்தை யுண்டுபண்ணும். (3) வறள்தாமரையைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தினால் அநுவாஸநமும் செய்யலாம். 94—97.

*மலம் கலந்த இரக்தாதிஸாராதிகளுக்கு சிகித்ஸை.*

(1) மலத்துடன் கூடவாவது, மலம் வெளிவருவதற்கு முன்பாவது, வெளிவந்த பிறகாவது எவனுக்கு இரத்தம் வெளிப்படுகிறதோ அவனுக்கு சதாவரீக்ருதம் என்கிற தண்ணீர்விட்டாங்கிழங்கின் ஸ்வரஸத்தில் பக்குவம்செய்த நெய்யை லேஹ்யம்போல் உபயோகிக்கச் செய்யலாம். (2) அப்பொழுதே கடைந்தெடுத்த வெண்ணெயில் சரி பாதி சர்க்கரையும், கால் பங்கு தேனும் கலந்து லேஹ்யம் போல் குழைத்துபயோகித்துக்கொண்டு, ஹிதமான உணவுகளைப் புஜிப்பவனுக்கு முற்கூறிய கோளாறு நிவ்ருத்தியாகும். (3) ஆல், அத்தி, அரசு இவற்றின் மொட்டுகளை யெடுத்து இடித்து, ஜலத்தில் ஓர் இராப்பகல் முழுதும் உஷ்ண ஜலத்தில் ஊறவைத்து, அந்த ஜலத்தில் க்ருதத்தைப் பக்குவம் செய்து, அதில் பாதியளவு சர்க்கரை சேர்த்து, கால் பங்கு தேனும் கூட்டி, லேஹ்ய பதத்தில் பக்குவப்படுத்தி யெடுக்கவும்; எவனுக்குக் கீழ் நோக்கியாவது மேல் நோக்கியாவது இரத்தம் வெளிப்படுகிறதோ அவனுக்கு இது ஏற்ற ஔஷதம். 98—101.

கபஸம்பந்தத்தினலான அதிஸாரத்தில் வாதாதிஸாரத்திற் கூறியு

கப காஸ சிகித்ஸை.

ள்ள ஆமதோஷ பாசந சிகித்ஸையையே விசேஷமாகச் செய்ய வேண்டும்; அவ்விதம் செய்தும் கபாதிஸாரம் தொடருமானல், அக்னி தீபநம் உண்டுபண்ணக்கூடிய அடியிற் குறிப்பிடப்படும் கஷாயங்களில் ஒன்றைப் பருகலாம்; அவையாவன:—(1) பில்வவேர், கர்க்காடக ச்ருங்கி, கோரைக் கிழங்கு, கடுக்காய், சுக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயம்; (2) வசம்பு, வாய்விடங்கம், படர்புல், கொத்தமல்லி விதை, தேவதாருச் சக்கை இவற்றின் கஷாயம்; (3) அல்லது திப்பிலி, யானைத் திப்பிலி, மோடி, சித்திரமூலம் இவற்றின் கஷாயம். ஆக இவற்றுள் ஏதேனும் ஒன்றை உட்கொள்ளலாம். (4) வட்டத்திருப்பி, சித்திரமூலம், வெட்பாலரிசி, கிரந்திதகரம், கடுகரோஹிணீ, சுக்கு, வசம்பு, கடுக்காய் இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சியோ அல்லது கல்கமாக அரைத்தோ உட்கொள்ள, கபஸம்பந்தமான அதிஸாரம் தீரும். (5) ஸௌவர்ச்சலலவணம், வசம்பு, த்ரிகடு, காயம், அதிவிடயம், கடுக்காய் இவற்றைச் சூர்ணம் செய்து, கபாதிஸாரத்தினல் வருந்துபவர் இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ளலாம். (6) விளாம்பழத்தின் உட்சதையை த்ரிகடு சூர்ணம், தேன், சர்க்கரை இவற்றுடன் கூட்டிக் குழைத்து உபயோகித்தாலும், (7) சிறு தேக்கின் சூர்ணத்தைத் தேனில் குழைத்து உபயோகித்தாலும் அதிஸாரம் முதலிய வயிற்று வேதனை தீரும். (8) திப்பிலிப் பொடியைத் தேன்கூட்டி யுபயோகித்தாலும், (9) சித்திரமூல சூர்ணத்தை மோருடன் உட்கொண்டாலும், (10) பில்வப்பிஞ்சுகளை புஜித்தாலும் வயிற்று வேதனை நிவ்ருத்தியாகும். (11) வட்டத்திருப்பி, இலவம் பிசின், கோரைக் கிழங்கு காட்டாத்திப்பூ, பில்வக்காய், சுக்குஇவற்றைச் சூர்ணம் செய்து, சிறிது வெல்லம் கலந்து, மோரை அனுபானமாகக் கொண்டு உட்கொள்ள மிகக் கடுமையான அதிஸாரமும் தொலையும். 102—108½.

கபித்தாஷ்டக சூர்ணம்.

ஓமம், மோடி, சதுர்ஜாதம், [1] சுக்கு, மிளகு, சித்திரமூலம், நெற்பொரி, கோரைக்கிழங்கு, சோம்பு, கொத்தமல்லி விதை, ஸௌவர்ச்சல லவணம் இவை ஸமபாகம்; புளி, காட்டாத்திப்பூ, திப்பிலி, பில்வப்பழம், ஓமம் இவை வகைக்கு மூன்று பங்கு; சர்க்கரை ஆறு பங்கு; விளாம்பழம் எட்டு பங்கு; இவற்றைச் சேர்த்து சூர்ணம் செய்யவும். இது அதிஸாரம், கிரஹணீ, க்ஷயம், குல்மம், மஹோதரம், காஸம், ச்வாஸம், அக்னி மாந்த்யம், அர்சஸ், பீநஸம், அரோசகம் இவற்றைப் போக்கும். 109—111½.

தாடிமாஷ்டக சூர்ணம்.

மூங்கிலுப்பு கால் பலம், சதுர்ஜாதம் வகைக்கு இரண்டு கர்ஷம், ஓமம்-கொத்தமல்லி விதை-சோம்பு - கிரந்திதகரம் - த்ரிகடு இவை வகைக்கு ஒரு பலம், மாதளம்பழமும் சர்க்கரையும் தனித்தனியே எட்டு பலம்; இவற்றை ஒருமிக்கச் சேர்த்து சூர்ணம் செய்யவும்; தாடிமாஷ்டகம் என்கிற இச்சூர்ணம் கபித்தாஷ்டகத்திற்கு ஸமானமான குணங்களுடையது. அந்தந்த நிலைமைகளுக்கேற்றவாறு கலம் முதலியவற்றை அனுபானமாகச் செய்து வாதாதிஸாரத்திற் கூறிய விதமாகவே இதை புஜிக்கலாம். 112—114.

1. சதுர்ஜாதம்—முதற்புஸ்தகத்தில் 69-ம் பக்கம் பார்க்க.

**விடங்காதி கலம்.**

வாய்விடங்கம், மிளகு, விளாம்பழம், சுக்கு, இவை கலந்ததும், புளியரத்தை, மோர், இலந்தை இவற்றால் அம்லமாகச் செய்யப் பெற்றதுமான கலம் என்கிற முறையானது சிலேஷ்மாதிஸாரத்தைப் போக்கும். 115.

**கபம் க்ஷீணித்த அதிஸாரத்திற்கேற்ற க்ருதங்கள்.**

கபம் க்ஷீணித்துப் போனபிறகு முற்கூறிய அம்ல க்ருதத்தையாவது, [1] லாக்ஷாதி க்ருதத்தையாவது, [2] ஷட்பல க்ருதத்தையாவது, [3] புராண க்ருதத்தையாவது [4] கொடுக்கலாம். பாலாடையுடன் கூடிய யவாகூ என்னும் கஞ்சியையாவது உட்கொள்ளக் கொடுக்கலாம். 116.

**பலவிதமான வயிற்றுக் கோளாறுகளில் பிச்சா வஸ்தி.**

வாதமும் கபமும் இறுகி கட்டுண்ட அதிஸாரத்திலும், அதிக கபம் ஸ்ரவிக்கக்கூடிய அதிஸாரத்திலும், வயிற்று வலியுடன் கூடிய அதிஸாரத்திலும், பிரவாஹிகை யென்கிற வயிற்றுக் கடுப்பிலும் வசம்பு, பில்வம், திப்பிலி, கோஷ்டம், சதகுப்பி, இந்துப்பு இவற்றைக் கூட்டிய பிச்சாவஸ்தியைப் பிரயோகிப்பது சிறந்த முறையாம். 117, 117½.

**கப - வாதங்களால் வருந்தும் அதிஸார ரோகிக்கு அநுவாஸநம்.**

பில்வதைலத்தினாலாவது, [5] வசாதிகணத்தைச் சேர்ந்த வஸ்துக்களால் பக்குவம் செய்யப்பட்ட தைலத்தினாலாவது [6] இளஞ்சூடாயிருக்கையில் கப வாதங்களால் பீடிக்கப்படும் அதிஸார ரோகிக்கு அநேக முறை அநுவாஸந வஸ்தியைப் பிரயோகிப்பதும் ஹிதமாம். 118½.

**வாதாதி தோஷங்கள் குதத்தில் அதிகரிப்பதைத் தணியச் செய்தல்.**

கபம் க்ஷீணித்து, நீடித்த காலமாய் அதிஸாரத்தினால் குதம் பலஹீனப்பட்டிருக்கையில், தன் ஸ்த்தாநத்திலுள்ள வாத தோஷமானது மிகவும் வலுத்துப் போய்விடும். அங்ஙனம் மிகவும் பலம் பெற்ற வாயுவானது திடீரென்று பிணியாளிக்கு மிகத் தீங்கு விளைவிக்கும்; ஆகவே அவ்வாயுவை சீக்கிரம் தணியச் செய்யவேண்டும். வாயுவுக்குப் பிறகு பித்தத்தையும், பித்தத்திற்குப் பிறகு கபத்தையும் தணியச் செய்வது முறை; அல்லது மூன்று தோஷங்களில் எது அதிக பலம் பெற்றுள்ளதோ அதை முன்னதாகவும், மற்றவைகளைப் பிறகு கிரமமாகவும் தணியச் செய்யலாம். 119—121.

**பய - சோகாதிஸாரங்களில் பரிஹாரம்**

பயம், மனத்துயரம் இவற்றாலும் வாத தோஷம் சீக்கிரம் பிரகோபமடையும்; ஆகையால் அவ்விரண்டையும் போக்குவதற்கு வாதஹரமான சிகித்ஸையைச் செய்வதோடு, அப்பிணியாளியைக் களிப்புறச் செய்வதும், அவனுக்கு ஆச்வாஸ வசனங்கள் கூறுவதும் அனுகூலமாம். 122.

**அதிஸாரம் முதலிய குடலைப்பற்றிய கோளாறுநிவாரணமானதன் குறிகள்.**

எப்பொழுது மலப்பிரங்குத்தி யில்லாமல் மூத்திரமாவது அபாந வாயுவாவது தனித்து வெளிப்படுகின்றதோ, எப்பொழுது ஜாடராக்னி விருத்தி யடைந்து, கோஷ்டமும் இலகுவாகப் போய் ஸ்திமிதப்படுகின்றதோ, அப்பொழுது அவன் குடலைப்பற்றிய வியாதி நிவாரணமானதாய் அறியலாம். 123.

1. அம்லக்ருதம்—103-வது பக்கத்தில் குதப்ரம்ச சிகித்ஸையில் முதலில் குறிப்பிட்டுளது.
2. லாக்ஷாதிக்ருதம்—ஸங்க்யாதாதிஸாரத்திற் கூறியுள்ளது.
3. ஷட்பலக்ருதம்—யக்ஷ்ம சிகித்ஸையிற் கூறியுள்ளது.
4. புராணக்ருதம்—வெகு நாட்பட்ட (பழகிய) க்ருதம்.
5. பில்வப் பழத்தைக் காய்ச்சி தைலம் கூட்டி பக்குவம் செய்தது.
6. வசாதிகணம்—முதற் புக்தகம் 126-ம் பக்கம் பார்க்க.

# பத்தாவது அத்தியாயம்.

இனி கிரஹணீ சிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

கிரஹணீ தோஷத்தில் உபசரிக்கவேண்டிய தன் பொது விதி.

கிரஹணி யென்னும் அவயவத்தை ஆச்ரயித்துள்ள தோஷத்திற்கு அஜீர்ணத்திற்கு செய்வது போல சிகித்ஸை செய்ய வேண்டும். அப்பிணியாளிக்கு உண்டாகும் ஆமதோஷத்தை அதிஸாரத்திற்குக் கூறியுள்ள முறையை அனுஸரித்து பக்குவ நிலைமைக்குக் கொண்டுவர வேண்டும்.[2] 1.

கிரஹணியில் அன்ன காலத்தில் உபயோகிக்கத் தகுந்தஉணவுக்கான பொது விதி.

நியமிதமான போஜனகாலத்தில்[3] பஞ்சகோலம் முதலியவற்றைச்[4] சேர்த்து பக்குவம் செய்யப்பட்டதும், இலவணம் சேர்க்கப்பெற்றதும், இலகு குணமுடையதுமான யவாகூமுதலான திரவான்னத்தையும், அப்பால் தீபநகுணமுள்ள ஔஷதங்களேயும் பிணியாளிக்குக் கொடுக்கலாம். 2.

கிரஹணியில் ஆமதோஷம் அதிகரித்திருக்கையில் கொடுக்கக் கூடிய பானங்கள்.

ஆமதோஷம்[1] மேலிட்டிருக்கையில் (1) அதிவிடயமும் சுக்கும் பொடித்துச் சேர்த்து, சிறிது அம்லரஸமும் கலந்துள்ள பேயா என்கிற குடிநீரைக் கொடுக்கலாம். (2) அதிஸாரத்திற் கூறிய ஜலத்தையும், மோரையும், ஸுரை முதலியவைகளையும் பானம் செய்யக் கொடுக்கலாம். 3.

கிரஹணியில் மோர் பிரசஸ்தமானது.

கிரஹணீதோஷம் உள்ளவருக்கு மோர் பத்தியமாய் உபயோகிக்கத் தகுந்தது. இது இலகுகுணமுடையதாகையால் தீபநம் க்ராஹி என்னும் தன்மையுடையது; மதுரபாகம்[2] அடையுந் தன்மையதாகையால் பித்தத்தைக் கோளாறடையச் செய்யாது; கஷாயம் என்கிற துவர்ப்பு, உஷ்ணவீர்யம், விகாஸி[3] என்னும் சக்தி, ரூக்ஷத்தன்மை இவைகளேயுடையதாகையால் கபத்திலும் அனுகூலமானது; அப்பொழுதே கடைந்தெடுக்கப் பட்ட மோர் இனிப்பும் சிறிது புளிப்பும் கலந்து தடிப்பாகவும் இருக்குமாகையால், சிறிதும் குடலில் அழற்சியுண்டு பண்ணுததாகவும் வாததோஷஹரமாகவும் இருக்கும். 4, 5.

---

1. கிரஹணீ—ஆமாசயம் என்கிற இரைப்பையின் இறுதியில் அமைந்துள்ள கபாடம் போன்ற பாகம்; இது ஸூக்ஷ்மாந்த்ரம் என்கிற சிறு குடலின் ஆரம்ப பாகமுமாகும். இந்த அவயவத்தை ஆச்ரயித்து உண்டாகும் கோளாறும் கிரஹணீ யென்றே வழங்கப்படும்.

2. அதிஸார சிகித்ஸையில் ஆமதோஷ பரிஹார முறைகளேப் பார்க்கவும்.

3. போஜந காலம்—நன்கு பசியுண்டாய் தேஹமும் இலகுவாயிருக்கையில் என்றவாறு "போஜநம் செய்யும் கால நியமம்" என்கிற தலையங்கத்தில் முதற் புத்தகத்தில் 81-வது பக்கத்திற் கூறியுள்ள போஜந கால நியமம் இங்கு குறிக்கப்படுகிறது.

4. பஞ்ச கோலம்—முதற் புத்தகத்தில் 64-ம் பக்கம் பார்க்க. முதலிய என்பதால் பஞ்ச கோலம்போல் தீபநகுணமுள்ள சுக்கு முதலிய வேறு சரக்குகள் குறிக்கப்படுகின்றன.

1. ஆமதோஷம்—புஜித்த உணவு நன்கு ஜீர்ணமாகாமையால் உண்டாகும் ஒருவித விஷகுணமுள்ள தோஷம்.

2. மதுரபாகம்—மூன்று விதவிபாகங்களில் ஒன்று. இதைப்பற்றிய விவரங்களே முதற் புத்தகத்தில் 5-வது பக்கத்திலும், 85-வது பக்கத்திலும் பார்க்க.

3. விகாஸி—முதற்புத்தகம் 342:ம் பக்கம் பார்க்க.

சதுராம்லாதி சூர்ணம்.

சதுராம்லங்கள்[1] வகைக்குப் பதினாறு பலம், த்ரிகடு[2] வகைக்கு மூன்று பலம், லவணத்ரயம்[3] வகைக்கு நான்கு பலம், சர்க்கரை எட்டு பலம்; ஆக இவற்றைச் சூர்ணம் செய்து காய்கறிகள், பருப்புகள், அன்னம் முதலியவற்றில் கலந்து உபயோகிக்க, காஸம், அஜீர்ணம், அரோசகம், ச்வாஸம், இருதயத்தைப் பற்றிய வியாதிகள், பக்கசூலை, வயிற்று நோய் இவை தீரும். 6, 7.

குடலிலுள்ள ஆமதோஷத்தைப் பரிஹரிக்கும் முறைகள்.

(1) சுக்கு, அதிவிடயம், கோரைக்கிழங்கு இவற்றை இடித்துச் சேர்த்து க்வாதம் செய்து, ஆமதோஷத்தைப் போக்குவதற்குப் பருகலாம். (2) அச்சரக்குகளையே கல்கமாகச் செய்தாவது உஷ்ணஜலத்துடன் உட்கொள்ளலாம். (3) அல்லது சுக்கையாவது, (4) கடுக்காயையாவது, (5) இந்துப்பையும் வசாதிகணத்திற் கூறிய வஸ்துக்களையும்[4] கூட்டியாவது அங்ஙனமே உஷ்ண ஜலத்தோடு புஜிக்கலாம். (6) அல்லது வசாதி கணத்தைச் சேர்ந்த சரக்குகளையும் இந்துப்பையும் கலந்து, மதிரை யென்னும் மதுவை அநுபானமாகக் கொண்டாவது உபயோகிக்கலாம். 8, 8½.

மலாதிகள் ஆமமாயிருக்கையில் உபயோகிக்கக் கூடிய ஔஷதங்கள்.

(1) மலம் ஆமமாயிருக்கையிலும், மலப்போக்கும் வெகு அதிகமாயிருக்கையிலும் பிடால லவணம் என்கிற கிருஷ்ண லவணத்தைப் பொடித்து, மாதளம்பழச் சாற்றுடன் கலந்து உட்கொள்ளலாம். (2) கபமும் வாதமும் ஆமதோஷத்துடன் கூடி கோளாறண ந்து, குடலில் வலியையுண்டு பண்ணும் போ பில்வப்பழம், சித்திரமூலம், சுக்கு இவற்றை கல்கமாகச் செய்து, இளஞ்சூடான ஜலத்தோ உபயோக்கிக்கலாம். 9, 10.

கிரஹணியில் வாந்தி, இருதய நோய் முதலியது கூடியிருந்தால் செய்யக்கூடிய பரிஹார முறைகள்.

கிரஹணீ தோஷத்தில் வாந்தியும், இருத நோயும், வயிற்று வலியு கூடியிருக்குமானால் அடியி வரும் முறைகளைப் பிரயோ கிக்கலாம்:--(1) வெட்பாலை காயம், அதிவிடயம், வசம் ஸௌவர்ச்சல லவணம், க க்காய் இவற்றைச் சூர்ண செய்து, வெந்நீரை அநுபானமாகக் கொண் உட்கொள்ளலாம். (2) கடுக்காய், ஸௌவர் சல லவணம், ஜீரகம், மிளகு இவற்றின் சூ ணத்தையாவது வெந்நீருடன் பருகலாம். 11 11½.

அக்னிதீபந சூர்ணம்.

திப்பிலி, சுக்கு, வட்டத்திருப்பி, நன்னாரி கண்டங்கத்திரி, கரிமுள்ள (பார்ப்பாரமுள்ளி), சித்தி மூலம், குடஜக்ஷாரம்[1] பஞ சலவணம்[2] இவற்றைச் சூர்ணம் செய்து தயிர், ஸுரை, ஸுராமண்டம்,[3] உஷ்ணஜலம் காஞ்ஜிகம் (காடி) இவற்றில் எதையாவது அநு பானமாகக் கொண்டு அச்சூர்ணத்தை ஜாடரா க்னி விருத்தியாவதன் பொருட்டு உட்கொள்ள லாம்; இம்முறை குடலில் சேர்ந்துள்ள வாத விகாரத்தைப் போக்குவதில் சிலாக்கியமா னது. 12—13½.

---

1. சதுராம்லம்—இலந்தம்புளி, மாதளம்புளிப்பு, புளி, புளிவஞ்சி என்பவைகளின் கூட்டு.

2. த்ரிகடு—த்ரியூஷணம்; அதாவது சுக்கு, திப்பிலி, மிளகு.

3. லவணத்ரயம்—ஸைந்தவலவணம், ஸாமுத்ரலவணம், ஸௌவர்ச்சல லவணம் என்பவற்றின்கூட்டு.

4. வசாதிகணம்—முதற்புத்தகத்தில் 126-ம் பக்கத்தில் விவரம் காண்க.

---

1. குடஜக்ஷாரம்—வெட்பாலையை எரித்து, அதன் சாம்பரிலிருந்து எடுக்கப்படும் ஒருவித காரமான ஸத் துவம் போன்ற உப்பு.

2. பஞ்சலவணம்—முதற்புத்தகத்தில் 62-ம் பக்கம் பார்க்க.

3. ஸுரை, ஸுராமண்டம் இவை முதலிய மது வகைகளைப்பற்றி முதற்புத்தகம் 19-ம் பக்கத்தில் விவரம் காண்க.

பஞ்சலவணம், க்ஷாரத்வயம்,[1] மிளகு, பஞ்சகோலம்,[2] ஓமம், காயம் இவற்றை ஸமபாகம் எடுத்து சூர்ணம் செய்து, கொடிமாதளம்பழரஸத்திஞலாவது இலந்தம்பழ ரஸத்திஞலாவது மாதளம்பழ ரஸத்திஞலாவது ஆட்டி மாத்திரைகள் செய்யவும். இது அதிக பாசநசக்தியும் தீபநசக்தியும் உடையது. 14, 15.

பஞ்சலவணாதி குளிகை.

தாளிஸப்பத்திரி, சவியம், மிளகு இவை வகைக்கு ஒரு பலம், திப்பிலியும் மோடியும் தனித்தனியே இரண்டு பலம், சுக்கு மூன்று பலம், சதுர்ஜாதமும்[3] வெட்டிவேரும் தனித்தனி கால் கால் பலம்; இவற்றை மிக்க மிருதுவாகச் சூர்ணம் செய்து, அனைத்துக்கும் மூன்று மடங்கு வெல்லம் கூட்டி, வில்லை மாதிரி மாத்திரைகள் செய்து எப்பொழுதும் உபயோகித்து வரலாம்; மத்யங்கள், யூஷம், மாம்ஸரஸம், அரிஷ்டங்கள், மஸ்து, பேயாக்கள், பால் இவற்றில் எதையேனும் அநுபானமாய் பருகலாம். வாத கபங்களின் ஸம்பந்தத்திஞல் உண்டான வாந்தி, கிரஹணீ ரோகம், பக்கசூலை, இருதய நோய், ஜ்வரம், வீக்கம், பாண்டு, குல்மம், பாராத்யயம் என்கிற வெறி, அர்சஸ், வாயில் உமிழ்நீர் அதிகமாகக் கசிதல், பீநஸம், ச்வாஸம், காஸம் இவைகளை நிவ்ருத்தி செய்வதற்கு இச்சூர்ணம் ஏற்றதாகும். மலபந்தம் இவ்வியாதியில் நேரிடுமாஞல், இதே ஔஷத முறையில் சுக்குககுப் பதிலாகக் கடுக்காயைக் கொடுக்கலாம். பித்தாதிக்கியத்திஞல் உண்டாகும் வாந்தி முதலியவைகளில் நாலு பங்கு சர்க்கரை கூட்டி வடகங்களைச் செய்யவேண்டும்; பாகுபதமாகப் பக்குவம் செய்த சர்க்கரையிஞலாவது வெல்லத்திஞலாவது வடகங்களைச் செய்ய வேண்டும்; ஏனெனில் அக்னியின் ஸம்பந்தத்திஞல் அவ்வடகங்கள் மிகவும் இலகு குணத்தைப் பெறுகின்றன. 16—21.

தாளீஸாதி வடகம்.

பிறகு ஆமதோஷம் தீர்ந்துள்ள வாதகிரஹணீ ரோகிக்கு தீபநகுணமுள்ள சரக்குகள் சேர்த்து பக்குவம் செய்து க்ருதத்தை வைத்தியர் சொற்ப அளவில் பருகக் கொடுத்து வரவேண்டும். ஜாடராக்னி தூண்டப்பட்டு, சிறிது விருத்தியடைந்திருக்கையில், மலமூத்திர அபாநவாயுக்கள் கட்டுண்ட அப்பிணியாளிக்கு இரண்டு அல்லது மூன்று நாட்கள் ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்துவைத்து, பிறகு ஸ்வேத சிகித்ஸையையும் அப்யங்கமும் செய்வித்து, நிரூஹ வஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும். அப்பால் வாததோஷம் தணிவடைந்திருக்கையில், யவக்ஷாரம் கலந்து ஆமணக் கெண்ணெயிஞலாவது தில்வக க்ருதத்திஞலாவது வயிற்றிலுள்ள தோஷம் முற்றிலும் வெளியாகும்படி விரேசனம் செய்விக்க வேண்டும். பிறகு குடலிலுள்ள ஆசயங்கள்[1] சுத்தமாகவும் ரூக்ஷமாகவும் ஆனபிறகு, மலமும் கட்டப்பட்டுப் போனால், தீபநகுணமும் அம்லரஸமும் வாதஹரமான குணமும் உள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம்செய்த தைலத்திஞல் அப்பிணியாளிக்கு அநுவாஸநவஸ்தியைப் பிரயோகிக்கவும்; இங்ஙனம் நன்ருக நிரூஹவஸ்தியும், விரேகமும், அநுவாஸநமும் செய்து வைத்த பிறகு, இலகுவான பத்தியான்னங்களைக் கொடுத்துவருவதோடு, மீண்டும் க்ருதத்தைச் சிறுகச் சிறுக அப்யஸிக்கச் செய்ய வேண்டும். 22—26.

ஆமதோஷம் நீங்கிய கிரஹணீ ரோகிக்குச் செய்யும்பரிஹாரங்கள்.

1. க்ஷாரத்வயம்—யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம்.

2. பஞ்சகோலம்—முதற்புத்தகம் 64-ம் பக்கம் பார்க்க.

3. சதுர்ஜாதம்—முதற்புத்தகத்தில் 63-ம் பக்கம் பார்க்க.

1. ஆசயங்கள்—ஆமாசயம், பக்வாசயம், வாதாசயம், மலாசயம் என்பனவாம்.

(1) பஞ்சமூலம்,[1] கடுக்காய், த்ரிகடு, மோடி இந்துப்பு, சிற்றரத்தை, த்விக்ஷீரம்,[2] ஜீரகம், வாய்விடங்கம், கச்சோரம் இவற்றைச் சேர்த்து கஷாயம் காய்ச்சி, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும். (2) கொம்மட்டி மாதளம் பழத்தின் உட்புறச் சோற்றிலாவது, (3) இஞ்சி ஸ்வரஸத்திலாவது, (4) உலர்ந்த முள்ளங்கி, இலந்தம் புளி, புளிவஞ்சி, மாதளை இவற்றின் இரஸத்திலாவது, (5) மோர், மோரின் மேல் தெளிவான திரவம், ஸௌராமண்டம், காடி, அரிசிகழுவிய நீர் இவற்றுள் எதிலாவது அந்த க்ருதம் பக்குவம் செய்யப்பட்டால் ஜாடராக்னியை நன்கு உத்தீபநம் செய்யும். இது வயிற்று வலி, குல்மம், மஹோதரம், ச்வாஸம், காஸம், வாதநோய், கபவிகாரம் இவற்றைப் போக்கும். (6) கொடிமாதளம் பழச்சாற்றையும் முற்கூறிய ஏதேனும் ஒன்றுடன் கலந்து, அதில் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தை யாவது பருகச் செய்யலாம். 27—30.

பஞ்ச மூலாதி க்ருதம் முதலியன.

முற்கூறிய பஞ்சமூலம் முதலிய சரக்குகளையே சேர்த்து பக்குவம் செய்த தைலத்தை கிரஹணீ தோஷத்தில் ஆமதோஷம் நிவ்ருத்தியான பின்பு வாதஹரமாக அப்யஞ்ஜநம் செய்து வைக்க உபயோகிக்கலாம். 30½.

பஞ்ச மூலாதி தைலம்.

கிரஹணியில் வாததோஷமானது கபத்தினால் ஆவரணம் செய்யப்பட்டு அத்தோஷம் ஆம தோஷத்தாலும் கோளாறடைந்திருக்கையிலும், வாயுவால் கபம் ஆவரணம் செய்யப்பட்டு அத்தோஷம் ஆமதோஷ ஸஹிதமாயிருக்கையிலும் இதே ஔஷதச் சரக்குகளைச் சூர்ணம் செய்து, அதை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்ளுவதும் நலம். 31½.

பரஸ்பரம் ஆவ்ருதமான வாத-கபங்களில் பஞ்ச மூலாதி சூர்ணம்.

திரவமாய் விருத்தியாயுள்ள பித்தம் ஜாடராக்னியை அவிக்கக் கூடியதாயிருந்தால், அதை விரேகத்தினாலாவது வமநத்தினாலாவது துலைத்து, திக்தரஸமும்-இலகு-க்ராஹி தீபநம் என்கிற குணங்களும் உடைய விதாஹி என்கிற தீயகுணமற்ற உணவுகளை அப்பிணியாளிக்குக் கொடுத்துவர வேண்டும். அம்லரஸமுள்ள சூர்ணங்களாலும், திக்தரஸமுள்ள ஸ்நேஹௌஷதங்களாலும் ஜாடராக்னியைத் தூண்டி விருத்தி செய்ய வேண்டும். 32, 33.

கிரஹணியில் பித்தாதிக்யத்தாலான அக்னிமாந்த்யத்தைப் பரிஹரித்தல்.

பேய்ப்புடல், வேம்பு, கழற்சிக்காய், நிலவேம்பு, கடுகரோஹிணீ, பர்ப்பாடகம், வெட்பாலைப்பட்டை, வெட்பாலையின் கனி, பெருங்குரும்பை, செம்முருங்கையின் கனி, வசம்பு, மரமஞ்சளின் பட்டை, தாமரைக் கிழங்கு, வெட்டிவேர், ஓமம், கோரைக்கிழங்கு, செஞ்சந்தனம், ஸௌராஷ்ட்ர ம்ருத்திகை, அதிவிடயம், த்ரிகடு, இலவங்கப்பட்டை, ஏலக்காய், இலவங்கப்பத்திரி, தேவதாரு இவற்றைச் சூர்ணம் செய்யவும்; இதைத் தேனோடு கலந்து உட்கொள்ளலாம்; மதுவகைகளோடாவது ஜலத்துடனாவது உபயோகிக்கலாம்; இது இருதயரோகம், பாண்டு ரோகம், கிராஹணீரோகம், குல்மம், வயிற்று வலி, அரோசகம், ஜ்வரம், காமாலை, ஸந்நிபாதம், முகத்தினுள் உண்டாகும் வியாதிகள் இவற்றைப் போக்கவல்லது. 34—36½.

படோலாதி சூர்ணம்.

நிலவேம்பு, கடுகரோஹிணீ, கோரைக் கிழங்கு, த்ரிகடு, வாலுழுவை இவை ஸமபாகம், சித்திரமூலம் இரண்டு பாகம், வெட்பாலையின் பட்டை பதினறு பாகம்; இவ

பூநிம்பாதி சூர்ணம்.

1. பஞ்சமூலம்—இங்கே மஹாபஞ்ச மூலம் குறிக்கப்படுகிறது. (முதற்புத்தகம் 64-ம் பக்கம்.)

2. த்விக்ஷீரம்—பசும்பால், வெள்ளாட்டுப்பால்.

ற்றைச் சூர்ணம் செய்யவும்; இச்சூர்ணத்தை வெல்லம் கரைத்த குளிர்ந்த ஜலத்தோடு உட்கொள்ளலாம்; இது கிரஹணீதோஷம், குல்மம், காமாலை, ஜ்வரம், பாண்டு, மேஹம், அரோசகம், அதிஸாரம் இவற்றை நிவ்ருத்தி செய்யும். 37—38½.

நாகராதி சூர்ணம்.

சுக்கு, அதிவிடயம், கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, பில்வப்பழம் (உலர்ந்தது), இரஸாஞ்ஜநம், வெட்பாலையின் பட்டை, வெட்பாலையின் கனி, கடுகரோஹிணீ, காட்டாத்திப்பூ இவற்றைச் சூர்ணம் செய்து தேனுடனாவது, அரிசிகழுவிய நீருடனாவது பித்தக்கிரஹணியிலும், பிரவாஹிகை யென்கிற சீதபேதியிலும், அர்சஸ்ஸிலும், குதத்தில் வலியுண்டாகையிலும், இரத்தப் பெருக்கிலும் உட்கொள்ளலாம். 39—40½.

சந்தநாதி க்ருதம்.

சந்தனம், தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், வட்டத்திருப்பி, பெருங்குரும்பை, வேங்கைப் பட்டை, வசம்பு, நன்னாரி, செம்மந்தாரை, ஏழிலம்பாலை, ஆடாதோடை, பேய்ப்புடல், அத்திப்பட்டை, அரசம்பட்டை, ஆலம்பட்டை, பூவரசம்பட்டை, வஞ்சி, கடுகரோஹிணீ, கோரைக்கிழங்கு, வேம்பு இவகளை வகைக்கு இரண்டு பலமாக ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, வடிக்கட்டிய அக்கஷாயத்தில் க்ருதம் பக்குவம் செய்யவும்; நிலவேம்பு, வாலுழுவை, தண்ணீர் விட்டாங்கிழங்கு, திப்பிலி, நெய்தல் இவற்றை வகைக்குக் கால் பலம் எடுத்து, கல்கமாக உபயோகிக்கவும்; இந்த க்ருதத்தையும், குஷ்ட சிகித்ஸையிற்கூறிய திக்தக க்ருதத்தையும் பித்த கிரஹணியில் உபயோகிக்கலாம். 41—44.

ஸிலேஷ்ம கிரஹணியில் செய்யும் சிகித்ஸை.

(1) கபத்தினால் கிரஹணியானது விகாரப்படுமானால், அப்பொழுது தீக்ஷ்ணவஸ்துக்களால் வமநம் செய்வித்து, கடுவாகவும் அம்லமாகவும், க்ஷாரகுணமுள்ளவையுமான ஔஷதங்களால் கிரமமாக ஜடாராக்னியை விருத்திசெய்ய வேண்டும். (2) பஞ்சகோலம், கடுக்காய், கொத்தமல்லி விதை, வட்டத்திருப்பி, நறுமணமுள்ள பச்சிலைகள், கொம்மட்டி மாதளையின் இலைகள், இவற்றைக் கஷாயம் காய்ச்சி, அக்கஷாயத்தைக் கொண்டு பேயா முதலிய திரவான்னங்களைப் பக்குவம் செய்யலாம். 45, 46.

மதூகாஸவம்.

இலுப்பைப்பூ ஒரு திரோணம்,[1] வாய் விடங்கம் அதில் பாதிபாகம், சித்திரமூலம் வாய் விடங்கத்தில் பாதி பங்கு, சேராங்கொட்டை ஒரு ஆடகம்,[2] மஞ்ஜிஷ்டி எட்டு பலம்; இவ்வனைத்தையும் மூன்று திரோணம் ஜலத்தில் பக்குவம் செய்யவும்; அதை ஒரு திரோணம் மிகும்படியாகக் காய்ச்சி யெடுத்து வடிக்கட்டி, அரை ஆடகமளவு தேன் சேர்த்து, ஏலம் - தாமரைக்கிழங்கு - அகில்கட்டை - சந்தனம் இவற்றால் அழுக்கெடுத்து ரூக்ஷமாகச் செய்யப்பட்ட மட்பாத்திரத்தில் அவ்வனைத்தையும் சேர்த்து, அதன் வாயை மூடியிட்டு சீலைமண் செய்து, ஒரு மாஸம் அங்ஙனமே வைத்திருந்து எடுத்துக் கொள்ளவும். இந்த ஆஸவம் கிரஹணீ விகாரத்தைப் போக்கி அக்னியை விருத்தி செய்யும்; ப்ருஹ்மணம், இரக்த-பித்தஹரம் என்னும் குணங்களுமுண்டு; க்ஷயம், குஷ்டம், வெண்குஷ்டம், பிரமேஹம் இவற்றையும் தீர்க்கும். 47—50.

இரண்டாவது மதூகாஸவம் முதலியது.

அரைச் சேர் இலுப்பைப் பூவின் ஸ்வரஸத்தை அரைவாசி திரவம் மிகும்படியாகக் காய்ச்சியெடுத்து, அதற்குக் கால் பங்கு தேன் கூட்டி, கஷாயம் குளிர்ந்த பிறகு, முன் ஆஸவத்திற்குக் கூறிய விதமாக அவ்வித மட்பாத்திரத்தில் ஒரு மாஸம் வைத்திருந்து எடுத்து உட்கொண்டு, ஹிதமான போஜனமும் செய்து வந்தால்

1. திரோணம்—4 ஆடகங்கொண்ட அளவு.
2. ஆடகம்—4-பிரஸ்த்தம் (64-பலம்).

எல்லா விதமான கிரஹணீ தோஷங்களும் தீரும். அதேவிதமாய் திராக்ஷை, கரும்பு, பேரீச்சு இவற்றின் ஸ்வரஸங்களையும் ஆஸவமாகப் பக்குவம் செய்து இவ்வியாதியில் பருகலாம். 51, 52.

ஹிங்க்வாதி க்ஷாரம்.

காயம், கடுகரோஹிணீ, வசம்பு, திப்பிலி, வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, நெறிஞ்சல், பஞ்சகோலம் இவை ஒவ்வொன்றும் கால் பலம், பஞ்சலவணம் வகைக்கு ஒரு பலம்; இவற்றை இடித்து, ஒரு சேர் நெய், ஒரு சேர் தைலம், இரண்டு பிரஸ்த்தம் தயிர், இவற்றை ஒரு மிக்கக் கூட்டி, அதில் முற்கூறிய காயம் முதலியவற்றைச் சேர்த்து, சிறுகச் சிறுகத் தீயிட்டுக் காய்ச்சி, நெய் முதலியவற்றின் இரஸத்தை அச்சரக்குகள் உறிஞ்சு கொண்ட பிறகு, அக்கல்கத்தை ஒரு பாத்திரத்தில் போட்டு, மேலே மற்றொரு பாத்திரத்தினால் மூடி, உள்ளேயே சாம்பராகும்படி எரித்தெடுத்து சூர்ணம் செய்து, கால் பலம் அளவாக நெய்யிற் கலந்து உட்கொள்ளவும்; அவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு மதுரரஸமுள்ள உணவை புஜிக்கலாம். இவ்வௌஷதம் எல்லா விதமான வாத-கப வியாதிகளையும், விஷப்பற்றுகளையும், கிருத்ரிம விஷக்கோளாறுகளையும் போக்கும். 53—55½.

அக்னிவர்த்தக க்ஷாரங்கள்.

(1) நிலவேம்பு, கடுகரோஹிணி, பேய்ப்புடல், வேப்பம்பட்டை, பர்ப்பாடகம் இவற்றை எரித்து க்ஷாரமெடுத்து, எருமையின் சிறுநீருடன் கலந்து பருகலாம்; இது ஜாடராக்னியை விருத்தி செய்யும். (2) மஞ்சள், மரமஞ்சள், வசம்பு, கோஷ்டம், சித்திரமூலம், கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு இவற்றை யெரித்து க்ஷாரமெடுத்து, வெள்ளாட்டின் சிறுநீருடன் உட்கொள்ள ஜாடராக்னி விருத்தியடையும். 56—57½.

ஸுதாகாண்டாதி க்ஷாரகுளிகை.

கள்ளித்தண்டு நான்கு பலம், லவணத்ரயம்[1] வகைக்கு மூன்று பலம், முதிர்ந்து உலர்ந்த கத்திரிக்காய் நான்கு பலம், எருக்கம் வேர் எட்டு பலம், சித்திர மூலம் இரண்டு பலம்; இவற்றை எரித்தெடுத்த க்ஷாரத்தைக் கத்திரிச்சாறு விட்டு ஆட்டி, குளிகைகள் செய்யவும். இக்குளிகையை உணவு எடுத்துக் கொண்ட பிறகு உட்கொண்டுவர, புஜித்த உணவு சீக்கிரம் ஜீர்ணமாகும்; காஸம், ச்வாஸம், அர்சஸ் இவற்றிலும் இது அனுகூலம் செய்யும்; விஷூசி, பிரதிச்யாயம், இருதய ரோகம் இவற்றையும் சமநம் செய்யும். 58—60.

மாதுலுங்காதி சூர்ணம்.

உலர்ந்த கொம்மட்டி மாதளை, கச்சோரம், சிற்றரத்தை, த்ரிகடு, கடுக்காய், ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், பஞ்சலவணம்[2] இவற்றைச் சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ள தேஹபலம், தேஹநிறம், ஜாடராக்னி இவை விருத்தியாகும். 61, 61½.

வாத-கபக் கிரஹணியில் க்ருதங்கள்.

வாத தோஷத்துடன் கூடிய கபக்கிரஹணியில் முற்கூறிய கொம்மட்டிமாதளை (மாதுலுங்காதி) முதலியவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, தாந்வந்தர க்ருதத்தையாவது,[3] ஷட்பல க்ருதத்தையாவது,[4] பல்லாதக க்ருதத்தையாவது,[5] அபயாக்ருதத்தையாவது[6] உட்கொள்ளலாம். 62½.

1. லவணத்ரயம்—அல்லது த்ரிலவணம்; ஸைந்தவலவணம், ஸௌவர்ச்சல லவணம், ஸாமுத்ர லவணம் என்பனவாம்.

2. பஞ்சலவணம்—முதற்புத்தகத்தில் 62-ம் பக்கம் பார்க்க.

3. தாந்வந்தர க்ருதம்—பிரமேஹ சிகித்ஸையிற் கூறப்பட்டது.

4. ஷட்பல க்ருதம்—இராஜயக்ஷ்ம சிகித்ஸையிற் கூறப்பட்டது.

5. பல்லாதக க்ருதம்—குல்ம சிகித்ஸையிற் கூறப்பட்டது.

6. அபயாக்ருதம்—உதர சிகித்ஸையிற் கூறப்பட்டது. (ஹரீதகீ க்ருதம் என்றும் சொல்லப்படும்.)

பிடாலவணம்,[1] காசலவணம்,[2] க்ஷாரலவணம்,[3] ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், கள்ளித்தண்டு, கண்டங்கத்திரி, சித்திரமூலம் இவற்றைச் சேர்த்து எரித்து, ஏழு தடவை ஜலத்தில் கரைத்துக் கரைத்து வடிக்கட்டியெடுக்கவும்; இந்த க்ஷாரத்தை இரண்டு பிரஸ்த்தம் எடுத்து, அதில் நாலு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்து, ஜாடராக்னியின் பலத்தை விருத்தி செய்வதற்குப் பருகலாம். 63—64½.

க்ஷார க்ருதம்.

ஸந்நிபாத தோஷங்களால் உண்டான கிரஹணியில் பஞ்சகர்மங்களையும்,[4] தனித்தனி தோஷத்தினால் உண்டாகும் கிரஹணிகளுக்குக் கூறியுள்ள சிகித்ஸைகளையும் பிணியாளியின் சரீர பலம் முதலியவற்றை அனுஸரித்துப் பிரயோகிக்க வேண்டும். 65.

ஸந்நிபாத கிரஹணீ சிகித்ஸை.

(1) ஜாடராக்னி கிரஹணியில் மந்தப்பட்டிருப்பவனுக்கு ப்ரஸேகமென்கிற உமிழ்நீரூறுதல் கபப் பிரகோபத்தினால் ஏற்பட்டிருந்தால், ரூக்ஷத்தன்மையும் திக்தரஸமுமுள்ள வஸ்துவைப் பிரயோகித்து ஜாடராக்னியை உத்தீபநம் செய்யவேண்டும். (2) தேஹம் மெலிவுற்ற அவ்வித பிணியாளிக்கு கபம் அதிகரித்திருந்தால், ஸ்நிக்த்த பதார்த்தங்களையும் ரூக்ஷபதார்த்தங்களையும் மாற்றி மாற்றி உபயோகிக்க வேண்டும். (3) மிகவும் இளைத்தும் வாடியும் போன சரீரமுடையவனுக்கு கபம் அதிகரித்திருந்தால் தீபநகுணமுள்ள திரவ்யத்தை ஸ்நேஹவஸ்துக்களுடன் கூட்டியுபயோகிக்க வேண்டும். (4) பித்தம் அதிகமாயுள்ள மனி தன் மந்தாக்னியாயிருந்தால், ப்ரஸேகமும் கூடியிருந்தால், மதுரரஸமுள்ள சரக்குகளை திக்தரஸமுள்ள வஸ்துக்களோடு கூட்டி யுபயோகிக்கவேண்டும். (5) வாதம் அதிகரித்துள்ள பிணியாளி மந்தாக்னியாயிருந்தால், அம்ல-லவணரஸங்களுடன் கூடிய ஸ்நேஹம் அவனுக்குப் பிரசஸ்தமானதாம். துர்ப்பலமாயுள்ள அக்னியை விருத்தி செய்வதற்கு ஸ்நேஹமே சிறந்த வஸ்துவென்றறிக; ஸ்நேஹத்தினால் விருத்தி செய்யப்பெற்ற ஜாடராக்னியை மிகவும் குருகுணமுள்ள வேறு எந்த வஸ்துவும் சமனம் செய்ய வியலாததாகும். (6) எப்பிணியாளிக்கு ஜாடராக்னி மந்தமாகப் போயிருப்பதால், கபம் க்ஷீணித்திருக்கையில், மலம் பக்குவ நிலைமையடைந்திருந்தும் உடைந்து திரவமாக ஔஷதத்தோடு வெளியாகின்றதோ, அவன் க்ருதத்தைச் சொற்பமாய் உபயோகிக்கவேண்டும்; அந்த க்ருதத்தினால் ஸமானவாயு அதன் சுயநிலைக்குக் கொண்டுவரப்பட்டு, அதன் இயற்கையான காரியத்தைச் செய்யத் தூண்டப்படுமானால், அவ்வாயுவானது ஜாடராக்னியைத் தூண்டி விருத்தி செய்கின்றது; ஆம், அவ்வாயு எப்பொழுதுமே அக்னியை உத்தீபநம் செய்வது இயல்பு. (7) எவனொருவன் மலம் மிகவும் இறுகி கெட்டியாகப் போனதால் அதை வெகு கஷ்டப்பட்டு வெளிப்படுத்துகிறானோ, அவன் பஞ்சலவணங்கள் கூட்டிய க்ருதத்தைப் பருகி அதன் பிறகு அன்னம் புஜிக்கவேண்டும். (8) ரூக்ஷத்தன்மை அதிகரித்ததால் அக்னி மந்தப்பட்டுப் போனால், அக்னி தீபநகுணமுள்ள ஔஷதங்கள் கலந்த க்ருதத்தையாவது தைலத்தையாவது பருகலாம். (9) ஸ்நேஹங்களை அளவுக்கு மிஞ்சி யுபயோகித்ததால் அக்னி மாந்த்யம் உண்டாயிருந்தால் க்ஷாரங்களாலான சூர்ணங்களையும், ஆஸவங்களையும், அரிஷ்டங்களையும் உபயோகிக்கவேண்டும்.

கிரஹணியில் பல காரணங்களால் உண்டாகும் அக்னி மாந்த்யத்திற்குப் பரிஹாரங்கள்.

1. பிடாலவணம்—கருப்புப்பு.
2. காசலவணம்—வளையலுப்பு.
3. க்ஷாரலவணம்—சவுட்டுப்பு.
4. பஞ்ச கர்மங்கள்—வமநம், விரேசநம், நஸ்யம், நிரூஹம், அநுவாஸநம் என்பனவாம்.

(10) உதாவர்த்தத்தினால் ஜாடராக்னி மந்தமாகப் போயிருந்தால் நிரூஹவஸ்திகளையும், ஸ்நேஹ வஸ்திகளையும் பிரயோகிக்க வேண்டும். (11) தோஷங்கள் மிகவும் விருத்தியாய் விடுவதால் ஜாடராக்னி மந்தப்பட்டிருக்கையில், வமந-விரேசநாதி சிகித்ஸைகளால் தேஹத்திற்கு சோதநம் செய்வித்து, பேயா முதலிய திரவான்னங்களை முறைதவறாமல் உபயோகிக்கவேண்டும். (12) ஒருவன் ஏதேனும் வியாதியினால் வருந்தி, அதிலிருந்து நிவ்ருத்தியான பின்பு அக்னிமாந்த்யம் அவனுக்கு ஏற்பட்டிருந்தால் அவ்வக்னியை உத்தீபநம் செய்வதற்கு க்ருதபானமே சிறந்ததாகும். (13) நெடுந்தூரம் வழி நடப்பது, உபவாஸம், உடலிளைத்தல் இவைகளால் ஜாடராக்னி மந்தப்பட்டால், மத்ய பக்தமாக க்ருதபானம் செய்விக்க வேண்டும்; க்ருதமானது அப்பிணியாளிக்கு பல்யமாகவும், தீபநமாகவும், ப்ருஹ்மணமாகவும் ஆகின்றது. (14) நீண்ட காலம் பிரஸங்கம் செய்ததால் அக்னிமாந்த்யம் நேரிட்டு, அதனால் தேஹம் வாடி, தாதுக்கள் க்ஷீணித்து, உடல் மிக்க மெலிவுற்ற மனிதர்களுக்கு, மாம்ஸபக்ஷிணிகளான ப்ரஸஹம் முதலிய ஜந்துக்களின் மாம்ஸரஸங்களை அம்லவஸ்துக்களோடு கலந்து போஜனங்களில் உபயோகிக்க வேண்டும்; அவை இலகுவாகவும்,[1] உஷ்ண வீர்யமாகவும், கடுரஸமாகவும், சோதநகுணமுள்ளவைகளாகவும்[2] இருப்பதால் ஜாடராக்னியை சீக்கிரம் விருத்தி செய்யும்; இறைச்சியுண்டு அதனால் அந்த ஜந்துக்களின் மாம்ஸங்கள் செழித்து வளர்ந்திருப்பதால் தேஹவன்மையையும் மிகவும் விருத்தி செய்யும். (15) ஸ்நேஹங்களையும், ஆஸவங்களையும், ஸுரையையும், அரிஷ்டங்களையும், சூர்ணங்களையும், க்வாதமென்னும் கஷாயங்களையும், பத்தியமான உணவுகளையும் முறைதவறாமல் நன்கு பிரயோகித்தால், தேஹத்தினுடையவும் அக்னியினுடையவும் பலம் விருத்தியடையும். (16) நல்ல ஸாரமுள்ள கட்டைகளில் பற்றிய ஸாதாரண பாஹ்யாக்னியானது நல்ல ஜ்வாலையோடும் ஸ்த்திரமாகவும் எரிவதுபோலவே, ஜாடராக்னியும் ஸ்நேஹவர்க்கங்களோடு கூடிய ஆஹாரங்களால் பலம் பெற்று விருத்தியடையும். (17) உணவின்றியே ஜாடராக்னி விருத்தியடைவதில்லை; அதிக போஜனத்தினாலும் விருத்தியடைந்து விடாது; விறகு இல்லாமல் பாஹ்யமான அக்னி எரிவதில்லை; சொற்ப அக்னியின்மேல் அதிக விறகுகளைப் போட்டாலும் அது எரிய மாட்டாதல்லவா? 66—80.

ஜாடராக்னி மிதமிஞ்சி அதிகரித்தலும் அதனாலுண்டாகும் உபத்திரவங்களும்.

எப்பொழுது கபம் க்ஷீணித்து, அதன் ஸ்த்தாநத்தில் பித்தமானது வாதத்துடன் கூடிக்கொண்டு விருத்தியடைந்ததாய் ஜாடராக்னியையும் மேலோங்கச் செய்கிறதோ, அப்பொழுது வாயுவுடன் கூடிய அவ்வக்னியானது உட்கொண்ட உணவை வெகு சீக்கிரத்தில் பசநம் செய்து, எல்லா தாதுக்களையும், ஓஜோ தாதுவையும் அழித்து மனிதனுக்கு மரணத்தையுண்டு பண்ணுகின்றது; அப்பிணியாளி போஜனம் செய்ததும் ஸுகமாயிருப்பான்; உட்கொண்ட உணவு ஜீர்ணமானதும் மிகவும் பரிதவிப்பான்; அக்னி மிதமிஞ்சி யதிகரிப்பதால் நாவறட்சியும், இருமலும், தேஹ அழற்சியும், மூர்ச்சையும் ஆக இப்பிணிகள் உபத்திரவங்களாக உண்டாகின்றன. 81—82½.

மிதமிஞ்சிய ஜாடராக்னியைத் தணிக்கு முபாயம்.

(1) மிக்க மேலோங்கி யெரியும் பாஹ்யாக்னியைத் தண்ணீர் ஊற்றி அவிப்பதுபோல மிதமிஞ்சிய ஜாடராக்னியை குருவாகவும்-ஸ்நிக்த்தமாகவும்-மந்தமாகவும் ஸாந்த்ரமாகவும் - சீதமாகவும் - ஸ்த்

1. மாம்ஸ பக்ஷிணிகளின் இறைச்சியானது குருகுணமுள்ளதாயிருக்கின்றது; அங்ஙனமே இதற்கு முன்பும் கூறப்பட்டிருக்கிறது; அங்ஙனமிருக்க இங்கு இலகு வென்று கூறியதற்கு, அந்த ஜந்துக்கள் ஓடுவது முதலிய செயல் புரிவதில் இலகுவா யிருப்பவை யென்று பொருள் கூறவேண்டுமென்று அருணதத்த வியாக்கியானம்.

2. சோதந குணம்--வமந விரேசநாதி குணங்கள்.

திரமாகவுமுள்ள அன்னபானங்களால் சமநம் செய்யவேண்டும். (2) மிதமிஞ்சி விருத்தியான ஜாடராக்னியானது இடையிடையே ஸமயம் நேரிடும்போது பசநம் செய்வதற்குத் தீனியின்றி பிணியாளியை அழித்து விடாதபடி, உணவு முற்றிலும் ஜீர்ணமாவதற்கு முன்பே இவனுக்கு போஜன பதார்த்தங்களை அப்போதைக்கப்போது கொடுத்துவர வேண்டும். 83—84½

மிதமிஞ்சிய ஜாடராக்னியைத் தணிக்கும் உணவுகள்.

(1) க்ருஸரா, பாயஸம், ஸ்நிக்த்தமான மாப் பண்டங்களாலாக்கி யதும் வெல்லத்தினால் செய்ததுமான பணியாரங்கள், நீர்வாழும் ஜந்துக்களென்ன ஆநூபதேசத்திய பிராணிகளென்ன இவற்றின் கொழுத்த இறைச்சிகள் இவைகளை இப்பிணியாளி புஜிக்கலாம். (2) மத்ஸ்யங்களை உபயோகிப்பது விசேஷமாகும்; அதிலும் ஓடாமல் ஸ்த்திரமாயுள்ள ஜலத்தில் ஸஞ்சரிக்கும் வழுவழுப்பான மத்ஸ்யங்களை உண்பது மேலாகும். (3) நன்றாகக் கொழுத்த செம்மறியாட்டின் இறைச்சியைக் கடுமையான ஜாடராக்னியைத் தணிப்பதற்கு உண்ணலாம். 85-86½

கடுமையான ஜாடராக்னியினாலுண்டாகும் நாவறட்சிக்குப் பரிஹாரம்.

ஜாடராக்னியின் கடுமையினால் நாவறட்சியுண்டானால் (1) தேன் மெழுகு கலந்த பாலையாவது, (2) அவ்விதமான நெய்யையாவது பானம் செய்யலாம். (3) அதிக நெய் கலந்த கோதுமைமாவையாவது பாலுடன் பருகலாம். (4) நல்லெண்ணெயைத் தவிர மற்ற ஸ்நேஹங்களையாவது ஆநூப மாம்ஸ ரஸத்துடன் கலந்து பானம் செய்யலாம். (5) கருஞ்சிவதை வெண்சிவதை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது விரேசநமாகும்படி யுட்கொள்ளக் கொடுக்கலாம். (6) பித்தஹரமான பாயஸத்தை அடிக்கடியும் பத்திய உணவாகவும் உபயோகிக்கலாம். 87-89.

கடுமையானஜாடராக்னியைத் தணிப்பதும் இல்லாவிடில் உண்டாகும் தீங்கும்.

(1) குருகுணமும், கொழுப்பை விருத்தி செய்யும் தன்மையும், கபத்தை அதிகப்படுத்தும் சுபாவமும் உள்ள உணவு யாதொன்றுண்டோ அஃது அனைத்தும் மிதமிஞ்சிய ஜாடராக்னியைத் தணிப்பதற்கு ஹிதமானதாம்; பகலில் போஜனம் செய்து விட்டு நித்திரையுறுவதும் அத்தகைய குணமுண்டு பண்ணும். (2) அமிதமான ஜாடராக்னியானது புஜித்த உணவைப் பசநம் செய்து விடுகிறது; உணவில்லாமற் போனால் அவ்வக்னியானது, தோஷங்களை எரிக்கும்; தோஷங்கள் அங்ஙனம் க்ஷயித்துவிட அப்பால் தாதுக்களையும் எரிக்கும்; தாதுக்கள் எரிந்து அழிவுறுமானால் அவ்வக்னி இறுதியில் உயிரைப் போக்கி விடுகின்றது. 90, 91.

ஜாடராக்னியை நன்கு பரிபாலிப்பதாலும் பரிபாலிக்காததாலும் உண்டாகும் பலன்கள்.

இன்ன உணவு இயற்கையிலேயே விரோதமானது,[1] இன்ன உணவு சேர்க்கையினால்[2] அல்லது பக்குவம் செய்யும் வகையினால்[3] விரோதமானது; என்பது முதலியதை அறிந்து கொள்ளாமலே சிலர் தோன்றியவாறு பலவற்றையும் தின்றுப் பிழைத்து வருகின்றனரேயென்றால், அது அவர்களுடைய ஜாடராக்னி பலத்திற்குள்ள விசேஷ

---

1. கடுகுக்கீரை, உலர்ந்த இறைச்சி, அழுகி அல்லது வூசிப்போன பண்டம், முளைத்த தானியம், சமைக்காத முள்ளங்கி முதலிய கிழங்குகள், நன்கு கனியாத பழங்கள் முதலியவை இயற்கையிலேயே ஜாடராக்னிக்கும், ஜீர்ண கோசங்களுக்கும், பொதுவில் தேஹத்திற்கும் விரோதமானவை.

2. பால் புளிப்பு வஸ்துக்களோடு சேருவது, ஆநூபமாம்ஸம் உளுந்து முதலிய சில தானியங்களோடு கலப்பது முதலியதால் சேர்க்கையினலான விரோதம் உண்டாகும்.

3. ஹாரீதம் என்கிற பச்சைக் குருவியின் இறைச்சியை மஞ்சளின் தாளில் குத்திச் சுடுவது, அல்லது மஞ்சள் தாளைக்கொளுத்தியதாலான நெருப்பில் அவ்விறைச்சியைக் காய்ச்சுவது முதலியதால் பக்குவம் செய்வதாலான விரோதம் ஏற்படுகிறது.

சக்தியேயாம்; ஆனால் அது அனைவருக்கும் பொருந்தாது. ஆகையால் எல்லா முயற்சிகளைக் கொண்டும் ஜாடராக்னியைப் பரிபாலிக்க வேண்டும்; ஏனெனில் அவ்வக்னி அழிவுறுமானால் மனிதனும் நாசமடைவது நிச்சயம். ஜாடராக்னியானது தோஷங்களால் கவியப்பெற்று கோளாறடைந்தால் மனிதனையும் திரளான பிணிகள் சூழ்ந்து கொள்கின்றன; அவ்வக்னியானது கோளாறடையாத நல்ல நிலைமையிலிருந்தால், மனிதனும் பிணியற்றவனாகவும் தீர்க்காயுளாகவும் வாழ்ந்துவருவன். 92, 93.

## பதினோராவது அத்தியாயம்.

இனி மூத்திராகாத சிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

வாத மூத்திரக்ருச்சிரத்தில் ஸ்நேஹஸ்வேதங்கள்.

வாததோஷத்தினாலுண்டான மூத்திரக்ருச்சிரம் என்கிற நீர்ச்சுருக்கு வியாதியில் நாபிக்குக் கீழே வாதஹரமான தைலத்தைத் தேய்த்து, மிகவும் ஸ்நிக்த்தமான பிண்டம்-ஸேகம்-அவகாஹம் என்கிற ஸ்வேத முறைகளால் தேஹத்தை ஸ்வேதம் செய்யவேண்டும். 1.

வாத மூத்திரக்ருச்சிரத்திற் சேற்ற ஸ்நேஹங்களும் உணவு முதலியவைகளும்.

(1) தசமூலம், சிற்றாமுட்டி, ஆமணக்குவேர், வாற்கோதுமை, தண்ணீர் விட்டாங்கிழங்கு, சாறடை, கொள், இலந்தை, நீர்த்திப்பிலி, வெள்ளைச் சாரணை, கல்லுருவி இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, இச்சரக்குகளையே கல்கமாகவும் சேர்த்து, தைலம்-க்ருதம்-பன்றியின் கொழுப்பு-கரடியின் கொழுப்பு இவற்றில் எதையாவது அக்கஷாய கல்கத்தில் கூட்டிக் காய்ச்சி, பஞ்சலவணங்களையும் கலந்து பக்குவம் செய்து உட்கொண்டால் நீர்ச்சுருக்கு அல்லது மூத்திராகாதம் முதலிய கோளாறுகள் நன்கு நிவ்ருத்தியாகும். (2) இதே திரவ்யங்களைச் சேர்த்துக் காய்ச்சிய பானங்களையும், அவற்றைக் கூட்டி பக்குவம் செய்த உணவுகளையும் உட்கொள்ளலாம். (3) இவற்றையே பிண்டஸ்வேதம் செய்யவும் உபநாஹஸ்வேதம் செய்யவும் உபயோகிக்கலாம் (4) இச்சரக்குகளை தைலங்களோடும் கனிவர்க்கங்களோடும் கலந்து, அம்லவஸ்துக்களையும் கூட்டி யுபயோகிக்கலாம்; அவற்றுடன் ஸ்நேஹங்களையும் கலந்து முற்கூறிய உணவு முதலியவற்றோடு உபயோகிக்கலாம். (5) ஸௌவர்ச்சலலவணத்தை மதிரை யென்னும் மதுவில் அதிகமாகச் சேர்த்துப் பருக மூத்திர க்ருச்சிரம் முதலிய நீர்த்தாரையைப் பற்றிய வலி நிவ்ருத்தியாகும். 2—4½.

பித்த மூத்திர க்ருச்சிரத்திற்குப் பரிஹாரங்கள்.

(1) பித்தஸம்பந்தமான மூத்திராகாதத்தில் குளிர்ச்சியான ஸேகங்களையும், லேபங்களையும், அவகாஹநங்களையும்,[1] பிரயோகிக்கவேண்டும். (2)தண்ணீர் விட்டாங்கிழங்கு, நீர்முள்ளி, நிலப்பனங்கிழங்கு, தட்டைக் கோரைக்கிழங்கு, த்ருண பஞ்சமூலம் இவற்றைக் கஷாயம் காய்ச்சி, தேனும் சர்க்கரையும் கூட்டி யுட்கொள்ளலாம். (3) ஆடாதோடை முள்வல்லாரை, வெள்ளரிவேர், குஸும்பாவேர், குங்குமப்பூ இவற்றைக் கல்கமாகச் செய்து, திராக்ஷை

1. மூத்திராகாதம்-நீர்த்தாரையில் மூத்திரம்வெளிவருவதற்கு முடியாமல் தடைப்படுதல்; நீர்ச்சுருக்கு என்கிற மூத்திர க்ருச்சிரத்திற்கும் இங்கே சிகித்ஸை சேர்க்கப்பட்டுள்ளது.

1. ஸேகம், லேபம், அவகாஹம் என்பவற்றின் விவரங்களைப்பற்றி முதற்புத்தகத்தில் பார்த்துக் கொள்க.

யின் கஷாயத்தோடு உட்கொள்ள மூத்திராகாத ஸம்பந்தமான எல்லாக் கோளாறுகளையும் பரிஹரிக்கும். (4) வெள்ளரி விதை, அதிமதுரம், மரமஞ்சள் இவற்றை அரிசிகழுவிய நீரால் கல்கமாகச் செய்து அதையாவது பழகிய திராக்ஷாஸவத்தோடு உட்கொண்டு வரலாம். 5—8.

கப மூத்திரக்ருச்சிரத்திற்குப் பரிஹாரங்கள்.

கபத்தினாலான மூத்திர க்ருச்சிரத்தில் (1) வமநமும், (2) ஸ்வேத சிகித்ஸையும், (3) தீக்ஷ்ண குணம்-உஷ்ணம்-கடுரஸம் இத்தன்மையான போஜனமும், வாற்கோதுமையினாலாகிய பலவிதமான உணவுகளும், யவக்ஷாரமும், மோரும் உபயோகிக்கத் தகுந்தவையாம் (4) சிற்றேலத்தை மதுவின் அனுபானத்துடன் உட்கொள்ளலாம்; அல்லது நெல்லிக்காயின் சாற்றோடாவது அதை யுபயோகிக்கலாம். (5) தாமரை மணி, நெருஞ்சி, சிற்றேலம், த்ரிகடு இவற்றின் சூர்ணத்தையாவது தேனுடன் கலந்தாவது, பசு மூத்திரத்துடனாவது உபயோகிக்கலாம். (6) கண்டங் கத்திரியின் ஸ்வரஸத்தையாவது தேன் சேர்த்துப் பருகலாம். (7) புங்கங்காயின் வித்தையாவது நன்றாகச் சூர்ணம் செய்து மோருடன் உட்கொள்ளலாம். (8) கருங்காலி, ஏழிலம்பாலை, வெட்பாலரிசி, சீந்தில், ஆமணக்கு வேர், கடுகரோஹிணி, சிற்றேலம், புங்கம் விதை இவற்றைக் கஷாயமாகப் பக்குவம் செய்து, தேன் கூட்டியும் குடிக்கலாம். (9) முற்கூறிய கருங்காலி முதலிய வற்றையே பேயாவாகப் பக்குவம் செய்தாவது பானம் செய்யலாம். (10) பவளத்தையாவது நன்கு சூர்ணம் செய்து அரிசிகழுவிய நீரோடு உபயோகிக்கலாம். (11) அல்லது பாதிரி மரப் பட்டையைக் காய்ச்சிக் காய்ச்சி, ஏழுதடவை வடிக்கட்டி, அதிலிருந்து வரும் க்ஷாரத்தையாவது தைலத்தின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம். (12) பாதிரியின் க்ஷாரம், யவக்ஷாரம் இவற்றோடாவது, திலக்ஷாரத்தோடாவது வேப்பம் பட்டையின் க்ஷாரத்தையும் கூட்டி உட்கொள்ளலாம். (13) இலவங்கப்பட்டை, ஏலம், மிளகு இவற்றைக் கூட்டிய மதிரை யென்னும் மதுவையாவது யவக்ஷார ஜலத்துடன் பருகலாம். (14) வெல்லம் சேர்த்துப் பக்குவம் செய்த உபதம்சங்கள் என்கிற வியஞ்ஜநங்களையாவது உபயோகிக்கலாம். (15) இலவங்கப்பட்டை, ஏலம், மிளகு இவற்றைத் தனித்தனியாகவே வெல்லம் கலந்த வியஞ்ஜனங்களோடு உபயோகிக்கலாம். 9—14½.

ஸந்நிபாத மூத்திரக்ருச்சிர சிகித்ஸை.

ஸந்நிபாத ஸம்பந்தமான மூத்திரக்ருச்சிரத்தில் முற்கூறிய எல்லாவற்றையுமே அந்தந்த நிலைமைகளுக்கு ஏற்றவாறு பிரயோகிப்பது ஹிதமாகும். வெகு நாட்களாயுள்ள அச்மரீயென்கிற கல்லடைப்பு வியாதியிலும், வாதவஸ்தி முதலிய மூத்திர மார்க்க ஸம்பந்தமான கோளாறுகளிலும் முற்கூறியவற்றையே பிரயோகிக்கலாம். 15½.

அச்மரீ சிகித்ஸை.

மூத்திரத் வாரத்திலுண்டாகும் அச்மரீ யென்கிற கல்லடைப்பு வியாதியானது யமனுக்கு ஸமானமான வியாதியாகக் கருதப்படுகின்றது; வியாதி ஆரம்ப தசையிலிருந்தால் ஔஷதங்களைப் பிரயோகித்து நிவ்ருத்திக்கக் கூடியது; அது மிகவும் முதிர்ந்து விட்டால் சஸ்திர சிகித்ஸையினால் நிவாரணம் செய்ய வேண்டியதாகும். 16½.

அச்மரீ பூர்வரூபத்தில் செய்ய வேண்டிய சிகித்ஸைகள்.

அவ்வச்மரீ ரோகத்தின் பூர்வரூபங்களில் அடியிற் கூறப்படும் ஸ்நேஹம் முதலிய சிகித்ஸா முறைகளைச்[1] செய்ய வேண்டும். 17.

1. ஸ்நேஹம் முதலிய என்பதால் ஸ்வேதம், வமநம், விரேகம் என்கிற சிகித்ஸைகளும் குறிக்கப்படுகின்றன.

வாதாச்மரியில் பாஷாணபேத்யாதி க்ருதம்.

கல்லுருவி, ஈச்வரமல்லி, கடலுப்பு, வேளை, தண்ணீர்விட்டான் கிழங்கு, சூர்யகாந்தி, பேராமுட்டி, பெருவாகை, வெட்டிவேர், முருக்கை, பில்லூரி, சிறு தேக்கு, கண்டங்கத்திரி, பேய்க்கரும்பு, பாப்பாரமுள்ளி, நெரிஞ்சில், நீர்முள்ளி, வாற்கோதுமை, கொள், இலந்தங் கொட்டை, மாவலிங்கை, தேற்றாங்கொட்டை இவற்றைக் கஷாயமிட்டு, அக்கஷாயத்தில் க்ருதம் சேர்த்து, ஊஷகாதி கணத்தைச் [1]சேர்ந்த சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதத்தைப் பானம்செய்ய வாத தோஷத்தினுலுண்டாகும் அச்மரி சீக்கிரத்தில் உடைந்து வெளிப்பட்டுவிடும். 18-20.

எரண்டாதி கல்கம்.

ஆமணக்கு, கண்டங்கத்திரி, பாப்பாரமுள்ளி, நெரிஞ்சில், நீர்முள்ளி இவற்றின் வேர்களைக் கல்கமாக அரைத்து, புளிப்பில்லாத இனிய சுவையுள்ள தயிரில் கலந்து உட்கொண்டுவர, அச்மரீ யென்கிற மூத்திரக்கல் உடைந்து சுகமுண்டாகும். 21.

பித்தாச்மரியில் குசாதி க்ருதம்.

குசம், ஞாழல், வழல், பேய்க் கரும்பு, இத்கடம் என்னும் மூலிகை, கருப்பம் வேர், கல்லுருவி, தர்ப்பம், நிலப்பனங்கிழங்கு, நிலப்பூசுணிக் கிழங்கு, சம்பாப்பயிர் வேர், கண்டங்கத்திரி, பாப்பாரமுள்ளி, நெரிஞ்சில், பெருவாகை, பாதிரி, வட்டத்திருப்பி, நீர்த்திப்பிலி, மருதோன்றி, சாறடை, காட்டுமொகை இவற்றைக் கஷாயமிட்டு, இதில் க்ருதம் பக்குவம் செய்யவும்; இதில் வெள்ளரி விதை முதலியவைகளையாவது, [2] கருநெய்தலின் விதைகளையாவது, அதிமதுரத்தையாவது, சிலாஜதுவையாவது கல்கமாகச் செய்து சேர்த்து பக்குவம் செய்த பிறகு உபயோகிக்க, இது பித்த தோஷத்தினுல் உண்டான அச்மரியை உடைத்து ஸ்வஸ்த்தம்செய்யும். 22-24.

கபாச்மரியில் வருணாதி க்ருதம்.

வருணாதி கணமென்ன [1], வாதஹரமான இரண்டு கணங்களென்ன[2] இவற்றையும், ஏலக்காய்களையும், அரேணுகத்தையும், குங்கிலியத்தையும், மிளகையும், கோஷ்டத்தையும், சித்திர மூலத்தையும், தேவதாருக் கட்டையையும், ஊஷகாதிகணத்தையும் கல்கமாகச் செய்து சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை உபயோகிக்க, கப ஸம்பந்தமான அச்மரியை உடைத்து சீக்கிரம் குணமுண்டுபண்ணும். 25—26.

அச்மரியில் உபயோகிக்கத் தகும் க்ஷார க்ஷீர பானுதிகள்.

அச்மரீ ரோகத்தில் பிரயோகிப்பதற்கு க்ஷாரங்களையும், க்ஷீரங்களையும், யவாகூ வென்னும் திரவான்னத்தையும் அவ்வவற்றிற்கு ஏற்ற வஸ்துக்களைக் கொண்டு பக்குவம் செய்து உபயோகித்துக் கொள்ளலாம். (1) ஆரை, ஏறழிஞ்சில், தேற்றாங்கொட்டை இவற்றின் கீரைகளையும், கருநெய்தல் விதையையும் கல்கமாகச் செய்து வெந்நீரோடு கலந்து உட்கொள்ள சர்க்கரை யென்னும் மூத்திரக் கல்லை வெளிப்படுத்தும். (2) கிரௌஞ்ச பக்ஷியின் எலும்பு, ஒட்டகத்தின் எலும்பு, கழுதையின் எலும்பு இவற்றையும் நெரிஞ்சில், பனங்குருத்து, ஓமம், கடப்பம்வேர், பில்வவேர், சுக்கு இவற்றையும் கல்கமாகச் செய்து ஸுரை

1. ஊஷகாதி கணம்—இதைப்பற்றி முதற் புத்தகத்தில் 125-ம் பக்கம் பார்க்க.

2. வெள்ளரி முதலியவை—இதற்குமுன்பு 7-வது ச்லோக மொழி பெயர்ப்பில் கூறப்பட்டுள்ளவை.

1. வருணாதிகணம்—முதற் புத்தகம் 125-ம் பக்கம் பார்க்க.

2. வாதஹரமான இரண்டு கணங்கள்—வீரதராதி கணமும் விதார்யாதிகணமும்.

யென்னும் மதுவுடனாவது, உஷ்ண ஜலத்தோடாவது உட்கொள்ள சர்க்கரை யென்னும் மூத்திரக்கல் உடைக்கப்படும். (3) சுத்திசெய்த சேராங் கொட்டைப் பொடியையும் தோலையும் கூட்டி, செம்மறி யாட்டுப் பாலுடன் ஏழு நாட்கள் உட்கொள்ள அச்மரீ யென்னும் மூத்திரக்கல் வெளியாய் விடும். (4) முருங்கைவேர்க் கஷாயத்தை இளஞ்சூடாகப் பருகினாலும் அச்மரி வெளியாகும். (5) எள்ளு, நாயுருவி, வாழை, முருக்கை, நவதானியம் இவற்றிலிருந்து கிரஹிக்கப்படும் தனித்தனி க்ஷாரமும் செம்மறியாட்டுப் பாலுடன் சர்க்கரை அச்மரி என்கிற மூத்திரக் கல்லடைப்பு ரோகங்களில் உட்கொள்ளத் தகுந்தது. (6) சூர்யகாந்தியின் வேர் ஒன்றையேயாவது ஸுரை முதலிய மதுவகைகளோடு உட்கொள்ளலாம். (7) பலவித வேதனைகளின் உபத்திரவங்களை அனுபவிப்பவன் அச்சூர்ய காந்தி வேரைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது பருகலாம். (8) கடுக்காய் விதையைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாகிலும், (9) சாறடையைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது பருகலாம். (10) மயிர்மாணிக்க மென்கிற சரக்கின் வேரையாவது அரிசி கழுவிய ஜலத்துடன் உட்கொள்ளலாம்; அப்பொழுது பாலும் அன்னமுமே பத்தியமாக புஜிக்கத் தகுந்த உணவாம். மூத்திராகாதம் என்கிற நீரடைப்பு முதலிய மற்ற நீர் ரோகங்களிலும் முற்கூறியுள்ள சிகித்ஸைகளில் எது ஏற்றதோ அதைச் செய்யலாம். 27—34.

ஸகலவித மூத்ராகாதங்களுக்கும் பொது சிகித்ஸைகள்.

(1) கண்டங்கத்திரி, பாப்பாரமுள்ளி இவற்றை ஸமபாகம் சேர்த்து, இவற்றிற்கு இரு மடங்கு நெரிஞ்சிலையும் போட்டு கஷாயம் காய்ச்சியோ, அல்லது அவற்றைப் பாலில் சேர்த்துக் காய்ச்சியோ, அல்லது அவற்றைக் கொண்டு க்ருதம் பக்குவம் செய்தோ உபயோகிக்க எல்லாவிதமான மூத்திர பந்த ரோகமும் தீரும். (2) தேவதாரு, கோரைக்கிழங்கு, பெருவாகை, அதிமதுரம், கடுக்காய் இவற்றைப் பொடித்துத் தேன் கூட்டி, ஸுரை யென்னும் மத்யத்துடனாவது, பாலுடனாவது, ஜலத்தோடாவது ஸகலவிதமான மூத்திராகாதமென்கிற நீரடைப்பு வியாதிகளிலும் உட்கொள்ளலாம். (3) காஞ்சொறியின் ஸ்வரஸத்தையாவது, (4) மருதம்பட்டைக் கஷாயத்தையாவது, (5) த்ரிபலையைச் சூர்ணம் செய்து இந்துப்பு கலந்து, அதை இளஞ்சூடான ஜலத்தோடாவது உட்கொள்ளலாம் (6) கண்டங்கத்திரி, நெரிஞ்சில் இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்யப்பட்ட யாவாகூ வென்னும் திரவான்னத்தைச் சர்க்கரை கலந்தாவது பருகலாம் (7) வீரதராதி கணத்தைச் சேர்த்த[1] சரக்குகளினாலான க்வாதத்தினாவது, (8) கோழியின் மாம்ஸ ரஸத்தினாவது பக்குவம் செய்த யாவாகுவையும் பானம் செய்யலாம். (9) வீரதராதி கணக்வாதத்தில் பாவனை செய்த சிலாஜதுவையாவது சாப்பிடலாம்; (10) புராண மத்யத்தைப் பானம் செய்து, வெகு வேகமாகச் செல்லும் வண்டியிலாவது குதிரையின் மீதாவது ஏறிச் சவாரி செய்ய, அவ்வதிர்ச்சியினால் அச்மரீ தானே நழுவி வெளியாய் விடலாம். (11) வீரதராதி கணத்தை எவ்வித நிலைமையிலும் தாராளமாக உபயோகிக்கலாம். (12) வியோசகத்திற்காக தில்வக க்ருதத்தையும்[2] உபயோகித்து வரவேண்டும். (13) மேலும் வஸ்தி கர்மத்தையும், அதிலும் விசேஷமாக உத்தர வஸ்தியையும் பிரயோகித்து வரவேண்டும். 35—40½.

1. வீரதராதி கணம் - முதற்புத்தகம் 128-ம் பக்கம் பார்க்க.

2. தில்வக க்ருதம்—குஷ்ட சிகித்ஸையில் கூறப்படும் முறை.

சுக்ராச்மரீ சிகித்ஸை.

சுக்ரம் என்கிற பீஜதாது அச்மரியாகத் திரிபடைந்து ஸம்பவிக்கும் வியாதியில் உத்தரவஸ்திகளால் மூத்திரமார்க்கம் சுத்தி செய்யப்பட்ட பின்பு, நல்ல தேஹவலிமையுள்ள புருஷன் சுக்ராசயம் என்கிற பீஜகோசம் சுத்தியாவதன்பொருட்டு வ்ருஷ்ய குணமுள்ள திரவ்யங்களையும், அத்தன்மையதான கோழி மாம்ஸத்தையும் புஜித்து நன்கு திருப்தியடைந்தவனாய், சிற்றின்பத்தில் மிகவும் விருப்பம் அதிகரித்துள்ளவரும், ஆகவே புருஷரைப் பரவசமாக்கக்கூடிய திறமையுள்ளவருமான மதங்கொண்ட மங்கையருடன் கூடி களிகூறுவானாக. 41—42½.

ஸாதாரண சிகித்ஸைகளால் நிவ்ருத்தியாகாத அச்மரிக்கு இறுதியில் செய்யும் சிகித்ஸை.

ஸித்தோபக்ரமங்கள் எனப்படும் கைதேர்ந்த முற்கூறிய அச்சிகித்ஸைகளால் அச்மரீ வெளிவாராமல் வியாதி நிவ்ருத்தியாகாமற்போயின் மேலே செய்ய வேண்டிய (சஸ்திர) சிகித்ஸையைச் செய்யாமற்போனால் பிணியாளிக்கு மரணமுண்டாவது நிச்சயம்; அநேக முறை சஸ்திரசிகித்ஸை செய்து அவ்வேலையில் நிச்சயமாய் பலனுண்டாக்கும் திறமையுண்டென்கிற நிச்சய புத்தியுள்ள வைத்தியனாயிருந்து சஸ்திர சிகித்ஸை செய்தால் "ஒருக்கால் பிழைத்தாலும் பிழைக்கலாம்" என்று உண்மையை இராஜாதிகாரியினிடம் தெரிவித்துவிட்டு, முறை தவறாமல் சஸ்திரத்தைப் பிரயோகிக்கவும். 43—44½.

அச்மரியில் சஸ்திர சிகித்ஸை செய்யு முறை.

பிறகு பிணியாளிக்கு ஸ்நேஹ சிகித்ஸையையும் சோதநசிகித்ஸையையும் செய்து வைத்து, சிறிது கர்ஷணசிகித்ஸையினால் அப் பிணியாளியை இளைக்கவும் செய்து, சரீரத்திற்கு அப்யங்கமும் ஸ்வேதமும் செய்வித்து, முன்னதாய் அவசியமான மங்களச் சடங்குகளையும் நிறைவேற்றி வைத்து, எதும் போஜனமெடுத்துக்கொள்ளாமலிருக்கச் செய்து, முழங்காலுயரமுள்ள ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டுள்ள ஒரு மனிதனுடைய மடியில் சாய்ந்து, உடலின் மேல் பாகம் நிமிர்ந்து நிற்க, மிருது வஸ்திரங்களாலாகிய மெத்தையின் மேல் உட்காரச் செய்து, முழங்கால்களை மடக்கி முழங் கைகளையுங் கட்டி, இவனைத் தாங்கிக்கொண்டுள்ள மனிதனோடு சேர்த்து வஸ்திரத்தினால் திடமாகக் கட்டி, அதன்பிறகு அப் பிணியாளிக்குத் தேறுதல் சொல்லி, நாபிக்கு நாற்புறமும் ஸ்நேஹமிட்டுத் தேய்த்து, நாபிக்குக் கீழே இடது புறமாக அச்மரியென்கிற மூத்திரக்கல் கீழே நழுவிச் செல்லும் வரையில் நன்கு பலமாக அழுத்தி மர்தநம் செய்யவும்; பிறகு வைத்தியன் தன் விரல்களுடைய நகங்களை நன்றாக அறுத்து சுத்தம் செய்துகொண்டு, இடது கையின் ஆள் காட்டி விரலையும் நடுவிரலையும் ஸேவநீ யென்கிற நாடியை நோக்கி மெதுவாக குதத்தினுள் செலுத்தி, நாபிக்கு அருகில் வலயமென்கிற குதவலியைப் பற்றிக்கொண்டு, அச்மரியுள்ள விடத்தைத் தேடிப் பிடித்து, அச்மரி தங்கியுள்ள அவயவ பாகத்தை குதத்திற்கும் ஆண்குறிக்கும் இடையில் மெதுவாக இழுத்துச் சேர்த்து, வஸ்தி யென்கிற மூத்திரப்பை சுருக்கங் கொள்ளாமலும் அதில் இசிவு உண்டாகாத விதமாகவும் அதை மெதுவாக உட்செலுத்திய இரண்டு விரல்களாலும் ஒரு கிரந்தி போல் மேல்நோக்கி சல்யம் (அச்மரீ) எழும்பும் வரையில் அழுத்தவும்; பிறகு ஸேவநீ மார்க்கத்திலிருந்து விரலை யெடுத்து, ஒரு யவதானியப் பிரமாணம் அல்லது அச்மரியின் அளவுக்குத் தக்கபடி அவ்விடத்தைக் கீண்டு, அச்மரி உடையாதபடி முற்றிலும் அதை ஸர்ப்பாஸ்யம் என்கிற சஸ்திரத்தினால் வெளி

யில் எடுத்துப் போடவும். ஸ்த்ரீகளுக்கு மூத்திர வஸ்தியானது கர்ப்பாசயத்தை அணுகி சிறிது பக்கவாட்டாகத் தங்கியிருக்கக் கூடுமாகையால் சிறிது மேற்புறமாகவே சஸ்திரத்தை அவர்களுக்குப் பிரயோகிக்க வேண்டும்; இல்லையேல் அவர்களுக்கு மூத்திரப் பெருக்குடன் கூடிய விரணம் உண்டாய்விடும். புருஷனுக்குக்கூட வஸ்தியின் ஒரு பாரிசத்தில் சஸ்திரத்தினால் விரணமுண்டாய், மூத்திரம் கசிந்துகொண்டிருந்தால் அது ஒருவாறு சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக்கூடியதே; ஆனால் அவனுக்கும் இரு புறங்களில் விரணமேற்பட்டு மூத்திரஸ்ராவம் உண்டானால் அது சிகித்ஸைக்கு வசப்படாத அஸாத்தியமான ரோகமாக ஆய்விடும். 45—54½.

அச்மரியில் சஸ்திரப் பிரயோகமான பிறகு செய்யு முபசாரங்கள்.

சல்யம் (அச்மரீ) விலக்கப்பட்ட பிறகு பிணியாளியை உஷ்ண ஜலம் நிரம்பிய விசாலமான ஒரு தொட்டியில் உட்கார வைத்துக் குளிப்பாட்டவும்; அப்படிச் செய்தால் வஸ்தியில் இரத்தம் விழுந்து அதை நிரப்பாமலிருக்கும்; அப்படிச் செய்தும் வஸ்தியினுள் இரத்தம் நிரம்பிவிடுவதாகத் தெரிந்தால் பாலுள்ள மரங்களின் கஷாயத்தை ஆண்குறி மூலமாய் உட்செலுத்தவும். பிறகு மூத்திரம் சுத்தியாவதன் பொருட்டு திருப்தி யுண்டாகும் வரையில் பிணியாளிக்கு வெல்லத்தைக் கொடுக்கவும்; அப்பால் விரணத்தின் மேல் தேனையும் நெய்யையும் லேபநம் செய்துகொண்டு, மூத்ர சோதந வஸ்துக்களால்[1] பக்குவம் செய்த யவாகுவை இளஞ் சூடான நிலைமையில் நெய்கூட்டி தினத்திற்கு இரண்டு வேளையாக மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்யவும்; பிறகு சொற்ப அன்னத்தைப் பாலில் கலந்து போதுமானவளவு வெல்லமும் கூட்டி பத்து நாட்கள் சாப்பிடவேண்டும்; அதற்குப் பிறகு எலுமிச்சம்பழம் முதலியவற்றின் இரஸங்களையும் ஜாங்கல ஜந்துக்களுடைய மாம்ஸ ரஸங்களையும் கலந்து அன்னத்தை புசித்து வரலாம். பாலுள்ள மரங்களின் கஷாயத்தினால் விரணத்தை ஆற்றி, வெள்தாமரை, மஞ்சிஷ்டி, அதிமதூரம், வெண்மையான அன்னபேதி இவற்றை மெழுகாகச் செய்து அந்த விரணத்தின் மேல் தடவலாம்; இச் சாக்குகளையும் மஞ்சளையும் சேர்த்துத் தைலம் பக்குவம் செய்து, விரணத்தின்மேல் லேபநம் செய்து வரலாம். இங்ஙனமே பத்து நாட்கள் வரையில் ஸ்வேத சிகித்ஸையும் செய்யவேண்டும்; ஏழு நாட்களுக்குள் மூத்திரம் வெளிவராமற் போனால் அச்மரியினால் ஏற்பட்ட விரணத்தை அக்னியினால் முறைப்படி சுடவேண்டும்; மூத்திரம் தன் வழியில் கிரமமாக வெளிவந்து விடுமானால் மதுர ரஸமுள்ள வஸ்துக்களைக் கொண்டு வஸ்திகளைப் பிரயோகித்து பிணியாளியை உபசரிக்கவேண்டும். அச்மரீ ரோகிக்கு சஸ்திர சிகித்ஸை செய்தபிறகு, சஸ்திரமிட்ட விடத்திலுள்ள விரணம் ஆறியிருந்தாலும், அப்பிணியாளி ஒரு வருஷகாலமும் பர்வதம், யானை, குதிரை, மரம், இரதம் இவற்றில் ஏறக் கூடாது; ஸ்த்ரீ ஸம்போகமும் அவனுக்கு அவ்வளவு நாட்கள் வரையில் ஆகாது; ஜலத்திலும் அவன் நீந்தக்கூடாது. 55—62.

சஸ்திர சிகித்ஸை செய்யக் கூடாத அவயவங்கள்.

மூத்திரம் வழி வருவதற்கு ஆதாரமான வஸ்தியையும், சுக்ரதாது வழி வருவதற்கு ஆதாரமான பீஜகோசத்தையும், ஸேவனீ யென்கிற அங்குள்ள மத்திய ரேகா பாகத்தையும், குதத்தையும், மூத்திரத்தை வெளியிடுவதற்கான அவயவத்தையும், யோனியையும் ஆக இவ்வெட்டு அவயவங்களையும் சஸ்திர சிகித்ஸை செய்யக்கூடாத பாகங்களென்று விலக்கிவிட வேண்டும். 63.

1. முள் வல்லாரை, வெள்ளிரி, பூசுனி, நெரிஞ்சில் முதலியன.

# பன்னிரண்டாவது அத்தியாயம்.

பிறகு பிரமேஹ சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

பிரமேஹத்தில் முதலில் செய்ய வேண்டிய சிகித்ஸை.

தகுந்த தேஹவலிமையுள்ள பிரமேஹரோகிக்கு முதலில் வமநம் விரேசநம் இவற்றைப் பிரயோகிக்க வேணும். கடுகெண்ணெய், வேப்பெண்ணெய், ஜேபாளவிதை யெண்ணெய், மணிப்புங்கெண்ணெய் இவற்றுளும், பிறகு கூறப்படுமாறு முறைப்படி பக்குவம் செய்யப்பட்ட த்ரிகண்டகாதி தைலத்தினாலும் [1] ஸ்நேஹசிகித்ஸை செய்வித்து, ஸாராஸாதி கஷாயத்தில் [2] கோரைக் கிழங்கு, தேவதாரு, சுக்கு இவற்றையும் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்து அக் கஷாயத்தினால் பிறகு நிரூஹ வஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும். இங்ஙனம் சுத்தி செய்யப்பட்ட பிணியாளி பித்த விகாரங்களால் வருந்தினால் அவனுக்கு ந்யக்ரோதாதி கணத்திற் [3] கூறியுள்ள சாக்குகளின் ஸ்வரஸங்களால் தர்ப்பண சிகித்ஸை செய்விக்க வேண்டும். வமந-விரேசநாதி அபதர்ப்பண சிகித்ஸைகளால் நீர் கட்டிப் போதல், மூத்திர மார்க்கத்தில் வலி, குல்மம், க்ஷயம் இவை ஸம்பவிக்குமாகையால் அவ்விதமான கோளாறுகள் தொடருவதைத் தடுப்பதற்காக சமநௌஷதங்களை யுபயோகிக்க வேண்டும். வமந-விரேசநாதி சோதந சிகித்ஸைகளுக்குத் தகாத பிரமேஹரோகிக்கு எந்தவிதமான பிரமேஹமா யிருந்தபோதிலும், அச்சமநௌஷதங்களையே உட்கொள்ளச் செய்யவேண்டும். 1—$1\frac{1}{2}$.

பிரமேஹத்தில் சமநௌஷதங்கள்.

(1) மஞ்சட் பொடியை நெல்லிக்காயின் இரஸத்தில் சேர்த்து, தேனும் கூட்டி விடியற் காலத்தில் பருகலாம். (2) மரமஞ்சள், தேவதாரு, த்ரிபலை, கோரைக்கிழங்கு இவற்றை ஜலத்தில் இடித்துச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது உட்கொள்ளலாம். (3) சித்திர மூலம், த்ரிபலை, மரமஞ்சள், வாலுழுவை இவற்றையாவது கஷாயம் செய்து தேன்கூட்டி பானம் செய்யலாம். (4) சீந்திற்கொடியின் ஸ்வரஸத்தையாவது, (5) நெல்லிக் கனியின் ஸ்வரஸத்தையாவது தேன் கலந்து உட்கொள்ளச்செய்யலாம். 5,6.

கபப் பிரமேஹத்தில் சமந கஷாயங்கள்.

(1) வெள்ளிலோத்தி, கடுக்காய், கோரைக் கிழங்கு, சிறு தேக்கு; (2) வட்டத்திருப்பி, வாய்விடங்கம், மருதம்பட்டை, கொத்தமல்லி விதை; (3) கருங்காலி, மரமஞ்சள், வாய்விடங்கம், வசம்பு; இம்மூன்று விதமான கூட்டுகளில் ஏதேனும் ஒன்றைக் கஷாயமிட்டு, தேன் கூட்டி கபத்தினாலுண்டான பிரமேஹத்தில் உபயோகிக்கலாம். 7.

பித்தப் பிரமேஹத்தில் சமந கஷாயங்கள்.

(1) வெட்டிவேர், வெள்ளிலோத்தி, மருதம் பட்டை, செஞ்சந்தனம்; (2) பேய்ப்புடல், வேம்பு, நெல்லிக்கனி, சீந்தில்; (3) வெள்ளிலோத்தி, வெட்டிவேர், அகில், காட்டாத்திப்பூ; இம்மூன்று

1. த்ரிகண்டகாதி தைலம்—அடுத்த 127-ம் பக்கத்தில் 17-வது 18-வது ச்லோகங்களின் மொழி பெயர்ப்பில் கூறப்படும் தைலம்.

2. ஸாராஸாதி கணம்—முதற் புத்தகத்தில் 126-ம் பக்கம் பார்க்க.

3. ந்யக்ரோதாதிகணம்—முதற் புத்தகத்தில் 127-ம் பக்கம் பார்க்க.

வகையான கூட்டுகளில் ஏதேனும் ஒன்றைக் கஷாயமிட்டு, தேன் கலந்து பித்தத்தினு லுண்டான பிரமேஹத்தில் உட்கொள்ள லாம். 8.

கப பித்தாதி பிரமேஹங்களில் சமகமான உணவுகள்.

கபப்பிரமேஹ-பித்தப் பிரமேஹங்களுக்காகக் கூறப்பட்டுள்ள சமக கஷாயங்களில் எவரெவருக்கு எது அனுகூலமாகுமோ அதில் பானவகைகளையும் அன்னத்தையும் பக்குவம் செய்து உபயோகிப்பதோடு, வாற்கோதுமையையும், கோதுமையையும் பாவனை செய்து உபயோகிக்கலாம். $8\frac{1}{2}$.

வாதப் பிரமேஹங்களில் சமக ஸ்நேஹங்கள்.

வாதம் பிரகோபித்துண்டான பிரமேஹங்களில் முற்கூறிய கஷாயங்களைக் கொண்டே ஸ்நேஹங்களைப் பக்குவம் செய்து உபயோகிக்கலாம். 9.

பிரமேஹத்தில் உபயோகிக்கக் கூடிய பலவித உணவுகள்.

(1) வாற்கோதுமையை உடைத்து அல்லது அரைத்து பக்குவம் செய்யப்படும் அடை முதலிய பணியாரங்களும், அதன் மாவும், வாட்யம் என்கிற பாகமும் பிரமேஹத்தில் அனுகூலமான உணவாம். (2) அல்லது பசுக்களும் குதிரைகளும் விழுங்கி அவை குதத்தின் மூலமாய் வெளியிடும் யவதானியங்களையும், (3) மூங்கிலிலிருந்துண்டாகும் அரிசிகளையும் முன்போலவே பக்குவம் செய்து உபயோகிக்கலாம். (4) செந்நெல் முதலிய திருணதானியங்களும், பயறு முதலிய சிம்பீதானியங்களும், நன்றாகப் பழகிய சம்பாவும், பழகிய காரரிசியும் இவ்வியாதியில் ஹிதமானவையாம். (5) எள்ளுப் பிண்ணாக்கு, கடுகுப் பிண்ணாக்கு இவற்றைக்கொண்டு பக்குவம் செய்யப்படும் ஶ்ரீகுக்குடம் என்கிற அம்லமான உணவும், கலசம் என்கிற உணவும் [1] இதில் அனுகூலமாகும். (6) விளாம்பழம், தும்பில், நாவல்பழம் இவைகளும் இவற்றைக் கொண்டு செய்யப்படும் ராக காண்டவங்கள் என்கிற [2] பணியாரங்களும் உபயோகமாகும். (7) இக்தாஸமுள்ள சாகங்களும், தேனும், த்ரிபலையும், முற்கூறிய மாபண்டங்களால் பக்குவம் செய்யப்பட்டு கஷாமாயுள்ள பக்ஷ்யங்களும் ஹிதமாகும். (8) சூலையில் குத்தி வாட்டி யெடுத்து நன்றாக சுஷ்கமாகப்போன ஜாங்கல மாம்ஸங்களும், அயஸ்க்ருதியும் [3] உபயோகமான உணவுகளாம். (9) பழகிய மதுக்களும், அரிஷ்டங்களும், ஆஸவங்களும், பக்வரஸஸீதுவும் உபயோகிக்கத் தகுந்தவையே. (10) அங்கனமே அஸநாதிகளைத்திற் கூறிய சாக்குகளின் ஸாரத்திலும், தர்ப்பத்திலும் பக்குவம் செய்யப்பட்ட கஷாயங்களும், தேன் கலந்த ஜலமும் பிரமேஹத்தில் உபயோகிக்கக்கூடியவையாம். (11) யவதானியங்களை த்ரிபலாக்வாதத்தில் இரவில் ஊறவைத்து, பகலில் வெயிலில் காண்டும்படி காய வைத்து, அந்த தானியங்களை மாவாக அரைத்துத் தேனில் பிசைந்து புசித்து, சீதுவென்னும் மத்யத்தை அனுபானமாகவும் உபயோகிக்கலாம். 10—$14\frac{1}{2}$.

கப பித்தப் பிரமேஹங்களில் உபயோகிக்கக் கூடிய சூர்ணம்

குங்கிலியம், ஏழிலம்பாலை, கம்பில்லம், புளியம் பழம் (உலர்ந்தது), தான்றிக்காய், விளாம்பழம் (உலர்ந்தது), முள் முருங்கம் புஷ்பம் இவற்றைச் சூர்ணம் செய்து, தேன் கூட்டியாவது, நெல்லிக்கனியின் சாற்றில் கலந்தாவது

1. கலசம்—இதுவே சலம் எனப்படும்; ஒருவித மாப்பணியாரம்.

2. ராக-காண்டவங்கள் —முதற் புத்தகத்தில் 21-ம் பக்கம் பார்க்க

3. அயஸ்க்ருதி— அடுத்த 128 ம் பக்கத்தில் 28-முதல் $31\frac{1}{2}$-வது ச்லோக மொழி பெயர்ப்பு வரையில் கூறப்படும் முறை.

கப-பித்தப் பிரமேஹங்களில் உட்கொள்ளலாம். 15, 16.

மேஹங்களில் த்ரிகண்டகாதி ஸ்நேஹங்கள்.

த்ரிகண்டகம், [1] மஞ்சள், வெள்ளிலோத்தி, வசம்பு, மருதம் பட்டை, தாமரைக்கிழங்கு, வேலை, வேப்பம்பட்டை, சந்தனம், அகில், ஓமம், பேய்ப்புடல், கோரைக்கிழங்கு மஞ்ஜிஷ்டி, திப்பிலி, சேராங்கொட்டை இவற்றைக் கொண்டு தைலம் பக்குவம் செய்து வாத கபமேஹங்களிலும், க்ருதம் பக்குவம் செய்து பித்த மேஹத்திலும், மிச்ரகஸ்நேஹத்தைப் [2] பக்குவம் செய்து மிச்ர தோஷங்களாலான மேஹங்களிலும் [3] உபயோகிக்கலாம். 17, 18.

தாங்வந்தர க்ருதம்.

தசமூலம், கச்சோரம், தேபாளம், தேவதாரு, வெள்ளைச் சாறணை, செஞ்சாறணை, கள்ளிவேர், எருக்கம்வேர், கடுக்காய், கிலைக்கடம்பு சேராங்கொட்டை, புங்கம்வேர், மாவலிங்கைவேர், மோடி, தாமரைக்கிழங்கு இவை வகைக்குப் பத்துபலம், வாற்கோதுமை, இலந்தங்கொட்டை, கொள் இவை வகைக்கு மூன்று பிரஸ்த்தங்கள் [4]; இவற்றையெல்லாம் எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்து நாலில் ஒரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி, அக்கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் சேர்த்து, அரிசித்திப்பிலி, யானைத்திப்பிலி, சவ்யம், வசம்பு, வஞ்சி, காவட்டம்புல், சிவதை, வாய்விடங்கம், கம்பில்லம், கண்டுபாரங்கி, பில்வவேர் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்து கொள்ளவும். இந்த க்ருதம் ஸகல மேஹங்கள், பிரமேஹ பிடகைகள், விஷப்பற்றுகள், பாண்டு, வித்ரதி, குல்மம், அர்சஸ், சோபை, க்ஷயம், கிருத்ரிமவிஷங்கள், மஹோதரம், ச்வாஸம், காஸம், வமநம், அண்டவிருத்தி, ப்லீஹவ்ருத்தி, வாதரக்தம், குஷ்டம், உந்மாதம் என்கிற சித்தப்பிரமை, அபஸ்மாரம் இவ்வியாதிகளைப் பரிஹரிக்கும்; இதற்கு "தாங்வந்தர க்ருதம்" எனப் பெயர். 19—23½.

ரோத்ரா ஸவம்.

வெள்ளிலோத்தி, பெருங்குரும்பை, கச்சோரம் வாய்விடங்கம், கண்டுபாரங்கி, நதம் என்கிற கந்தத்திரவியம், புலியுகிர் என்னும் வாஸனைவஸ்து, பூவரசம்பட்டை, வாலுழுவை, கோஷ்டம், பாக்கு, ஞாழல், அதிவிடயம், சித்திரமூலம், தும்மட்டி, பேய்த்தும்மட்டி, சதுர் ஜாதம் [1], கிலவேம்பு, கடுகரோஹிணீ, ஓமம், தாமரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, கிரந்திதகரம், சவியம், த்ரிபலை இவற்றை வகைக்குக் கால் பலம் வீதம் ஒரு கலசம் அளவான [2] ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்கு கஷாயம் மிகும்படியாகக் காய்ச்சி, வடிக்கட்டி, குளிர்ந்த பிறகு, இரண்டு பிரஸ்த்தம் தேன் சேர்த்து, பாத்திரத்தின் வாயைச் சீலைமண் செய்து, பதினைந்து நாட்களளவும் திறக்காமல் வைத்திருக்கவும். "ரோத்ராஸவம்" என்கிற இவ்வௌஷதம் மேஹங்கள், அர்சஸ், ச்வித்ரம் என்கிற வெண்குஷ்டம், குஷ்டம், அரோசகம், குடலிலுண்டாகும் கிருமிகள், பாண்டுரோகம், கிரஹணீரோகம், மேதோரோகம் இவற்றைப் போக்கும். 24—27½.

---

1. த்ரிகண்டகம்—கண்டங்கத்திரி, நெரிஞ்சில், நீர்முள்ளி இவற்றின் கூட்டு.

2. மிச்ரகஸ்நேஹம்—எண்ணெய், நெய் முதலிய பல ஸ்நேஹங்களைக் கூட்டி பக்குவம் செய்தல்

3. மிச்ரதோஷங்கள்—வாத-பித்த-கபங்கள் இரண்டிரண்டாகவும் மும்மூன்றாகவும் சேர்ந்து கோளாறுண்டு பண்ணுதல்.

4. பிரஸ்த்தம்—பதினாறு பலங்கொண்ட அளவு.

1. சதுர்ஜாதம்—முதற் புத்தகம் 63-ம் பக்கம் பார்க்க.

2. கலசம்—அறுபத்திநாலு பிரஸ்த்தங்கள்கொண்ட அளவு. இதுவே திரோணம் எனப்படும்.

அயஸ்க்ருதி.

அஸநாதி கணத்தைச்[1] சேர்ந்த சரக்குகளை வகைக்கு இருபது பலம் வீதம் எட்டு திரோணம்[2] ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; அது நாலில் ஒரு பங்காக வற்றியபிறகு வெல்லம் இருனூறு பலமும், தேன் இரண்டு பிரஸ்த்தமும்சேர்த்து வத்ஸகாதிகணத்தைச்[3] சேர்ந்த சரக்குகளை வகைக்கு ஒவ்வொரு பலமாக எடுத்து இடித்து கல்கமாகச் சேர்த்து விடவும். நெய் வைத்துப் பழகிய ஒரு திடமான மட்பாத்திரமெடுத்து, தேனும் திப்பிலியின் சூர்ணமும் கலந்து அப்பாத்திரத்தின்மீது பூச்சிட்டு, அதன்மேல் அரக்கையும் உருக்கி மெழுகிவிட்டு, அப்பாத்திரத்தில் முற்கூறிய கஷாயாதிகளைச் சேர்த்து மிகவும் மெல்லிதாக அடிக்கப்பட்டுள்ள உருக்கு இருப்புத்தகடுகளைக் கருங்காலிக் கட்டைகளிட்டு எரித்த அக்னியில் பழுக்கப் பழுக்கக் காயச்செய்து அத்தகடுகள் முற்றிலும் உருகித் தேய்ந்துபோகும் வரையில் அக்கஷாயத்தில் அநேகமுறை தோய்க்கவும். அதன் பிறகு இப்பாத்திரத்தின் வாயைச் சீலைமண் செய்து மூடி, ஒரு மாஸகாலம் தானியக் களஞ்சியத்தினுள் அடக்கம் செய்து வைத்திருக்கவும். "அயஸ்க்ருதி" யெனப்படும் இது முற்கூறிய ரோத்ராஸவத்தினும் அதிக குணமுள்ளது. 28—31½.

பிரமேஹத்தில் கப-மேதோ ஹரமான சிகித்ஸைகள்.

தைலம் முதலியவைகளைத் தடவாமல் ரூக்ஷமான நிலைமையிலேயே பலமாக உடம்பை மர்த்தநம் செய்வதும், வியாயாமமென்னும் உடலுழைப்பும், இரவில் கண்விழிப்பதும், கபஹரமாகவும் மேதோஹரமாகவும் உள்ளும் புறமும் பிரயோகிக்கக்கூடிய மற்ற எந்த சிகித்ஸைகளுண்டோ அவையும் பிரமேஹத்தில் ஹிதமாகும். 32½.

பிரமேஹத்தில் சிலாஜதுப்பிரயோகம்.

ஒரு துலாம் அளவு கொண்ட சிலாஜதுவை அஸநாதி கணத்திற் கூறிய சரக்குகளின் கஷாயங்களில் பாவனை செய்து, அச்சரக்குகளின் கஷாயத்தோடு அதை உட்கொள்ளவேண்டும். சம்பா அரிசியினுலான அன்னத்தை ஜாங்கல மாம்ஸ ரஸங்களோடு புஜித்துவரலாம். இது ஸகல மேஹங்களையும் மிக்க உபத்திரவங்களோடு கூடியவையாயிருந்தபோதிலும், யக்ஷ்மம், கண்டமாலை, அர்புதம், கிரந்தி, மேதோரோகம், குஷ்டம், பகந்தரம், குடல் கிருமிகள், ச்லீபதம் என்னும் யானைக்கால், சோபமென்னும் சோகை இவைகளையும் பரிஹரிக்கும்; மேலும் இது சிலாக்கியமான இரஸாயநமுமாகும். 33—35.

ஏழையான பிரமேஹிகளுக்கேற்ற பரிஹார முறை.

திரவியமில்லாத எளியவனுக்குப் பிரமேஹம் ஸம்பவித்தால் அவன், குடையும் பாதரக்ஷையுமில்லாமல், முனிவர்களுடைய விரதங்களைக் கைப்பற்றியவனாய் நூறு யோஜனைதூரம் நடந்து செல்லலாம்; கிணறு முதலியவைகளைத் தோண்டியுழைக்கலாம்; பசுமூத்திரம், பசுஞ்சாணம் இவற்றையாவது சிறுகச் சிறுக உபயோகித்து வரலாம்; பசுக்களோடு கூடவேயாவது ஸஞ்சரித்து வரலாம். 36, 36½.

இளைத்துள்ள பிரமேஹிகளுக்கு ஏற்ற ஔஷதாஹாரங்கள்.

இளைத்து பலஹீனமாயுள்ள பிரமேஹிக்கு மேதஸ் மூத்திரங்களை விருத்தி செய்யாத ஔஷதங்களாலும் ஆஹாரங்களாலும் பிருஹ்மண சிகித்ஸையைச் செய்விக்கலாம். 37.

1. அஸநாதி கணம்—முதற்புத்தகம் 125ம் பக்கம் பார்க்க.

2. திரோணம்—69-பிரஸ்தங்கொண்ட அளவு.

3. வத்ஸகாதி கணம்—முதற்புத்தகம் 126-ம் பக்கம் பார்க்க.

*பிரமேஹ பிடகைகளுக்கு சிகித்ஸை.*

சராவிகை முதலிய பிரமேஹ பிடகைகள்[1] பக்குவமாகாத நிலைமையிலிருந்தால் அவற்றை சோபங்களைப் போல சிகித்ஸிக்க வேண்டும்; பக்குவ நிலைமையிலிருந்தால் அவற்றிற்கு விரணங்களைப்போல[2] சிகித்ஸை செய்யவேண்டும். பிரமேஹ பிடகைகளில் பூர்வரூப நிலைமையிலேயே பாலுள்ள மரங்களின் கஷாயமும், செம்மறியாட்டின் சிறுநீரும் உட்கொள்வதற்குச் சிறந்த மருந்துகளாம். பிரமேஹ ரோகிகளுக்கு இயற்கையாகவே விரேசன முண்டாவது வெகு கடினமாகையால், தீக்ஷ்ண வீர்யமுள்ள ஔஷதங்களால் விரேசநம் செய்விக்கவேண்டும். ஏலாதி கணத்திற்குக்[3] குறிப்பிட்டுள்ள சரக்குகளைக் கொண்டு பக்குவம் செய்யப்பட்ட தைலமானது பிரமேஹ பிடகைகளில் விரண ரோபணமாக[4] உபயோகிக்கக் கூடியது; விரணங்களின் மேல் பூசுவதற்கும் தேய்த்துக் கழுவுவதற்கும் ஆரக்வதாதி கணத்திற்[5] கூறிய சரக்குகளால் பக்குவம் செய்த கஷாயத்தை உபயோகிக்கலாம்; அஸநாதிகண கஷாயத்தினால்[1] பரிஷேகம்[2] செய்யலாம்; பருகுவதற்கும் உணவுகளில் உபயோகிப்பதற்கும் வத்ஸகாதிகண கஷாயம்[3] உபயோகமானது. 38—40½.

*பிரமேஹத்தில் பாடாதி சூர்ணமும் நவாயஸ சூர்ணமும்.*

வட்டத்திருப்பி, சித்திரமூலம், மணிப்புங்கு, நன்னாரி, கண்டங்கத்திரி, ஏழிலம்பாலை, வெட்பாலையின் வேர், வெள்ளைக் கருங்காலி, பெருவாகை இவற்றைச் சூர்ணம் செய்து, தேனிற் கலந்து உட்கொள்ளலாம்; அங்ஙனமே நவாயஸ சூர்ணம்[4] தேனுடன் கலந்துபயோகிக்கத் தகுந்ததாம். 41, 42.

*மதுமேஹத்தில் சிலாஜதுப் பிரயோகம்*

பிரமேஹரோகத்தினால் வருந்துபவன் மதுமேஹியாகப் போனால், அவன் வைத்தியர்களாலும் கைவிடப் பட்டானானால் ஒரு துலாப்பிரமாணம்[5] சிலாஜதுவைப் புஜித்து மீண்டும் பழைய ஆரோக்கிய நிலைமையைப் பெறலாம். 43.

---

1. பிரமேஹ பிடகைகள் பத்து விதங்கள்—இவற்றைப்பற்றி நிதாநஸ்தாநத்தில் பத்தாவது அத்தியாயத்தில் விவரம் காண்க.

2. ரோபைகளையும் விரணங்களையும் பற்றிய சிகித்ஸைகள் அடுத்த அத்தியாயத்தில் கூறப்படுகின்றன.

3. ஏலாதி கணம்—முதற் புத்தகத்தில் 127-ம் பக்கத்தில் விவரம் காண்க

4. விரண ரோபணம்—விரணங்களை ஆற்றுங் குணம்.

5. ஆரக்வதாதி கணம்—முதற்புத்தகம் 125-ம் பக்கம் பார்க்க.

1. அஸநாதி கணம்—முதற் புத்தகம் 125-ம் பக்கம் பார்க்க.

2. பரிஷேகம்—ஸேகம் எனப்படுவது; முதற் புத்தகம் 110, 172-ம் பக்கங்களில் விவரம் காண்க.

3. வத்ஸகாதி கணம்—முதற் புத்தகம் 126-ம் பக்கம் பார்க்க.

4. நவாயஸ சூர்ணம்—த்ரிகடு, த்ரிபலை, கோரைக்கிழங்கு, வாய்விடங்கம் சித்திரமூலம் இவற்றின் சூர்ணங்கள் ஸமபாகம்; அயபஸ்மம் ஒன்பது பாகம்; இக்கூட்டுக்கு நவாயஸ சூர்ணம் எனப்பெயர். இதைத் தேனில் அல்லது நெய்யில் கலந்து உட்கொள்ளவும்.

5. துலாப் பிரமாணம்—100 பலங்கொண்ட அளவு.

# பதின்மூன்றுவது அத்தியாயம்.

இனி வித்ரதி வ்ருத்தி சிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப் படுகின்றது:—

வித்ரதியில் ஆம பக்குவ நிலைமைகளில் செய்யும் சிகித்ஸை.

ஆம மென்கிற பழுக்காத நிலைமையிலுள்ள எல்லா வித்ரதிகளுக்குமே சோபை (ச்வயது) என்கிற வீக்கத்துக்குச் செய்வதைப் போன்ற [1] சிகித்ஸையைச் செய்யவேண்டும்; எப்பொழுதுமே அவ்வித நிலைமையிலுள்ள வித்ரதிகளிலிருந்து இரக்தமோக்ஷணம் செய்யவேண்டும்; வித்ரதிக்கு ஆம நிலைமை மாறி பக்குவ நிலைமை யுண்டாய்விட்டால் விரணங்களுக்குச் செய்வது போலவே சிகித்ஸை செய்யவேண்டும். 1.

வாதஜ விரணங்களுக்கு சிகித்ஸை.

(1) வாத ஸம்பந்தமான விரணத்தைப் பஞ்சமூலகஷாயத்தில் [2] மிகுதியாக உப்பைக் கலந்து அதனுல் கழுவவேண்டும். (2) பத்ரதார்வாதி கணச் சரக்குகளையும் [3] அதிமதுரத்தையும் எள்ளையும் சேர்த்து அரைத்து விரணத்தின்மேல் லேபனம் செய்யவும். (3) விரேசன முண்டுபண்ணுங் குணமுள்ளபதார்த்த வர்க்கங்களால் [4] பக்குவம் செய்த த்ரிவ்ருத ஸ்நேஹத்திஞல் [5] விரணத்தைச் சுத்தி செய்து, (4) விதார்யாதி கணத்தைச் சேர்ந்த சரக்குகளால் [1] பக்குவம் செய்த த்ரிவ்ருத ஸ்நேஹத்திஞல் அதை ஆற்றவேண்டும். 2, 3.

பித்தஜ விரணங்களுக்கு சிகித்ஸை.

(1) பித்த ஸம்பந்தமான விரணத்தைப் பாலுள்ள மரங்களின் [2] கஷாயத்திஞல் கழுவி, (2) அதிமதுரம், சீந்தில், எள்ளு இவற்றை அரைத்து லேபநம் செய்யவும். (3) மஞ்ஜிஷ்டி, வெட்டிவேர், தாமரைக் கிழங்கு, க்ஷீரகாகோலீ, மஞ்சள், மரமஞ்சள், த்ரிபலை, அதிமதுரம், பால் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்திஞலாவது, (4) ந்யக்ரோதாதிகணத்திற் [3] கூறியுள்ள மரங்களின் தளிர்கள், பட்டைகள், கனிகள் இவற்றின் கஷாயங்களாலாவது பித்தவிரணங்களை ரோபணம் செய்யலாம். 4, $4\frac{3}{4}$.

கபஜ விரணங்களுக்கு சிகித்ஸை.

(1) கப ஸம்பந்தமான விரணத்தை சரக்கொன்றைப் பட்டையின் கஷாயத்திஞல் கழுவி, (2) அரிசிமா, சிவதைவேர், மஞ்சள், எள்ளு இவற்றை அரைத்து லேபநம் செய்யவும்; (3) நீலாஞ்ஜநம், நேபாளம்,வெண் சிவதை, கருஞ்சிவதை. சித்திரமூலம், வெள்ளிலோத்தி, இந்துப்பு, பசுமூத்திரம் இவற்றைக் கொண்டு தைலம் பக்குவம் செய்து ரோபணமாக உபயோகிக்கவும். 5—$6\frac{1}{2}$.

---

1. இதே ஸ்த்தாநத்தில் 17-வது அத்தியாத்தில் கூறப்படும் சிகித்ஸை.

2. பஞ்சமூலம்—மஹா பஞ்சமூலம்—முதற்புத்தகம் 64-ம் பக்கம் பார்க்க.

3. பத்ரதார்வாதி கணம்—முதற் புத்தகம் 123-ம் பக்கம் பார்க்க.

4. விரேசநத்திரவ்யங்கள்:—முதற் புத்தகத்தின் 123-ம் பக்கத்திலுள்ள-ஸ்ரும்பாதி கணம் பார்க்க.

5. த்ரிவ்ருத ஸ்நேஹம்:—முதற் புத்தகம் 129-ம் பக்கம் பார்க்க.

1. விதார்யாதிகணம்:—முதற்புத்தகம் 124-ம் பக்கம் பார்க்க.

2. பாலுள்ள மரங்கள்:—ஆல், அரசு, அத்தி முதலியன.

3. ந்யக்ரோதாதி கணம்:—முதற் புத்தகம் 127-ம் பக்கம் பார்க்க.

இரத்த வித்ரதி ஆகந்துக வித்ரதிகளுக்கு சிகித்ஸை.

இரத்தக் கோளாறுலும் ஆகந்துகமான காரணங்களாலும்[1] உண்டாகிற வித்ரதியில் பித்தவித்ரதிக்குக்(பித்தவிரணத்திற்கு) கூறப்பட்டுள்ள சிகித்ஸைகளைப் போலவே சிகித்ஸை செய்ய வேண்டும். 7.

அபக்வமான அந்தர்வித்ரதியில் கஷாயம்.

அந்தர்வித்ரதி[2] பக்குவமாகாத நிலைமையிலிருக்கையில் வருணாதி கணத்திற் கூறியுள்ள[3] சரக்குகளால் க்வாதம் பக்குவம் செய்து, அதில் ஊஷகாதி கணத்திற்கூறியுள்ள[4] சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்து முற்பகலில் அக்கஷாயத்தைப் பருகவும். 8.

அபக்வ வித்ரதிகளில் கல்கக்ருத நிருஹ அநுவாஸநப்பிரயோகங்கள்.

(1) விரேசநகுணமுள்ள சரக்குகளால் க்ருதம் பக்குவம் செய்து, அதை முற்கூறிய வருணாதிகணவஸ்துக்களினுலான கஷாயத்தின் அனுபானத்துடன், ஊஷகாதி கணகல்கத்தையும் கூட்டி உட்கொள்ளச் செய்யவும். (2) அதே வருணாதிகண க்வாதத்தில் ஊஷகாதிகண கல்கத்தைக் கூட்டி நிருஹ வஸ்தியையும் அநுவாஸநவஸ்தியையும் பிரயோகிக்கலாம். (3) செம்முருங்கையைப் பானவகைகளிலாவது, போஜனங்களிலாவது, லேபங்களிலாவது அந்தந்த தோஷ நிலைமைகளுக்கேற்றவாறு கல்கமாகப் பிரயோகிக்க அபக்வமான வித்ரதி குணமடையும். 9, 10.

1. ஆகந்துகம்:—வெளிக்காரணம்.

2. அந்தர்வித்ரதி:—முதற் புத்தகம் 367-ம் பக்கம் பார்க்க.

3. வருணாதி கணம்:—முதற் புத்தகம் 125-ம் பக்கம் பார்க்க.

4. ஊஷகாதி கணம்:—முதற் புத்தகம் 125-ம் பக்கம் பார்க்க.

த்ராயந்த்யாதி க்ருதம்.

கொன்றை, த்ரிபலை, வேம்பு, கடுகரோஹிணீ, அதிமதுரம் இவை ஒவ்வொரு பாகம்; சிவதை வேர், பேய்ப்புடல் வேர் தனித்தனி நான்கு பாகம்; உமிநீக்கிய கடலை எட்டு பாகம்; இவற்றின் க்வாதத்தில் நெய் சேர்த்துக் காய்ச்சி யுபயோகிக்க அது வித்ரதி, குல்மம், விஸர்ப்பம், அழற்சி, மோஹம், வெறி, ஜ்வரம், நாவறட்சி, மூர்ச்சை, வாந்தி, இருதயத்தைப் பற்றிய வியாதிகள், இரத்த பித்தம், குஷ்டம், காமாலை இவற்றைப் போக்கும் 11—12½.

த்ராயமாணாதி க்ருதம்.

ஒரு குடவம்[1] கொன்றைப்பட்டையை எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்துக்காய்ச்சி, அக்கஷாயம் ஒரு குடவம், நெல்லிக்கனியின் சாறு ஒரு குடவம், பால் ஒரு குடவம், நெய் ஒரு குடவம்; கடுகரோஹிணீ, கொன்றைப்பட்டை, காஞ்சொறி, கோரைக்கிழங்கு, கீழாநெல்லி, காகோலீ, ஜீவந்தீ, செஞ்சந்தனம், நெய்தல் இவை வகைக்குக் கால் பலம்; இவற்றை முற்றிலும் ஒரு பாத்திரத்தில் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவும்; இது குணங்களில் முன் க்ருதத்திற்கு ஸமானமானது. 13—15.

திராக்ஷாதி க்ருதம்.

திராக்ஷை, அதிமதுரம, பேரீச்சம் பழம், நிலப்பனங்கிழங்கு, தண்ணீர்விட்டாங்கிழங்கு, ஈச்சம்பழம், த்ரிபலை இவற்றின் கஷாயம், பால், நெல்லிக்கனியின் சாறு இவற்றில் க்ருதம் சேர்த்து, கடுக்காயின் கல்கத்தையும் கூட்டி, சர்க்கரை-தேன் இவற்றை நெய்யினும் கால்மடங்காகச் சேர்த்துக் காய்ச்சியெடுத்து, ஆறிய பிறகு உபயோகித்தால்

1. குடவம்—அரை சராவம் அல்லது நான்கு பலம் அளவு.

முன் க்ருதத்தைப்போலவே குண முண்டுபண்ணும். 16, 17.

**வித்ரதியில் இரத்த மோக்ஷணம்.**

வித்ரதிக்கு ஸமீபமாயுள்ள விடத்தில் ச்ருங்கம் என்கிற கருவி முதலியவற்று லாவது, ஸிரையினுலாவது இரத்தத்தை வெளிப் படுத்தலாம். 17½.

**பக்வமடையும் வித்ரதிக்கு உபநாஹ ஸ்வேதம்.**

பக்வா வஸ்த்தை யடைந்துவரும் வித்ரதியையும், கோஷ்டத்தினுள் [1] உண்டாய் வெளியில் காணக் கூடியவாறு பருத்துண்டாயிருப்பது மான வித்ரதியை நன்கு பரிசோதித்துத் தெரிந்துகொண்டு உபநாஹஸ்வேதம் [2] செய்யலாம். 18¼.

**வித்ரதிகள் பக்குவமானதன் குறிகள்.**

வலி சாந்தமாய், வீக்கமும் திரண்டு பருத்துப் போய், அதன் பக்கங்களை அழுத்தினுல் உணர்ச்சியின்மை யுண்டாயிருக்கும் போது, அழற்சி முதலியவைகளும் மிகச் சொற்பமா யிருக்கையில், வித்ரதி பக்குவ நிலைமை யடைந்திருப்பதாகக் கருதி, அதை சஸ்திரத்தினுல் உடைத்து, அப்பால் விரணத்திற்குச் செய்வது போல சிகித்ஸை செய்யவும். இவ்விதமான குறிகளே பக்குவமான அந்தர் வித்ரதிக்கும் காணும். 19, 20.

**அந்தர் வித்ரதிக்கு சிகித்ஸை**

அந்தர் வித்ரதி பக்குவமாய் உடைந்து விட்டால் அதிலிருந்து வெளியாகும் தோஷம் குடல் முதலிய ஸ்ரோதோமார்க்கங்களை நிரப்பி மேல்நோக்கி வாயினுலாவது, கீழ்நோக்கி குதத்தினுலாவது வெளியாகும். அந்த தோஷம் தனக்குத்தானுகவே வெளிவருமானுல், ஹிதமான உணவுகளை புஜித்துக்கொண்டு

1. கோஷ்டம்—குடல்.

2. உபநாஹஸ்வேதம்—முதற் புத்தகம் 136-ம் பக்கம் பார்க்க.

அத்தோஷம் அங்ஙனமே வெளிவரட்டுமென்று தடுக்காமல், பத்துப் பன்னிரண்டு நாட்களளவும் உபத்திரவங்கள் ஸம்பவிக்காதபடி வைத்தியன் பிணியாளியைப் பாதுகாத்துவர வேண்டும். அப்படி நன்கு வெளிவராமற் போனால், வருணாதிகணச் சரக்குகளைச் [1] சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தை இளஞ்சூடாகப் பருகச் செய்யலாம்; செம்முருங்கப்பட்டைக் கஷாயத்தையாவது, அக் கஷாயத்தில் பக்குவம் செய்த யவாகூ வென்கிற கஞ்சியையாவது பானம் செய்விக்கலாம்; வாற்கோதுமை, இலந்தப்பழம், கொள் இவற்றாலாகிய யூஷம் என்கிற திரவான்னத்தைக் கொடுப்பதும் நலம். பத்து நாட்களுக்குப் பிறகு த்ராயந்த்யாதி க்ருதத்தினுலாவது, [2] தில்வக க்ருதத்தினுலாவது [3] பிணியாளியின் சரீர பலாதிகளைப் பருத்தறிந்து சோதனம் செய்விக்கவேண்டும்; தோஷங்கள் சுத்தமான பிறகு அப்பிணியாளி திக்தக க்ருதத்தைத் [4] தேனுடன் பருகவேண்டும். இவ்வித்ரதிக்கு ஸகலவிதத்திலும் குல்மத்திற்குச் செய்வதுபோலவே [5] அந்தந்த தோஷங்களுக்குத் தகுந்தவாறு சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். 21—24½.

1. வருணாதிகணம்—இதைப்பற்றி முதற் புத்தகம் 125-ம் பக்கத்தில் விவரம் காண்க.

2. த்ராயந்த்யாதி க்ருதம்—இதற்கு முன் பக்கத்தில் 11—12½-வது ச்லோகங்களின் மொழி பெயர்ப்பிற் கூறியுள்ள முறை.

3. தில்வக க்ருதம்—குஷ்ட சிகித்ஸையில் கூறப்படுவது.

4. திக்தக க்ருதம்—குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.

5. குல்மத்திற்குச் செய்யவேண்டிய சிகித்ஸைகளைப்பற்றிய விவரங்களை அடுத்த அத்தியாயத்திற் காண்க.

*ஸகல வித்ரதிகளுக்கும் பொது சிகித்ஸை.*

எல்லாவிதமான வித்ரதிகளிலுமே எந்த நிலைமையிலும், அந்தந்த நிலைமைக்குத் தகுந்த முறைப்படி பக்குவம் செய்த கஷாயங்களோடு மஹிஷாக்ஷி குக்குலுவைக் கொடுக்கலாம்; அங்ஙனமே சிலாஜதுவையும் கொடுத்து வரலாம். 25½.

*வித்ரதியைப் பழுக்காமற் பராமரித்தல்.*

வித்ரதி பழுத்துப் போகாதபடி அதைப் பராமரித்து வரவேண்டும்; வித்ரதி பழுத்துப்போனால் அதை நிவ்ருத்தி செய்வது தைவாயத்தமான காரியமேயன்றி வைத்தியனுக்கு அதீனமானதல்ல; மேலும் இவ்விரணம் வெகு சீக்கிரத்தில் அருகிலுள்ள தாதுக்களை எரித்துச் சிதழிக்குந் தன்மையதாகையாலேயே "வித்ரதி" என்று வழங்கப்படுகிறது. இந்த நிலைமையில் மேஹரோகமும் தொடர்ந்திருக்குமானால், பிரமேஹங்களுக்குக் கூறிய சிகித்ஸையையும் நிறைவேற்ற வேண்டும். 26, 27.

*ஸ்தநவித்ரதி சிகித்ஸை.*

ஸ்தநத்திலுண்டாகும் வித்ரதியில் விரணங்களுக்குச் செய்யப்படும்[1] எல்லாச் சிகித்ஸைகளையுமே செய்யலாம்; ஆனால் உபநாஹமென்கிற ஒற்றடம் மாத்திரம் இதற்குக் கூடாது. ஸ்தந்யவாஹிகை யென்கிற முலைப்பாலோடும் நாடிகளையும், கறுப்பான முலைக்காம்பு பாகத்தையும் தாக்காமல் காத்துக்கொண்டு ஸ்தந வித்ரதியைக் கீறவும்; ஆமமான எல்லாவித நிலைமைகளிலும் அந்த ஸ்தநத்தைக் கறந்துவிடவும். 28, 28½.

1. விரணங்களுக்குச் செய்யப்படும் சிகித்ஸைகளைப் பற்றி உத்தர ஸ்தாநத்தில் விரணவிஞ்ஞாநீய ப்ரதிஷேதாத்தியாயத்தில் விவரம் கூறப்படும்.

## வ்ருத்தி சிகித்ஸை.

*வாத வ்ருத்தியில் ஸ்நேஹந சோதநங்கள்.*

வாத தோஷத்தினாலுண்டான வ்ருத்தியில்[1] காட்டுமாவின் தைலம் (கோசாம்ரஜ தைலம்), வெள்ளிலோத்தித் தைலம், ஆமணக் கெண்ணெய், ஸுகுமார ஸ்நேஹம்[2] மிச்ரக ஸ்நேஹம்[3] என்கிற இந்த ஸ்நேஹங்களால் ரோகிக்கு ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்வித்து, அதன் பிறகு சிவதை வேரைக்கொண்டு சோதநம் செய்விக்க வேண்டும்.[4] 29½.

*வாதவ்ருத்தியில் வஸ்தி ஸ்வேத லேபநாதிகள்.*

பிறகு வாதஹரமான கஷாயங்களென்ன, கல்கங்களென்ன, ஸ்நேஹங்களென்ன, இவற்றைக் கொண்டு நிரூஹவஸ்தியைப் பிரயோகிக்கலாம். அப்பால் மாம்ஸரஸத்தை உணவாகக் கொடுத்து, பிறகு அதிமதுரம் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தினால் அநுவாஸநவஸ்தியையும் பிரயோகிக்கலாம். வாதஹரமான ஸ்வேதங்களும், லேபநங்களும் வீங்கிய பீஜத்தின்மீது பிரயோ

1. வ்ருத்தி—அண்ட மென்கிற பீஜகோசத்தில் உண்டாகும் எவ்வித வீக்கமும் வ்ருத்தியெனப் படுகிறது.

2. ஸுகுமார ஸ்நேஹம்—அடுத்த 135-ம் பக்கத்தில் கூறப்படும் ரஸாயநம்.

3. மிச்ரக ஸ்நேஹம்—அடுத்த அத்தியாயத்தில் கூறப்படுவது.

4. த்ரிவ்ருத ஸ்நேஹம் என்று அருணதத்தன் கூறியுள்ள வியாக்யானம், சோதநம் என்கிற விஷயத்துக்கு அநுகூலமானதா யில்லை யாகையால் 'த்ரிவ்ருதா' என்று பதவிபாகம் செய்து, அதற்குச் சிவதை வேர் எனப்பொருள் கூறப்பட்டது.

கிக்கத் தகுந்தவையே; இவற்றை யெல்லாம் செய்து வீக்கம் பக்குவமானபிறகு அதைக் கீறி அப்பால் விரணத்திற்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்யவேண்டும். 30, 31.

*பித்த வ்ருத்திக்கு சிகித்ஸை.*

பித்த தோஷத்தினாலும் இரத்தக் கோளாறாலும் உண்டாகும் வ்ருத்தி ரோகம் ஆம நிலைமையிலிருந்தால், சோபமென்கிற வீக்கத்திற்குச் செய்யக்கூடிய சிகித்ஸையையும், பக்குவ நிலைமையிலிருந்தால், விரணத்திற்குச் செய்யக்கூடிய சிகித்ஸையையும் அந்தந்த நிலைமைகளுக் கேற்றவாறு நிறைவேற்றவேண்டும்; அடிக்கடி இரத்த மோக்ஷணமும் செய்யலாம். 32.

*கபவ்ருத்தி சிகித்ஸை.*

(1) கபவிகாரத்தினாலுண்டாகும் வ்ருத்தியில் மரமஞ்சளின் கல்கத்தைப் பசுவின் மூத்திரத்தோடு உட்கொள்ளலாம். (2) விம்லாபநமென்கிற வாடச்செய்யும் சிகித்ஸையைத் தவிர்த்து சிலேஷ்மக் கிரந்திக்கு[1] ஏற்ற சிகித்ஸைகளெல்லாம் இதில் அனுகூலமானவை. (3) வ்ருத்தியானது பக்குவநிலைமையை அடைந்த பிறகு, அதைச் சஸ்திரத்தினால் கீறி அடியிற் கூறப்படும் விரணசோதந தைலத்தைக் கொண்டு ஆற்றவேண்டும். 33, 33½.

*விரணசோதந தைலம்.*

ஜாதிக்காய், சேராங்கொட்டை, அழிஞ்சில் விதை, எழிலம்பாலை, பேய்ப்புடல், வேம்பு, மஞ்சள், வாய்விடங்கம், வெட்பாலை இவற்றைச் சேர்த்துத் தைலம் பக்குவம் செய்து விரணங்களை ஆற்றுவதற்கு உபயோகிக்கலாம். 34½.

1. சிலேஷ்மக் கிரந்திக்கு உத்தரஸ்த்தாநத்தில் 30-வது அத்தியாயத்தில் விவரம் கூறப்படும்.

*மேதோவ்ருத்தியில் ஸ்வேத சிகித்ஸை.*

(1) மேதஸ்ஸின் அபிவிருத்தியாலுண்டாகும் வ்ருத்தியில், ஸாரஸாதிகணத்திற் கூறிய[1] சாக்குகளைப் பசுமூத்திரத்தில் அட்டியெடுத்து, அக்கல்கத்தை வெதுப்பி அதனால் வீக்கத்தின்மேல் ஸ்வேதநம் செய்யலாம்; (2) அல்லது சிரோவிரேசநத்திற்கான[2] சாக்குகளாலாவது அங்ஙனம் ஒற்றடமிடலாம்; ஆனால் பலங்களென்கிற பீஜங்களுக்கிடையிலுள்ள சேவனீ யென்னும் ரேகையின்மேல் சூடு தாக்காதபடி ஸ்வேதநம் செய்யவேண்டும். 35½.

*மேதோவ்ருத்தியில் சஸ்திர சிகித்ஸை.*

மேதோவ்ருத்தியில் வீக்கத்தை வ்ருத்திபத்திரமென்கிற சஸ்திரத்தினால்[3] சேதநம் செய்து, உள்ளே சேர்ந்துள்ள மேதஸ் என்கிற நிணத்திரளை முற்றிலும் நன்றாக வெளிப்படுத்தி விடவும்; உடனே தீகன், அன்னபேதி, இந்துப்பு இவற்றால் விரணத்தை சோதநம் செய்து தைத்து விடவேண்டும்; மேதஸ் சுத்தியாவதற்காக இதற்கு மனச்சிலை, வசம், ஜாதிக்காய் கிரந்திதகரம், சேராங்கொட்டை இவற்றால் பக்குவம் செய்த தைலத்தை விரணம் ஆறிக்கூடிப் போகும் வரையில் மேலே லேபநம் செய்துவரவேண்டும்; ஸ்நேஹநம் ஸ்வேதநம் என்கிற சிகித்ஸைகளையும் அங்ஙனமே செய்துவரவேண்டும். 36—38.

1. ஸாரஸாதிகணம்—முதற்புத்தகம் 126-ம் பக்கம் பார்க்க.

2. "சிரோவிரேசநத்திற்கு யேல்லாதி கணம்" என்கிற தலையங்கத்தை முதற் புத்தகம் 123-ம் பக்கத்தில் பார்க்க.

3. வ்ருத்திபத்திரம்—முதற் புத்தகம் 188-ம் பக்கம் பார்க்க.

மூத்திர ஸம்பந்தமான வ்ருத்தியில்[1] ஸேவநீ யென்கிற இரேகைக்குக் கீழாக ஸ்நிக்த்தமான வஸ்துக்களைக் கொண்டு ஸ்வேதநம் செய்வித்து, வஸ்திர பட்டத்தினால் பீஜத்தைச் சுற்றி, அவ்விடத்தில் சஸ்திரத்தினால் குத்தி, உதரரோகத்தில் நீரை இறக்குவது போலவே,[2] உள்ளடங்கிய துர்நீரை ஸ்ராவிக்கச் செய்யவும். பிறகு அவ்விடத்தில் ஸ்த்தகிகாபந்தநத்தையிட்டு[3] விரணத்தை ஆற்றவேண்டும். 39½.

மூத்திர வ்ருத்திக்கு சிகித்ஸை.

குடலிறக்கத்தினால் உண்டாகும் வ்ருத்தியில், குடல் பலகோசமென்கிற பீஜப்பைக்குள் நன்றாக இறங்காமலிருக்கும் வரையில், வாதவ்ருத்திக்குக் கூறியுள்ளது போலவே சிகித்ஸை செய்யவேண்டும். 40.

அந்த்ர வ்ருத்தி சிகித்ஸை.

வெள்ளைச் சாறணை நூறு பலம், தசமூலம், க்ஷீரகாகோலீ, ஸரளமென்கிற குங்கிலியமரப்பட்டை, ஆமணக்கு வேர், தண்ணீர்விட்டாங்கிழங்கு, தர்ப்பை, முஞ்சி, நாழல், கெட்டிக்கோரை, கரும்புவேர், விழல் இவை வகைக்கு பத்து பலம்; இவற்றை யெல்லாம் அறுபத்தினாலு பிரஸ்த்தம் ஜலத்தில் சேர்த்து, எட்டிலொருபங்காக வற்றும்படிக் காய்ச்சி, வடிக்கட்டி, அதில் முப்பது பலம் வெல்லமும், ஒரு பிரஸ்த்தம் ஆமணக் கெண்ணெயும், இரண்டு பிரஸ்த்தம் நெய்யும், இரண்டு பிரஸ்த்தம் பாலும் கூட்டி, திப்பிலி, மோடி, இந்துப்பு, அதிமதுரம், திராக்ஷை, குராசானியோமம், சுக்கு இவற்றை வகைக்கு இரண்டு பலம் வீதம் பொடித்துச் சேர்த்து, இரஸாயநம் பக்குவம் செய்யவும். இது "ஸுகுமார ரஸாயநம்" எனப்படுகிறது; இது குணத்திலும் ஸுகுமாரமான ஔஷதம். காற்று, வெயில் இவைகளில் ஸஞ்சரிப்பதென்ன, வழிநடப்பதென்ன, வாஹநங்களில் ஏறி சவாரி செய்வதென்ன இவை முதலிய பிணியாளிகள் விலக்கவேண்டியவையான காரியங்களையும் இவ்வௌஷதமுபயோகிப்பவன் பரிஹரிக்கவேண்டிய அவசியமில்லை. ஸுகமனுபவிக்கு மியல்பினரும், ஆகவே ஸுகுமாரமான சரீரத்தையுடையவருமான பிரபுக்களுக்கும், அநேகம் ஸ்த்ரீகளை மணந்துகொண்டுள்ள மனிதருக்கும் இது கொடுக்கத் தகுந்த ஔஷதமாம். அலக்ஷ்மியையும் பாபத்தையுங்கூட போக்கவல்லது. எப்பொழுதும் உபயோகிப்பதால் நல்ல காந்தியையும், அழகையும், புஷ்டியையும் உண்டுபண்ணக் கூடியது; வ்ருத்தி, வித்ரதி, குல்மம், அர்சஸ், யோனிரோகம், லிங்கத்தைப் பற்றிய ரோகங்கள், வாதரோகங்கள், சோபமென்கிற வீக்கம், உதரரோகம், வாதரக்தம், ப்லீஹவ்ருத்தி, மலபந்தம் இவ்வியாதிகளில் உபயோகிப்பதற்கும் இது உத்தமௌஷதமாம். 41—47.

ஸுகுமார ரஸாயநம்.

வ்ருத்திரோகமானது ஸ்நேஹகர்மத்தினாலும், விரேகத்தினாலும், அநுவாஸநமென்கிற ஸ்நேஹ வஸ்தியினாலும் நிவாரணமாகாவிட்டால், பிறகு முதலில் வஸ்திசிகித்ஸையைப் பிரயோகித்து விட்டு, வ்ருத்தியுண்டாவதற்கு வழியாயுள்ள த்வாரத்தை அடைத்து, அது மூலமாக வாதத்தைத் தடுப்பதன் பொருட்டு, வங்

வ்ருத்தியிலும் வேறு சில வியாதிகளிலும் தாஹ சிகித்ஸை.

1. மூத்திர ஸம்பந்தமான வ்ருத்தி யென்றால் ஒருவகையான தண்ணீர் சேர்ந்து அண்டம் வீங்கிப்போகும் வியாதி (ஹைட்ரோஸீல் என்று ஆங்கிலத்தில்) குறிக்கப்படுகிறது.

2. அடுத்துவரும் பதினைந்தாம் அத்தியாயத்தில் ஜலோதரம் (தகோதரம்) கீறப்படுவதைப்பற்றிய விவரத்தைக் காண்க.

3. ஸ்த்தகிகா பந்தநம்—முதற்புத்தகம் 221-ம் பக்கம் பார்க்க.

க்ஷணமென்கிற துடையிடுக்கிலுள்ள வ்ருத்தியென்கிற வீங்கிய பாகத்தை அக்னியினுல் சுடவும். பிறகு எந்த பீஜம் வீங்கியிருக்கின்றதோ அந்த பாரிசத்துக் காலின் பெருவிரல் மேற்புறத்தில் அர்த்தசந்திரன் போல் வளைந்த ஊசியினுல் குத்தி நூல்போன்ற நரம்பை உயரத் தூக்கி அறுத்து, அவ்விடத்தைக் குறுக்காகச் சுடவும். ஏனெனில் அந்த நரம்பின் கோளாறுல் அவ்வியாதி ஸம்பவிக்கின்றது. ஒரு பாரிசத்து பீஜம் வீங்கியிருந்தால் மற்ருெரு பாரிசத்துக் காலின் பெருவிரலிலுள்ள நரம்பைச் சுடலாமென்று வேறு ஆசாரியர்கள் கூறுகின்றனர்; வேறு சிலர் மற்ருெரு பக்கத்துக் காலின் மோதிரவிரலின் நரம்பைச் சுடலாமென்கிருர்கள். வாத-கபங்களால் உண்டாகும் குல்ம ரோகத்திலும், அவ்விதமான ப்லீஹ ரோகத்திலுமே முற்கூறியவாறு விரல்களின் நரம்புகளைச் சுடலாமென்று வேறு சில ஆசாரியர்கள் விதித்திருக்கின்றனர். எந்தப் பக்கத்தில் விச்வாசீ யென்கிற வாதவியாதி தோன்றுகிறதோ, அந்தப் பக்கத்திலுள்ள சுண்டுவிரலுடையவும் மோதிரவிரலுடையவும் நரம்புகளைச் சுடவேண்டுமென்று மற்றுஞ் சிலர் மொழிகின்றனர். 48—51.

## பதினுன்காவது அத்தியாயம்.

இனி குல்ம சிகித்ஸையை விவரிக்கும் அத்தியாயம் கூறப்படுகின்றது:—

*வாதகுல்மத்தில் ஸ்நேஹ ஸ்வேதங்கள்.*

ருக்ஷத்தன்மை, குளிர்ச்சி இவற்றின் ஸம்பந்தத்தினுல் ஏற்பட்டதும், மலம் அபாநவாயு இவற்றை இறுகச்செய்யும் சுபாவமுள்ளதும், கடுமையான வேதனைகளோடு கூடியதுமான வாத தோஷத்தினுல் உண்டாகிய குல்மத்திற்கு வாதரோக சிகித்ஸையிற் கூறப்படும் தைலங்களால் சிகித்ஸை செய்யவேண்டும். ஸ்நேஹபான வகைகள், ஸ்நிக்த்தமான உணவுகள், அநுவாஸந வஸ்திப்பிரயோகம் இவற்ருல் பிணியாளியை ஸ்நிக்த்தமாகச் செய்து, அப்பால் அவனுக்கு ஸ்வேத சிகித்ஸையையும் செய்யவேண்டும்; வயிற்றுப்பொருமல், வயிற்றுவேதனை, வயிறு ஸ்தம்பித்துப் போதல், மலம் கட்டிப்போதல் இவ்விகாரங்கள் தோன்றியிருக்கையில் விசேஷமாக ஸ்வேதசிகித்ஸையைச் செய்யவேண்டும்; ஏனெனில் ஸ்வேத சிகித்ஸையானது ஸ்நிக்த்தமான ரோகிக்கு ஸ்ரோதஸ்ஸுகளை மிருதுவாகச்செய்து, மிக்க அதிகரித்துள்ள வாயுவைத்தணித்து, மலபந்தம் முதலிய தோஷக்கட்டுகளை உடைத்து குல்மத்தைப் போக்குகிறது. 1—3.

*குல்மத்தில் விசேஷமாக ஸ்நேஹ பாநாதிகள் செய்விக்கும் நிலைமைகள்.*

(1) நாபிக்கு மேற்புறத்தில் குல்மம் உண்டாயிருந்தால் விசேஷமாக ஸ்நேஹபானம் செய்வது ஹிதமாம்; (2) குல்மம் பக்வாசயத்தில் உற்பத்தியாயிருந்தால் விசேஷமாக வஸ்தி சிகித்ஸையைச் செய்வது அனுகூலமானதாம். (3) இரண்டுக்கும் இடையிலுள்ள உதரத்தில் உற்பத்தியானுல் இவ்விரண்டு சிகித்ஸைகளும் விசேஷமாய் செய்யக்கூடியவையாம். (4) வாதஸம்பந்தமான குல்மத்தில் ஜாடராக்கினி விருத்தியடைந்து, அபாநவாயுவும் மலமும் பந்தித்திருந்தால் ஸ்நிக்த்தமாகவும், உஷ்ணமாகவும், ப்ருஹ்மண குணமுள்ளவையாகவுமிருக்கிற அன்னபானங்களைக் கொடுப்பதோடு, அடிக்கடியும் ஸ்நேஹபானமும் செய்விக்கவேண்டும். 4—5¼.

*வாத குல்மத்திலும் மற்ற குல்மங்களிலும் வஸ்திகளுக்குப் பிராதாந்யம்.*

வாதத்தினால் குல்மம் உண்டாயிருக்கையில் கபத்திற்கும் பித்தத்திற்கும் கோளாறு நேரிடாதபடி பராமரித்துக்கொண்டு நிரூஹவஸ்திகளையும் அநுவாஸந வஸ்திகளையும் பிரயோகிக்கவேண்டும். வஸ்தி சிகித்ஸையைச் சிறந்த குல்மஹரக் கிரியையாகக் கருதவேண்டும்; ஏனெனில் அச்சிகித்ஸை முதலில் வாததோஷத்தை அதனுடைய ஸ்தாநத்திலேயே ஜயித்துவிட்டு, அப்பால் உடனே குல்மத்தைப் போக்குகின்றது. ஆகையினால் வாத-பித்த-கபங்களால் உண்டாகும் குல்மங்களில் நிரூஹ வஸ்திகளையும் அநுவாஸந வஸ்திகளையும் அடிக்கடியும் பிரயோகித்து வர அவை நிவ்ருத்தியாகும். 6—8.

*ஹிங்க்வாதி க்ருதம்.*

காயம், ஸௌவர்ச்சல லவணம், த்ரிகடு, கறியுப்பு, மாதளை, ஜீரகம், தாமரைக் கிழங்கு, ஓமம், கொத்தமல்லி விதை, புளி வஞ்சி, யவக்ஷாரம், சித்திரமூலம், கச்சோரம், வசம்பு, இராமதுளஸி, ஏலக்காய், கறுந்துளஸி இவற்றைத் தயிரில் சேர்த்து, அந்த இரஸத்தில் க்ருதத்தைப் பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் வயிற்று வலியையும், வயிற்றுப் பொருமலையும் போக்கும்; வாதகுல்மத்தினால் வருந்துபவருக்கு இது ஹிதமானது. 9, 10.

*ஹபுஷாதி க்ருதம்.*

கொட்டைக்கரந்தை, மிளகு, ஜீரகம், பஞ்சகோலம், ஓமம், சோம்பு, இந்துப்பு இவற்றை, பால், தயிர் இவற்றிலும், மாதளரஸம், முள்ளங்கியின் இரஸம், இலந்தம் பழரஸம் இவற்றிலும் சேர்த்து, நெய்யையும் கூட்டி பக்குவம் செய்யவும். இந்த க்ருதமானது வாதகுல்மம், மஹோதரம், வயிற்றுப் பொருமல், பார்ச்வசூலை, இருதயநோய், குடல் வலி, யோனிரோகங்கள், அர்சஸ், கிரஹணீதோஷம், காஸம், ச்வாஸம், அரோசகம், ஜ்வரம் இவற்றைப் போக்கவல்லது. 11—12½.

*தாதிக க்ருதம்.*

தசமூலம், சிற்றுமுட்டி, கருஞ்சாறடை, பெருஞ் ஜீரகம், சாறடை, வெள்ளைச் சாறடை, தாமரைக் கிழங்கு, ஆமணக்கு வேர், அரத்தை, அமுக்கிறுங்கிழங்கு, கண்டு பாரங்கி, சீந்தில், கச்சோரம், மாங்காயிஞ்சி இவற்றை வகைக்கு இரண்டு பலம் வீதமும், யவதானியம், இலந்தங்கொட்டை, கொள், உளுந்து இவற்றை வகைக்கு ஒரு பிரஸ்தம் வீதமும், ஒரு திரோணம ஜலத்தில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சி, அதில் ஒரு ஆடகமளவு தயிரையும் கூட்டி, ஒரு பிரஸ்த்தம் நெய்யை அதில் சேர்த்துக் காய்ச்சவும். மாதளை, காட்டு மா, கொடி மாதளை இவற்றின் சாறுகள், அரிசி கழுவிய நீர், காடி இவைகளை நெய்க்கு ஸம அளவாக ஊற்றவும். பிறகு கண்டு பாரங்கி, தும்புருவென்னும் ஒருவித அசோகம்பட்டை, வசம்பு, கிரந்திதகரம், சிற்றரத்தை, சித்திரமூலம், கொத்தமல்லி விதை, சோம்பு, குராசானியோமம், புளி வஞ்சி, கருஞ்ஜீரகம், ஜீரகம், பெருங்காயம், கொட்டைக்கரந்தை, ஓமம், ஆடாதோடை, மிளகு, நேபாளம், சிவதை, பெருங்குரும்பை, யானைத்திப்பிலி, வாய்விடங்கம், மாதளை, சதகுப்பி, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், கருந்துளஸி, நன்னாரி, கருஞ்சாறடை, மருக்காரை, நெரிஞ்சில், வெள்ளெரி, கக்கிரிக்காயின் வித்து, கண்டங்கத்திரி, கல்லுருவி, த்ரிகடு, உப்பு, இந்துப்பு, ஸௌவர்ச்சல லவணம் இவற்றை வெகு மிருதுவாக ஆட்டி, கல்கமாகச் சேர்த்து க்ருதத்தைப் பக்குவம் செய்யவும். இது "தாதிக க்ருதம்" எனப்படும். இந்த க்ருதத்தைஉபயோகிக்க முற்கூறிய வியா

திகள்[1] வெகு சீக்கிரத்தில் தீரும்; அபஸ்மாரம், க்ருத்ரிமவிஷம், உன்மாதம், மூத்திரம் அடைபடுதல், வாதரோகங்கள் இவையும் நிவ்ருத்தியாகும். 13—20½.

த்ரியூஷணாதி க்ருதம்.

த்ரிகடு, த்ரிபலை, கொத்தமல்லி விதை, சவ்யம், வாய்விடங்கம், சித்திர மூலம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, பால் கூட்டி க்ருதம் பக்குவம் செய்து, உபயோகிக்க வாத குல்மம் நிவாரணமாகும். 21½.

லசுநாதி க்ருதம்.

வெள்ளுள்ளி ஒரு துலாம், மஹாபஞ்சமூலச் சரக்குகள் வகைக்கு ஐந்து பலம்; இவ்வனைத்தையும் அரை பாரம் அளவான ஜலத்தில் சேர்த்துக் கால் பங்கு ஜலமாக வற்றும்படியாகக் காய்ச்சி, அக்கஷாயத்தில் தனித்தனி அரைப்பங்கு மாதளம் பழஸ்வரஸத்தையும், ஸுரையையும், காடியையும், தயிரையும் கூட்டி, த்ரிகடு, த்ரிபலை, பெருங்காயம், குராசானி யோமம், சவ்யம், ஜீரகம், புளிவஞ்சி, இந்துப்பு, தேவதாரு இவற்றை வகைக்கு அரைப்பலம் எடுத்து, வெகு நுண்மையாகச் சூர்ணம் செய்து, கல்கமாகச் சேர்த்து, ஒரு பிரஸ்தமளவு க்ருதத்தைப் பக்குவம் செய்யவும். அது வாதகுல்மத்தினுல் உண்டாகும் கோளாறுகளனைத்தையும் போக்கும். 22—25.

ஷட்பல க்ருதம்.

இராஜயக்ஷ்ம சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ள ஷட்பல க்ருதத்தையாவது இவ்வியாதி க்ரஸ்தன் பருகலாம். அந்த க்ருதத்தில் பாலுக்குப் பதிலாக பிரஸன்ன என்கிற மதுவையாவது, ஸுரையையாவது, மாதளம் பழச் சாற்றையாவது, தயிரின் ஆடையையாவது சேர்த்து, க்ருதத்தைப் பக்குவம் செய்து உபயோகிக்கலாம்; இது வாத குல்மத்தைப் பரிஹரிக்கும். 26, 26½.

வாதகுல்மத்தில் லேகநம்செய்யவேண்டிய நிலைமை.

வாத குல்மத்தில் கபம் தவிருத்தியடைந்து, ஜாடராக்னியை அழித்து, அரோசகத்தையும், ஹ்ருல்லாஸமென்கிற இயற்கைக்கு விரோதமான இருதய சலனத்தையும், கௌரவத்தையும், சோம்பலையும் உண்டுபண்ணுமானல், அக்கபத்தை லேகந சிகித்ஸையினுல்[1] வெளிப்படுத்தி விடவேண்டும். 27½.

வயிற்று வலி முதலியதோடு கூடிய வாதகுல்மத்திற்குப் பரிஹாரம்.

(1) வாத குல்மத்தில் வயிற்றுவலியும், வயிற்றுப் பொருமலும், மலபந்தமும் ஏற்பட்டிருக்கையில், ஆமாசய-பக்வாசயாதிகள் ஸ்நிக்தமாயிருக்கின்றனவா வென்பதைத் தெரிந்து கொண்டு, க்ருதரூபமான ஔஷதங்களோடு கஷாயங்களையும், சூர்ணங்களையும், வடகங்களையும் கொடுக்கவேண்டும். (2) க்ருதௌஷதங்களுக்குக் கூடியுள்ள சூர்ணங்களையாவது இலந்தம் பழஸ்வரஸம், மாதளம்பழஸ்வரஸம், உஷ்ண ஜலம், மோர், மது, புளித்த காஞ்சிகமென்கிற காடி, பாலாடை இவற்றுள் ஏதேனுமொன்றோடு விடியற் காலத்திலாயினும் அல்லது போஜனத்திற்குப் பிறகேனும் சாப்பிடலாம். 28—29½.

வாத-கபகுல்மங்களுக்கான வடகங்கள்.

அடியிற் கூறப்படும் சூர்ணங்களில் எதையாவது கொடிமாதளையின் ஸ்வரஸத்தில் அநேகமுறை பாவனை செய்து, வடகங்களென்கிற மாத்திரைகளாகச் செய்து உபயோகிக்க, கபகுல்மத்திலும் வாத

1. ஹபுஷாதி ஹிங்க்வாதி க்ருத முறைகளிற் குறிப்பிட்டுள்ள வியாதிகள்.

1. லேகநம் என்பதைப்பற்றி முதற் புத்தகத்தில் 45-ம் பக்கம் பார்க்க.

குல்மத்திலும் மிகத்திறமாக வேலை செய்யும். 30.

ஹிங்க்வாதி சூர்ணம். காயம், வசம்பு, கடுக்காய், காட்டு ஜீரகம், மாதளம் விதை, ஜீரகம், கொத்தமல்லி விதை, வட்டத்திருப்பி, தாமரைக் கிழங்கு, கிச்சிலிக் கிழங்கு, கொட்டைக் கரந்தை, சித்திரமூலம், யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், த்ரிகடு, த்ரிலவணம்,[1] ஓமம், சவ்யம், உலர்ந்த புளி, புளிவஞ்சி இவற்றைச் சூர்ணம் செய்து உபயோகிக்கவும். இச்சூர்ணம் வாததோஷம், ஆமதோஷம், கபம் இவற்றால் ஸம்பவிக்கும் இருதய சூலை, பார்ச்வசூலை, வஸ்திசூலை, இடுப்புவலி, யோனிசூலை, குதசூலை, இவற்றையும், மிகவும் துன்பம் விளைவிக்கும் குல்மநோய்களையும், அபாநவாயு-மலம்-மூத்திரம் இவை கட்டிப்போய் உண்டாகும் கஷ்டங்களையும், தொண்டைக்கட்டையும், மாரடைப்பையும், பாண்டு ரோகத்தையும், அன்னத்வேஷத்தையும், ப்லீஹரோகத்தையும் அர்சஸ்ஸையும், விக்கலையும், அண்ட வீக்கத்தையும், வயிற்றுப் பொருமலையும், ச்வாஸகாஸங்களையும், அக்னிமாந்த்யத்தையும் நிவ்ருத்தி செய்யும். 31—33.

வைச்வாநர சூர்ணம். இந்துப்பு ஒரு பங்கு, ஓமம் இரண்டு பங்கு, ஜீரகம் மூன்று பங்கு, திப்பிலி நான்கு பங்கு, சுக்கு ஐந்து பங்கு, இவ்வனைத்துக்கும் ஸம அளவாகக் கடுக்காயையும் சேர்த்து, சூர்ணம் செய்து கொள்ளவும். ஜாடராக்னியை விருத்தி செய்வதில் இது ஸாக்ஷாத் அக்னிக்கு ஸமானமானது. ஆகவே இது "வைச்வாநர சூர்ணம்" எனப்படுகிறது. 34.

1. த்ரிலவணம்—ஸைந்தவலவணம், ஸாமுத்ரலவணம், ஸௌவர்ச்சலலவணம் இவற்றின் கூட்டு.

அஷ்ட சூர்ணம். த்ரிகடு, ஓமம், இந்துப்பு, ஜீரகம், கருஞ்ஜீரகம் இவற்றில் ஒவ்வொன்றையும் ஸம பாகமாக எடுத்து, அதே அளவாகக் காயத்தையும் கூட்டி, சூர்ணம் செய்து கொள்ளவும். இச்சூர்ணத்தை போஜன ஸமயத்தில் அன்னத்தில் சேர்த்து, நெய் ஊற்றிக் கொண்டு, முதல் கபளத்தில் கலந்து புஜித்து விடவும். இது ஜாடராக்னியை நன்றாக விருத்தி செய்வதோடு, வாத குல்மத்தையும் நிவ்ருத்தி செய்யும். 35.

சார்தூல சூர்ணம். பெருங்காயம், திப்பிலி, பிடால லவணம், சுக்கு, ஓமம், கடுக்காய், தாமரைக்கிழங்கு, நேபாளம், சிவதைவேர் இவற்றை அளவில் மேன்மேலும் முறையே ஒவ்வொரு பங்கு அதிகமாகச் சேர்த்து, சூர்ணம் செய்து கொள்ளவும். இதை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்ள, புலியானது மிருகக்கூட்டங்களை ஆக்கிரமித்து அடித்துப் போடுவதுபோல, "சார்தூலம்" என்கிற இச்சூர்ணம் குடலைப்பற்றிய குல்மம் மற்றுமுள்ள உதரரோகம் முதலியவற்றை வலுவில் தாக்கிப் போக்கிவிடுகின்றது. 36.

ஸைந்தவாதி சூர்ணம். இந்துப்பு, கடுக்காய், திப்பிலி, ஜீரகம் இவற்றைச் சூர்ணம் செய்து, அதை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்ளலாம். இதனால் கபத்தினுலும் வாதத்தினுலும் உண்டாகிற குல்மம் முதலிய வியாதிகள் நாராசத்தினுல் அடிக்கப்பட்டவைபோல் நிவ்ருத்தியாகும். 37.

பூதிகாதி க்ஷாரம். புங்கவிதை, இலவங்கப்பத்திரி, பேய்த்தும்மட்டி, சவ்வியம், சித்திரமூலம், த்ரிகடு இவற்றை ஒன்றன்மீதொன்றாகப் பரப்பி, அனைத்துக்கும் மேலே உப்பையும்

கொட்டிப் பரப்பி, எரித்துவிட வேண்டும். அப்பால் அதைச் சூர்ணம் செய்து, தயிர் அல்லது மோரின் தெளிவு நீர் இவற்றோடு உட்கொள்ள குல்மம், மஹோதரம், சோணை, பாண்டு இவை தீரும். 38.

ஹிங்க்வாதி யோகம்.

காயம் ஒரு பங்கு, இந்துப்பு அதினும் மூன்று பங்கு, ஆமணக்கெண்ணெய் அவ்வுப்பினும் மூன்று பங்கு, வெள்ளுள்ளியின் சாறு எண்ணெயினும் மூன்று பங்கு; ஆக இவற்றைக் கூட்டி பானம் செய்ய, குல்மம், மஹோதர ரோகம், வ்ருத்தி யென்னும் பீஜவீக்கம், வயிற்று நோய் இவை தீரும். 39.

மாதுலுங்காதி யோகம்.

கொடி மாதளம்பழரஸம், காயம், மாதளம்பழரஸம், பிடாலவணம், இந்துப்பு இவற்றை ஸுரையின் தெளிவு நீரோடு உட்கொள்ள வாததோஷத்தினாலான குல்மநோய் நிவ்ருத்தியாகும். 40.

சுண்ட்யாதி யோகம்.

15

சுக்கு கால் பலம், வெல்லம் அரைப் பலம், கழுவி சுத்தம் செய்த எள் ஒரு பலம்; இவற்றை ஒருமிக்கச் சேர்த்து, சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத்தை அநுபானமாகக் கொண்டு உட்கொள்ள, இது, வாதத்தினாலுண்டாகும் இருதயரோகம், குல்மம், அர்சஸ், யோனிசூலை, மலபந்தம் இவற்றைப் போக்கும். 41, 41½.

ஏரண்ட தைல பானமுறை.

(1) வாதகுல்மத்தினால் வருந்துபவன், அவ்வியாதியில் கபமும் பின்பலமாயிருந்து வியாதியை விருத்தி செய்வதாயிருந்தால், அதில் ஆமணக்கெண்ணெயைக் கழுநீரில் கலந்து பான்ம் செய்யலாம். (2) வாதகுல்மத்தில் பித்தம் பின்பலமாயிருந்து வியாதியை விருத்தி செய்தால், அதில் ஆமணக்கெண்ணெயைப் பாலில் கலந்து பருகலாம். 42½.

வாத குல்மத்தில் விரேசநமும் இரத்த மோக்ஷணமும் செய்யவேண்டிய நிலைமை.

(1) வாத குல்மரோகிக்கு பித்தம் அதிகரித்து ஸந்தாபத்தை மிகுதியாக உண்டுபண்ணும். இவ்விதமான பிணியாளியானவன் அநுலோமநகுணமுள்ள[1] வஸ்துக்களோடு ஸ்நேஹத்தையும் கூட்டி, விரேசனம் செய்விக்கத் தகுந்தவனாகிறான். (2) அப்படியும் அவ்வுழற்சி தொடர்ந்து வருந்தச் செய்யுமானால், அவனுக்கு ஸிராவ்யதை செய்து இரத்தமோக்ஷணம் செய்யவேண்டும். 43. 44.

லசுநக்ஷீர யோகம்.

நான்கு பலம் சுத்தமான உலர்ந்த வெள்ளுள்ளியை அதற்கு எட்டு மடங்கு ஜலங்கலந்த பாலில்[2] சேர்த்து, பால் மாத்திரம் மிகும்படியாகக் காய்ச்சி யெடுத்துக் கொள்ளவும். இவ்விதம் பக்குவம் செய்த பால் வாதகுல்மம், உதாவர்த்தம், க்ருத்ரஸீவாதம், விஷம ஜ்வரம், இருதயத்தைப்பற்றிய நோய், வித்ரதி, க்ஷயம் இவற்றை சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். 45, 46.

குல்மாதிகளில் தைலாதியோகம்.

தைலம், கழுநீர், பசுவின் சிறுநீர், சாத்தீர்த்தம், யவக்ஷாரம் (சிறிதளவு) இவற்றையெல்லாம் ஒருமிக்கக் கூட்டி பானம் செய்ய குல்மரோகம், உதரரோகம், வயிற்றுப் பொருமல் இவை நீங்கும் 47.

1. அநுலோமநம்—முதற் புத்தகத்தில் 155-ம் பக்கம் பார்க்க.

2. எட்டு மடங்கு ஜலம் கலந்த பாலில், என்றால்—ஜலம் கலந்த பால் எட்டு மடங்கு எனப் பொருள்—பாலில் சரி பாகமாக ஜலம் சேர்த்து விளாவி அவ்விதமான எட்டு மடங்கு பாலில் வெள்ளுள்ளியைப் பக்குவம் செய்ய வேண்டுமென்பது கருத்து.

சித்திரமூலம், கிரந்திதகரம், ஆமணக்கு வேர், சுக்கு இவற்றின் க்வாதமானது வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், மல பந்தம் இவற்றில் காயம், பிடாலலவணம், இந் துப்பு இவற்றையும் கூட்டி யுபயோகிக்க மிக வும் அனுகூலம் செய்யும். 48

சித்ரகாதி க்வாதம்.

தாமரைக்கிழங்கு, ஆமணக்கு வேர், யவ க்ஷாரம், காஞ்சொறி இவற் றை ஜலத்தில் சேர்த்து க்வாதமாகக் காய்ச்சி உட் கொள்ள குடலழற்சி, குடல்நோய் என்கிற குல்மத்தைப்பற்றிய கோளாறுகள் நீங்கும். 49.

புஷ்கரமூலாதி க்வாதம்.

தாமரைக்கிழங்கு, ஆமணக்கு வேர், தர்ப் பையின் வேர், தேவதாரு, சுக்கு, இவற்றை ஜலத்தில் சேர்த்து க்வாதமாகக் காய் ச்சி யுட்கொள்ள, குல்மத்தினுலுண்டாகும் குடல்வலி, இடுப்புவலி, தோள்வலி இவை நிவ்ருத்தியாகும். 50.

வாட்யாஹ்வாதி க்வாதம்.

(1) வாத குல்மரோகியானவன், மஹாபஞ்ச மூலங்கள் சேர்த்துக் காய்ச் சிய பாலோடு சிலாஜதுவை யாவது உபயோகிக்கலாம். (2) உதாவர்த்தமும் இவ்வி யாதியில் ஏற்படுமானல், யூஷம் போலச் செய்த திப்பிலியின் கஷாயத் தோடு வாட்யமண்டம் என்கிற கஞ்சியை ஸ் நேஹம் சேர்த்தும் பருகலாம். (3) அவ்வாட்ய மண்டத்தை முள்ளங்கிச் சாறுடனுவது உட் கொள்ளலாம். (4) யவதானியத்தினுலாகிய கஞ்சியை சூடான பாலுடன் கலந்து அபாந வாயு - மலம் இவை கட்டிப் போயிருக்கை யில் உட்கொள்ளலாம். (5) அல்லது அதிக ஸ்நேஹம் சேர்த்து, அதிக உப்பையும் கூட்டி பக்குவம் செய்த சிறுகடலைகளையாவது புஜிக் கலாம். 51—52½.

சில உபத்திர வங்களோடு கூடி ய வாதகுல்மத்தில் சிலாஜத்வாதி பிர யோகம்.

கறுப்புச் சாறடை, கருஞ்சிவதைவேர், நேபாளம், கடுக்காய், கம் பில்லகம் இவற்றின் கஷாய த்தில் க்ருதம் சேர்த்து, அதில் பிடாலலவணம், யவக்ஷாரம், சுக்கு இவற்றைக் கல்கமாகவும் கூட்டி, பக்குவம் செய்து, வயிற்றில் மலம் சேர்ந்துள்ள குல்ம ரோகிக்குக் கொடுக்கலாம். 53½.

நீலிய்யாதி க்ருதம்.

கறுப்புச் சாறடை, த்ரிபலை, சிற்றரத்தை, சிற்றுமுட்டி, கடுகரோ ஹிணீ, வாய்விடங்கம், கண் டங்கத்திரி; இவற்றை வகை க்கு ஒரு பலம் எடுத்து, ஒரு ஆடகம் ஜலத் தில் சேர்த்துக் காய்ச்சி, அது எட்டில் ஒரு பங்காகச் சுண்டிய பிறகு, ஒரு பிரஸ்த்தம் நெய்யை அதில் ஊற்றி, ஒரு பிரஸ்த்தம் தயி ரையும், ஒரு பலம் கள்ளிப்பாலையும் கூட்டி, பக்குவம் செய்தெடுக்கவும். பிறகு யவாகூ மண்டம் என்கிற கஞ்சியோடு இந்த க்ருதத் தை ஒரு பலம் அளவில் கொடுத்து, அது ஜீர்ணமான பிறகு, நன்கு விரேசநமும் ஆன பின்பு, மாம்ஸ ரஸங்கலந்த உணவை புஜிக்கக் கொடுக்கலாம். "நீலினீ க்ருதம்" என்கிற இவ் வௌஷதமானது குல்மம், குஷ்டம், உதர ரோகங்கள், வியங்கம் என்கிற சர்மவியாதி, சோதை, பாண்டுரோகம், ஜ்வரம், ச்வித்ர மென்கிற வெண்குஷ்டம், ப்லீஹரோகம், உந் மாதம் இவற்றைப் போக்கவல்லது. 54—57½.

நீலினீ க்ருதம் - இரண்டாவது.

(1) கோழி, மயில், தித்திரி யென்னும் பற வை, கிரௌஞ்ச பக்ஷி, வர்த் தகம் என்கிற பக்ஷி, சம்பா அரிசி, மதிரை யென்னும் மது, நெய் இவை வாதகுல்ம சிகித்ஸையில் உபயோகிக்கத் தகுந்த உணவுக ளாகும். (2) வாதகுல்ம ரோகிகளுக்கு பித்த

வாதகுல்மத்தில் பத்தியமான உணவுகள்.

மாகவும், உஷ்ணமாகவும், திரவமாகவும், ஸ்நிக்த்தமாகவுமுள்ள போஜனம் ஹிதமாயிருக்கும். (3) அவன் ஆடையுடன் கூடிய வாருணியென்னும் மதுவோடு கொத்தமல்லி விதையைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையும் கலந்தாவது பருகுவது உசிதமாம். 58—59$\frac{1}{2}$.

**ஸ்நிக்த்தோஷ்ணங்களா லுண்டான பித்தகுல்மத்திற்கு சிகித்ஸை.**

பித்தகுல்மமானது ஸ்நிக்த்தமும் உஷ்ணமுமான வஸ்து முதலியவற்றால் உண்டானதா யிருந்தால், அதில் ஸ்ரம்ஸந சிகித்ஸை[1] அநுகூலமானது. (1) திராக்ஷை, கடுக்காய், வெல்லம் இவற்றின் திரவத்தை அங்ஙனம் மலம் வெளியாவதற்கு உபயோகிக்கலாம். (2) கம்பில்லத்தையாவது தேனிற் குழைத்து உட்கொள்ளலாம். (3) கல்பஸ்த்தாநத்திற் கூறப்படும் விரேசன முறைகளையாவது,[2] (4) இரத்த பித்தத்திற் கூறிய விரேசன முறையையாவது[3] பிரயோகிக்கலாம். 60, 60$\frac{3}{4}$.

**ரூக்ஷோஷ்ணங்களாலுண்டான பித்த குல்மத்திற்கு சிகித்ஸை.**

ரூக்ஷமும் உஷ்ணமுமான குணங்கள் அதிகரித்துண்டாகும் பித்த குல்மத்திலோவென்றால், (1) திக்தக க்ருதமும்[4] (2) வாஸாக்ருதமும்[5] சமநம் செய்வதற்கு மிகவும் ஏற்றவையாகும். (3) த்ருணபஞ்சமூல க்வாதத்திலாவது,[6] (4) ஜீவநீயகணக்வாதத்திலாவது காய்ச்சி பக்குவம் செய்த க்ருதத்தையும் பருகலாம். (5) அல்லது ஜீவநீயகணத்தின் க்வாதத்திலேயே காய்ச்சி யெடுத்த பாலையாவது, ந்யக்ரோதாதி கணக்வாதத்தில்[1] காய்ச்சிய பாலையாவது உட்கொள்ளலாம். (6) இந்த குல்மத்திலும், நிலைமை அபாயகரமா யிருப்பதாகத் தெரிந்தால், அதில் வைத்தியன் கவனித்து, விரேசந முறைமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தையாவது, அவ்விதமே பக்குவம் செய்த பாலையாவது கொடுத்து ஸ்ரம்ஸநம் செய்விக்க வேண்டும். 61—63$\frac{1}{2}$.

**ஆமலகாதிக்ருதம்.**

நெல்லிக்கனி, கரும்பு இவற்றின் சாற்றில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் சேர்த்து பக்குவம் செய்யவும்; க்ருதம் காய்ச்சப்படுகையில் க்ருதத்திற்குக் கால் பங்கு கடுக்காய்த் தூளையும் கல்கமாகச் சேர்க்கவேண்டும். இவ்விதம் பக்குவம் செய்த க்ருதம பித்தகுல்மத்தைப் போக்கும். 64$\frac{1}{2}$.

**பித்த குல்மத்தில் திக்தக க்ருதம் முதலியவற்றின் உபயோகம்.**

(1) பித்தகுல்மத்தில் திக்தக க்ருதத்தையாவது[2] பானம் செய்யலாம். (2) அல்லது பித்தவித்ரதியில் என்ன சொல்லப்பட்டுளதோ அந்தக் க்ருதத்தையாவது[3] பருகலாம். 65.

---

1. ஸ்ரம்ஸகம்—விரேசனம். (இலகு விரேசனமென்றும் சொல்லுவதுண்டு.)
2. கல்பஸ்த்தாநத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் கூறப்படுபவை.
3. இப்புத்தகத்தின் 25-வது பக்கத்திற் கூறியுள்ள த்ரிவ்ருதாதி மோதகமும், த்ரிவ்ருத் அவலேஹமும் இங்கே குறிக்கப்படுகின்றன.
4. திக்தக க்ருதம்—குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.
5. வாஸாக்ருதம்—45-ம் பக்கத்திலுள்ள வ்ருஷாதி க்ருதம்.
6. த்ருண பஞ்சமூலம்—முதற் புத்தகம் 54-ம் பக்கம் பார்க்க.

---

1. ந்யக்ரோதாதி கணம்—முதற்புத்தகம் 127-ம் பக்கம் பார்க்க.
2. திக்தகக்ருதம்—குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.
3. வித்ரதி சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ள த்ராயமாணாதி க்ருதம், திராக்ஷாதி க்ருதம் இவை குறிக்கப்படுகின்றன.

பித்தகுல்மத்தின் உபசாந்திக்காக திராக்ஷை, அதிமதுரம், க்ஷீரகாகோலீ, சந்தனம், தாமரைக் கிழங்கு, தேன் இவற்றை அரிசி கழுவிய ஜலத்தோடு உட்கொள்ளலாம். 66.

பித்த குல்மத்தில் திராக்ஷாதி யோகம்.

இரண்டு பலம் கொன்றைப்பட்டையை இரண்டு பிரஸ்த்தம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; அது எட்டில் ஒரு பங்காகச் சுண்டிய பிறகு வடிக்கட்டி, இளஞ்சூடாயிருக்கையில், அக்கஷாயத்தில் ஸம அளவு பாலையும் கூட்டி பானம் செய்யவும்; அப்பால் சக்திக்கியன்றவளவு அதற்குமேல் உஷ்ணமான பாலேயே மீண்டும் பருகலாம். இதனால் வயிற்றுளுள்ள தோஷங்கள் கழிந்துபோக, பித்தகுல்மமும் நிவ்ருத்தியாகும். 67, 68.

பித்தகுல்மத்தில் க்ஷீரயோகம்.

பித்த குல்மத்தில் அழற்சி அதிகரித்தால் (1) சீதவீர்யமான திரவ்வியங்களைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதங்களைக் கொண்டு அப்யங்கநம் செய்யலாம். (2) நெய் கூட்டிய குளிர்ச்சியான ஔஷதங்களால் அழற்சியுள்ள விடங்களில் லேபநம் செய்யலாம், (3) தாமரையிலேகளை ஜலத்தில் நனைத்து தேஹத்தைப் பரிசிக்கலாம். (4) அங்ஙனமே குளிர்ந்த ஜலம் நிரப்பிய பாத்திரங்களாலும் சரீரத்தைப் பரிசிக்கலாம. 69,

பித்த குல்மத்தில் அழற்சியுண்டானால் செய்யும் பரிஹாரம்.

குல்மத்தில் அழற்சியைப் பிரதானமாயுடைய பூர்வ ரூபங்கள் உண்டாகையிலும், வயிற்று நோயிலும், அக்னிமாந்த்யம் உண்டாயிருக்கையிலும் அதிகமாய் இரக்த மோக்ஷணம் செய்யவேண்டும் ; பித்த குல்மத்திலோவென்றால் இன்னும் விசேஷமாக இரக்தமோக்ஷணம் செய்யவேண்டும். இங்ஙனம் இரக்த மோக்ஷணத்தினால் குல்மங்கள் வேரறுக்கப் பட்டுப்போக, அவை அழன்று பதன் கெடுவதில்லை ; மேலும் அவை க்ஷயித்தும் போகின்றன ; இரக்தமும் அங்கு அம்லத்தன்மையை யடையாமல் சுத்தமாகின்றது ; ஆகவே வலியும் ஏற்படுவதில்லை. 70,71.

பித்த குல்மத்தில் இரக்தமோக்ஷணம் செய்யும் நிலைமை.

தோஷமெல்லாம் கழிக்கப்பட்டு மிகவும் வாடி இளைத்துப்போ யுள்ள ரோகிக்கு, ஜாங்கலமாம்ஸ ரஸங்களைக் கொடுத்து த்ருப்தியுண்டாக்கி, தேற்றிய பிறகும் நோயின் அம்சம் ஏதேனும் சிறிது மிச்சமிருக்குமாயின், அதைப் பரிஹரிப்பதற்கு மீண்டும் க்ருதத்தைப் பருகச் செய்யவேண்டும். 72.

குல்மரோகவிகாரம் மிச்சமிருப்பின்செய்யவேண்டிய பரிஹாரம்.

இரத்தமும் பித்தமும் விருத்தியடைந்து விடுவதாலோ, ஏற்ற சிகித்ஸையைப் பெறுமையினாலோ குல்மம் அழற்சி கொண்டு பழுக்கத் தொடங்குமானால், அப்பொழுது பித்த வித்ரதிக்குக் கூறியுள்ள எல்லாவித முறைகளையும் அனுஸரித்து சிகித்ஸை செய்யவேண்டும். 73.

குல்மம் இரத்த பித்தங்களால் அழற்சி கொண்டால் செய்யும் சிகித்ஸை.

சம்பா அரிசியினாலான அன்னத்தைப் பசுவின் பாலோடு அல்லது வெள்ளாட்டுப் பாலோடு புஜிக்கலாம். புடல், ஜாங்கல மிருகங்களின் நெய், நெல்லிக்கனி, ஈச்சு, திராக்ஷை, பேரீச்சு, மாதளம்பழம், சர்க்கரை இவைகளை புஜிக்கலாம். சிற்றுமுட்டியைச் சேர்த்தாவது, ப்ருஹத்யாதி கணத்தைச்

பித்த குல்மத்தில் பத்தியஉணவுகள்.

சேர்ந்த [1] சரக்குகளைச் சேர்த்தாவது காய்ச்சிய ஜலத்தைப் பானம் செய்வதற்கு உபயோகிக்கலாம். 74—74½.

சிலேஷ்ம குல்ம சிகித்ஸைகள்.

(1.) சிலேஷ்ம தோஷத்தினாலுண்டான குல்மத்தில் முதலில் ரோகிக்கு வமனம் செய்விக்கவேண்டும். (2)வமன சிகித்ஸை செய்வதற்குத் தகாதவனைப் பட்டினி போடலாம். (3)பிறகு திக்தரஸம் கடுரஸம் இவைகளைப் பிரதானமாகப்பெற்ற ஸம்ஸர்க்கி என்கிற பத்தியோபசாரத்தைச் செய்வித்து ஜாடராக்னியைத் தூண்டி விருத்தி செய்யவேண்டும். (4) யவக்ஷாரத்தையும்,காயத்தையும், புளிவஞ்சியையும் இரண்டு மடங்காகச் சேர்த்துத் தயார் செய்த ஹிங்க்வாதி சூர்ணத்தை [2] உபயோகித்தும் ஜாடராக்னியை விருத்தி செய்யவேண்டும். (5) குல்மமானது ஆழ்ந்து மறைந்திருந்தாலும், அல்லது வளர்ந்து மேற்கிளம்பி யிருந்தாலும், அசைவற்றதா யிருந்தாலும், கடினமாயிருந்தாலும், வேரூன்றி ஸ்த்திரமாயிருந்தாலும், வயிற்றுப் பொருமல் முதலிய வேறு விகாரங்களோடு கூடியதாயிருந்தாலும் அதற்குச் சோதந சிகித்ஸை செய்யவேண்டும். (6) அதற்கு அடுத்தாற்போல கபகுல்ம ரோகியானவன் க்ஷாரவஸ்துக்களையும், கடுரஸமுள்ள வஸ்துக்களையும் சேர்ந்து பக்குவம்செய்த க்ருதத்தைப் பானம் செய்யவேண்டும். 75—77½.

தசமூல க்ருதம்.

தசமூல கஷாயத்தில் த்ரிகடு, யவக்ஷாரம், இந்துப்பு, காயம், பிடாலவணம், மாதளை இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்யவும். இது கபகுல்மத்தை சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். 78½.

1. ப்ருஹத்யாதி கணம்—ப்ருஹதீத்வயம்; முதற் புத்தகம் 54-ம் பக்கம் பார்க்க.

2. ஹிங்க்வாதி சூர்ணம்—139-ம் பக்கத்தில் பார்க்க.

சேராங்கொட்டை இரண்டு பலம், ஹ்ருஸ்வ பஞ்சமூலம் வகைக்கு ஒரு பல்லாதகக்ருதம். பலம்; இவற்றை ஒரு ஆடகப் பிரமாணமான ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; கஷாயமானது நாலில் ஒரு பங்காக மிகும்படி காய்ச்சி பிறகு, அக்கஷாயத்திற்கு ஸம அளவு க்ருதம் சேர்த்து, அதே அளவு பாலையும் கூட்டி பக்குவம் செய்யவும். பிறகு அதில் வாய்விடங்கம் காயம், இந்துப்பு, யவக்ஷாரம், சுச்சோரம், பிடாலவணம், கண்டங்கத்திரி, சிற்றரத்தை, அதிமதுரம், வசம்பு, திப்பிலி, சுக்கு இவற்றை வகைக்குக் கால்பலம் எடுத்து, கல்கமாக உபயோகிக்கவும். "பல்லாதக க்ருதம்" எனப் படுகிற இந்த க்ருதம் கபகுல்மத்தைப் போக்குவதிற் சிறந்தது. மேலும் ப்லீஹரோகம், பாண்டுரோகம், ச்வாஸரோகம், கிரஹணி ரோகம், காஸம் இவற்றையும் நிவாரணம் செய்யும். 79—82.

குல்மத்தில் ஸ்நேஹ ஸ்வேதங்கள்.

அதன்பிறகு இந்த ரோகிக்கு குல்மத்தின் மேலும்,தேஹத்திற் பொதுவிலும் ஸ்வேதம் செய்யவும். எல்லாவித குல்மத்திற்குமே முதலில் ஸ்நேஹமும் ஸ்வேதமும் செய்து விட்டு, அப்பால் செய்யப்படும் சிகித்ஸையினால் எவ்வித பலன் உண்டாகிறதோ அவ்வித பலன் ரூக்ஷமாயிருக்கையில் செய்யும் சிகித்ஸையினால் உண்டாகமாட்டாது. 83—83½.

குல்மத்தில் கடயந்திரப் பிரயோகம்.

(1) ஸ்நேஹ-ஸ்வேதங்களால் சரீரம் பக்குவமடைந்த பிறகு,குல்மம் தளர்ச்சியுற்றதானால், அப்பொழுது முற்கூறியுள்ளபடி ஒரு கடயந்திரத்தை [1] குல்மமிருக்கும் இடத்திற்கு நேராக வயிற்றில் கவிழ்த்துப் பிரயோகிக்கவும்; அதனால்

1. கடயந்திரம்—முதற்புத்தகம் 184-பக்கம் பார்க்க.

குல்மம் கௌவிக் கொள்ளப்பட்டதும், ஒரு வஸ்திரத்தினால் அதை மறைத்துப் பிடித்து இழுக்கவும்; வயிற்றுக்குள் குல்மம் எவ்வளவு இடத்தை ஆக்கிரமித்து வளர்ந்திருக்கிறதோ அந்த அளவை யுணர்ந்த வைத்தியன் குல்மம் அறுபடும்படி அப்பாத்திரத்தினால் கௌவச் செய்து வலித்திழுக்கவேண்டும்; விமார்கம், அஜபதம், ஆதர்சம் என்னும் [1] கருவிகளைப் பிரயோகித்து, குல்மத்தில் எவ்வளவு பாகம் வசப்படுகின்றதோ அவ்வளவையும் பிடித்து மர்த்தநம் செய்யவும்; அவ்விதம் செய்கையில் குல்மத்தை மாத்திரம் மர்த்தநம் செய்யலாமே யன்றி குடலின் உட்புறத்தை நசுக்கக்கூடாது. 84—86.

கபகுல்மத்தைக் கரையச் செய்யும் வேறு உபாயம்.

(1.) எள்ளு, ஆமணக்கு வித்து, ஆழிவிதை, கடுகு இவற்றைக் கல்கமாகச் செய்து கபகுல்மத்தின்மீது லேபநம் செய்தாவது, தாங்கக்கூடிய சூடுள்ள இரும்புப் பாத்திரங்களால் பிறகு ஸ்வேதநம் செய்யலாம். (2) இவ்விதம் செய்து கபகுல்மம் தன் ஸ்தாநத்திலிருந்து நழுவிவிட்ட பிறகு, ஸ்நேஹங்களைக் கொடுத்து விரேசநம் செய்வித்தும், தசமூலகஷாயத்தோடு ஸ்நேஹம் சேர்த்து அதைக்கொண்டு வஸ்திப் பிரயோகம் செய்தும் குல்மதோஷத்தை வெளிப்படுத்தி குடலைச் சுத்தம் செய்யவேண்டும். 87-88.

மிச்ரகஸ்நேஹம்.

திப்பிலி, நெல்லிக்கனி, திராக்ஷை, கருஞ்சிவதை இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்துக் கொள்ளவும். ஆமணக்கெண்ணெய், நெய் இவை தனித்தனி ஒவ்வொரு பிரஸ்தம்; இவற்றை ஆறு பங்கு அளவான பாலில் சேர்த்து பக்குவம் செய்யவும். "மிச்ரக ஸ்நேஹம்" என்கிற இவ்வௌஷதம் குல்ம ரோகிகளுக்கு ஸ்ரம்ஸநத்திற்கு ஹிதமானது; மேலும் விருத்தியென்கிற அண்ட வீக்கம், வித்ரதி, வயிற்றுநோய், வாதரோகங்கள் இவற்றிலும் அமுதத்திற்குச் சமானமானது. 89, 90.

கபகுல்மத்தில் உபயோகிக்கத் தகுந்த வேறு சில க்ருதங்கள்.

இந்த ரோகி நீலிநீக்ருதத்தையாவது [1] இரண்டு பலம் அளவில் உட்கொள்ளலாம். அங்ஙனமே ஸுகுமாரம் என்கிற க்ருதத்தையாவது, [2] அல்லது உதர ரோகத்தில் கூறப்படும் அவ்வியாதிக்கு ஹிதமான க்ருதங்களையாவது [3] பருகலாம். 91.

தந்தீ - ஹரீதகீ அவலேஹம்.

நேபாளம் இருபத்தைந்து பலம், சித்திர மூலமும் கடுக்காயும் வகைக்கு அதே அளவு; இவற்றை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து சமையல் செய்யவும். இவ்விதம் காய்ச்சிய கஷாயத்தை வடிகட்டியபிறகு அதில் நேபாளத்துக்கு ஸமான அளவு வெல்லமும், நான்கு பலம் தைலமும், அவ்வளவே சிவதை வேரும், அரைப்பலம் திப்பிலியும், அதே அளவு சுக்கும் சேர்க்கப்படவேண்டும். இவற்றைச் சேர்த்து லேஹ்யமாகத் தயார் செய்துகொண்டு, அது ஆறியபிறகு தைலத்துக்கு ஸம அளவாகத் தேனையும், ஒரு பலம் சதுர்ஜாதத்தையும்[4] சேர்த்துக் கலந்து விடவும். இதில் ஒரு கடுக்காயையும், ஒரு பலம் லேஹ்

1. விமார்கம்—சஸ்திரம்போல மரத்தினால் செய்யப்படும் ஒருவித கருவி; இது சக்கிலியர்களிடம் முன்னால் விசேஷமாய் உபயோகத்தில் இருந்து வந்ததாகத் தெரியவருகிறது. அஜபதம் என்பது ஆட்டின் குளம்பு மாதிரி செய்யப்பட்ட மர்த்தநம் செய்யும் கருவி. ஆதர்சம் என்பது கண்ணாடியினாலான கருவி.

1. நீலிநீக்ருதம்—141-ம் பக்கம் பார்க்க.

2. குமார க்ருதம்—இதற்கு முன் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள க்ருதம்.

3. அடுத்த அத்தியாயத்தைப் பார்க்கவும்.

4. சதுர்ஜாதம்—முதற் புத்தகம் 63-ம் பக்கம் பார்க்க.

யத்தையும் எடுத்து புஜிக்க, அப்பிணியாளிக்கு தேஹம் நன்கு ஸ்நிக்த்தமாய், ஒரு பிரஸ்த்தம் தோஷம் விரேசநமாகும். குல்மம், இருதயரோகம், அர்சஸ், சோகை, வயிற்றுப் பொருமல், கிருத்ரிம விஷப்பிரயோகம், உதரரோகங்கள், பாண்டுரோகம், காமாலை இவைகளைப் போக்கவல்ல இவ்வௌஷதம் "தந்தீ-ஹரீதகீ" என்று வழங்கப்படும். 92—96½.

குல்மத்தில் விரேசனோபயோகமான சில முறைகள்.

(1) சிவதைவேர்ப் பொடியைக் கள்ளிப்பாலில் கரைத்து, அதில் நன்ருக பாவனை செய்து, அப்பாலில் பிறகு ஒரு கால் பலமளவு மீதன், நெய் இவற்றையுங் கலந்து உட்கொள்ள நன்கு விரேசநமாகும். (2) கோஷ்டம், கருஞ்சிவதை, வெண்சிவதை, நேபாளம், கடுக்காய், யவக்ஷாரம், மஹிஷாக்ஷிகுக்குலு இவற்றைப் பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளலாம். (3) அல்லது ஒரு மஹிஷாக்ஷிகுக்குலுவை மாத்திரமாவது பசுமூத்திரத்தோடு சாப்பிடலாம். 97—98½.

குல்மத்தில் நிருஹவஸ்தி.

கல்ப ஸ்த்தானத்திலும், உத்தர ஸ்த்தானத்திலும் கூறப்படுகிற குல்மரோக நிவாரணத்திற்கு உபயோகமான நிருஹவஸ்திகளையும் பிரயோகிக்கலாம். 99.

குல்மத்தில் க்ஷாராதிகளைப் பிரயோகித்தல்.

நன்கு வேரூன்றி, மிகுதியான இடங்களில் வியாபித்து, கடினமாகவும், அசைவற்றதாகவும், குருவாகவும், சதைகளில் ஆழ்ந்து மறைந்துள்ளதுமான குல்மத்தை க்ஷாரப்பிரயோகம், அரிஷ்டங்களின் பிரயோகம், சுடுதல் என்கிற இம்முறைகளைக் கொண்டு சிகித்ஸை செய்யவேண்டும். இதில் வைத்தியன் பிணியாளியின் தேஹபலமென்ன தேஹத்திற் சேர்ந்துள்ள தோஷமென்ன இவற்றை ஸமயோசிதப்படி விருத்தி செய்வதற்கும் க்ஷயிக்கச் செய்வதற்கும் முயன்றவனாய், இடையிடையே ஒவ்வொரு நாளாகிலும், இரண்டு நாட்களாகிலும், அல்லது மூன்று நாட்களாகிலும் ரோகிக்கு சிரமபரிஹாரம் செய்து வைத்து, அந்த க்ஷாராதிகளை மீண்டும் பிரயோகிக்க வேண்டும். கபம் அதிகரித்துண்டான குல்மத்தில் அர்சஸ்ஸிலும், அச்மரீரோகத்திலும், கிரஹணீரோகத்திலும் மொழியப்பட்டுள்ள க்ஷாரங்களை உபயோகிக்கலாம். 100.—101½

அகத க்ஷாரம்.

தேவதாரு, சிவதைவேர், நேபாளம், கடுகரோஹிணீ, பஞ்சகோலம்[1], ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், த்ரிபலை, வெட்டத்திருப்பி, கருஞ்ஜீரகம், கோஷ்டம், சுவர்ச்சலவணம் இவை வகைக்கு அரைப்பலம்; பஞ்சலவணம்[2] வகைக்கு ஒரு பலம்; இவ்வனைத்தையும் சூர்ணம் செய்து, தைலம், கொழுப்பு, தயிர், நெய் இவற்றில் அச்சூர்ணத்தைக் கலந்து, ஒரு கலயத்தில் சேர்த்து, அடியில் தீயிட்டு எரிக்கவும்; பிறகு அப்பாத்திரம் நன்ருகக் காய்ந்து அக்னி வர்ணமான நிலைமையடைந்திருக்கையில் இறக்கி, அதிலுள்ள க்ஷாரத்தை கிரஹித்துக் கொள்ளவும். அந்த க்ஷாரத்தை பால், நெய், மோர், மத்யம் இவை முதலியவற்றில் ஏதேனும் ஒன்றோடு அந்தந்த தோஷங்களுக் கேற்றவாறு கலந்து உட்கொள்ளவும். "அகத க்ஷாரம்" என்கிற இவ்வௌஷதமானது குல்மம், உதாவர்த்தம், அண்டவாதம், அர்சஸ், உதரரோகம், கிரஹணீரோகம், கிருமி, அபஸ்மாரம், உன்மாதமென்கிற பித்து, யோனிரோகங்கள், சுக்ரதோஷங்கள், அச்மரீ யென்னும் மூத்திரக்கல்லடைப்பு இவைகளைப் போக்கும்; ஸவிவிஷம் ஸர்ப்பவி

1. பஞ்சகோலம்—முதற் புத்தகம் 64-ம் பக்கம் பார்க்க.

2. பஞ்சலவணம்—முதற் புத்தகம் 62-ம் பக்கம் பார்க்க.

க்ஷம் இவற்றையும் நிவாரணம் செய்யவல்லது. 102—106.

குல்மத்தில்க்ஷார ப் பிரயோகத்தின் உபயோகம்.

மாம்ஸரஸம், பால், நெய், இவற்றை உட்கொள்ளும் பிணியாளியினுடைய குடலில் சேர்ந்துள்ள மதுரமும் ஸ்நிக்த்தமுமான கபத்தை, க்ஷாரமானது, காரத்தன்மையதாகையால் அறுத்து, குல்மமுண்டாய் வேரூன்றியுள்ள ஆசயத்திலுள்ள கோளாறடைந்த தாத்வம்சங்களையும் பெயர்த்து, கீழ் சோக்கி வெளியில் தள்ளிவிடுகின்றது. 107,

குல்மத்தில் மார்க்கசுத்திக் காக மத்யபானம்.

அக்னிமந்தமாயிருக்கையில், அரோசகமும் உண்டாயிருந்தால் அப்பொழுது ஸாத்மியமான மத்யங்களோடு ஆஹார மெடுக்கச் செய்து, குடல் மார்க்கத்தைச் சுத்தம் செய்வதற்காக புராதநமான ஆஸவங்களையும் அரிஷ்டங்களையும் உட்கொள்ளக் கொடுக்கவேண்டும். 108.

குல்மத்தில் உபயோகிக்கக் கூடிய போஜன - பானங்கள்.

(1). பழகிய சம்பா, கார், கொள் இந்த தானியங்கள், ஜாங்கல மாம்ஸம், புங்கந்தளிர், சித்திரமூலக்கொழுந்து, தழுதாழையின் தளிர், ஓம இலைத்தளிர், மாவலிங்கத் தளிர், முருங்கை, பில்வத்தளிர், இளசாகவும் உலர்ந்ததாகவுமுள்ள முள்ளங்கி, கொடிமாதளை, காயம், புளிவஞ்சி, யவக்ஷாரம், மாதளை, த்ரிகடு, மோர், நெய், தைலம் இவைகளை போஜன பதார்த்தங்களாகக் கிரஹிக்கலாம். (2) வாருணீ யென்கிற மது, காடி, மோரின் தெளிவு நீர், ஓமமும் பிடாலவணமும் பொடித்துச் சேர்த்த மோர், பஞ்ச மூலங்களைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலம், நன்றாகப் பழகிய திராக்ஷாரிஷ்டம் இவைகளைப் பானமாக உபயோகிக்கலாம். 109-111½.

குல்மத்தில் உபயோகிக்கக் கூடிய வேறு சில பான முறைகள்.

திப்பிலி, மோடி, சித்திரமூலம், ஓமம், இந்துப்பு இவற்றை ஸுரை யென்னும் மதுவிலாவது, ஜாங்கல மாம்ஸ ரஸத்திலாவது பொடித்துச் சேர்த்து அருந்திவர குல்மநோய் சீக்கிரம் தீரும். 112½.

கபகுல்மத்தில் தாஹசிகித்ஸை செய்யும் நிலைமை.

வமநங்களாலும், ஸ்வேத சிகித்ஸைகளாலும், க்ருதங்களைப் பானம் செய்வதாலும், விரேசனங்களாலும், வஸ்திகளாலும், க்ஷாரப்பிரயோகங்களாலும், ஆஸவாரிஷ்டங்களைப் பருகுவதாலும், குல்மசிகித்ஸைக்கான பத்திய போஜனங்களாலும் கபகுல்மமானது மிகவும் வேரூன்றிப்போயிருந்து நிவ்ருத்தி யாகாவிட்டால், கடைசியில் இரக்தமோக்ஷனம் செய்து, சரம் என்கிற அம்புபோன்ற கருவி முதலியவற்றைக் காய்ச்சி தாஹசிகித்ஸை செய்யவேண்டும். 113—114½.

குல்மத்தில் தாஹசிகித்ஸை செய்யுமுறை.

பிறகு வைத்தியன், சுற்றிலும் வரம்புடன் கூடியதாய் வளர்ந்துள்ளகுல்மத்தை வஸ்திரத்தினால்போர்த்து நாபி, மூத்திரவஸ்தி, குடல், இருதயம் இவற்றையும் ரோமாஜீ யென்கிற வயிற்றின் மத்திய ரேகையையும் பரிசிக்காமல், பழுக்கக்காய்ச்சிய இரும்புச் சலாகையினால் அதைச் சிறிது சுடவும்; அல்லது அரணிக் கட்டையையாவது, திந்துகமென்கிற தும்பிற்கட்டையினாலாகிய அலகையாவது காய்ச்சி, அக்குல்மத்தைச் சுடவும், அப்பால் சுட்டதினாலாகிய அழற்சியின் வேகம் குறைவுபடுகையில் விரண சிகித்ஸையிற் கூறிய விதமாக சீதோபசாரங்களைச் செய்யவேண்டும். 115—117.

குல்மத்தில் ஆமிச்ர தோஷங்களுக்கு சிகித்ஸை.

குல்மரோகத்தில், ஆமதோஷமும் ஸம்பந்தித்திருந்தால், பேயாமுதலியவற்றைக் கொடுத்து, ஜாடராக்னியைத் தூண்டி, லங்கநமும் செய்வித்து, அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு சிகித்ஸை செய்யலாம்; பல தோஷங்கள் சேர்ந்துண்டான மிச்ரலக்ஷணமுள்ள குல்மத்திலும் வைத்தியன் காலமறிந்து அததற்கு அனுகுணமான சிகித்ஸையைச் செய்வானாக. 118.

இரத்த குல்ம சிகித்ஸை.

(1) ஸ்த்ரீக்கு இரத்தகுல்மம் உண்டாயிருக்கையில், கர்ப்பிணியாகவுமிருந்தால், பிரஸவகாலம் கழிந்தபிறகு ஸ்நேஹஸ்வேதங்களைச் செய்து, அப்பால் ஸ்நேஹங்களால் விரேசநம் செய்விக்கலாம். மாதவிடாய் நின்ற பிறகு, ஸ்த்ரீகளுக்கு குல்மம் உண்டானால், நெய், வெல்லம், த்ரிகடு, கண்டுபாரங்கி இவற்றின் சூர்ணத்தை எள்ளுக் கஷாயத்தில் சேர்த்து பானம் செய்விக்கலாம். 119, 120.

பார்ங்க்யாதி சூர்ணம்.

கண்டுபாரங்கி, திப்பிலி, புங்கம்பட்டை, கிரந்திதகரம், தேவதாரு இவற்றைச் சூர்ணம் செய்து, எள்ளுக் கஷாயத்தோடு உட்கொள்ள குல்மநோய் தீரும். 121.

க்ஷாரா வலேஹம்.

இரண்டு பாத்திரம் அளவு பலாசக்ஷாரத்தை, இரண்டிரண்டு பாத்திரங்களளவான தைலத்திலும் க்ருதத்திலும் சேர்த்து பக்குவம் செய்து, தகுந்த அளவில் இரத்தகுல்மத்தை அறுத்து வெளிப்படுத்துவதற்காக உபயோகிக்கலாம். 122.

இரத்த குல்மத்தில் யோநிவிரேசம்.

முற்கூறிய இம்முறைகளால் இரத்த-குல்மம் உடையாவிட்டால், யோநிவிரேசநத்திற்கான ஔஷதத்தைப் பிரயோகிக்கவும்.

(1) பலலத்தை[1] க்ஷாரத்துடன் கூட்டியாவது, (2) கள்ளிப்பாலில் கலந்தாவது, (3) கடுகரோஹிணியையும் மத்ஸியங்களையும் க்ஷாரம் கள்ளிப்பால் இவற்றில் பாவனை செய்தாவது யோனியில் பிரயோகிக்கவும். (4) கடுகரோஹிணீ மத்ஸியங்களை வராஹபித்தம் மத்ஸிய பித்தங்களில் நன்கு பாவனை செய்தாகிலும் முன்போலவே பிரயோகிக்கலாம். (5) கிண்வமென்கிற மதுவின் கிட்டத்தையாவது வெல்லத்தோடும் க்ஷாரத்தோடும் கூட்டி யோனியைச் சுத்திசெய்வதற்காக அதில் பிரயோகிக்கலாம். (6) இரத்தபித்தஹரமான க்ஷாரத்தைத் தேன், நெய் இவற்றோடு கலந்து லேஹ்யம்போல உட்கொள்ளலாம். (7) வெள்ளுள்ளி, தீக்ஷ்ணகுணமுள்ள மதிரை யென்னும் மது-மத்ஸியங்கள் இவற்றையும் இவ்வியாதியினால் வருந்துபவளுக்குக் கொடுக்கலாம். (8) பால், பசுவின் சிறுநீர் இவற்றைக் கலந்தாவது, (9) தசமூல கஷாயத்தில் க்ஷாரத்தைச் சேர்த்தாவது வஸ்தியைப் பிரயோகிக்கலாம். 123—126.

இரத்த குல்மத்தில் சஸ்திர சிகித்ஸை.

முற்கூறிய விதமெல்லாம் குல்மத்துக்கு சிகித்ஸை செய்தும் இரத்தம் வெளிப்படாமற் போனால், அந்த குல்மத்தைச் சஸ்திரப் பிரயோகத்தினால் உடைத்துவிடுவது தான் ஹிதமான சிகித்ஸையாகும். 126½.

1. பலலம்—வறுத்து இடித்து சூர்ணம் செய்து கொண்ட எள்ளின் கல்கம்.

இரத்தம் குல்மத்திலிருந்து வெளிவரத் தொடங்கிவிட்டால், யமகஸ்நேஹங்களை உடம்பிலும் முக்கியமாக யோனியிலும் அப்யங்கனம் செய்துவைத்து, இரத்தத்தை நன்கு ஸ்ரவிக்கச் செய்யவேண்டும். இந்த நிலைமையில் மாம்ஸரஸங் கலந்த அன்னத்தை உணவாகவும், அதிக நாட்படாத ஸுரை யென்னும் மதுவை பானம்செய்வதற்காகவும் கொடுக்கலாம். 127½.

இரத்த குல்மத்தில் ஸ்ரவிக்கும்உதிரத்தைக் தடுக்கக் கூடாது.

(1) உதிரம் மிதமிஞ்சி ஸ்ரவித்துக் கொண்டிருந்தால், இரத்த-பித்தஹரமான சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். (2) இரத்தம் மிகுதியாக வெளிப்பட்டு வாதரோக ஸம்பந்தமான கோளாறுகள் அப்பிணியாளிக்குக் கண்டால், வாத ஹரமான எல்லாச்சிகித்ஸைகளையும் செய்யவேண்டும். (3) வயிற்றுப் பொருமல் முதலிய வேறுவித கோளாறுகள் நேரிடுமானல், உதாவர்த்தத்தைப் போக்கக் கூடியவையும், கபதோஷத்தைப் பரிஹரிக்கக் கூடியவையுமான சிகித்ஸைகளை அந்தந்த நிலைமைகளுக்கு ஏற்றவண்ணம் நிறைவேற்றலாம். 128—129.

இரத்த குல்மத்தில்உதிரம் அதிகமாக ஸ்ரவிக்கையில்செய்யுமுபசாரம்

---

## பதினைந்தாவது அத்தியாயம்.

இனி உதரசிகித்ஸை[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

தோஷங்கள் அமிதமாக விருத்தியாய் விடுவதாலும், ஸ்ரோதஸ்ஸுக்களென்கிற தேஹத்திலுள்ள நிணநீர்க் குழாய்களின் மார்க்கங்கள் அடைபடுவதாலும் உதரரோகம் உற்பத்தியாகின்றது; ஆகையால் இவ்வியாதியில் எப்பொழுதுமே விரேசநம் செய்விக்க வேண்டும். 1.

உதரரோகத்தில் விரேசநம் செய்விப்பதின் ஆவச்யகம்.

(1) ஒரு மாஸம் அல்லது இரண்டு மாஸகாலம் ஆமணக் கெண்ணெயைப் பசு மூத்திரத்தோடாவது பசுவின் பாலுடனாவது கலந்து பருகி வரலாம். (2) அல்லது கோ மூத்திரத்தையேயாவது, எருமையின் சிறுநீரையேயாவது குடித்துக் கொண்டு, பசும் பால் கலந்த அன்னத்தையே பத்திய போஜனமாக எடுத்துக் கொண்டு வரலாம். (3) கழுதைப் பாலையேயாவது குடித்து வரலாம். உதரரோகத்தில் இவை உபயோகமானவை; அதிலும் தேஹதாபம், வயிற்றுப் பொருமல், அதிக நாவறட்சி, மூர்ச்சை இவைகளோடு கூடிய உதரரோகிக்கு இம்முறைகள் இன்னும் விசேஷமானவையாம். (4) அதிக வாததோஷ முள்ளவர்களும், ஆகவே ரூக்ஷமாயிருப்பவர்களும், தோஷங்களைச் சுத்தி செய்யவேண்டிய தான நிலைமையைப் பெற்றவர்களுமான இந்த ரோகிகளுக்கு, உதர ரோகஹரமாகவும், ஸ்நிக்தத் தன்மையை உண்டுபண்ணு மியல்புள்ளவையுமான க்ருதங்களைக் கொடுக்கவும். 2—4.

உதரத்தில்அதிரூக்ஷ நிலைமையில் ஸ்நேஹாதி சிகித்ஸை.

1. ஜலோதரம். ப்லீஹோதரம் முதலியவற்றின் சிகித்ஸை.

**ஷட்பலக்ருதம்** இரண்டு ஆடகங்கொண்ட மோரின் தெளிவு நீரில் தசமூல கஷாயத்தையும் கூட்டி, ஷட்பல க்ருதத்திற்குள்ள சரக்குகளையும்[2] சேர்த்து, அதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் பக்குவம்செய்து உபயோகிக்கவும். 4½.

**சுண்ட்யாதி க்ருதம்.** ஒரு ஆடகம் மோரின் தெளிவு நீரில் மூன்று பலம் சுக்கைப் பொடித்துச் சேர்த்து, க்ருதம் தைலம் இவற்றை ஒவ்வொரு ப்ரஸ்தம் சேர்த்துக் காய்ச்சவும். இவ்விதம் பக்குவம் செய்த ஸ்நேஹத்தைப் பானம் செய்ய எல்லா உதரரோகங்களும் தீரும். கப-வாதங்களால் உண்டாகும் குல்மத்திலும் மிக்க உபயோகமானது. 5, 6.

**கோமூத்திர க்ருதம்.** ஒரு பிரஸ்த்தம் நெய்யை எடுத்துக் கொள்ளவும்; அதற்கு நாலு மடங்கு ஜலமும், இரண்டு மடங்கு கோமூத்திரமும் சேர்த்து, ஒரு பலம் சித்திர மூலத்தைக் கல்கமாகவும் கூட்டி, யவக்ஷாரமும் சிறிது சேர்த்துவைத்துக் கொள்ளவும். இதை உதரரோகமுள்ளவன் உபயோகிக்கலாம். 7.

**யவாதி க்ருதம்.** யவதானியம், இலந்தங்கொட்டை, கொள்ளு, மஹாபஞ்சமூலம் இவற்றை ஜலத்தில் சேர்த்து, ஸுரை யென்னும் மதுவையும், காஞ்ஜிகத்தையும் அதில் கூட்டி, க்ருதம் பக்குவம் செய்தாவது உட்கொள்ளச் செய்யலாம். 8.

**உதரங்களில் விரேசநம் பிரயோகிக்கும் நிலைமை.** முற் கூறிய க்ருதங்களை யுபயோகித்து ரோகியின் தேஹம் ஸ்நிக்த்தமாய், உடலில் வன்மையும் உண்டாய், வாதமும் தணிவடைந்து, தோஷங்கள் சேர்ந்துள்ள ஆசயமும் தளர்ச்சியுற்றிருக்கையில் கல்பஸ்த்தானத்திற் காணப்படும் விரேசநௌஷதங்களைக் கொடுக்கவும். 9.

**படோல மூலாதி சூர்ணம்.** பேய்ப்புடல் வேர், த்ரிபலை, மஞ்சள், வாய்விடங்கம் இவை வகைக்குக் கால் பலம், கம்பில்லம் அவற்றிலும் இரண்டு பங்கு, கருஞ்சாறடை மூன்று பங்கு, சிவதை வேர் நாலு பங்கு; இவற்றை நன்கு சூர்ணம் செய்து கொள்ளவும். இச்சூர்ணத்தைப் பசுமூத்திரத்தோடு உட்கொள்ளவும். இதனால் நன்கு விரேசநமான பிறகு, முதலில் பேயாவைப் பருகவும்; அதன் பிறகு ஜாங்கல மாம்ஸரஸங்களோடு அன்னம் புசிக்கவும். அப்பால் த்ரிகடுவைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை ஆறு நாட்கள் உட்கொண்டு வரவும். இவ்விதமே அடிக்கடியும் உட்கொண்டு வந்தால், இச்சூர்ணமானது நீர் சுரந்த மஹோதரம் உட்பட எல்லா உதரங்களையுமே போக்கிவிடும். 10-12.

**கவாக்ஷ்யாதி சூர்ணம்.** தும்மட்டிக்காய், சங்கங்குப்பி, நேபாளம், வெள்ளிலோத்திப் பட்டை, வசம்பு இவற்றைச் சூர்ணம் செய்து கொள்ளவும். பேரிலந்தை, திராக்ஷை, இலந்தை இவற்றின் கஷாயத்தையாவது, கோமூத்திரத்தையாவது, மதுவையாவது அச்சூர்ணத்திற்கு அநுபானமாகப் பருகலாம். 13.

**நாராயண சூர்ணம்.** குராசானி ஓமம், கொட்டைக் கரந்தை, கொத்தமல்லி விதை, சதகுப்பி, கருஞ்சீரகம், ஓமம், கண்டத்திப்பிலி, காட்டு ஜீரகம், கச்சோரம், வசம்பு, சித்திரமூலம், ஜீரகம், த்ரிகடு, பிரும்மதண்டு விதை, த்ரிபலை, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், தாமரைக் கிழங்கு

1. பஞ்ச கோலங்களும், யவக்ஷாரமும் ஷட்பல க்ருதத்தின் சரக்குகளாம்.

கோஷ்டம், பஞ்சலவணம், வாய்விடங்கம் இவை ஸமபாகம்; நேபாளம் மூன்று பாகம்; சிவதை வேரும் தும்மட்டியும் தனித்தனி இரண்டு பாகம்; இலைக்கள்ளி நான்கு பாகம்; இவற்றைச் சூர்ணம் செய்து கொள்ளவும். இது "நாராயண சூர்ணம்" என்று வழங்கப்படும். இது பல ரோகங்களைப் போக்கவல்லது. ஸ்ரீமஹாவிஷ்ணுவைக் கண்ட அஸுரர்கள் போல, இதைப் பிரயோகித்த மாத்திரத்தில் வியாதிகள் சற்றும் தலையெடுக்க மாட்டா. இச்சூர்ணத்தை (1) உதர ரோகமுள்ளவர்கள் மோருடன் உபயோகிக்க வேண்டும். (2) குல்மரோகிகள் இலந்தங்கொட்டையின் கஷாயத்தோடும், (3) ஆநாஹவாதமென்கிற வயிற்றுப் பொருமலில் ஸுரையென்னும் மதுவோடும், (4) வாதரோகத்தில் சாத்தீர்த்தத்தோடும், (5) மலபந்தத்தில் தயிரின் ஆடையோடும், (6) அர்சஸ்ஸில் மாதளஞ் சாற்றோடும், (7) ஆஸனக்கடுப்பில் புளியம் பழச் சாற்றோடும், (8) அஜீர்ணத்தில் வெந்நீரோடும் நிலைமைகளுக் கேற்றவாறு உபயோகிக்கலாம். மேலும் பகந்தரம், பாண்டுரோகம், காஸம், ச்வாஸம், களக்ரஹம் என்கிற கழுத்துப் பிடிப்பு, இருதயரோகம், கிரஹணீதோஷம், குஷ்டம், அக்னிமாந்தியம், ஜ்வரம், கோரப்பற்கள் தாக்குவதால் பற்றிக்கொள்ளும் விஷம், மூலங்கள் என்கிற சில மூலிகைகளின் வேர்கவ் ஸம்பந்தமான விஷம், கரவிஷம், க்ருத்ரிமவிஷம் இவைகளிலும் அவரவர்களுக்குத் தகுந்தவாறு கோஷ்டத்தை ஸ்நிக்த்தமாகச் செய்துகொண்டு விரேசநத்திற்காக இச்சூர்ணத்தை உபயோகிக்கலாம். 14—21.

ஹபுஷாதி சூர்ணம். கொட்டைக்கரந்தை, பிரம்மதண்டு விதை, த்ரிபலை, அவுரிவிதை, கொன்றை, கடுகரோஹிணீ, நிலவேம்பு, இலைக்கள்ளி, சிவதைவேர், வசம்பு, இந்துப்பு, கறுப்புப்பு, திப்பிலி இவற்றைச் சூர்ணம் செய்யவும்; இதை மாதளம் பழச் சாற்றுடனாவது, த்ரிபலா கஷாயத்துடனாவது. மாம்ஸரஸத்தோடாவது, கோமூத்திரத்தோடாவது, இளஞ்சூடான ஜலத்தோடாவது உட்கொள்ளலாம். ஸகல குல்மரோகங்கள், ப்லீஹோதரம், மற்றுமுள்ள இதர உதரரோகங்கள், ச்வித்ரமென்கிற வெண்குஷ்டம், குஷ்டம், அஜீர்ணம், அக்னிமாந்தியம், ஜாடராக்கினி விஷமித்திருத்தல், சோகை, அர்சஸ், பாண்டுரோகம், காமாலை, ஹலீமகம் இவைகளில் இச்சூர்ணத்தை உபயோகிக்கலாம். இது விரேகத்தையுண்டுபண்ணி, வாதம், பித்தம், கபம் இத்தோஷங்களனைத்தையுங் கூட நன்கு சீக்கிரத்தில் வெளிப்படுத்தி விடும். 22—25

நீலிந்யாதி சூர்ணம். அவுரிவிதை, நீர்வஞ்சி, த்ரிகடு, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், பஞ்சலவணம், சித்திரமூலம் இவற்றைச் சூர்ணம்செய்து, நெய்யிற் கலந்து உட்கொள்ள, உதரரோகங்களும் குல்மமும் தீரும். 26.

உதரத்தில் விரேகத்தினால் பலஹீனமாயிருக்கையில் க்ஷீரபாநம். இவ்வௌஷதங்களால் சோதந சிகித்ஸை செய்கையில் பிணியாளி பலஹீனப்பட்டு சோர்வடையும் போது, இடையிடையே முன் போலவே[1] கழுதைப் பாலையாவது, பசுவின் பாலையாவது, வெள்ளாட்டுப் பாலையாவது

1. இதற்கு முன் படோல மூலாதி சூர்ணத்திற்குக் கூறிய விதமாய் பேயாதிகளில் பாலை யுபயோகிக்கவும்.

உட்கொள்ளக் கொடுக்கலாம். வியாதி பலமாயிருக்குமாயின் விரேசநத்திற்கு ஸ்நேஹத்தையே உபயோகிக்க வேண்டும்; அதிலும் துர்பலமாயிருப்பவருக்கு விசேஷமாய் ஸ்நேஹந்தான் விரேகத்திற்குத் தகுந்தது. 27, 27½.

ஹரிதகீ க்ருதம். ஒரு பிரஸ்த்தம் கடுக்காய்ப் பொடியை ஒரு ஆடகம் நெய்யில் சேர்த்துக் காய்ச்சி, துடுப்பால் நன்றுகக் குழப்பிக் கிளறி, அப்பாத்திரத்தின் வாயைச் சீலை மண்களால் நன்கு மூடி, தானியக் களஞ்சியத்தின் பள்ளத்தில் புதைத்து வைக்கவும்; பிறகு ஒரு மாஸம் கழித்து வெளியிலெடுத்து, வடிக்கட்டி, கடுக்காய்க் கஷாயத்தையும், புளித்தத் தயிரையும் கூட்டி பக்குவம்செய்து பருகி வரவும். உதர ரோகம், கரவிஷம், அஷ்டீலை, வயிற்றுப் பெருமல், குல்மம், வித்ரதி, குஷ்டம், உன்மாதம், அபஸ்மாரம் இவற்றை இது நிவ்ருத்தி செய்யும். 28—30½.

ஸ்நுக் க்ஷீரவிகித்த க்ருதங்கள். (1) பசுவின் பாலில் கள்ளிப்பாலையும் கூட்டிக் காய்ச்சி ஆற்றிய பிறகு, மத்தினால் கடைந்து அதிலிருந்து எடுக்கப்படும் வெண்ணெயிலிருந்துண்டான நெய்யும், (2) கள்ளிப்பாலில் சேர்த்துக் காய்ச்சி யெடுக்கப்பட்ட நெய்யும் முற்கூறிய ஹரீதகீ க்ருதத்திற்கு ஸமானமான குணமுள்ளனவாம். (3) ஒரு திரோணம் பாலில் அரைப் பிரஸ்த்தம் கள்ளிப்பாலைக் கூட்டவும்; அது தயிராகப் போன பிறகு, அதைக் கடைந்தெடுத்த நெய்யில், சிவதை வேரைச் சேர்த்துக் காய்ச்சிக் கொள்ளவும். இந்த க்ருதமும் அதே குணமுடையது. (4) ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தை எட்டு மடங்கு பாலில் சேர்த்து, ஒரு பலம் கள்ளிப்பாலையும் கல்கமாகக் கூட்டி, சிவதை வேரையும்ஷட்பலச் சரக்குகளையும்[1] பொடித்துப் போட்டு, பக்குவம் செய்த க்ருதமும் அதே குணமுடையதாகும். 31—33½.

உதரத்தில் க்ருதபானத்திற்குப் பிறகு பேயாதிகளின் உபயோகம். (1) இந்த க்ருதங்களை யுபயோகித்த பிறகு பேயாவையவாது, மதுரமான பதார்த்தங்களால் பக்குவம் செய்த மாம்ஸரஸத்தையாவது, பாலையாவது பானம் செய்யவேண்டும். (2) க்ருதம் ஜீர்ணித்து, விரேசநமும் ஆன பிறகு, சுக்கை உடைத்துப் போட்டுக் காய்ச்சிய இளஞ்சூடான ஜலத்தைப் பானம் செய்யவும் (3) அதன் பிறகு பேயாவையும், (4) அப்பால் கொள்ளைச் சேர்த்து செய்த கஞ்சியையும் பருகலாம். (5) இங்ஙனம் பேயாதிகளை மூன்று நாட்கள் உபயோகித்த பிறகு முறைப்படி லங்கநம் செய்வித்து ரூக்ஷநிலைமையடைந்த பிறகாவது முற்கூறிய விதிப்படி வரிசையாக க்ருதபானம் செய்துவர வேண்டும். 34—36.

உதராதி ரோகங்களில் வேறு சில க்ருதங்கள். முற்கூறிய வாறு பக்குவம் செய்த க்ருதங்களை நிபுணனை வைத்தியன் குல்மரோகங்களையும், கிருத்ரிமவிஷங்களையும், உதரரோகங்களையும் நிவ்ருத்தி செய்வதற்காக நிலைமையறிந்து தயார்செய்து உபயோகிக்கவேண்டும். பெருஞ்ஜீரக கல்கத்தைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது வயிற்றுப் பொருமலைப் போக்குவதற்காகப் பருகலாம். தில்வக க்ருதத்தையாவது, நீலிநீ க்ருதத்தையாவது, மிச்ரக ஸ்நேஹத்தையாவது பானம் செய்யலாம். இவற்றால் தோஷங்கள் வெளிப்படுத்தப் பட்ட பிறகு, பிணியாளியானவன் சிறுகச் சிறுக இலகு குணமுள்ள சம்பா அன்னத்தை புஜிக்கத் துவக்கலாம். 37—38½.

1. ஷட்பலச் சரக்குகள்—இதற்கு முன் இதே அத்தியாயத்திற் கூறியுள்ள ஷட்பல க்ருத முறையைப் பார்க்க.

உதர ரோகத்தில் மிச்சமுள்ள தோஷத்தை நிவ்ருத்தி செய்யு முறைகள்.

பிறகு உதரரோகியானவன் மிச்சமுள்ள தோஷத்தை நிவ்ருத்தி செய்வதற்காக அடியில் கூறப்படுமாறு செய்யவேண்டும்:—(1) கோமூத்திரத்தில் நன்கு பாவனை செய்யப் பட்ட ஆயிரம் கடுக்காய்களையாவது பாலின் அனுபானத்தோடு புஜித்துவரலாம். (2) கள்ளிப்பாலில் நன்ருக பாவனை செய்த ஆயிரம் திப்பிலிகளையாவது உபயோகிக்கலாம். (3) பிப்பலீவர்த்தமாநக முறையையாவது உபயோகிக்கலாம்.[1] (4) சிலாஜதுவை உபயோகித்துக் கொண்டாவது பாலையே அதற்குப் பத்தியமாய் உட்கொண்டு வரலாம். (5) அங்ஙனமே மஹிஷாக்ஷி குக்குலுவையாவது உபயோகிக்கலாம். (6) ஸம அளவாக இஞ்சிச் சாறு கலந்த பாலையாவது அவ்விதமே பானம் செய்து வரலாம். (7) சித்திரமூலம், தேவதாரு இவற்றின் கல்கத்தையாவது பாலோடு பருகி வரலாம். (8) அப்படியே யானைத்திப்பிலி, சுக்கு இவற்றின் கல்கத்தையாவது பாலின் அனுபானத்தோடு நியதமாய் உபயோகித்து வரலாம். (9) வாய் விடங்கம், சித்திரமூலம், நேபாளம், சவ்வியம், த்ரிகடு இவற்றை வகைக்குக் கால் பலம் வீதம் எடுத்து, கல்கமாகச் செய்து, பாலில் கலந்து பானம் செய்ய மிகவும் விருத்தி யடைந்த உதரரோகத்தையும் நிவ்ருத்தி செய்துவிடலாம். (10) கள்ளிப்பாலில் பக்குவம் செய்த க்ருதத்தை உணவில் கலந்து, அவ்வித உணவுகளையாவது ஒரு மாஸம் புஜித்து வரலாம். (11) கள்ளிப் பாலில் பாவனை செய்த கடுக்காய், திப்பிலி இவற்றைக் கொண்டு பக்குவம் செய்த உத்காரிகையையாவது[1] உபயோகித்துவரலாம். 39—44.

1. முதலில் மூன்று திப்பிலிகளாக ஆரம்பித்து, பத்து நாட்கள் வரையில் மும்மூன்ருகவே அதிகமாய் உபயோகித்து வந்து, அந்தக்கிரமப்படியே குறைவாக உபயோகித்து அப்பால் நிறுத்திவிடுவது பிப்பலீவர்த்தமாநகம் எனப்படுகிறது.

உதரத்தில் பக்கசூலை முதலியவை தோன்றிஞல், அதற்கேற்றக்ருதங்கள்.

பக்கசூலை, வயிற்றுப் பொருமல், மாரடைப்பு இவ்விகாரங்களை வாயு உண்டு பண்ணுமாயின் அப்பொழுது (1) பில்வ க்ஷாரம் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தைப் பருகலாம். (2) பெருவாகையின் க்ஷாரம், (3) சிறுமுட்டியின் க்ஷாரம், (4) பலாச க்ஷாரம் (5) திலக்ஷாரம், (6) பனையின் க்ஷாரம், (7) கதலீ க்ஷாரம், (8) நாயுருவியின் க்ஷாரம், (9) தழுதாழையின் க்ஷாரம் இவற்றுள் எதையேனும் சேர்த்துப் பக்குவம் செய்த க்ருதத்தையாவது உட்கொள்ளலாம். 45, 46.

உதரத்தில் ஆவரண தோஷங்களுக்கு ஆமணக் கெண்ணெய்.

வாத தோஷத்திஞல் கபமாவது பித்தமாவது ஆவரணம் செய்யப்படுமாஞலும், பித்த-கபங்களால் வாதம் ஆவரணம் செய்யப்படுமாஞலும்[2] அந் நிலைமைகளில், பிணியாளி பலசாலியா யிருப்பாஞகில், அந்தந்த நிலைமைகளுக்கேற்ற ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த ஆமணக்கெண்ணெயை உபயோகிப்பது ஹிதமாம். 47.

தேவதார் வாதி லேபம்.

(1) தேவதாரு, பலாசம்பட்டை, யானைத் திப்பிலி, முருங்கப் பட்டை, குங்கிலிய மரப்பட்டை இவற்றைப் பசுமூத்திரம் சேர்த்துக் கல்கமாகச் செய்து, வெளிப்புறத்தில் வயிற்றின் மேல் பூச்சிடவும். 48.

வ்ருச்சிகால் யாதி ஸேசநம்.

தேள் கொடுக்கிலை, வசம்பு, சுக்கு, மஹா பஞ்சமூலம், வெள்ளைச் சாறடை, கருஞ்சாறடை, கொத்தமல்லி விதை, கோஷ்டம் இவற்றின் க்வாதங்களையும் கோமூத்

1. உத்காரிகை—முதற்புத்தகம் பக்கம் பார்க்க.

2. தோஷங்களின் ஆவரண விகாரங்களைப் பற்றி முதற்புத்தகம் 344, 402 இப்பக்கங்களில் விவரம் காண்க.

திரத்தையும் வயிற்றின்மேல் ஊற்றி ஒற்றடமிடலாம். 49.

உதரத்தில் நன்கு விரேசகமான பின்பு வயிற்றை வஸ்திரத்தால் கட்டுதல்.

முற்கூறியவாறு ஆமணக்கெண்ணெய் முதலியவற்றின் பிரயோகங்களால் விரேசநமாய் வயிறு நன்கு வாடியதும், ஸால்வணம்[1] முதலியவற்றால், ஸ்வேதம் செய்வித்த பிறகு, வயிற்றை வஸ்திரத்தினால் சுற்றிக் கட்டவும். இவ்விதம் செய்ய, மறுபடியும் வாயுவானது வயிற்றை ஊதச் செய்யாது. 50.

உதரத்தில் விரேசநத்திற்குப் பிறகு வயிற்றுப் பொருமலில் நிரூஹங்கள்.

(1) நன்கு விரேசநமான பிறகு எவனுக்கு மறுபடியும் வயிறு ஊதிவிடுகின்றதோ, அவனுக்கு அதிக ஸ்நேஹ பதார்த்தம் கலந்தவையும் அம்ல லவணங்கள் சேர்ந்தவையுமான கஷாயங்களால் நிரூஹவஸ்திகளைப் பிரயோகித்து சிகித்ஸை செய்யவேண்டும். (2) வாயுவானது ஸ்தம்பிக்கப் பட்டாவது எவனுக்கு வயிற்றில் பொருமலை யுண்டு பண்ணுகின்றதோ, அப்பிணியாளிக்கு தீக்ஷ்ணமாகவும், க்ஷாரங்கள் பசுமூத்திரம் இவற்றோடு கூடியதாகவுமுள்ள வஸ்திகள் சிறந்த சிகித்ஸைகளாம். 51, 52.

உதர ரோகத்தில் விசேஷ சிகித்ஸைகள்.

இங்ஙனம் உதர ரோகிகளுக்குக் கைகண்ட பலன் தரக்கூடிய சிகித்ஸா முறைகள் பொதுவாகக் கூறப்பட்டன. இனி வாதாதி தோஷங்களா லுண்டாகும் உதர ரோகங்களுக்கு விசேஷ சிகித்ஸைகள் விவரிக்கப்படும். 52½.

வாதோதரத்தில் ஸ்நேஹ ஸ்வேதாதிகள்

வாததோஷத்தினால் உண்டான உதர ரோகத்தில் தேஹவன்மையுள்ள பிணியாளிக்கு (1) விதார்யாதி கணச் சரக்குகளால்[2] பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தைப் பருகக் கொடுக்கவும். (2) அவ்விதம் செய்து ஸ்நிக்த்தமான பிறகு, ஸ்வேதச் சிகித்ஸைசெய்வித்து, (3) தில்வக க்ருதத்தினாலாவது, மிச்ர கஸ்நேஹத்தினாலாவது அநேகமுறை விரேசநம் செய்விக்கவும். (4) ஸம்ஸர்க்க க்ரியையும் செய்துவைத்த பிறகு [1]பிணியாளிக்கு தேஹத்தில் பலமுண்டாவதன்பொருட்டு, பாலை தாராளமாகக் கொடுத்துவரவும்; தேஹத்தில் பலமுண்டாய், பால் தெவிட்டிப் போய் விடுமானால், பெரும்பாலும் அந்த நிலைமையே பாலை கிரமமாக நிறுத்துவதற்கு ஏற்றதாகும். (5) சொர்ப அளவாக உப்பையும் புளிப்பையும் சேர்த்து பக்குவம் செய்த யூஷங்களாலும், மாம்ஸ ரஸங்களாலும் ஜாடராக்னியை விருத்தி செய்து, (6) உதாவர்த்த மென்னும் கோளாறு அதன் பிறகு ஏற்படுமானால், மீண்டும் அவனை (7) ஸ்நிக்த்தமாகச் செய்து, (8) ஸ்வேதமும் செய்வித்து, (9) அப்பால் ஆஸ்த்தாபந வஸ்தியைப் பிரயோகிக்கவும்; இதற்கு தசமூல கஷாயத்தை, தீக்ஷ்ணவீர்யமுள்ள வஸ்துக்களையும் அதனடியில் சேர்த்து உபயோகிக்கவும். (10) ரூக்ஷமாகவும், மலபந்தம் அபாநவாயு கட்டிப்போதல் இவைகளோடு கூடியவனாகவும், நன்கு விருத்தியடைந்த ஜாடராக்னியைப் பெற்றவனாகவு முள்ள பிணியாளிக்கு நடுக்கம், ஆக்ஷேபக மென்கிற இசிவு, பூட்டுகளில் வேதனை, அஸ்த்தி வேதனை, பக்கசூலை, முதுகுவலி, கழுத்துவலி, இக்கோளாறுகள் நேர்ந்திருக்கையில் வாதஹரமாகவும் அம்லரஸ முள்ளவையுமான சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த நல்லெண்ணெய் ஆமணக்கெண்ணெய் இவற்றைக் கொண்டு அநுவாஸநம் செய்விக்கவும். முற்கூறிய இலக்ஷணங்கள் தோன்றியிருக்கையில், விரேசநத்திற்

1. ஸால்வண ஸ்வேதம்—முதற்புத்தகம் 136-ம் பக்கம் பார்க்க.

2. விதார்யாதி கணம்—முதற்புத்தகம் 124-ம் பக்கம் பார்க்க.

1. ஸம்ஸர்க்க க்ரியை—அல்லது ஸம்ஸரக்கீ—இதே புத்தகத்தில் 14-ம் பக்கம் பார்க்க.

குத் தகாத பிணியாளிக்கு வஸ்திப் பிரயோகமும், பால் நெய்களின் உபயோகமும் அக்கோளாறுகளைச் சமநம் செய்யக் கூடியவையாம். 53—58½.

பித்தோதரத்தில் ஸ்நேஹஸ்வேதாதிகள்.

(1) பித்தத்தினு லுண்டான உதர ரோகத்தில் பிணியாளி சரீரவன்மையுள்ளவனுயிருந்தால், இனிய சுவையுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தைக் கொடுத்து நன்கு ஸ்நிக்த்தமாகச் செய்து, (2) கருஞ்சிவதை, வெண்சிவதை, த்ரிபலை இவற்றால் பக்குவம் செய்த க்ருதத்தை அவனுக்குக் கொடுத்து விரேசநம் செய்விக்க வேண்டும். (3) பிறகு சர்க்கரை, தேன், நெய் இவற்றை அதிகமாகக் கூட்டிய ந்யக்ரோதாதிகணச் சரக்குகளின் கஷாயத்தினுல் நிரூஹ வஸ்தியைப் பிரயோகிப்பது ஹிதமாகும். (4) அச்சரக்குகளையே சேர்த்து பக்குவம் செய்த கஷாயத்தையும் ஸ்நேஹ வஸ்துக்களையும் கூட்டி அநுவாஸநவஸ்தியை மீண்டும் பிரயோகிக்கவேண்டும். (5) துர்பலமான பிணியாளிக்கு க்ஷீரங்கலந்த வஸ்திகளால் முதலில் அநுவாஸநம் செய்வித்து, ஜாடராக்னி பலம் பெற்றதும் தேஹமும் ஸ்நிக்த்தமானதும், (6) சிவதை வேரையும் பாலையும் சேர்த்துக் காய்ச்சிய ஆமணக்கெண்ணெயை அவனுக்கு அடிக்கடியும் கொடுத்து விரேசநம் செய்விக்க வேண்டும். கள்ளியிலை, கொன்றை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தினுலாவது, கொன்றையின் கஷாயத்தினுலேயாவது விரேசநம் செய்விக்கலாம். (7) கபத்துடன் கூடிய பித்தோதரத்தில் கோமூத்திரம் கூட்டிய பாலையும், (8) வாததோஷத்துடன் கூடிய பித்தோதரத்தில் திக்தரஸமும் நெய்யும் கலந்த பாலையும் முற்கூறிய கஷாயங்களில் ஏதேனுமொன்றைச் சேர்த்தாவது, அல்லது விதாரியாதிகணக்வாதத்தில் கூட்டியாவது பிணியாளிக்குக் கொடுத்து வரவும். (9) இவனது வயிற்றின்மேல் பாயஸத்தினுல் சூடாக ஒற்றடமுங்கொடுத்து வரவும். மறுபடியும் க்ஷீரத்தைக் கொடுத்துக் கொண்டும், மீண்டும் வஸ்திகளைப் பிரயோகித்துக் கொண்டும், மறுபடியும் விரேசநம் செய்வித்து வந்தும் கிரமமாக விடாமல் சிகித்ஸை செய்து வந்தால் பித்தத்தினுல் உண்டான உதரத்தைப் போக்கிவிடலாம். 59—65.

கபோதரத்தில் ஸ்நேஹஸ்வேதாதிகள்.

(1) கபதோஷத்தினுலுண்டான உதரரோகத்தில் வத்ஸகாதிகணச் சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தினுல் ஸ்நேஹம் செய்வித்து, (2) அப்பால் ஸ்வேதசிகித்ஸையை நிறைவேற்ற வேண்டும். (3) அப்பால் கள்ளிப்பாலைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தினுல், பிணியாளி பலசாலியாயிருந்தால், விரேசநம் செய்விக்கவும். (4) கடுரஸம், க்ஷாரங்கள் இவற்றோடு கூடியவையும், கபஹர குணங்களுள்ளவையுமான உணவுகளால் ஸம்ஸர்ககிரியையைச் செய்யவும். (5) பிறகு கோமூத்திரம், த்ரிகடு, தைலம் இவற்றை முஷ்ககாதி கஷாயத்தில் தாராளமாகக் கூட்டி அதனுல் நிரூஹவஸ்தியைப் பிரயோகிப்பது ஹிதமாம். (6) அக்கஷாயத்திலேயே பக்குவம் செய்த ஸ்நேஹத்தினுல் அநுவாஸந வஸ்தியையும் செய்யலாம். (7) த்ரிகடுவைச் சேர்த்து பக்குவம் செய்த பாலுடனுவது, கொள்ளுக்கஷாயத்தில் காய்ச்சிய பாலுடனுவது, மாம்ஸரஸத்திற் காய்ச்சிய பாலுடனுவது அன்னத்தைக் கூட்டி யுண்ணலாம். (8) கபம் மிகுதியாகச் சேர்ந்து இறுகிப்போய் உதரரோகம் அதிகரித்து வயிறு கனத்து விட்ட நிலைமையில், ஸ்திமிதத் தன்மையினுலும் அரோசகத்தினுலும், இருதயக் கோளாறுலும் பிணியாளி

வருந்துகையில், மதுபானத்தினால் அக்னிமாந்திபமும் உதரரோகிக்கு உண்டாயிருக்கையில் அரிஷ்டங்களையும் க்ஷாரங்களையும் கொடுக்கலாம். 66—69.

ஹிங்க்வாதி க்ஷாரம்.

காயம், திப்பிலி, த்ரிபலை, தேவதாரு, மஞ்சள், மரமஞ்சள், சேராங்கொட்டை, முருங்கக்காய், கடுகரோஹிணி, நிலவேம்பு, வசம்பு, சுக்கு, யானைத்திப்பிலி, கோரைக் கிழங்கு, கோஷ்டம், குங்கிலியப் பட்டை, பஞ்சலவணங்கள் இவற்றைச் சூர்ணம் செய்து, க்ருதம்-தைலம்-வஸா மஜ்ஜா என்கிற நான்குவித ஸ்நேஹங்களிலும் தயிரிலும் அச்சூர்ணத்தைக் கலந்து, ஒரு பாத்திரத்தில் அனைத்தையும் சேர்த்து எரிக்கவும்; ஜலபாகம் வற்றியபிறகு, அப்பாத்திரத்தின் வாயை மூடிவிட்டு, உள்ளேயே புகைந்து சாம்பலாய் விடுமாறு தீயிட்டெரிக்கவும். இவ்விதம் எரித்த சாம்பலிலிருந்தெடுக்கப்படும் க்ஷாரத்திலிருந்து ஒரு கர்ஷப் பிரமாணம் கிரஹித்து மதிரை யென்னும் மதுவோடாவது, தயிரின் ஆடை யோடாவது, உஷ்ண ஜலத்தோடாவது, அரிஷ்டங்க ளோடாவது, ஸுரையுடனாவது, ஆஸவங்களோடாவது பருகி வரவும். இந்த க்ஷாரம் மஹோதரம், குல்மம், அஷ்டீலை, தூநீ, பிரதிதூநீ, சோபம் என்கிற வீக்கம், விஷூசி, ப்லீஹோதரம், இருதய ரோகம், அர்சஸ், உதாவர்த்தம் இவைகளை நிவ்ருத்தி செய்யும். 70-73.

துர்பலமான கபோதரிக்கு சிகித்ஸை.

(1) அரிஷ்டங்கள், கோமூத்திரம், முற்கூறிய சூர்ணங்கள், அயஸ்க்ருதி இவைகளைப் பானம் செய்து, க்ஷாரங்களுடன் கூடிய தைலங்களைப் பானம் செய்வதும் துர்பலமான தேஹமுள்ள ரோகிக்கு கபோதரத்தைப் போக்கும். (2) உபநாஹஸ்வேதமும் துர்பலமான இப்பிணியாளிக்குச் செய்யத் தகுந்தது; அதில் வெண்கடுகு, மத்யத்தின் அடியிலுள்ள கிண்வமென்கிற திப்பிலி, முள்ளங்கியின் வித்துகள். இவற்றைக் கல்கமாக ஆட்டி அடிக்கடியும் வயிற்றின் மேல் பூச்சிடலாம். 74, 75.

ஸந்நிபாதோதர சிகித்ஸை.

தேஹபலமாவது, ஜாடராக்னியாவது, அதிகம் க்ஷீணிக்காமலுள்ள ஸந்நிபாதோதரத்தில், அப்பிணியாளிக்கு தோஷம் அதிகரித்திருப்பதால் நேரிடக் கூடிய நிலைமைகளை அனுஸரித்து, செய்யவேண்டிய சிகித்ஸையைப்பற்றி முன்னதாய் அறிவித்துவிட்டு, (1) நேபாள-ஜயபாள வித்துகளின் தைலத்தைப் பானம் முதலியதற்கும் உபயோகித்து சிகித்ஸை செய்யவும். (2) இவ்வித சிகித்ஸைகளுக் கெல்லாம் வசப்படாமல் உதரரோகம் மிகவும் அதிகரித்துவிட்டால், அதிலும் விசேஷமாக ஸந்நிபாதோதரத்தில், ரோகியின் உறவினர்களிடம் சொல்லி அவர்களுடைய அனுமதியைப் பெற்று, வெள்ளைக் குன்றுமணி, செங்குன்றுமணி, அவிரி இவற்றின் வேரைக் கல்கமாகச் செய்து, மத்யத்தில் கரைத்து பானம் செய்யக் கொடுத்து விடவும். (3) பானவகைகளிலும் உணவுகளிலும் ஸ்த்தாவர விஷத்தையாவது கலந்து கொடுத்து விடலாம். (4) சினங்கொண்ட ஸர்ப்பமானது எந்தக் கனியில் தனது விஷத்தைக் கக்குகின்றதோ அதையாவது பிரயோகிக்கலாம்; வேரூன்றியும் வெவ்வேறு மார்க்கங்களில் லயித்துமுள்ள ஸந்நிபாத தோஷத்தில் ப்ரமாதி யென்கிற வீர்யமுள்ள அவ்விஷத்தின் பிரயோகத்தினால் சீக்கிரம் அந்த ஸந்நிபாத தோஷம் உடைக்கப்பட்டு வெளிப்படுத்தப் படும்; அல்லது தேஹத்திலேயே தங்கியிருப்பினும் அந்த ஸந்நிபாத தோஷம் விஷத்தன்மையற்றதாகவாவது ஆய்விடும். (5) தோஷமெல்லாம் நீங்கிய பிறகு அப்பிணியாளிக்கு குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்வித்து, பாலையாவது, பேயாவையாவது பானம் செய்விக்

கலாம், (6) சிவதை யிலையையாவது, வல்லாரையிலையையாவது, சக்கிரவர்த்திக் கீரையையாவது, கருவேப்பிலையையாவது, யவசாகத்தையாவது அதனதன் இரஸத்திலேயே புளிப்பு, உப்பு இவற்றைச் சேர்க்காமல் சிறிது வேகுமாறு சமைத்து புஜித்து வரலாம்; இவற்றைச் சாப்பிடுகையில் அன்னம் புஜிக்கக்கூடாது; இங்ஙனம் ஒரு மாஸம் உபயோகித்து, அப்பால் நாவறட்சியுண்டானல் முற்கூறிய சாகங்களின் ஸ்வரஸத்தையே பருகி வரவேண்டும். (7) இவ்விதமாகச் சாகங்களால் தோஷம் விலக்கப்பட்டதும், ஒரு மாஸம் கழித்து, பலஹீனப்பட்டுள்ள அப்பிணியாளிக்குப் பிராணுதாரமாயுள்ள ஒட்டகத்தின் பாலைக் கொடுத்து வரவும். 76—84.

ப்லீஹோதர சிகித்சை.

(1) ப்லீஹோதரத்தில்[1] அந்தந்த தோஷத்திற்குத் தகுந்தவாறு ஸ்நேஹ சிகித்ஸையையும் ஸ்வேத சிகித்ஸையையும் செய்து, (2) தயிர் சேர்த்து போஜனம் செய்தபிறகு, இடது புஜத்தில் ஸிரையைக் குத்தி இரத்த மோக்ஷணம் செய்யவேண்டும். (3) தகுந்த வளவு பலமுண்டான பிறகு மறுபடி ஸ்நேஹ பானம் செய்துவைத்து, சோதந சிகித்ஸையையும் செய்வித்து, (4) கடலிலுண்டாகும் நத்தையோட்டிலிருந்து எடுக்கப்படும் க்ஷாரத்தைப் பாலுடன் உட்கொள்ளச் செய்யலாம். (5) புங்கங்காயை யெரித்தெடுக்கப்படும் க்ஷாரத்தை ஏதேனும் அம்லவஸ்துவில் சேர்த்துக் காய்ச்சி, கறுப்புப்பு, திப்பிலி இவற்றின் சூர்ணத்தையும் மிகுதியாகக் கூட்டி, அப்படியே பாலுடன் உட்கொள்ளலாம். (6) முருங்கம் பட்டையின் கஷாயத்தையாவது இந்துப்பு, சித்திரமூலம், திப்பிலி இவற்றைப் பொடித்துச் சேர்த்து உட்கொள்ளலாம். (7) பிணியாளியின் தேஹபலத்தை கவனித்து ஹிங்க்வாதி சூர்ணத்தையும், க்ஷாரத்தையும், க்ருதங்களையும் தகுந்தவாறு உபயோகிக்கலாம். 85—87½.

பிப்பல்யாதி சூர்ணம்.

திப்பிலி ஒருபங்கு, சுக்கு ஒருபங்கு, நேபாளம் இரண்டு பங்கு, இருமடங்கு கடுக்காய், இரண்டரைபங்கு கறுப்புப் பையும் கூட்டி சூர்ணம் செய்யவும். இச்சூர்ணத்தை ப்லீஹோதர முள்ளவன் உஷ்ணஜலத்துடன் பருகலாம். 88½.

விடங்காதி க்ஷாரம்.

வாய்விடங்கம், சித்திரமூலம், ஸக்து வென்னும்மாப் பண்டம், இந்துப்பு, வசம்பு இவற்றுடன் நெய் கூட்டி, ஒரு கலயத்திலிட்டு எரித்து, அந்த க்ஷாரத்தைப் பாலின் அனுபானத்தோடு உட்கொள்ள அது குல்மரோகம் ப்லீஹரோகம் இவற்றைப் போக்கும். 89½.

ப்லீஹத்தின் மேல் பந்தநமும் மர்த்தநமும்.

இலந்தை யிலைகளைத் தைலம் விட்டு நன்ருக அரைத்து, ப்லீஹமுள்ள விடத்தில் கட்டி, அதன் மேல் உலக்கையின் முனையை அழுத்தவும்; அப்பால் பாலையே உணவாக அருந்தவும். இவ்விதம் செய்ய ப்லீஹரோகம் நிவ்ருத்தியாகும். 90½.

ரோஹிதக ஹரீதகீ யோகம்.

மெல்லிய முள்முருக்கங் கிளைகளைச் சின்னஞ் சிறிய துண்டுகளாக வெட்டி, இத்துண்டுகளையும் கடுங்காய்களையும் ஜலத்திலாவது பசுமூத்திரத்திலாவது ஆஸவத்திற்குச் செய்வது போல ஊறப்போட்டு, ஏழு நாட்கள் கழித்து எடுத்து வடிகட்டி, அதிலுள்ள கடுக்காய்களை எடுத்து புஜிக்கவும். இது காமாலை, ப்லீஹரோகம், குல்மம், கிருமிரோகம், மேஹரோகம், மஹோதரம் இவ்வியாதிகளைப் போக்கவல்லது. 91, 92.

1. ப்லீஹோதரம்:—மண்ணீரல் எனப்படும் ப்லீஹக்கிரந்தி வீங்குவதால் உண்டாகும் உதரரோகம்.

ரோஹிதகாதி க்ருதம்.

இருபத்தைந்து பலம் முள் முருக்கம் பட்டையையும், இரண்டு பிரஸ்த்தமளவு இலந்தங் கொட்டையையும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; பிறகு பஞ்சகோலச் சரக்குகளை வகைக்கு ஒரு பலமாகவும், கடுக்காயின்தோலை ஐந்துபலமாகவும் எடுத்து, கல்கமாகச் செய்து, அதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தைச் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதத்தை உபயோகித்தால் சீக்கிரம் ப்லீஹ வீக்கத்தைப் போக்கிவிடும். 93—94½.

க்ஷார தைலம்.

வாழை, எள்ளுத்தண்டு, நீர்முள்ளி இவற்றின் க்ஷாரங்களைச் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தைப் பானம் செய்ய, கப-வாதங்களாலுண்டான ப்லீஹரோகம் நிவாரணமாகும். 95½.

ப்லீஹத்தில் தாஹகர்மம்.

வாதகபங்களா லுண்டான ப்லீஹோதர வியாதி முற்கூறிய சிகித்ஸைகளால் நிவ்ருத்தியாகாவிட்டால், துர்நீர்ப்பசை யுண்டாய் வெளிவராமலிருக்கையில் குல்மத்திற்குக் கூறிய விதிப்படி அக்னிதாஹம் செய்யலாம். 96½.

பித்தத்தினுலுண்டான ப்லீஹோதரத் திற்கு சிகித்ஸைகள்.

பித்தத்தினுலுண்டான ப்லீஹோதரத்தில் ஜீவனீய க்ருதங்களைப் பருகக் கொடுக்கலாம். க்ஷீரவஸ்திகளைப் பிரயோகிக்கலாம். இரக்தமோக்ஷணம் செய்யலாம். விரேசநாதி சோதந சிகித்ஸைகளையும் நிறைவேற்றலாம் க்ஷீர பானம் செய்வித்தலும் நலம். 97½.

யக்ருதுதர சிகித்ஸை.

யக்ருத் வ்ருத்தி அல்லது யக்ருத்தாலியென்கிற உதர ரோகத்தில் ப்லீஹோதரத்திற்குச் செய்ததுபோலவே எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். ஆனால் ஸிராவ்யதை சிகித்ஸையில் இடதுகைக்குப் பதிலாக வலது கையில் இரக்த மோக்ஷணம் செய்ய வேண்டும். 98.

பத்தகுதோதர சிகித்ஸை.

பத்தோதரம் என்கிற பத்தகுதோதர ரோகத்தில்[1] (1) ஸ்வேத சிகித்ஸை செய்வித்து, (2) அநுவாஸநத்தைப் பிரயோகித்து, (3) அப்பால் கோமூத்திரம், தீக்ஷ்ண வீர்யமுள்ள ஔஷதங்கள், தைலம், இந்துப்பு இவற்றைச் சேர்த்து நிரூஹ வஸ்தியையும் செய்ய வேண்டும். (4) ஸ்ரம்ஸநகுணமுள்ள உணவுகளைக் கொடுக்கவும் (5) தீக்ஷ்ண குணமுள்ள ஔஷதங்களைக் கொண்டு விரேசநம் செய்விக்கலாம். (6) உதாவர்த்த ஹரமான எந்த சிகித்ஸையுண்டோ, வாதஹரமான எம்முறைகளுண்டோ அவற்றையும் செய்யவேண்டும். 99, 100.

சித்ரோதர சிகித்ஸை

சித்ரோதரத்தில்[2] ஸ்வேதமொன்றைத் தவிர்த்து கபோதரத்திற்குக் கூறியது போலவே மற்ற எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். வயிற்றில் நீர் சுரக்கச் சுரக்க அதை அப்போதைக் கப்போது வைத்தியன் குத்தி வெளிப்படுத்தி விடவும். இவ்விதமாக அவ்வியாதியைப் போக்க முயலவேண்டும். 101.

உதகோதர சிகித்ஸை.

உதகோதரத்தில்[3] (1) கோமூத்திரம் கலந்தவையும், தீக்ஷ்ணவீர்யமுள்ளவையும், பற்பல க்ஷாரங்கள்சேர்ந்தவையும், நீர் ஸம்பந்தமான தோஷங்களை வெளிப்படுத்துங் குணமுடையவையுமான ஔஷதங்களை முதலில் பிரயோகிக்க வேண்டும். (2) தீபநீய

1. பத்தகுதோதரம்— முதற்புத்தகத்தில் நிதாநஸ்த்தாநத்தில் விவரம் காண்க.

2. சித்ரோதமம்—முதற்புத்தகம் நிதாநஸ்த்தாநம் பார்க்க.

3. உதகோதரம்—முதற்புத்தகப் நிதாநஸ்த்தாநத்தில் விவரங்களைக் காண்க.

குணமும் கபஹரமான தன்மையுமுள்ள ஆஹாரங்களைக் கொடுத்து அவனை உபசரிக்க வேண்டும். 102, 102½.

க்ஷாரகுளிகை.

உயர்ந்த செம்மறி யாட்டின் சாணத்தை யெரித்து அதிலிருந்து எடுக்கப்படும் க்ஷாரத்தை கோமூத்திரத்தில் சேர்த்துக் காய்ச்சி, கெட்டியாக வரும் வரையில் தீயிட்டுப் பக்குவம் செய்யவும். அப்பொழுது திப்பிலி, கண்டத்திப்பிலி, சுக்கு, பஞ்சலவணம், நேபாளம், சிவதை வேர், த்ரிபலை, பிரம்மதண்டு விதை, வேலிப் பருத்தி, ஸர்ஜக்ஷாரம், வசம்பு, கள்ளி, யவக்ஷாரம் இவற்றைச் சேர்த்து ஆட்டி இலந்தங் கொட்டையளவாக குளிகைகள் செய்யவும். இவற்றை அஜீர்ணரோகத்திலும், சோகையிலும், மிகவும் விருத்தி யடைந்துள்ள உதகோதரத்திலும் ஸௌவீர மென்கிற காடியோடு உட்கொள்ளலாம். 103—106.

பத்தோதரச் சித்ரோதரங்களில் சஸ்திர சிகிச்சை.

இவ்வாறு முற்கூறிய ஔஷதங்களால் வியாதி நிவாரணமாகா விட்டால், பத்தகுதோதரம், சித்ரோதரம், உதகோதரம் என்கிற இம்மூன்று ரோகங்களிலும் பிணியாளியின் பந்துக்களாலும் இராஜாங்காதிகாரிகளாலும் கேட்டுக் கொள்ளப்பட்டவனை வைத்தியன் சஸ்திரத்தைப் பிரயோகித்து சிகித்ஸை செய்யவேண்டும். ரோசிக்கு ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்வித்து, பத்தகுதோதரத்திலும் சித்ரோதரத்திலும் நாபிக்குக் கீழே மத்திய ரேகைக்கு நான்கு அங்குலம் இடது பக்கமாக முறை தவறாமல் நாலுஅங்குலம் அளவில் சஸ்திரத்தினால் கீண்டு விடவும் (1) அந்த த்வாரத்தின் வழியாகக் குடலை மெதுவாக வெளியில் இழுத்துப் பார்த்து, அதற்குள் சேர்ந்துள்ள மயிர்களென்ன, லேபம்போல் வியாபித்துள்ள மலங்களென்ன, கற்களென்ன இவை முதலியவற்றை வெளிப்படுத்தி விடவேண்டும். (2) நீர்சுரந்து கொண்டிருக்கும் சித்ரோதரத்தில் அங்குள்ள சல்யத்தை வெளிப்படுத்தி விட்டு, கசிந்து கொண்டிருக்கும் பிணநீரைக் கழுவி சுத்தம் செய்து அந்த த்வாரமுள்ள விடத்தில் கட்டெறும்புகளை விட்டுக் கடித்துக் கொள்ளச் செய்யவும்; பிறகு அவற்றின் தலைகளை விட்டு உடலை மட்டும் கிள்ளியெறிந்து விடவும்; அதன் பிறகு குடலை அதற்கியல்பான விடத்தில் அமர்த்தி, தேனையும் நெய்யையும் அவ்விடத்தில் பூசி, வெளியிலுள்ள விரணத்தின் வாயைத் தைத்துவிடவும். கறுத்த களிமண்ணையும் அதிமதுரத்தையும் கூட்டி யரைத்து, அவ்விடத்தில் லேபநம் செய்து பந்தநம் செய்யவும். காற்று அதிகமாய் வீசாத விடத்திலிருந்துகொண்டு பாலையே உணவாக எடுத்துக்கொண்டு, எண்ணெய்த் தொட்டியில் அமர்ந்திருக்க வேண்டும். 107—112.

உதகோதரத்தில் சஸ்திர சிகித்ஸையும் பத்தியமும்.

உதகோதரத்தில் வாதஹரகுண முள்ள தைலங்களால் அப்யங்கம் செய்வித்து, உஷ்ணஜலத்தினால் ஸ்வேதநமும் செய்வித்து, நாபிக்குமேல் அக்குள் வரையில் வஸ்திரங்களால் சுற்றிக் கட்டிவிட்டு, பத்தோதரச் சித்ரோதரங்களுக்குக் கூறிய விதமாய் அதே இடத்தில் ஒரு அங்குலம் அளவு வயிற்றைக் கீண்டு விடவும்; அந்த த்வாரத்தில் நாடீயந்திர மென்கிற குழலை வைத்து, வயிற்றில் சேர்ந்துள்ள நீரில் அரைவாசியை வடியச் செய்யவும். பிறகு அந்த நாடியை யெடுத்துப் போட்டு, தைலத்தினாலும் இலவணத்தினாலும் விரணத்தின்மேல் லேபநம் செய்து, பந்தநமிடவும்; அதன்மேல் வஸ்திரத்தினால் வயிற்றைச் சுற்றிக் கட்டிவிடவும். பிறகு மூன்று அல்லது நான்கு தினங்கள் சிரமபரி

ஹாரம் செய்ய பிணியாளிக்கு அவகாசம் கொடுத்துப் பதினறுவது நாள் வரையில் அடிக்கடியும் சிறுகச் சிறுக முன்போலவே நீரை வடித்து வரவேண்டும். நீரை வடித்து வருகையில் வயிறு தளரத் தளர வஸ்திரத்தை வயிற்றின்மேல் இழுத்திழுத்துக் கட்டிக்கொண்டே வரவேண்டும். நீரை வடித்த பிறகு, லங்கநம் செய்வித்து, ஸ்நேஹமும் உப்பும் இல்லாத பேயாவைப் பருகக் கொடுக்கவேண்டும். அப்பால் ஆறு மாஸங்கள் வரையில் பாலையே உணவாக உபயோகித்து வரவேண்டும். பிறகு பால் கலந்த பேயாவை மூன்று மாஸங்கள் உட்கொள்ளவேண்டும் அதன் பிறகு மூன்று மாதங்கள் வரையில் பழகிய சாமையென்ன கோத்ரவமென்ன இந்த தானியங்களாலான அன்னத்தைப் பாலுடன் மாத்திரமாவது, எலுமிச்சம் பழச் சாற்றுடனவது, மாம்ஸரஸத்தோடாவது கலந்து புஜித்து வரலாம். ஸ்நேஹத்தையும் உப்பையும் வெகு சொற்பமாக வேண்டுமானல் உபயோகிக்கலாம். இங்ஙனம் பத்தியமான நியமங்களோடு இருந்துவந்தால் ஒரு வருஷத்தில் ஜலோதரத்தைப் போக்கிவிடலாம். விலக்க வேண்டியவைகளை நியமமாயிருந்து முற்றிலும் விலக்கியும், பத்தியமானவை யென்று குறிக்கப்பட்டுள்ளவைகளை அதிக நிர்பந்தமின்றி உபயோகித்தும், குறிப்பிடப் படாதவைகளை அபத்தியமானவையென்று எண்ணி அவற்றில் ஜிதேந்த்ரியனயிருந்தும் வரவேண்டும். 113—119½.

பொதுவில் உதர ரோகங்களின் பொதுவான தோஷமும் சிகித்ஸையும்.

உதரரோகம் அனைத்துமே பெரும்பாலும் ஸந்நிபாத தோஷங்களால் உண்டாகின்றமையால், வாதாதி ஸகல தோஷங்களையும் நிவ்ருத்தி செய்யக் கூடிய எல்லாச் சிகித்ஸையும் இதிற் சிறந்ததாம். 120½.

உதரத்தில் ஜாடராக்னி மந்தப்படுதலும் அசர்க்கு ஹிதமான உணவும்.

தோஷங்களால் வயிறு நன்கு நிரப்பப்பட்டுப் போகையில் ஜாடராக்னி மந்தமாய் விடுகின்றது; ஆகையால் தீபநமாகவும் இலகு குணமுள்ளநவையுமான உணவுகளை, அதிலும் பஞ்ச மூலங்களோடு கூடியவைகளை புஜிக்கவேண்டும்; ஆனல், புளிப்பு, உப்பு, ஸ்நேஹங்கள், காரம் இவை சொற்பமாகவே இருக்கவேண்டும். 121, 122.

உதரரோகங்களில் பொதுவான பத்தியாஹாரம்.

பசுவின் மூத்திரத்தில் கார்நெல்லை ஊறவைத்து, அதன் அரிசியைப் பாலில் சமைத்து, யவாகுவாகச் செய்து, வேண்டிய வளவு அதை உட்கொள்ளச் செய்து, அதற்கு அனுபானமாகக் கருப்பஞ் சாற்றையும் பருகச் செய்யலாம்; இதனல் உதரரோகங்கள் நிவ்ருத்தியாய், இப்பிணியாளருக்குப் பிரகோபித்திருந்த வாத-பித்த-கபங்களும் அதனதன் இயற்கை ஸ்தாநத்தைப் போய் அடைகின்றன. 123, 124.

உதரரோகிக்கு ஆகாதவை.

அதிக உஷ்ணம், அதிக அம்லம், அதிக லவணம், ரூக்ஷம், க்ராஹி, அதிக குளிர்ச்சி, குரு இக் குணமுள்ள வஸ்துக்களும், வெல்லம், எண்ணெயிற் பக்குவம் செய்த சாகம், ஜலபானம், ஜலத்தில் ஸ்நானம் செய்தல் இவைகளும், களைப்புண்டுபண்ணும் காரியமும், வழி நடப்பதும், பகலில் நித்திரை செய்தலும், வாஹநங்களில் சவாரி செய்வதும் இப்பிணியாளிக்கு ஆகா. 125, 125½.

உதர ரோகங்களில் மோர் மிகச் சிறந்த வஸ்து.

(1) அதிக குழம்பாக இல்லாததும் மதுரமுமாயுள்ள மோர் பானம் செய்வதற்குச் சிறந்ததாகும். அதிலும் (2) வாததோஷம் அதிகரித்திருக்கையில் திப்பிலி, உப்பு இவை சேர்ந்த மோரும் (3) பித்தம் அதிகரித்திருக்கையில் மிளகுப் பொடியும் சர்க்கரையும் கூட்டிய மோரும், (4) கபம்

அதிகரித்த உதரத்தில் ஓமம், இந்துப்பு, ஜீரகம், த்ரிகடு, தேன் இவற்றைக் கூட்டிய மோரும், (5) ஸந்நிபாதோதரத்தில் த்ரிகடு, யவக்ஷாரம், இந்துப்பு இவற்றைக் கலந்த மோரும் சிறந்தனவாம். (6) தேன், தைலம், வசம்பு, சுக்கு, சதகுப்பி, கோஷ்டம், இந்துப்பு இவை கலந்த மோர் ப்லீஹோதரத்திற்கு ஏற்றதாகும். (7) கொட்டைக் கரந்தை, ஓமம், இந்துப்பு, ஜீரகம் இவற்றைச் சேர்த்த மோரும், (8) திப்பிலியும் தேனும் கலந்த மோரும் சித்ரோதரத்திலும், (9) த்ரிகடுகம் கலந்த மோர் உதகோதரத்திலும் ஹிதமானவையாம். சரீரத்தில் குருத்வம், நாக்கில் அருசி, வயிற்றுப் பொருமல், அக்னிமாந்த்யம், அதிஸாரம் இக்கோளாறுகளுள்ளவர்களுக்கும், வாத-கபதோஷங்களால் பீடிக்கப்படுபவருக்கும் மோர் அமுதம்போல் பிராணனைக் காப்பாற்ற வல்லது. 126—129.

உதர ரோகிகளுக்கு ஸகல முறைகளிலும் பால் அநுபானம்.

எல்லா ஔஷத முறைகளையும் உபயோகிக்கும் போது அடுத்தாற் போல பாலை அநுபானமாக உட்கொள்ளச் செய்யவேண்டும்; பால் எல்லா தாதுக்களுக்கும் வன்மையை யுண்டுபண்ணும்; தேஹத்திற்குப் பொதுவில் பலத்தைக் கொடுக்கும்; வியாதிக்குக் காரணமான தோஷங்கள் மீண்டும் தொடர்வதைத் தடுத்துப்போடும். ஔஷதங்களால் இடம் பெற்ற சரீரத்திற்குப் பால் அமுதம் போன்றதாகும். 130, 131.

---

## பதினாறுவது அத்தியாயம்.

இதன் பிறகு பாண்டுரோக சிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—

பாண்டுவில் முதலில் உபயோகிக்கும்ஔஷதங்கள்.

பாண்டு ரோகியானவன் முதலில்கல்யாணக க்ருதத்தைப் [1] பருகவேண்டும்; அல்லது பஞ்சகவ்ய க்ருதத்தையாவது, [2] மஹாதிக்தக க்ருதத்தையாவது, [3] ஆரக்வதாதிகணச் சரக்குகளைச் [4] சேர்த்துக் காய்ச்சிய க்வாதத்தையாவது பானம் செய்யலாம். 1

தாடிமாதி க்ருதம்.

ஒரு ஆடகமளவான ஜலத்தில் இருபது பலம் க்ருதத்தைக் காய்ச்சவும்; அதில் மாதளம் வித்து அரைச் சேர், கொத்தமல்லி விதைகால் சேர், சித்திரமூலமும் சுக்கும் வகைக்கு ஒரு பலம், திப்பிலி அரைப்பலம் இவற்றை இடித்து கல்கமாகச் சேர்க்கவும். இவ்விதம் பக்குவம் செய்தெடுத்த க்ருதம் இருதய ரோகம், பாண்டு, அர்ச்ஸ், ப்லீஹரோகம், வாத ரோகங்கள், கப ரோகங்கள், ச்வாஸ-காஸங்கள் இவற்றை நிவ்ருத்தி செய்யும்; தீபந குணமும், அடைபட்டுள்ள அபாந வாயுவை வெளிப்படுத்தும்தன்மையும் இதற்கு உண்டு; பிரஸவத்தில் அதிக தொந்தரவு அநுபவிப்பவருக்கும், மலட்டு ஸ்த்ரீகளுக்கும் இந்த க்ருதம் சிரேஷ்டமானது, 2—4.

பாண்டுவில் ஸ்நேஹந சோதநாதி முறைகள்.

(1) முற்கூறியவாறு ஸ்நேஹநம் செய்தபிறகு தீக்ஷ்ண குணமுள்ள ஔஷதங்களால் வமநம் செய்விக்கவேண்டும். (2) மீண்டும் ஸ்நிக்த்தமாகச் செய்து பசு மூத்திரம் கலந்த பாலால் அல்லது ஒன்றுங் கலவாத பாலால் அநேக முறை சோ

1. கல்யாணக க்ருதம்—உத்தர ஸ்த்தானத்தில் உந்மாத ப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.
2. பஞ்சகவ்ய க்ருதம்— உத்தர ஸ்த்தானத்தில் அபஸ்மார ப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.
3. மஹாதிக்தக க்ருதம்—குஷ்ட சிகித்ஸையில் கூறப்பட்டது.
4. ஆரக்வதாதி கணம்—முதற் புத்தகத்தில் 125-ம் பக்கம் பார்க்க.

தநம்[1] செய்விக்கவேண்டும். (3) ஒரு பலம் நேபாள வித்தின் இளஞ் சூடான இரஸத்தில் நான்கு பலங்கொண்ட பெருங் குமுழினை ஊறப்போட வேண்டும்; இதைப் பாண்டுரோகிக்குக் கொடுக்கலாம் (4) அவ்விதமே நேபாள ரஸத்தில் நான்கு பலங்கொண்ட திராக்ஷையை நன்கு இடித்துப்போட்டு ஊறவைத்து உபயோகித்தாலும் பாண்டுரோகம் நிவ்ருத்தியாகும். (5) கடுக்காயைப் பசுமூத்திரம் விட்டு ஆட்டி யெடுத்தும் உபயோகிக்கலாம். (6) அல்லது த்ரிபலையைப் பசுமூத்திரத்தில் பக்குவம் செய்தெடுத்தாவது உட்கொள்ளலாம். (7) பிரம்மதண்டு விதை, வெண் சிவதை வேர், கருஞ்சிவதை வேர், தேவதாரு, சுக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, பசுமூத்திரம் விட்டு ஆட்டி அம்மூத்திரத்திலேயே கரைத்துக் கொதிக்க வைத்தாவது பருகலாம். (8) பிரம்மதண்டு விதை முதலிய முற்கூறிய சரக்குகளையே சேர்த்துக் காய்ச்சி, ஆகவே தோஷங்களை அநுலோமநமாக வெளிப்படுத்து மியல்புடைய பாலையாவது பானம் செய்யலாம். (9) கோமூத்திரத்தில் ஏழு நாட்கள் ஊறவைத்தெடுத்த அய பஸ்மத்தைப் பாலின் அனுபானத்தோடாவது உட்கொள்ளலாம்; அப்பால் அவ்வௌஷதம் ஜீர்ணமான பின்பு பால் கலந்த அல்லது இனிய சுவையுள்ள மாம்ஸ ரஸம் கலந்த உணவை புஜிக்கலாம். (10) இங்ஙனம் ஔஷதப் பிரயோகங்களால் வமந-விரேசந ரூபமாக சுத்தியடைந்த பிறகு கடுக்காயின் சூர்ணத்தைத் தேனிலும் நெய்யிலும் கலந்து உட்கொள்ளச் செய்யவேண்டும். 5—9½.

விசாலாதி சூர்ணம். பேய்த்தும்மட்டி, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, கோஷ்டம், தேவதாரு, வெட்பாலரிசி இவை வகைக்குக் கால் பலம்; பெருங் குரும்பை அரைப் பலம்; அதிவிடயம் அரைக்கால் பலம்; இவற்றை ஒரு மிக்கப் பொடித்து அச்சூர்ணத்தை வெந்நீருடன் உட்கொண்டு, அநுபானமாகச் சிறிது தேனையும் உடனே உபயோகிக்கவும். இது பாண்டு ரோகம், ஜ்வரம், தேஹ அழற்சி, காஸம், ச்வாஸம், அரோசகம், குல்மம், வயிற்றுப் பொருமல், ஆமவாத மென்னும் கீல்வாயு, இரத்த பித்தம் இவற்றைப் போக்கும். 10—12.

வாஸாதி க்வாதம். ஆடாதோடை, சீந்தில், த்ரிபலை, கடுக ரோஹிணீ, நிலவேம்பு, வேம்பு இவற்றைக் கஷாயமிட்டு, சிறிது தேன் கலந்து உட்கொள்ள பாண்டு ரோகம், இரக்த-பித்தம், காமாலை இவை தீரும். 13.

நவாயஸ சூர்ணம். த்ரிகடு, சித்திரமூலம், வாய்விடங்கம், த்ரிபலை, கோரைக்கிழங்கு இவை ஸமபாகம்; இவ்வனைத்துக்கும் ஸமயெடையாக அயபஸ்மம் சேர்த்துக்கொள்ளவும். இவற்றைக் கொண்டு செய்த சூர்ணத்தை மோர், தேன் நெய், இளஞ் சூடான ஜலம் இவற்றில் ஏதேனும் ஒன்றோடு உபயோகிக்கலாம்; இது காமாலை, பாண்டு, இருதய ரோகம், குஷ்டம், அர்சஸ், மேஹ ரோகங்கள் இவற்றைப் போக்கும். 14, 14½.

சுண்ட்யாதி குளிகை. சுக்கு, மண்டூரம், எள்ளு, வெல்லம் இவை ஸம பாகம்; திப்பிலி இரண்டு பாகம்; இவ்வனைத்தையும் சேர்த்து குளிகைகளாகச் செய்து, பாண்டு ரோகிக்குக் கொடுக்கலாம். 15½.

மண்டூர வடகம். ஸ்வர்ண மாக்ஷிகம், மரமஞ்சளின் தோல், சவியம், கிரந்திதகரம், தேவதாரு, வ்யோஷாதி லௌஹத்திற்கூறிய முதல் ஒன்பது சரக்குகள்,

5. சோதநம்—இங்கே சோதநம் என்பதால் விரேசநம் குறிப்பிடப்படுகிறது.

ஆக இவற்றை ஸமபாக மெடுத்து சூர்ணம்செய்து கொள்ளவும்; அதற்கு இரு மடங்கு மண்டூரத்தையும் மைபோல் மிக்க மிருதுவாகச் சூர்ணம் செய்துகொள்ளவும்.[1] இவ்வனைத்துக்கும் எட்டு மடங்குஅளவான பசுமூத்திரத்தில் இவ்விரண்டு சூர்ணங்களையும் தனித் தனியே சேர்த்து பக்குவம் செய்து, வடகங்களாகச் செய்யக்கூடிய பக்குவ நிலைமைக்கு வரும்போது இறக்கி குளிகைகளாகச் செய்யவும். இவ்வடகங்களை யுபயோகித்துக் கொண்டு, மோரும் அன்னமும் பத்தியமாக உட்கொள்ள வேண்டும். 'மண்டூர வடகங்கள்' எனப்படும் இவை பாண்டு ரோகிகளுக்குப் பிராணனைக் கொடுத்து ஸௌக்கியப்படுத்தக் கூடியவையாம். மேலும் குஷ்டங்கள், அஜீர்ணம், சோபை யென்னும் நீர்க்கோவை, ஊருஸ்தம்பம், அரோசகம், அர்சஸ், காமாலை, மேஹ ரோகங்கள், ப்லீஹவிருத்தி இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 16—19½.

மண்டூராதி சூர்ணம்.

இதற்கு முந்திய யோகத்திற் கூறிய ஸ்வர்ணமாக்ஷிகம் முதலிய சரக்குகளும், சிலாஜதுவும், வெள்ளியும், இரும்புக் கிட்டமும் தனித்தனியே அவ்வைந்து பலம்; [2] சித்திர மூலம், த்ரிபலை, த்ரிகடு, வாய்விடங்கம் இவை பிரத்தியேகம் ஒவ்வொரு பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டு பலம் சர்க்கரையையும் கலந்து, தேனில் குழைத்து உட்கொள்ளலாம். இது பாண்டுரோகம், விஷம், காஸம், க்ஷயம், விஷமஜ்வரம், குஷ்டங்கள், அஜீர்ணம், மேஹரோகம், சோகை, ச்வாஸம், அரோசகம் இவற்றைப் போக்கும்; விசேஷமாக அபஸ்மாரத்தையும், காமாலையையும், அர்சஸ்ஸையும் நிவ்ருத்தி செய்ய வல்லது. 20—22½.

சிலாஜத்வாதி குளிகை.

குடசப்பாலையின் பட்டை, த்ரிபலை, வேப்பு, பேய்ப்புடல், கோரைக் கிழங்கு, சுக்கு இவை வகைக்கு எட்டு பலம்; இவற்றை எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி எட்டில் ஒரு பங்காகச் சுண்டிய பிறகு வடிக் கட்டி யெடுத்து, அதில் எட்டுப் பலம் சிலாஜதுவை பத்து முறை பாவனை செய்யவும்; அல்லது அதற்கு இரண்டுமூன்று மடங்கு அதிகத் தடவையாவது பாவனை செய்யவும். பிறகு அதே அளவாக வெள்ளைச் சர்க்கரையையும் பிறகு வகைக்கு ஒவ்வொரு பலம் வீதம் மூங்கிலுப்பு, திப்பிலி, கடுக்காய், கர்க்காடகச் ருங்கிஇவைகளையும், அதே அளவாக கண்டங்கத்திரியின் காய் வேர்களையும், த்ரிஜாதகத்தையும் சேர்த்து முறைப்படி சூர்ணம் செய்து, மூன்று பலம் தேன் சேர்த்து ஆட்டியெடுத்து, கால் கால் பலமளவான குளிகைகளாகச் செய்து கொள்ளவும். உணவுண்பதற்கு முன்போ அல்லது ஆஹாரத்திற்குப் பிறகோ அக்குளிகைகளை புஜித்துவிட்டு, மாதளம்பழ ரஸம், பால், ஏதேனும் பக்ஷியின் மாம்ஸ ரஸம், ஜலம், ஸௌவீரமென்னும் மது, ஆஸவங்கள் இவற்றில் ஏதேனுமொன்றை அநுபானமாய் உட்கொள்ளலாம். இவ்வௌஷதமானது பாண்டுரோகம், குஷ்டம், ஜ்வரம், ப்லீஹவ்ருத்தி, தமகச்வாஸம், அர்சஸ், பகந்தரம், இருதயரோகங்கள், மூத்திர ரோகங்கள், துர்க்கந்தமான சுக்ரம், அக்னி வைஷம்யம், க்ஷயம், க்ருத்ரிமவிஷம், மஹோதரம், காஸம், அஸ்ருக்தரம் என்னும் பெரும்பாடு, இரக்த-பித்தம், சோகை, குல்மம், தொண்டையைப்பற்றிய கோளாறுகள், மேஹரோ

1. ஸ்வர்ணமாக்ஷிகம், மண்டூரம் இவ்விரண்டையும் முறைப்படி சுத்தி செய்து, பஸ்மங்களாகவும் பக்குவம் செய்து மருந்தில் உபயோகிப்பது சிறந்த முறையாகும். இதன் பிறகுகூட லோஹங்களும் தாதுக்களும் ஔஷத முறைகளில் கூறப்படுகையில் அவற்றையும் சுத்தி மாரணங்கள் செய்தஉபயோகிக்க வேண்டியது.

2. இங்கேயும் ஸ்வர்ண மாக்ஷிகம், வெள்ளி, சிலாஜது, மண்டூரம் இவற்றை பஸ்மமாக உபயோகிப்பது அவசியம்.

கங்கள், அண்டவீக்கம், தலைச்சுற்றல் இவற்றைத் தீர்க்கும்; ஸந்நிபாதம் முதலிய ஸகல தோஷங்களையும் நிவாரணம் செய்யக்கூடிய சிறந்த ஔஷதம். 23—28½.

திராக்ஷை ஒரு பிரஸ்த்தம், திப்பிலி ஒரு பிரஸ்த்தம், சர்க்கரை ஐம்பது பலம், அதிமதுரம் இரண்டு பலம், சுக்கும் மூங்கிலுப்பும் அதே அளவு; இவற்றில் சூர்ணம் செய்துகொள்ளவேண்டியவைகளைச் சூர்ணித்துக்கொண்டு, ஒரு திரோணம் நெல்லிக்கனியின் ரஸத்தில் சேர்த்து ஆறிய பிறகு ஒரு பிரஸ்த்தம் தேனையுங் கூட்டி, அதைக் கால் பலமளவில் சாப்பிடலாம். இந்த லேஹ்யம் ஹலீமகம், பாண்டுரோகம், காமாலை இவற்றைப் போக்கும். 29—31.

திராக்ஷாதி லேஹ்யம்.

இலகு பஞ்சமூல கஷாயம் பாண்டு ரோகிகளுக்கும், காமாலையினால் வருந்துபவருக்கும் பானபோஜனங்களில் உபயோகிக்கச் சிறந்த ஔஷதம். அங்ஙனமே திராக்ஷாரஸமும், நெல்லிக்கனியின் இரஸமும் அப்பிணியாளருக்கு உபயோகமானவையாம். இங்ஙனம் பாண்டுரோகத்திற்குப் பொதுவான சிகித்ஸை கூறப்பட்டது. விஷயங்களை விளங்கத் தெரிந்துகொண்ட வைத்தியன் தோஷங்களின் நிலைமைகளையும், பிணியாளியின் தேஹ பலாபலங்களையும் கவனித்து அவரவருக்கு ஏற்ற சிகித்ஸையைப் பகுத்தறிந்து பிரயோகிப்பானாக. (1) வாததோஷத்தினு லுண்டான பாண்டுவில் ஸ்நேஹ ஸம்பந்தமான சிகித்ஸையையும், (2) பித்த பாண்டுவில் திக்தரஸமும் சீதவீர்யமுமுள்ள சரக்குகளால் சிகித்ஸையையும், (3) கபதோஷத்தினுலான பாண்டுவில் கடுரஸமும் ரூக்ஷகுணமும் உஷ்ணவீர்யமுமுள்ள வஸ்துக்களால் சிகித்ஸையையும், (4) ஸந்நிபாத ஸம்பந்தமான பாண்டுவில் தகுந்தாற்போல மிச்ர சிகித்ஸையையும் செய்யவேண்டும். 32—34.

பாண்டுவில் ஸாமான்ய - விசேஷ சிகித்ஸைகள்.

(1) பாண்டு ரோகத்தில் முதலில் தீக்ஷ்ணமான சோதனௌஷதங்களால் சரீரத்தினின்றும் ம்ருத்திகையை வெளிப்படுத்திவிடவேண்டும். (2) ம்ருத்திகை வெளியாய் குடல் நன்கு சுத்தமான பிறகு தேஹத்திற்கு பலமுண்டு பண்ணக்கூடிய க்ருதங்களை உட்கொள்ளச் செய்யவேண்டும். 35.

பாண்டுவில் ம்ருத்திகையை வெளிப் படுத்துவதும் அதற்குப்பின் செய்யவேண்டிய சிகித்ஸையும்.

த்ரிகடு, பில்வவேர், மஞ்சள், மரமஞ்சள், த்ரிபலை, சாறணை, கோரைக்கிழங்கு, அயபஸ்மம், வட்டத்திருப்பி, வாய்விடங்கம், தேவதாரு, தேள்கொடுக்குப்பூண்டு, கண்டு பாரங்கி இவற்றின் கஷாயத்தில் பால் கூட்டி, க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க ம்ருத்திகையினுலுண்டான எல்லாக் கோளாறுகளும் வெகு சீக்கிரத்தில் நன்கு நிவ்ருத்தியாகும். 36, 37.

வ்யோஷாதி க்ருதம்.

நாககேஸரம், அதிமதுரம், திப்பிலி, அறுகம்புல் இவற்றின கஷாயத்தில் பாலையும் கூட்டி, அதில் க்ருதம் பக்குவம் செய்ய, அதுவும் வ்யோஷாதி க்ருதத்தைப் போலவே குணம் செய்யும். 37½.

கேஸராதி க்ருதம்.

ம்ருத்திகை குடலில் பலவாறுகச் சிதறுண்டிருந்தால் அதைத் திரட்டி ஒருமிக்க வெளிப்படுத்துவதற்காக வாய்விடங்கம், சித்திரமூலம், வேப்பம்பூ இவற்றின் கஷாயத்திலாவது, வட்டத்திருப்பியின் கஷாயத்திலாவது, பெருங்குரும்பையின் கஷாயத்திலாவது பாவனை செய்தெடுத்த ம்ருத்திகையையே உட்கொள்ளச்செய்யலாம். ம்ருத்திகைக்

பாண்டுவில் ம்ருத்திகாதோஷங்களுக்கு ம்ருத்திகை முதலியதே பரிஹாரம்.

குள்ள வெவ்வேறு பேதங்களுக் கிணங்க பல விதமாகக் கோளாறடைந்துள்ள வாதாதி தோஷங்களின் நிலைமைகளை யுணர்ந்து, அதற் கேற்ற ஔஷதத்தையும் பிரயோகிக்கவேண்டும். 38, 39.

பாண்டுவில் காமாலையும் சேர்ந்துண்டாயிருக்கையில் செய்யும் சிகித்ஸை.

காமாலையும் உண்டாயிருந்தால், பித்தஹரமான ஔஷதத்தை யுபயோகிக்க வேண்டும்; ஆனால் பாண்டுரோகத்தில் அதனால் விரோத மேற்படாதபடி அதைப் பிரயோகிக்க வேண்டும். 39½.

பத்யா க்ருதம்.

நூறு கடுக்காய்களைக் கஷாயமிட்டு, அதில் நூறு கடுக்காய் பூக்களை இடித்து கல்கமாகச் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தைப் பக்குவம் செய்யவும். இது குல்மரோகம், காமாலை, பாண்டு ரோகம் இவற்றைப் போக்கவல்லது. 40½.

காமாலையில் உபயோகிக்கக் கூடிய சில முறைகள்.

(1) ஒரு பலம் அளவான சரக்கொன்றையைக் கருப்பஞ் சாற்றுடனாவது, நிலப்பனங் கிழங்கின் இரஸத்துடனாவது, நெல்லிக் கனியின் ஸ்வரஸத்துடனாவது கலந்து, த்ரிகடுவையும், அதில் கூட்டி உட்கொள்ளவும்; இது காமாலையைப் போக்கும். (2) நேபாளவித்தின் கல்கத்தையாவது இரண்டு பலம் அளவில் குளிர்ந்த ஜலத்தின் அநுபாநத்துடன் உட்கொள்ளலாம். (3) சிவதைவேர்ச் சூர்ணத்தையாவது தேனில் அல்லது த்ரிபலையின் கஷாயத்தில் கூட்டி யுபயோகிக்கலாம். (4) த்ரிபலையின் கஷாயத்தையாவது, (5) சீந்திற்கொடியின் கஷாயத்தையாவது, (6) மரமஞ்சளின் கஷாயத்தையாவது, (7) வேப்பம்பட்டைக் கஷாயத்தையாவது தேன் கூட்டிப் பிரதிதினமும் காமாலையினால் வருந்துபவனுக்குக் கொடுக்கலாம். 41—43½.

விசாத்யஞ்ஜநம்.

மரமஞ்சள், மனச்சிலை, கடுக்காய் இவற்றைத் தேய்த்து நேத்திரங்களில் அஞ்ஜநமாகப் பிரயோகிக்கலாம். இது காமாலையைப் போக்கவல்லது. 44.

காமாலையில் பித்தஹர-மலரஞ்ஜந சிகித்ஸைகள்.

(1) காமாலையால் வருந்தும் எம்மனிதன் எள்ளுப் பிண்ணாக்கைப்போல் மலவிஸர்க்கம் செய்கிறானோ, அவனுடைய வயிற்றில் பித்தமானது, கபத்தினால் மார்க்கங்கள் அடைபட்டுப் போகவே தடுக்கப்பட்டிருக்கும்; அப்பித்தத்தை கபஹரமான ஔஷதங்களால் பரிஹரிக்க வேண்டும். (2) ரூக்ஷம், சீதம், குரு, மதுரம், இக்குணங்களுள்ள வஸ்துக்களாலும், அதிக வியாயாமத்தினாலும், பலமொடுங்கும்படியான வேலைகளைச் செய்வதாலும், வாயுவானது பிரகோபமடைந்து கபத்துடன் கூடியதாய், பித்தத்தை அதன் மார்க்கத்திலிருந்து வேறு தாதுக்களில் பரவுமாறு வெளிப்படுத்துமானால், அப்பொழுது, அவனது கண்களும், மூத்திரமும், சர்மமும் மஞ்சள் நிறமாகப் போய்விடும்; மலம் வெளுத்திருக்கும்; வயிற்றில் பொருமலும் இரைத்தலும் உண்டாகும். இருதயம் பாரமாயிருப்பதாகத் தோற்றும்; பலக்குறைவு, அக்னிமாந்தியம், பக்கசூலை, விக்கல், ச்வாஸம், அரோசகம், ஜ்வரம் இவற்றால் பித்தம் சாகைகளைப்[1] பற்றியதாய் கிரமமாகச் சரீரமெங்கும் பற்றிவிடும். அந்த நிலைமையில் அப்பிணியாளிக்கு மயில், தித்திரி யென்னும் பக்ஷி, கள்ளிக்காக்கை இவற்றின் மாம்ஸரஸத்தை ரூக்ஷமாகவும், கடுரஸ-அம்லரஸங்கள் உள்ளதாகவும் பக்குவம் செய்து கொடுக்கவும். உலர்ந்த முள்ளங்கியினாலான யூஷத்தையும், கொள்ளின் யூஷத்தையும் கொடுக்கலாம். புளிப்பு, கார்ப்பு, உப்பு இச்சுவைகளையும், தீக்ஷ்ணத் தன்மையையும் அதிகமாயுடைய உணவை அதிக உஷ்ணமாகவே உப

1. சாகைகள்—இரத்தம் முதலிய ஆறு தாதுக்களும், சர்மமும்.

யோகிக்கலாம். த்ரிகடுவைக் கொடிமாதளை யின் சாற்றில் கலந்தும் உட்கொள்ளலாம். அப்படிச்செய்வதால் பித்தம் அதன் ஆசயத் தில் வந்து சேர்ந்து, அதனுல் மலமும் மஞ்ச ளான இயற்கை நிலைமையைப் பெறும். வாயு வும் வயிற்றுப் பொருமலும் இரைத்தல் முத லிய உபத்திரவங்களும் சமநமடையும். இப் பிணியாளிக்கு உபத்திரவங்கள் நிவ்ருத்தி யான பிறகு காமாலையிற் கூறியுள்ள முறைப் படி உபசாரம் செய்யவேண்டும். 45—51½.

கும்பகாமலாவில் சிலாஜது முதலியவற்றின் யோகம்.

கும்பகாமலா என்கிற கடுங்காமாலையில் (1) சிலா ஜதுவைப் பசுமூத்திரத் தோடு ஒரு மாஸம் உட்கொள்ளலாம்; (2) ஸ்வர்ணமாக்ஷிகம் (பொன்னிமிளை) என்கிற தாதுப் பொருளையாவது, (3) வெள்ளியின் கிட்டத்தையாவது அங்ஙனமே பிறகு ஒரு மாஸகாலம் உபயோகிக்கலாம். 52½.

ஹலீமகத்திற் செய்ய வேண்டிய சிகித்ஸா க்ரமம்.

ஹலீமக ரோகமுள்ளவனைச் சீந்திற் கொடி யின் ஸ்வரஸத்திலும் பாலி லும் பக்குவம் செய்த எருமைநெய்யினுல் ஸ்நிக்த்த மாகச் செய்ய வேண்டும். பிறகு சிவதைவேரின் சூர்ணத்தை நெல்லிக் கனியின் ஸ்வரஸத்தோடு உட்கொண்டு விரே சநமான பிறகு, பித்தத்தையும் வாதத்தை யும் நிவ்ருத்திசெய்யக்கூடிய மதுரமான ஆஹாரத்தை புஜிக்கவும். முற்கூறிய திரா க்ஷாதி லேஹ்யத்தையும், மதுரவஸ்துக்களைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட க்ருதங்களை யும் உட்கொள்ள வேண்டும். பிராண தார ணோபயோகமான க்ஷீரவஸ்திகளையும் அநு வாஸந வஸ்திகளையும் பிரயோகிக்கலாம். திரா க்ஷாரிஷ்டம் முதலிய யோகங்களையும், முறைப்படி ஜாடராக்னி விருத்தியாவதற்காக உட்கொள்ளலாம். காஸரோக சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ள அபயாதி லேஹ்யத்தையும் உட்கொள்ளச் செய்யலாம். திப்பிலி, அதி மதுரம், சிற்றுமுட்டி இவற்றையும் அந்தந்த தோஷங்களென்ன சரீர பலமென்ன இவற் றின் நிலைமைகளுக் கேற்றவாறு உபயோகிக்க லாம். 53—56½.

பாண்டுரோகங்களில் ச்வயது சிகித்ஸை.

திறமையுள்ள வைத்தியன் ச்வயது சிகித் ஸையை[1] விவரிக்கும் அடுத் த அத்தியாயத்திற் கூறப்ப டும் சிகித்ஸாகிரமத்தையும் பாண்டு ரோகங்களில் செய் வானுக. 57.

---

## பதினேழாவது அத்தியாயம்.

இனி ச்வயது சிகித்ஸையை விவரிக்கும் அத்தி யாயம் கூறப்படுகிறது:—

ஸந்நிபாத சோதை முதலியவற்றில் முதலில் செய்யவேண்டிய சிகித்ஸைகள்.

சோதை யென்னும் சோகை அல்லது வீக் கமானது எல்லா தோஷங்க ளைப் பற்றியதானுலும், ஸர் வசரீரத்தைப் பற்றியதானு லும், ஆமதோஷத்துடன் கூ டியதாயிருந்தாலும் முதலில் அதற்கு லங்கந சிகித்ஸையைச் செய்து, அப் பால் இலகுவான ஆஹாரத்தை புஜிக்கவேண் டும். (1) பிறகு சுக்கு, அதிவிடயம், தேவதாரு, வாய்விடங்கம், வாலுழுவை, மிளகு இவற் றின் சூர்ணத்தை இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ளலாம். (2) அல்லது கடுக்காய், சுக்கு, தேவதாரு, சாறணை இவற்றின் சூர்

---

1. ச்வயது என்பதே சோதை யென்றும் சோபை யென்றும் கூறப்படும். இதுவே சோகை யென்றும் தமிழில் வழங்கப்படும்.

ணத்தையாவது சிறிது உஷ்ணமான ஜலத்துடன் சாப்பிடலாம். (3) அதிக தோஷமுள்ள ச்வயது ரோகி நவாயஸ சூர்ணத்தையாவது [1] உபயோகிக்கலாம். (4) தோஷங்களை வெளிப்படுத்தி சுத்தி செய்வதற்காகக் கடுக்காய்களைப் பசுமூத்திரத்துடன் புஜிக்கலாம். (5) கடுகரோஹிணி, சிவதைவேர், அயம், த்ரிகடு இவற்றையாவது த்ரிபலையின் கஷாயத்தோடு உட்கொள்ளலாம். (6) அல்லது மஹிஷாக்ஷி குக்குலுவையாவது, (7) சிலாஜதுவையாவது த்ரிபலா கஷாயத்துடன் பருகலாம். 1—3½.

சோதையில் மந்தராக்னி முதலிய கோளாறுகளைப் போக்கும் முறைகள்.

மந்தமான ஜாடராக்னியுடையவனாகவும், ஆமமாயும் குருவாயும் உடைந்து அல்லது கட்டிப் போனதாயுமுள்ள மலத்தை விஸர்ஜனம் செய்பவனுமான பிணியாளி (1) ஸௌவர்ச்சலவணம், த்ரிகடு, தேன் இவற்றைக் கூட்டிய மோரைப் பருகலாம். (2) அல்லது வெல்லங்கலந்த கடுக்காயை மோரின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம். (3) அங்ஙனமே சுக்கு வெல்லத்தை யாவது உபயோகிக்கலாம். 4, 5.

குடார்த்ரகப் பிரயோகம்.

இஞ்சியையும் வெல்லத்தையும் ஸமயெடையாகச் சேர்த்து, முதல்நாள் அதை அரைப்பலம் அளவில் ஆரம்பித்து, தினமொன்றுக்கு அரைப்பலம் வீதம் மேன்மேலும் அதிகப்படுத்தி யுபயோகிக்கவும். ஆனால் ஐந்து பலத்திற்கு மேல் அதிகப்படுத்தக் கூடாது. இதற்கு யூஷம், பால், மாம்ஸரஸம் இவற்றையே உணவாகக்கொள்ளவேண்டும். இங்ஙனம் ஒரு மாஸகாலம் உபயோகிக்க வேண்டும். இந்த முறையானது குல்மம், உதரரோகங்கள், அர்சஸ், ச்வயது, பிரமேஹம், ச்வாஸம், ப்ரதிச்யாயம், அலஸகம், அஜீர்ணம், காமாலையுடன் கூடிய சோதை, மானஸிக வியாதிகள், காஸம் கபப்பிரகோபம் இவற்றைப் போக்கும். 6, 7.

ஆர்த்ரகாதி க்ருதம்.

இஞ்சி, சுக்கு இவற்றின் கல்கஸ்வரஸங்களிலும், பாலிலும் நெய் சேர்த்து பக்குவம் செய்து உபயோகிக்க ச்வயது, தும்மல், உதரரோகங்கள், அக்னிமாந்தியம், இவற்றால் பீடிக்கப் பட்டாலும் ரோகத்திலிருந்து நிவ்ருத்தியடைவான். 8.

கிராமாதி கிலைமைகளில் சோதையில் செய்ய வேண்டிய சிகித்ஸைகள்.

ஆமதோஷம் நீங்கி, மலமும் கட்டுப்பட்டுள்ள சோதையினால் வருந்தும் பிணியாளியானவன், (1) த்ரிகடு, சிவதைவேர், நேபாளம், சித்திரமூலம், இவற்றால் பக்குவம் செய்த பாலைப் பருகலாம். (2) பசுவின் சிறுநீரையாவது, (3) எருமையின் சிறு நீரையாவது பாலுடன் கலந்து பருகி வரலாம். இதற்குப் பாலையே உணவாக உபயோகித்து வரவேண்டும். (4) ஒட்டகத்தின் பாலையே ஏழு நாட்கள் அல்லது ஒரு மாஸம் பருகிவரலாம். 9, 10.

யவாநிகாதி க்ருதம் முதலியன.

குராசானியோமம், யவக்ஷாரம், ஓமம், பஞ்ச கோலம், மிளகு, மாதளம்பழம், வட்டத்திருப்பி, நெற்பொரி, புளிவஞ்சி, பில்வப்பிஞ்சு இவற்றை வகைக்குக் கால்பலம் வீதம் ஒரு ஆடகம் அளவான ஜலத்தில் சேர்த்து, கஷாயம் காய்ச்சவும். இக்கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்யவும். இது சோதை, அர்சஸ், குல்மம், மேஹம் இவற்றைப் போக்கும். சித்திரமூலப் பொடியைப் பாலில் சேர்த்து அதனாலுண்டான தயிரி லிருந்து எடுக்கப்பட்ட க்ருதத்தைச் சித்திரமூலம் சேர்த்து மீண்டும் பக்குவம் செய்தெடுத்து, அதை அதேவிதமான தயிரைக் கடைந்தெடுத்த மோரின் அநுபானத்தோடு பருகினாலும் அதே குணங்கள் உண்

1. நவாயஸ சூர்ணம்—பாண்டுரோக சிகித்ஸையில் கூறப்பட்டது.

டாகும். காலமறிந்த வைத்தியன் தாங்வந்தர க்ருதம், மஹாதிக்தக க்ருதம், கல்யாணக க்ருதம், அபயா க்ருதம் இவற்றில் ஏதேனுமொன்றைப் பிரயோகிக்கலாம். 11—13½.

தசமூலா வலேஹம்.

ஒரு ஆடகம் அளவான தசமூல கஷாயத்தில் நூறு கடுக்காய்களைச் சமைக்கவும்; அதில் ஒரு துலாப் பிரமாணம் வெல்லம் சேர்த்து லேஹ்யமாகப் பக்குவம் செய்யவும்; லேஹ்யபாகமாக வரும்போது த்ரிஜாதகம், த்ரிகடு இவற்றையும், சிறிது யவக்ஷாரத்தையும் சூர்ணம் செய்து சேர்த்துக் கலந்து, ஆறியபிறகு அரைப் பிரஸ்த்தம் தேன் கூட்டிக் கொள்ளவும். இதை யுபயோகித்தால் மிகவும் விருத்தியடைந்த சோதை, ஜ்வரம், மேஹம், குல்மம், உடலிளைப்பு, ஆமவாதம், அம்லபித்தம், இரத்த-பித்தம், நிறம் மாறுபட்டிருத்தல், மூத்திர தோஷம், வாததோஷம், சுக்ரதோஷம் ச்வாஸம், அரோசகம், ப்லீஹரோகம், விஷோதரம் இவை நிவ்ருத்தியாகும். 14—16.

ச்வயதுவில் ஹிதமான அன்ன-பானங்கள்.

(1) தசமூல கஷாயத்திற் பக்குவம் செய்து பழகிய யவதானியத்தை (2) அல்லது அவ்விதமான சம்பா அன்னத்தை உப்பும் ஸ்நேஹமும் சிறிதளவாகக் கலந்து சொற்ப அளவில் உட்கொள்ளலாம்; இந்த போஜனம் ச்வயது ரோகிக்கு அனுகூலமானது. (3) யவக்ஷாரம், த்ரிகடு இவற்றைக் கூட்டிய பயற்றங்கஞ்சி, (4) கொள்ளுக்கஞ்சி, (5) திப்பிலி ப்பொடியைச் சேர்த்த ஜாங்கல மாம்ஸரஸம், (6) அல்லது திப்பிலி சேர்த்த ஆமை - உடும்பு - முள்ளம்பன்றி இவற்றின் மாம்ஸரஸம் இவைகளோடு போஜனம் செய்யலாம். (7) புளிப்பில்லாத மந்தமென்கிற பானமும், ஔஷதங்கள் சேர்த்த மத்யங்களும் பருகுவதற்கு உபயோகமானவையாம். 17-18

ஜீரகாதி பேயா.

ஜீரகம், கச்சோரம், ஜீவந்தி, ஓமம், தாமரைக் கிழங்கு, சித்திரமூலம், பில்வப்பழத்தின் சோறு, யவக்ஷாரம், புளி இவற்றை வகைக்குக் கோலப்பிரமாணமெடுத்து [1] பேயா என்கிற திரவாஹாரமாகச் செய்யவும்; இந்த பேயாவை நெய் தைலம் இவற்றால் தாளித்து உபயோகிக்கவும். சோகை, அதிஸாரம், இருதயரோகம், குல்மம், அர்சஸ், அக்னிமாந்த்யம், மேஹம் இவற்றில் இது ஹிதமானது. 19—20½.

படாதி பேயா.

வட்டத்திருப்பி, பஞ்சகோலம் இவற்றையும் கோலப் பிரமாணமாகச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவும் முற்கூறிய பேயாவின் குணங்களையே உடையது. 21.

சைலேயாதி தைல-லேப-உதகங்கள்.

கல்மரப்பட்டை, கோஷ்டம், மாசிப்பத்திரி, அரேணுகம், அகில்பட்டை, தாமரைக்கிழங்கு, ஸரள தேவதாருபட்டை, புலியுகிர் என்னும் கந்தத்திரவ்யம், நாகப்பூ, தேவதாரு, ஞாழல், ஜடாமாம்ஸீ, திப்பிலி, சாமை, வாலுளைப்புல் வெட்டிவேர், சதுர்ஜாதம், தாளிஸப்பத்திரி, கோரைக் கிழங்கு, மாவிஞ்சி இவற்றைச் சேர்த்து ஸ்நானம் செய்வதற்குத் தைலத்தையும், பூசித் தேய்ப்பதற்கேற்ற லேபனத்தையும், ஸ்நான ஜலத்தையும் பக்குவம் செய்து கொள்ளலாம். 22—23½.

நிம்பாதி ஸ்நானோதகம்.

வேப்பிலை, சாறடை, பச்சிலை, எருக்கிலை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தினாலாவது ச்வயது ரோகிக்கு ஸ்நானம் செய்து வைக்கலாம். 24.

---

1. கோலம்—இரண்டு சாணமெடை; அதாவது அரைக்கால் பலமளவு.

ஏதேனும் ஒரு அவயவம் வீக்கங் கொண்டிருந்தால் (1) சாறடை, அலரிவேர், பலாசம்பட்டை; (2) பேய்த்தும்மட்டி, த்ரிபலை, வெள்ளிலோத்தி, நளியென்கிற கந்தத்திரவ்யம், தேவதாரு; (3) கண்டங்கத்திரி, புடலம் வேர், திப்பிலி, சைலேயமென்கிற கந்தத்திரவ்யம், சேம்பு; (4) பெருங்குன்றுமணி, குங்கிலிய மரப்பட்டை, ஈச்வராமூலி, எலிச்செவி யென்னும் பூண்டு; (5) வ்ருத்தி, ருத்தி, ஆமணக்கு; இம்முறைகளுள் ஏதேனும் ஒன்றை மிக்க மிருதுவான கல்கமாக அரைத்துக் காய்ச்சி யெடுத்து இளஞ்சூடாயிருக்கையிலே லேபநமாக உபயோகிப்பது ஹிதமாகும். 25—26½.

ஏகாங்கசோதைகளில் லேபநங்கள்.

பிறகு வாயுவினாலுண்டான ச்வயதுவில் அரைமாஸ காலம் சிவதை வேரையும் ஆமணக் கெண்ணெயையும் உட்கொள்ளலாம். அபாநவாயு, மலம் இவை மிகவும் கட்டிப் போயிருந்தால் அவ்விரண்டையுமே பாலிற் கூட்டி, அல்லது மாம்ஸரஸத்துடன் கலந்தாவது போஜனத்திற்கு முன்பு உபயோகிக்கலாம். வாதஹரமான ஸ்வேதங்களையும் அப்யங்கங்களையும் பிரயோகிக்கலாம். வீக்கம் ஏதேனும் ஒரு அவயவத்தை ஆச்ரயித்ததாயிருந்தால், கொம்மட்டி மாதளை, அகில் சுக்கு, கண்டங்கத்திரி, தேவதாரு இவற்றால் லேபநமிடலாம். 27—29.

வாத சோதையின் சிகித்ஸைகள்.

பித்த ஸம்பந்தமான சோதையில் திக்தக க்ருதத்தைப் பருகலாம். ந்யக்ரோதாதிகணச்சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது உட்கொள்ளலாம். நாவறட்சி, தேஹஅழற்சி, மூர்ச்சை, இவ்வுபத்திரவங்களோடுகூடிய சோதையில் பாலைப் பருகலாம்; குளிர்ச்சியான லேபநங்களும் அப்யங்கமும் நன்மை செய்யக் கூடியவையே. 30.

பித்த சோதையின் சிகித்ஸைகள்.

பேய்ப்புடல் வேர், கொன்றை, அதிமதுரம், கடுகரோஹிணி, கடுக்காய், தேவதாரு, மரமஞ்சள், தாமரைக் கிழங்கு, நேபாளம், பேய்த்தும்மட்டி, நீர்வஞ்சி, திப்பிலி இவற்றைக் கஷாயம் காய்ச்சி, நெய்கூட்டிப் பருக தேஹத்தினுள் உண்டான அழற்சி, நாவறட்சி, தலைச்சுற்றல், ஸந்நிபாதக் குறிகள், விஸர்ப்பம், சோகை, ஸாதாரண தேஹதாபம், விஷமஜ்வரங்கள் இவை நிவ்ருத்தியாகும். 31, 32.

படோல மூலாதி க்வாதம்.

கபத்தினாலுண்டான சோதையில் ஆரக்வதாதிகணச்சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தைப் பருகலாம். 32½.

கபசோதையின் சிகித்ஸைகள்.

ஸ்ரோதஸ்ஸுகள்[1] அடைபடுதல், அக்னிமாந்த்யம், அரோசகம் இவை யேற்பட்டிருக்கையில் ஆமாசயம் முதலியவற்றை அமைதியாக வைத்து, க்ஷாரங்கள், சூர்ணங்கள், ஆஸவங்கள், அரிஷ்டங்கள், கோமூத்திரம், மோர் இவற்றை யுபயோகிக்க வேண்டும். 33½.

சோதையில் ஸ்ரோதோ பந்தாதிகளுக்குப் பரிஹாரங்கள்.

திப்பிலி, பழைய பிண்ணாக்கு, முருங்கப்பட்டை, மணல், ஆழிவிதை இவற்றைப் பசுமூத்திரம் விட்டு ஆட்டி கல்கமாகச் செய்து லேபநம் செய்யவும், அழுத்தித் தேய்க்கவும் உபயோகிக்கலாம். 34½.

கிருஷ்ணாதி லேபநம்.

(1) கோஷ்டம், தழுதாழை, சித்திரமூலம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பசு மூத்திரத்தையாவது, (2) அவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது ஸ்நானம் செய்ய உபயோ

ஸர்வாங்க சோதையில் ஸ்நாந லேபநங்கள்.

1. ஸ்ரோதஸ்ஸுகள்-முதற் புத்தகத்தில் விஷய அகராதியைப் பார்க்க,

கிக்கலாம். (3) அவ்விரண்டில் எதிலாவது கொள், சுக்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சியும் ஸ்நானத்திற்குபயோகிக்கலாம். (4) கருங்கச்சோரம், அகில் இவ்விரண்டையும் கல்கமாகச் செய்து லேபநமாகப் பிரயோகிக்கலாம். $35\frac{1}{2}$.

ஏகாங்க சோபையில் லேபநம்.

தகரவிதை, ஆடுதீண்டாப்பாளை, ஸரளதேவதாரு, காட்டு ஜீரகம், அமுக்கிருங்கிழங்கு, சிவதைவேர், இவற்றைக் கல்கம்போல் அரைத்து, ஓர் அவயவத்தை ஆச்ரயித்த சோதையில் லேபமாக உபயோகிக்கலாம். $36\frac{1}{2}$.

பல தோஷங்களாலான சோதைகளில் சோதநங்கள்.

(1) எந்த தோஷத்தினுல் எந்த பாகத்தை ஆச்ரயித்து சோபை யுண்டா யிருக்கிறதோ, அந்த தேஹத்திற் கேற்றவாறு அந்த அவயவத்திற்கு ஸமீபமான (முகம்-குதம் இவற்றுள்) எதன் மூலமாகவாவது சோதநம் செய்யலாம்; அல்லது இரக்தமோக்ஷணம் பண்ணலாம். (2) பல தோஷங்களின் ஸம்யோகத்தினுலுண்டான சோபையிலோ வென்றால், கோளாறடைந்த அந்த தோஷங்களிலுள் எது அதிக பிரபலமா யிருக்கின்றதோ அதை அனுஸரித்து சிகித்ஸை செய்யவும். 37.

ஸந்நிபாத சோதை முதலியவற்றில் ஜீரகாதி-பூநிம்பாதி சூர்ணங்கள்.

(1) ஜீரகம், வட்டத்திருப்பி, கோரைக்கிழங்கு, பஞ்சகோலம், கண்டங்கத்திரி, மரமஞ்சள் இவற்றின் சூர்ணத்தை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்ளலாம். இது ஸந்நிபாத ஸம்பந்தமான சோதையையும், நீடித்த நாட்களாகப் போராடும் அல்லது மிகவும் விருத்தியடைந்த சோதையையும் போக்கும். 38.

அம்ருதாதி குக்குலு.

சீந்தில், கடுக்காய், இங்குபத்திரி, தேவதாரு இவற்றின் சூர்ணத்தையும், மஹிஷாக்ஷி குக்குலுவையும் கூட்டி, குளிகைகளாகச் செய்து, பசு மூத்திரத்தின் அனுபானத்தோடு உட்கொள்ள ச்வயது, உதரரோகங்கள், குஷ்டம், பாண்டுரோகம், கிருமிகள், மேஹரோகங்கள் இவையும், கபமும், ஊர்த்வச்வாஸமும் தீரும். 39.

இரத்தஜ-விஷஜ சோபைகளில் சிகித்ஸை.

இங்ஙனம் வாதாதி தோஷங்களாலுண்டாகிற சோபைகளுக்கு ஏற்ற சிகித்ஸைகள் கூறப்பட்டன. (1) இரத்ததோஷத்தினுலுண்டாகிற சோபையில் இரக்தமோக்ஷணம், குளிர்ச்சி பொருந்திய ஔஷதங்கள் க்ருதம் இவற்றின்லேபநம், ஸேசநமென்கிற ஒற்றடம், விரேசநம் இவற்றால் இரத்தத்தைச் சுத்தம் செய்யவேண்டும். (2) விஷஸம்பந்தமான சோபையில் விஷஹரமான சிகித்ஸையைச் செய்ய வேண்டும். 40.

சோதையில் விலக்க வேண்டிய அபத்தியங்கள்.

கிராம்யமாம்ஸம், [1] ஆநூபமாம்ஸம், [2] ஸத்தில்லாத மாம்ஸம், உலர்ந்த சாகம், திலான்ன மென்கிற எள் சேர்த்து பக்குவம் செய்த அன்னம், குடான்ன மென்கிற வெல்லம் சேர்த்து பக்குவம் செய்த அன்னம், மாப்பண்டங்களாலான அன்னம், உப்பு கலந்த தயிர், புளித்துப் போனதும் நீர்விளாவாததுமான மத்யம், பொரி, உலர்ந்துபோன இறைச்சி, குருபோஜனம், அஸாத்மிய போஜனம், வயிற்றில் காந்தலை யுண்டுபண்ணக் கூடிய உணவு, இரவில் நித்திரையுறுதல், புணர்ச்சி இவைகளை ச்வயது ரோகி விலக்கி விடவேண்டும். 41.

1. கிராம்ய மாம்ஸம்—முதற் புத்தகத்தில் 381-ம் பக்கம் பார்க்க.

2. ஆநூப மாம்ஸம்— ஆநூபதேச ஸம்பந்தமான ஜந்துக்களின் மாம்ஸம்.

## பதினெட்டாவது அத்தியாயம்.

இனி விஸர்ப்ப சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரிக்கப் படுகின்றது:—

*விஸர்ப்பங்களில் முதலிற் செய்யவேண்டிய சிகித்ஸைகள்.*

விஸர்ப்பங்களில் முதலிலேயே இலங்கநம், ரூக்ஷணம், இரக்த மோக்ஷணம், வமநம், விரேசநம் இவை ஹிதமானவை; ஆனால் ஸ்நேஹநம் அநுகூலமானதல்ல. 1.

*விஸர்ப்பத்தில் வமநப்பிரயோகம்.*

(1) அதிமதுரம், வாலுழுவை, மதநபலம் இவற்றைச் சேர்த்து வமநம் செய்வித்தாலும், (2) பேய்ப்புடல், திப்பிலி, வேம்பு இவற்றின் தளிர்களோடு மதநபலத்தைக் கூட்டி வமநம் செய்வித்தாலும் விஸர்ப்பம் தீரும். 2.

*விஸர்ப்பத்தில் விரேசந சிகித்ஸை.*

சிவதை வேரைக் கொன்றையின் சாறு, திராக்ஷாரஸம், த்ரிபலா ஸ்வரஸம், பால், நெய் இவற்றுள் ஏதேனும் ஒன்றோடு விரேசநத்திற்காக உட்கொள்ளலாம். இவ்வியாதியில் தோஷம் கோஷ்டத்தைப்பற்றியதாயிருந்தால் இன்னும் விசேஷமாக சோதந சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும். 3, 3½.

*விஸர்ப்பத்தில் சோதநத் திற்குத் தகாத நிலைமையில் சமந சிகித்ஸை.*

சோதந சிகித்ஸைக்குத் தகாத பிணியாளிக்கும், தோஷம் சொற்பமாயிருக்கையிலேயும் சமந சிகித்ஸையை அடியில் வருமாறு செய்யலாம்: (1) சந்தனம், நைதல் இவற்றையாவது, (2) மஸ்துவையாவது, (3) வேம்பு, பேய்ப்புடல் இவற்றையாவது, (4) படோலாதிகணச் சரக்குகளையாவது, (5) நன்னாரி, நெல்லிக்கனி, வெட்டிவேர், கோரைக்கிழங்கு இவற்றையாவது ஜலத்தில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சி உபயோகிக்கலாம். 4, 5.

*த்ராலபாதி கஷாயம்.*

காஞ்சொறி, பர்ப்பாடகம், சீந்தில், சுக்கு இவற்றை க்வாதமாகவாவது, சீதகஷாயமாகவாவது பக்குவம் செய்து நாவறட்சியுடன் கூடிய விஸர்ப்பரோகி பானம் செய்யலாம். 6.

*தார்வ்யாதி க்வாதம்.*

மரமஞ்சள், பேய்ப்புடல், கடுகரோஹிணி, சிறுகடலை, த்ரிபலை, வேம்பு, அதிமதுரம், கொன்றை இவற்றை க்வாதமாகக் காய்ச்சியெடுத்து, நெய்கூட்டி யுட்கொள்ளலாம். 7.

*விஸர்ப்பத்தில் இரக்த மோக்ஷணம் செய்யும் நிலைமை.*

சாகைகள் என்கிற கை கால்களிலுள்ள இரத்தம் கெட்டுப்போயிருந்தால் இரத்தத்தையே குத்தி முதலில் வெளிப்படுத்த வேண்டும். ஏனெனில் இரத்தம் துர்நீர் கொண்டு கோளாறடைந்து விடுவதால் சர்மம், மாம்ஸம், ஸ்நாயுவென்னும் உரத்த பந்தந நார் இவையும் துர்நீரால் கோளாறடைகின்றன. 8.

*விஸர்ப்பத்தில் திக்தக க்ருதாதிகளை யுபயோகிக்கும் நிலைமை.*

ஆமதோஷம் நீங்கிய பிணியாளிக்கு, கபம் க்ஷீணித்து, வாத பித்தங்கள் மேலோங்கி நின்றால் அந்த நிலைமையில் (1) திக்தக க்ருதமாவது, (2) மஹாதிக்தக க்ருதமாவது, (3) சரக்கொன்றையைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதமாவது அநுகூலமானவையாம். 9.

*விஸர்ப்பத்தில் லேபனம் செய்யும் நிலைமை.*

அசுத்தமான இரத்தம் வெளிப்படுத்தப் பட்ட பிறகு, தேஹத்தினுள் சர்மம், மாம்ஸம், ஸந்திகள் இவற்றில் அடங்கிய தோஷம் சுத்தம் செய்யப்பட்ட பிறகு, உடனே விஸர்ப்பத்தைச் சமனம் செய்வதற்காக தேஹத்தின் வெளிப்புறத்தில் பிர

தேஹம் முதலிய பூச்சுகளைப் பிரயோகிக்க வேண்டும். 10.

வாத விஸர்ப்பத்திற்கு லேபநங்கள்.

(1) சதகுப்பி, கோரைக்கிழங்கு, நிலப்பனங் கிழங்கு, மூங்கிற் குருத்து, கருங்குறிஞ்சி, கொத்தமல்லிவிதை, தேவதாரு, முருங்கை இவற்றின் கல்கத்தையாவது, (2) கோஷ்டத்தின் கல்கத்தையாவது வாதவிஸர்ப்பத்தில் லேபநமாக உபயோகிக்கலாம். 11.

பித்த விஸர்ப்பத்திற்கு லேபநங்கள்.

(1) பித்த விஸர்ப்பத்தில் ந்யக்ரோதாதிகணச் சரக்குகளாலான [1] லேபநத்தையும், (2) பத்மோத்பலாதி [2] சரக்குகளாலான லேபத்தையும் பிரயோகிக்கலாம். (3) இளசான ஆலம்விழுதுகள், மிக்க மிருதுவான வாழைக்குருத்துகள், தாமரைக் கிழங்கு இவற்றை நன்கு அரைத்து, சத தௌத க்ருதத்திற் [3] குழைத்து லேபநம் செய்யலாம். (4) தாமரைச் சேற்றையும் குளிரக் குளிர லேபமாகப் பிரயோகிக்கலாம். (5) அல்லது ஜலம் விட்டு மிருதுவாக ஆட்டியெடுத்த நல்முத்துக் குழம்பையாவது, (6) அவ்விதமே சங்குக்குழம்பையாவது, (7) பவழக்குழம்பையாவது, (8) முத்துச்சிப்பியின் குழம்பையாவது, (9) நெய்யிட்டு அரைத்தெடுத்த மனச்சிலையையாவது பூச்சிடலாம். 12-13½.

கப விஸர்ப்பத்திற்கு லேபநங்கள்.

(1) த்ரிபலை, தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், மஞ்ஜிஷ்டி, அலரிவேர், சவட்டுக் கோரையின் வேர், அறுகம்புல் இவற்றைக் கல்கமாக அரைத்து, கப விஸர்ப்பத்தில் லேபநமாக உபயோகிக்கலாம். (2) வெண்கருங்காலி, ஏழிலம்பாலை, கருங்காலி, தேவதாரு, மருதோன்றி, கோரைக்கிழங்கு, கொன்றை இவற்றின் கூட்டுமுறையையாவது, (3) வருணாதிகணச் சரக்குகளான கல்கத்தையாவது, (4) கொன்றையிலைகள், நறுவிலியின் பட்டைகள், கருநொச்சியிலை, மணத்தக்காளி, காட்டு வாகைப்பூ இவற்றின் கல்கத்தையாவது லேபநமாக உபயோகிக்கலாம். (5) இதே சரக்குகளைக்கொண்டு ஸேகம் என்கிற ஸேசந்திரவத்தையும், விரணத்திற் பூசுவதற்கான க்ருதத்தையும், லேபந ரூபமான ஔஷதத்தையும், சூர்ணத்தையும், பக்குவம் செய்து அந்தந்த நிலைமைக்கேற்றவாறு உபயோகித்துக் கொள்ளலாம். வாதஸம்பந்தமான விஸர்ப்பத்தில் உபயோகிக்கவேண்டிய லேபங்களுக்கு நெய் அதிகமாகச் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும். 14—17½.

ஸம்ஸர்க தோஷாதிகளாலான விஸர்ப்பங்களுக்கு சிகித்ஸைகள்.

(1) ஆமதோஷத்துடன் கூடிய வாதம் கபஸ்தானத்தை யடைந்தால் லேபநங்கள் சிறிது குளிர்ந்தும் சிறிது உஷ்ணமாகவும் இருக்கவேண்டும். (2) இரக்த-பித்தம் பித்தஸ்தானத்தை அடைந்திருந்தால், நெய் கலந்த லேபநங்களைப் பிரயோகிக்கவேண்டும்; மேலும் இவ்விதமான கோளாறில் லேபநங்கள் அதிக குளிர்ச்சியாகவும், மெல்லிய பூச்சுகளாகவும், மெல்லிய வஸ்திரங்களின்மீது பரப்பி விஸர்ப்பத்தின்மீது இடக்கூடியவையாகவும் இருக்கவேண்டும். உபயோகப்படுத்திய லேபத்தையே எடுத்தெடுத்து அடிக்கடியும் பிரயோகித்தால் வீர்யத்திற் குன்றிப்போமாகையால், அப்போதைக்கப்போது வெவ்வேறு லேபங்களை அவ் விஸர்ப்பத்தின்மீது பிரயோகிக்கவும். (3) ஸம்ஸர்க தோஷங்களாலான விஸர்ப்பங்களில் வாத-பித்த-கபங்களாலான விஸர்ப்பங்களுக்குக் கூறியுள்ள சிகித்ஸைகளையே அததற்கேற்றவாறு கலந்து பிரயோகிக்கவும். 18—20.

---

1. ந்யக்ரோதாதிகணம்—முதற் புத்தகம் 127-ம் பக்கம் பார்க்க.

2. பத்மோத்பலாதிகணம்—தாமரை, நைதல், வெட்டிவேர், அறுகம்புல், தாமரைக்கொடி, அல்லிக்கிழங்கு, தட்டைக் கோரைக்கிழங்கு, சர்க்கரை, விளாமிச்சம்வேர், சந்தனம், நல்முத்து, காவி, க்ஷீரகாகோலீ, வெள்தாமரை, இலுப்பைப்பூ, நெய், பால் இவற்றின் கூட்டு.

3. சததௌதக்ருதம்-முதற்புத்தகம் 194-ம் பக்கம் பார்க்க.

அக்னி விஸர்ப்பத்தில் (1) சத தௌத க்ருதத்தையாவது, (2) ஸாதாரணமான ஆடை போலத் தோய்ந்த நெய்யையாவது, (3) குளிர்ந்த அதிமதுரக் கஷாயத்தையாவது, (4) மிகக் குளிர்ந்த தண்ணீரையாவது, (5) தாமரையிலைத் தண்ணீரையாவது,[1] (6) பாலையாவது, (7) கருப்பஞ் சாற்றையாவது பிரயோகிக்கலாம். (8) பானம் செய்வதற்கும், லேபநம் செய்வதற்கும், விரணங்கள்மேல் ஊற்றுவதற்கும் மஹாதிக்தக க்ருதம் மிக்க அநுகூலமானது. 21—22.

அக்னி விஸர்ப்ப சிகித்ஸை.

(1) கிரந்தி விஸர்ப்பத்தில் இரக்த-பித்த சிகித்ஸையிற் கூறியுள்ளபடி இரக்த-பித்த ஹரமான சிகித்ஸையை நன்கு நிறைவேற்றி, கப-வாதஹரமான பிண்டஸ்வேதம், உபநாஹஸ்வேதம்[2] இச்சிகித்ஸைகளைச் செய்வது தகும். (2) கிரந்தி விஸர்ப்பத்தில் வலியும் அதிகமுண்டானால், தசமூலங்கள் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தை உஷ்ணமாக அதன்மீது ஊற்றலாம். (3) அங்ஙனமே பசுமூத்திரத்தையும் தசமூலம் சேர்த்துக் காய்ச்சி யுபயோகிக்கலாம். (4) அல்லது ஜலத்தில் தசமூலத்தைக் காய்ச்சி, அக்கஷாயத்தையாவது கிரந்தி விஸர்ப்பத்தின்மேல் ஊற்றலாம். (5) முருங்கப்பட்டையையாவது கல்கமாக அரைத்துக் காய்ச்சி, இளஞ்சூடாக கிரந்தியின்மேல் பூச்சிடலாம். (6) அல்லது பச்சிலைமரப் பட்டையையாவது, (7) உலர்ந்த முள்ளங்கியின் கல்கத்தையாவது, (8) ஊமத்தையிலையையாவது அங்ஙனமே உபயோகிக்கலாம். (9) நேபாளம், சித்திரமூலப்பட்டை, கள்ளிப்பால், எருக்கம்பால், வெல்லம், சேராங்கொட்டை, அன்னபேதி இவற்றை லேபநமாகச் செய்து,பிரயோகித்தால் கல்லும்கரைந்துடையும். வெளியிற் சர்மத்தைப்பற்றியதாய் கபத்தினாலுண்டான கிரந்தியை இந்த லேபம் உடைத்துவிடு மென்பதில் ஸந்தேஹமென்ன? நீடித்த நாட்களாயுள்ள கிரந்தியையும் இதே சரக்குகளால் உடைத்து விடலாம். (10) முள்ளங்கி, கொள் இவற்றின் யூஷங்களில் யவக்ஷாரம், மாதளம்பழச்சாறு இவற்றைச் சேர்த்து பானம் செய்விக்கலாம்; (11) கோதுமான்னம் வாற்கோதுமையன்னம் இவற்றில் சீது, தேன், சர்க்கரை இவற்றைச் சேர்த்தும், அல்லது தேன், வாருணீ மண்டம், கொடிமாதளம்பழரஸம் இவற்றைச் சேர்த்தும் அருந்தச் செய்யலாம். (12) தேன்கூட்டிய த்ரிபலையின் பிரயோகத்தினாலும், தேவதாரு-சீந்தில் இவற்றின் பிரயோகத்தினாலும், காவிக்கல் கல்கத்தினாலும், கோரைக்கிழங்கு சேராங்கொட்டை-ஸக்துவென்னும் பிஷ்டம் இவற்றாலும், தேனைப் பூசுவதாலும், தூமப் பிரயோகங்களாலும், சிரோவிரேகங்களாலும், குல்மத்தைக் கரைப்பதற்கு முற்கூறியுள்ள முறைகளாலும், நெருப்பிற் காய்ச்சிய இரும்பு, பொன், உப்பு, கல் இவை முதலியவற்றைக்கொண்டு அழுத்துவதாலும் கிரந்தி விஸர்ப்பத்தை யுடைக்கலாம். 23—31.

கிரந்தி விஸர்ப்ப சிகித்ஸை.

நல்ல பலன் தரக்கூடியவை யென்று தெரிந்துகொண்டுள்ள முற்கூறிய பலவிதமான சிகித்ஸைகளாலும்கிரந்தியானது உடையாமல் மிகவும் வலுத்து கல்லைப்போல கடினமாயிருந்து சிறிதும் குணமடையாவிட்டால், பிறகு (1) க்ஷாரத்தினாலாவது, இரும்புச் சலாகைகளாலாவது, பொன்னாலாவது அதைச் சுடுவது நலம். (2) அல்லது பழுக்கச் செய்யுங்குணமுடைய பதார்த்தங்க

கிரந்தி விஸர்ப்பத்தில் தாஹபாக சிகித்ஸைகள்

1. "சீதாம்பஸாம் போஜஜலை:" என்று மூலத்திலுள்ளவாறு நாம் மொழி பெயர்த்திருக்கிறோம். "ஷிதாம்பஸாம் போஜஜலை:" என்று மூலம் இருக்க வேண்டுமென்று ஸர்வாங்க ஸுந்தரீ வியாக்யாநத்தினால் தெரியவருகிறது; சர்க்கரையின் நீர், தாமரைப்பூ சேர்த்த ஜலம், கோரைக்கிழங்கின் ஜலம் என்று அந்த வியாக்யாநப்படிக்கு பொருள்.

2. பிண்ட ஸ்வேதாதிகளைப்பற்றி முதற்புத்தகம் பார்க்க.

ளால் பழுக்கச்செய்து, சஸ்திரத்தினால் கீண்டாவது தோஷத்தை வெளிப்படுத்தி விடலாம். (3) இப் பிணியாளியின் தோஷங்கொண்டு விருத்தியாயுள்ள இரத்தத்தை அப்போதைக் கப்போது ஸிராவ்யதை செய்து வெளிப்படுத்தி விடவேண்டும்; மீண்டும் இங்ஙனம் இரத்தம் வெளிப்படுத்தப்பட்ட பிறகு வாத-கபஹரமான ஔஷதத்தைப் பிரயோகிக்கவேண்டும். (4) சுடுதல், பழுக்கச் செய்தல் இச்சிகித்ஸைகளால் [1] துர்நீர்ப் பொசித்துக்கொண்டுள்ள விஸர்ப்பத்தில், ஸாதாரண விரணங்களுக்குக் கூறியவிதமே வெளியிலும் உள்ளேயும் ஔஷதப் பிரயோகம் செய்து சிகித்ஸிக்க வேண்டும். (5) மரமஞ்சள், வாய்விடங்கம், கம்பில்லம் இவற்றைச்சேர்த்து பக்குவம் செய்த தைலம் வாத ஸம்பந்தமான விஸர்ப்ப விரணத்தில் உபயோகிக்கத் தகுந்தது. (6) அறுகம்புல்லின் ஸ்வரஸத்திற் பக்குவம் செய்த க்ருதத்தை கப-பித்தங்கள் விருத்தியாயுள்ள விஸர்ப்ப விரணத்திற் பிரயோகிக்கலாம். 32—35½.

**விஸர்ப்பத்தில் இரக்த மோக்ஷணம் அவசியம்.**

விஸர்ப்பத்தில் ஸாதாரணமாகக் கூறப்பட்டுள்ளமற்ற சிகித்ஸைகளெல்லாம் ஒரு பகுதியாகவும், இரக்தமோக்ஷணம் மாத்திரம் மற்றொரு பகுதியுமாயிருப்பதாகக் கருதப்படுகிறது. விஸர்ப்பரோகம் பெரும்பாலும் இரக்தத்தோடும் பித்தத்தோடும் கலவாமல் உற்பத்தியாவதில்லை; இதற்கு இரக்தமே ஆதாரமாகின்றது; ஆகையால் இப்பிணியாளிக்கு அடிக்கடியும் இரக்தமோக்ஷணமே செய்யவேண்டும். 36, 37.

**விஸர்ப்பத்தில் உபயோகிக்கத் தகாத க்ருதம்.**

விஸர்ப்பத்தினால் வருந்துபவனுக்கு விரேசன குணமற்ற க்ருதத்தைக் கொடுக்கக் கூடாது; அவ்வித க்ருதத்தினால் விஸர்ப்பத்திற்குக் காரணமான தோஷம் தேஹத்திலேயே தங்கியப்பட்டு சர்மமென்ன, இரத்தமென்ன, மாம்ஸமென்ன இவற்றை எரியச் செய்துவிடும். 38.

## பத்தொன்பதாவது அத்தியாயம்.

இனி குஷ்ட சிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும்:—

**எல்லா குஷ்டத்திலும் முதலிற் செய்யும் சிகித்ஸை**

எல்லாவிதமான குஷ்டரோகிக்கும் முதலில் ஸ்நேஹபானம் செய்வித்து சிகித்ஸை செய்ய வேண்டும். ½.

**வாதகுஷ்ட சிகித்ஸை-தசமூலாதி ஸ்நேஹம்.**

அவற்றுள் வாதம் அதிகரித்துண்டான குஷ்டத்தில் தசமூலம், சீந்தில், ஆமணக்கு, நாயர்வேளை, ஆடுதீண்டாப்பாளை இவற்றால் பக்குவம் செய்த தைலமாவது க்ருதமாவது அநுகூலமானதாம். 1½.

**திக்தக க்ருதம் -பித்தகுஷ்ட சிகித்ஸை.**

பேய்ப்புடல், வேம்பு, கடுகரோஹிணி, மரமஞ்சள், வட்டத்திருப்பி, காஞ்சொறி, பர்ப்பாடகம், கொன்றை இவற்றை ஒரு ஆடகம் ஜலத்தில் ஒவ்வொரு பலம் அளவில் இடித்துச் சேர்த்து, எட்டிலொரு பங்காகச் சுண்டும்படியாகக் காய்ச்சி யெடுத்து வடிகட்டி, பன்னி

1. 'ப்ரக்லிந்நே தாஹபாகாப்யாம்' என்கிற மூல வாக்கியத்திற்கு "க்லேதமுள்ளதும், தாஹபாகங்களோடு கூடியதுமான ஸகல விஸர்ப்பத்திலும்" என்று ஸர்வாங்க ஸுந்தரீ வியாக்யானத்திற் கூறியுள்ள பொருள் ஸந்தர்ப்பத்தை அநுஸரித்ததல்ல; க்ரந்தியைச் சுடுவது, பழுக்கச் செய்வது இவைகளைப்பற்றிய விஷயம் இதற்கு முன் ச்லோகங்களிலேயே கூறியிருப்பதை அநுஸரித்து இச்சிகித்ஸை செய்யப்படுகிறது என்பதைக் கவனிக்கவேண்டும்.

ரண்டு பலம் நெய் சேர்த்து, அதில் கொன்றை, கோரைக்கிழங்கு, நிலவேம்பு, வாலுழுவை, திப்பிலி, சந்தனம் இவற்றை வகைக்குக் கால் பலம் அளவில் கல்கமாகச் சேர்த்து, பக்குவம் செய்து கொள்ளவும். இது "திக்தக க்ருதம்" எனப்படும். இந்த க்ருதமானது பித்தகுஷ்டம், விஸர்ப்பம், கட்டிகள், அழற்சி, நாவறட்சி, பிரமமென்னும் தலைச்சுற்றல், சொறி, பாண்டுரோகம், கண்டங்களென்கிற வீக்கங்கள், கெட்டுப்போன நாடீவ்ரணங்கள், அபசீ, கொப்புளங்கள், வித்ரதி, குல்மம், சோஷை, உன்மாதமென்கிற பித்து, வெறி, இருதயரோகம், திமிரமென்கிற கண்ணோய், வ்யங்கமென்கிற வங்கு, கிரஹணீ, ச்வித்ரமென்கிற வெண்குஷ்டம், காமாலை, பகந்தரம் என்கிற பிளவை, அபஸ்மாரம், உதரரோகம், பெரும்பாடு, கிருத்ரிமவிஷம், அர்சஸ், இரக்தபித்தம் இவை முதலிய மற்றுமுள்ள மிகவும் கஷ்ட ஸாத்தியமான கடும்பிணிகளையும் தீர்க்கும். 2—7.

மஹா திக்தக க்ருதம்.

ஏழிலம்பாலை, பர்ப்பாடகம், பெருவாகை, கடுகரோஹிணீ, வசம்பு, த்ரிபலை, தாமரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, மஞ்சள், மரமஞ்சள், வெண் நன்னாரி, கரு நன்னாரி, திப்பிலி, யானைத்திப்பிலி, வேம்பு, சந்தனம், அதிமதுரம், பேய்த்துமட்டி, வாலுழுவை, சீந்தில், நிலவேம்பு, விளாமிச்சவேர், ஆடாதோடை, பெருங்குரும்பை, தண்ணீர்விட்டாங் கிழங்கு, பேய்ப்புடல், அதிவிடயம், கோரைக்கிழங்கு, கொன்றை, காஞ்சொறி இவற்றை எட்டு மடங்கு ஜலத்திற் சேர்த்துக் காய்ச்சி யெடுத்த கஷாயத்துடன், இரண்டு பங்கு நெல்லிக்கனியின் சாற்றையும் கூட்டி, அதில் க்ருதத்தைப் பக்குவம் செய்யலாம். இது திக்தக க்ருதத்திலும் அதிககுணங்களைச்செய்யும்; ஆகவே இது "மஹாதிக்தக க்ருதம்" எனப்படும். 81-0½.

கப குஷ்டத்தில்-நிம்பாதி க்ருதம்.

வேம்பு, ஏழிலம்பாலை, சித்திரமூலம், கோஷ்டம், மிளகு, வசம்பு, குங்கிலிய மரப்பட்டை, முறளஞ்செடி, ஆமணக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் கபம் அதிகரித்த குஷ்டத்தில் உபயோகிக்கத் தகுந்தது. 11.

ஸர்வ குஷ்டங்களிலும் ஸ்நேஹ சிகித்ஸை முதலியன.

எல்லா குஷ்டங்களிலுமே (1) சேராங்கொட்டைத் தைலம், (2) துவரகதைலம், (3) கடுகெண்ணெய் இவற்றையாவது, (4) வாய்விடங்கம், கடுக்காய் சேராங்கொட்டை இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்தையாவது பானம் செய்யலாம். (5) கொன்றை வேர்க் கஷாயத்தில் நூறுமுறை காய்ச்சியெடுத்த க்ருதத்தை கருங்காலிக் கஷாயத்தின் அநுபானத்தோடு உட்கொள்ள சீக்கிரம் குஷ்டம் தீரும். (6) முற்கூறிய ஸ்நேஹங்களால் அந்தந்த நிலைமைகளுக்கேற்றவாறு அப்யஞ்ஜநம் செய்வதும் ஹிதமாம். (7) ஸ்நேஹசிகித்ஸை முடிந்தபிறகு விஸர்ப்ப சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ளபடி சோதநக்ரியையைச் செய்யவேண்டும். 12—14½.

குஷ்டத்தில் ஸிராவ்யதை முதலியன.

(1) குஷ்டரோகிக்கு நெற்றியிலும், கைகளிலும், பாதங்களிலும் ஸிராமோக்ஷணம் செய்து இரத்தத்தையும் வெளிப்படுத்தலாம். (2) குஷ்டம் சொற்பமாயுண்டாயிருந்தால் நிலைமைகளுக்கு ஏற்றவாறு பிரச்சந்நம்[1] செய்வதும், ச்ருங்கம் முதலியவற்றால் துஷ்ட இரத்தத்தை வெளிப்படுத்துவதும் உசிதமாம். (3) குஷ்டஹரமான ஸ்நேஹங்களால் இவனுக்கு இடையிடையே ஆப்யாயம் செய்துவர வேண்டும். இரக்த

1. பிரச்சந்நம்—சுரைக்குடுக்கை அல்லது கோப்பை முதலியவற்றால் செய்யப்படும் (ஆங்கிலத்தில் Cupping எனப்படும்) ஒருவித இரத்தவிலாஸ சிகித்ஸை.

மோக்ஷணம் செய்து, விரேசநம் செய்து, ஆக வேகுடல்வற்றியிருக்கும் இக்குஷ்டரோகிக்கு தேஹத்தில் வாயுவானது அந்த ஸ்நேஹோபசாரங்களால் பிரகோபிக்காமலும் ஆகவே உடலுக்குக் கேடு விளைவிக்காமலு மிருக்கும். 15-17.

வஜ்ரக க்ருதம். ஆடாதோடை, சீந்தில், வேம்பு, த்ரிபலை, பேய்ப்புடல், கண்டங்கத்திரி, புங்கு இவற்றின் கஷாயத்தில் க்ருதம் சேர்த்து, அச்சரக்குகளையே கல்கமாகவும் சேர்த்து பக்குவம் செய்யவும். இது விஸர்ப்பம், ஜ்வரம், காமாலை, இரக்த-பித்தம், குஷ்டம் இவற்றைப் போக்கும். இதை 'வஜ்ரக க்ருதம்' என்பார்கள். 18.

மஹா வஜ்ரக க்ருதம். த்ரிபலை, த்ரிகடு, கத்திரி, கண்டங்கத்திரி, சிறு வழுதுணை, கடுகரோஹிணி, நேபாளம், சிவதை வேர். கொன்றை, வசம்பு, அதிவிடயம், சித்திரமூலம், வட்டத்திருப்பி இவை வகைக்குக் கால் பல மெடை, அப்பொழுதே இறக்கிய கள்ளிப்பால் ஒருபலம், இவற்றைக் கல்கம்போலச் செய்து, இதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் பக்குவம் செய்து, க்ரூரகோஷ்ட மென்கிற கற்குடலாயிருப்பவனுக்குக் கொடுக்க, இது ஸ்நிக்த்தத் தன்மையையும் விரேசநத்தையும் உண்டுபண்ணும். குஷ்டம், ச்வித்ரமென்கிற வெண்குஷ்டம், ப்லீஹரோகம், அண்டவீக்கம், அச்மரீ, குல்மம், இவை கஷ்ட ஸாத்தியமான நிலைமையிலிருப்பினும், இதனுல் தீரும். இது 'மஹா வஜ்ரக க்ருதம்' எனப்படும். 19, 20.

தந்தீ க்ருதம். ஒரு ஆடகமளவான நேபாளத்தை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, அதில் பேய்த்துமட்டியை ஒரு பலம் கல்கமாகச் சேர்த்து, அதில் க்ருதம் பக்குவம் செய்துட்கொள்ள, அந்த க்ருதம் மேலே வமநரூபமாகவும் கீழே விரேசநரூபமாகவும் குடலைச் சுத்தி செய்யும். 21.

ஆவர்த்தகீ க்ருதம். ஆவர்த்தகீ யென்கிற கொடியை ஒரு தூலாப்பிரமாணம் ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, எட்டிலொரு பங்காக மிரும்படி காய்ச்சி யெடுத்து, அதில் ஒரு பிரஸ்த்தம் நெய் கூட்டி, அக்கொடியின் வேரையே கல்கமாகவும் சேர்த்து பக்குவம் செய்யவும். இதை தினம் மாற்றி தினம் உட்கொள்ளவும்; ஔஷதம் நன்கு ஜீர்ணமான பிறகு வரகுதான்யம் சேர்த்து பக்குவம் செய்த காடியோடு போஜனம் செய்யலாம். இது குஷ்டம், வெண்குஷ்டம், அபசீயென்கிற விரணம் இவற்றைத் தீர்க்கும்; இதையுபயோகிப்பதால் பிராஜாவிருத்தி யுண்டாகும்; விஷயங்களை எளிதில் கிரஹிக்கவும், அவற்றை என்றும் மறந்து விடாமல் தரிக்கவும் கூடிய புத்தி சக்தியும் அதிகரிக்கும். 22, 23.

குஷ்டத்தில் வேறு சில முறைகள். (1) கந்தகத்தை தேன், கரிய போளம் இவற்றுடன் கூட்டியாவது, (2) அதற்கு ஸம அளவான நெய்யிற் குழைத்தாவது, (3) கருங்காலி, செம்மரம் இவற்றின் பட்டையைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயத்தில் கூட்டியாவது உட்கொண்டு, பிரஹ்மசர்ய விரதம் தவறாமலிருந்து வந்தால் குஷ்டரோகம் தீரும். 24.

குஷ்டத்தில் ஹிதமும் அஹிதமுமான அன்னபானாதிகள். சம்பா தானியங்கள், வாற்கோதுமை, கோதுமை, வரகு, ப்ரியங்கு, பயறு, கடலை, துவரை, கைப்புள்ள சாகங்கள், இவையும் த்ரிபலை, பேய்ப்புடல், கருங்காலி, வேம்பு, சேராங்கொட்டை இவற்றுடன் கூட்டிய ஜாங்கல மாம்ஸமும், ஔஷதங்களடங்கிய மதுவகைகளும், வாலுழுவை சேர்ந்த மோரும் ஆக இந்த அன்ன-பானங்கள் குஷ்டத்தில் அனுகூலமானவை. ஆனுல் அம்லம், இலவணம், கடு என்னும் இச்சுவைகளையுடைய மற்ற வஸ்துக்கள் குஷ்டத்தில் இதமானவையல்ல; மேலும் தயிர், பால், வெல்லம், ஆநூபமாம்ஸம், எள்ளு, உளுந்து இவைகளையும் அடியோடு விலக்கி விடவேண்டும். 25-27.

படோல மூலாதி க்வாதம்.

பேய்ப்புடல்வேர், த்ரிபலை, பேய்த்தும்மட்டி இவை வகைக்குப் பதினறு தாநகங்கள் அளவு;[1] கொன்றை, கடுகரோஹிணீ இவ்விரண்டும் ப்ரத்தியேகம் ஆறு தாநகங்கள்; சுக்கு நான்கு தாநகங்கள்; இந்த அளவுகளின் விதம் இச்சரக்குகளை ஒரு பலம் அளவுக்குக் கிரஹித்துக் கொள்ளவும்; இவற்றை நன்றாக இடித்து ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும். இக்கஷாயத்தைச் சரீரத்திற் சேர்ந்துள்ள தோஷங்களைச் சுத்தி செய்வதற்காகப் பானம் செய்யவும். ஔஷதம் ஜீர்ணமான பிறகு ஜாங்கலதேச மிருகங்களுடையவும் பக்ஷிகளுடையவும் மாம்ஸரஸங்களோடு பழகிய சம்பா அரிசியிலாகிய அன்னத்தை புஜிக்கவும். இவ்வௌஷதத்தை ஆறு நாள் உபயோகிக்க குஷ்டம், வெண்குஷ்டம், கிரஹணீரோகம், அர்சஸ், மூத்திரக்ருச்சிரம், ஹலீமகம், இருதய சூலை, வஸ்தி சூலை, விஷமஜ்வரம் இவைகள் தீரும். 28-30.

மாணிபத்ர குடம்.

வாய்விடங்கம், நெல்லிக்கனி, கடுக்காய் இம்மூன்றும் மூன்று பலமெடை, சிவதைவேர் மூன்று பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, பன்னிரண்டு பலம் வெல்லம் சேர்த்து குளிகைகளாகச் செய்து, ஜிதேந்த்ரியர்களாயிருந்து கொண்டு இதை உபயோகித்து வர குஷ்டம், வெண்குஷ்டம், ச்வாஸ காஸங்கள், உதர ரோகங்கள், அர்சஸ், மேஹம், ப்லீஹ ரோகம், கிரந்தி, அருர்ஷிகா வென்கிற விரணங்கள், கிருமி ரோகம், குல்மம் இவை தீரும்; மாணிபத்ரன் என்கிற யக்ஷன் மோக்ஷம் விரும்பிய ஒரு பிக்ஷுவுக்கு இதை யுபதேசித்தருளினன். 31,32.

பூநிம்பாதி சூர்ணம்.

நிலவேம்பு, வேம்பு, த்ரிபலை, தாமரை கிழங்கு, அதிவிடயம், தி பிலி, பெருங்குரும்பை, ய்ப்புடல், மஞ்சள், மரம சள், வட்டத்திருப்பி, கடுகரோஹிணீ, பேய் தும்மட்டி, வாலுளுவை, வசம்பு இவை வ பாகம்; நேபாளம் இரண்டு பாகம்; சிவதை வேர் நான்கு பாகம்; பிரமியிலை எட்டு பாக இவற்றைச் சூர்ணம் செய்து, தேன்-நெ இவற்றின் அநுபானத்தோடு உட்கொள் லாம்; இது குஷ்டம், மேஹம், பிரஸுப் யென்கிற சர்மத்திற்கு உணர்ச்சியற்றுப் போ கும் நிலைமை இவற்றிற்கு உத்தமௌஷதம் 33, 34½.

த்ரிபலாதி சூர்ணம்.

த்ரிபலை, வாய்விடங்கம், திப்பிலி இவற்றின் சூர்ணத்தையாவது தைலம் நெய், தேன் இவற்றுள் ஏ தேனுமொன்றோடு உட்கொள்ளலாம். 35.

குஷ்டத்திலுபயோகிக்கக் கூடிய சில ஔஷத முறைகள்.

(1) பேயத்தி, வாய்விடங்கம், வேம்பு, கோரைக்கிழங்கு, த்ரிகடு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, வெட்பாலையின் கஷாயத்தைப் பருகிவந்தால் அது சர்ம வியாதிகளனைத்தையும் போக்கும். (2) வெட்பாலை, சித்திரமூலம், வேம்பு, கொன்றை, கருங்காலி, வேங்கை, ஏழிலம்பாலை இவற்றின் பட்டைகளின் கஷாயத்தில் கடுக்காய்களைச் சமைத்து, தேனையும் நெய்யையும் அக்கடுக்காய்களோடு கூட்டி, அவற்றை புஜிக்க குஷ்டம் தீரும். (3) மரமஞ்சள், கருங்காலி, வேம்பு இவற்றின் பட்டைகளுடைய கஷாயமும் குஷ்டஹரமாகும். (4) மரமஞ்சள், த்ரிபலை, வேம்பு, பேய்ப்புடல்வேர், கடுகரோஹிணீ, வசம்பு, செஞ்சந்தனம், அதிமதுரம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயம் முறைப்படி உபயோகிக்கப்படுமா

1. தாநகம்:—ஒரு மாஷப் பிரமாணம்; பதினறு தாநகங்கள் கொண்டது ஒரு கர்ஷம்; கர்ஷமென்பது கால்பலம்.

னால், நன்கு நிறைவேற்றப்பெற்ற தர்மம் போல், கப-பித்த ஸம்பந்தமான குஷ்டத்தைப் போக்கிவிடும். (5) இதே சரக்குகளாலான கஷாயத்தில் நல்ல க்ருதத்தைச் சேர்த்து பக்குவம் செய்து உபயோகிக்க வாத குஷ்டம் தீரும். (6) இங்ஙனமே கருங்காலி, வேம்பு, சீந்தில், தேவதாரு, மஞ்சள் இவற்றையும் தனித்தனியே பக்குவம் செய்தும் உபயோகிக்கலாம். (7) வட்டத்திருப்பி, மரமஞ்சள், சித்திரமூலம், வாய்விடங்கம், கடுகரோஹிணீ, வாலுளுவை இவற்றின் சூர்ணத்தைப் பசுமூத்திரத்திலிட்டாவது, வெந்நீரிற் சேர்த்தாவது ஒரு மாஸ காலம் பருகிவர குஷ்டரோகம், அர்சஸ், மேஹம், சோபை, பாண்டு, ஆஜீர்ணம், கிருமிரோகம் இவ்வியாதிகளால் வருந்துபவர் அவற்றிலிருந்து நிவ்ருத்தியடைவர். 36,40.

லாக்ஷாதி சூர்ணம்.

கொம்பரக்கு, நேபாளம், அதிமதுரம், த்ரிபலை, கண்டங்கத்திரி, வட்டத்திருப்பி, வாய்விடங்கம், நாயுருவி, த்ரிகடு, மஞ்சள், ஏழிலம்பாலை, ஆடாதோடை, மஞ்ஜிஷ்டி, வேப்பு, தேவதாரு, தசமூலம் இவற்றைச் சூர்ணம் செய்து, பசுமூத்திரத்தின் அனுபானத்தோடு ஒரு மாஸ காலம் உட்கொண்டு, பத்தியமான உணவுகளையும் புஜித்துவர குஷ்டம் தீரும். 41.

சிசாதி வடகம்.

மஞ்சள் ஒரு பங்கு, திப்பிலி இரண்டு பங்கு, சுக்கு மூன்று பங்கு, வாய்விடங்கம் நாலு பங்கு, சேராங்கொட்டை ஐந்து பங்கு, சித்திரமூலம் ஆறு பங்கு, பொன்னிமிளை ஏழு பங்கு, இவற்றைச் சூர்ணம் செய்து, மாத்திரைகளாக உருட்டி, பசுமூத்திரத்தின் அனுபானத்தோடு உட்கொள்ள மிகக் கடுமையான குஷ்டங்களும் நிவ்ருத்தியாம். 42.

ஸப்த ஸமா குளிகை.

த்ரிகடு, த்ரிபலை, எள்ளு, சேராங்கொட்டை, நெய், தேன், கற்கண்டு இவற்றைச் சமயெடை சேர்த்து செய்த குளிகை குஷ்டத்தைப் போக்கும்; இரஸாயனமாகவும், வ்ருஷ்யமாகவும் கூட உபயோகமாகும். இது 'ஸப்தஸமா குளிகை' எனப்படும். 43.

வாகுச்யாதி குளிகை.

ஆட்லாங்கொடி, சித்திரமூலம், மஞ்சள், வாய்விடங்கம், சேராங்கொட்டை, துவரக பீஜம் த்ரிபலை இவற்றையும் வெல்லத்தையும் சேர்த்து, குளிகைகளாகச் செய்து உபயோகித்துவர ஸமஸ்தகுஷ்டங்களும் தீரும். 44.

விடங்காதி குளிகை.

வாய்விடங்கம், சேராங்கொட்டை, ஆட்லாங்கொடி, கண்டங்கத்திரி, நிலப்பனங்கிழங்கு, கடுக்காய், நீர்த்திப்பிலி, எள்ளு, திப்பிலி இவற்றின் சூர்ணத்தை வெல்லம் சேர்த்து குளிகைகளாகச் செய்து உபயோகிக்க குஷ்டம் நிவாரணமாகும். 45.

வாகுச்யாதி சூர்ணம்.

ஆட்லாங்கொடி, வாய்விடங்கவேர், திப்பிலி, சித்திரமூலம், இரும்புச்சிட்டம், நெல்லிக்கனி இவற்றின் சூர்ணத்தை நல்லெண்ணெயிற் கலந்துட்கொள்ள கஷ்டஸாத்தியமான குஷ்டமும் நிவ்ருத்தியாகும். 46.

குஷ்டஹரமான சில முறைகள்.

(1) கடுக்காய், எள்ளு, சேராங்கொட்டை, வெல்லம் இவற்றைக் கொண்டு செய்த குளிகைகள் குஷ்டத்தைப் போக்கும். (2) சேராங்கொட்டை, வாய்விடங்கம், ஆட்லாங் கொடி இவற்றையும் வெல்லத்தையும் சேர்த்துச் செய்த குளிகைகளையாவது குஷ்டரோகி உபயோகிக்கலாம். (3) கருங்காலிப்பட்டையின் சூர்ணம், வாய்விடங்கத்தின் சூர்ணம், சிலாஜது இவற்றைத் தேனும் நெய்யும் கலந்து உபயோகிக்கலாம்;

இது கிடிபம் என்கிற சர்மவியாதி, வெண்குஷ்டம், தத்ரு வென்னும் படை இவற்றையும் போக்கும்; இவ்வௌஷதத்தை யுபயோகிக்கையில் பத்தியமான உணவுகளை மிதமாக புஜிக்கவேண்டும். (4) வாய்விடங்கம், நெல்லிக்கனி, இரும்புச்சிட்டம், திப்பிலி இவற்றின் சூர்ணத்தைச் சர்க்கரையோடும் எண்ணெயோடும் கலந்துட்கொள்ளலாம்; இது மிக பலமான குஷ்டங்களனைத்தையும் நிவ்ருத்தி செய்யும். (5) கோரைக்கிழங்கு, த்ரிகடு, த்ரிபலை, மஞ்ஜிஷ்டி, தேவதாரு, தசமூலம், ஏழிலம்பாலை, வேப்பம்பட்டை, பேய்த்தும்மட்டி, சித்திரமூலம், பெருங்குரும்பை இவற்றை ஸம பாகமாகச் சேர்த்து சூர்ணம் செய்யவும்; இவற்றுடன் ஸக்துவென்னும் மாச்சரக்கை ஒன்பது பாகம் சேர்க்கவும்; இச்சூர்ணத்தை அதற்குச் சம அளவான தேனில் கலந்து தினந்தோறும் உட்கொள்ளவும்; அநுபவத்தில் உபயோகமுள்ளதென்று தெரிந்துகொண்டுள்ள இம்முறை குஷ்டத்தைப் போக்கவல்லது; மேலும் வீக்கம், பாண்டு ரோகம், வெண்குஷ்டம், கிரஹணீரோகம், அர்சஸ், அண்டவீக்கம், பகந்தரம், பிடகைகளென்னும் கட்டிகள், சொறி, கோடமென்னும் தழும்பு, அபசீ இவைகளும் தீரும். (6) துவரக பீஜங்களையும், சேராங்கொட்டையையும், ஆட்லாங்கொடியையும், சித்திர மூலத்தையும், சிலாஜதுவையும் இரஸாயநாத்தியாயத்திற் கூறப்படும் முறைப்படி குஷ்டரோகி உபயோகிக்கலாம். 47—53.

இங்ஙனம் முற்கூறிய முறைகளால் தேஹத்தின் உட்புறத்திலுள்ள தோஷம் பரிஹரிக்கப்பட்ட பின்பு, சர்மத்தின் மீதுள்ள விகாரங்களைப் போக்குவதற்காக, வெளியில் லேபநம் முதலியதை யுபயோகிப்பது ஹிதமாகும். உட்புற தோஷம் விலக்கப்படாமல் தேஹம் கோளாறடைந்திருக்கையில் தீக்ஷ்ணமான லேபநங்களால் கிளறப்பட்டு குஷ்டம் முன்னிலும் அதிகரித்து விடும். நிலைத்து கடினமான தடிப்புகளையுடைய குஷ்டங்களின் மீது போட்டலிகைகளைக் கொண்டு[1] ஸ்வேதம் செய்வது ஹிதமாம்; ஸ்வேதசிகித்ஸை செய்து பருத்துப் பக்குவமாயுள்ள குஷ்டவிரணத்தைச் சஸ்திரங்களால் கீண்டு, லேபநௌஷதங்களை அவற்றின்மீது பிரயோகிக்க வேண்டும். பரிச உணர்ச்சியை யழித்த எந்த குஷ்டங்களில் சஸ்திரம் இறங்குவதில்லையோ அவற்றில் இரத்தத்தையும் மற்ற தோஷத்தையும் வெளிப்படுத்திவிட்டு க்ஷாரத்தைப் பிரயோகிக்க வேண்டும். அதிக கடினமாகவும், கொடியதாகவும், பரிசவுணர்ச்சியைப் போக்கி நிலைத்து நெடுநாட்களா யிருப்பதுமான குஷ்டத்தில், ரோகியானவன் தகுந்த ஔஷதங்களை யுட்கொண்டு, மந்திரப் பிரயோகத்துடன் விஷகுணமுள்ள சரக்குகளால் லேபநம் செய்யவும்; பிறகு விஷஹரமான ஔஷதங்களைக் கொண்டும் லேபநம்செய்யலாம். சலநமற்றவையும், மிகப் பரிசவுணர்ச்சி யிழந்தவையும் வியர்வையைத் தடுப்பவையும், தினவுண்டு பண்ணுபவையுமான குஷ்டங்களை வறட்டிகளாலும், கடினமான கடல்நுரைகளாலும், சஸ்திரங்களாலும் தேய்த்துச் சுரண்டிய பின் அவற்றிற்கு லேபநமிடவேண்டும். 54—58.

குஷ்டத்தில் லேபநம் முதலியது செய்யுமில்லை மை முதலியன.

முஸ்தாதி க்வாதம்.

கோரைக்கிழங்கு, த்ரிபலை, மருக்காரை, புங்கு, கொன்றை, வாலுளுவை, வாற்கோதுமை, ஏழிலம்பாலை, கோஷ்டம், ஞாழல், மரமஞ்சள், வெண்கடுகு இவற்றைக் கஷாயமிட்டு, அக்கஷாயத்தினால் ஸ்நானம் செய்யலாம்; இக்கஷாயமே வமந-விரேசநங்களுக்காகவும் உட்கொள்ளத் தகுந்தது; இது தேஹநிறத்தைச் செம்மைப்படுத்தும்; சர்

பத்திலுள்ள தோஷங்களைச் சிதைத்துப் போடவும் ஏற்றது; சர்மதோஷம், குஷ்டம், வீக்கம் இவற்றைத் தூண்டி சமநம் செய்யும்; பாண்டு ரோகத்தையும் போக்கும். 59, 60.

கரவீர மூலாதி லேபம். அலரிவேர், வேப்பம்வேர், வெட்பாலையின் வேர், கொன்றையின் வேர், சித்திரமூலம் இவற்றைச் சூர்ணம் செய்து, பசு மூத்திரத்திலிட்டுக் காய்ச்சி, கரண்டியில் பற்றிக் கொள்ளும் படியான பாகுபதத்தில் இறக்கி லேபம் செய்ய குஷ்டம் நீங்கும். 61.

ச்வேத கரவீர மூலாதி லேபம். வெண்ணலரிவேர், குடசப்பாலையின் கனி, புங்கங்காய், மரமஞ்சளின் தோல், அவற்றின் புஷ்பங்கள், அவற்றின் தளிர்கள் இவற்றைக் கொண்டு செய்த லேபம் குஷ்டஹரமான ஸித்தௌஷதமாகும். 62.

சிரீஷத்வ காதி லேபம். காட்டுவாகையின் பட்டை, காட்டுவாகைப் பூ, பருத்தியின் பட்டை, கொன்றையிலை, மணத்தக்காளியிலை இவற்றை அரைத்து லேபமாக உபயோகிக்க நான்கு விதமான குஷ்டங்களும் தீரும். 63.

வ்யோஷாதி லேபம். த்ரிகடு, வெண்கடுகு, மஞ்சள், ஒட்டடை, வாற்கோதுமையின் சுணை, உப்பு, சித்திரமூலம், கோஷ்டம் இவை ஸமபாகம்; நாபி அரை பாகம்; இவற்றை கல்வத்திலாட்டி, கால்பல மெடையில் குளிகைகளாகச் செய்து, அதை அப்போதைக்கப்போது இழைத்து லேபநம் செய்யலாம்; இது வெண்குஷ்டத்தையும் குஷ்டத்தையும் போக்குவதற்குச் சிறந்த லேபம். 64.

நிம்பாதி லேபம். வேப்பு, மஞ்சள், மரமஞ்சள், துளஸி, பேய்ப்புடல், கோஷ்டம், அமுக்கிருங்கிழங்கு, தேவதாரு, முருங்கை, கடுகு, தும்புருவென்னும் அசோக மரப்பட்டை, கொத்தமல்லிவிதை, இலவங்கப்பட்டை, கருங்கச்சோரம் இவற்றைச் சமபாகம் சேர்த்து சூர்ணம் செய்யவும்; முதலில் தேஹத்தில் தைலத்தைப் பூசிக்கொண்டு, பிறகு முற்கூறிய சூர்ணத்தை மோரில் குழைத்து உடம்பில் பூசவும். இதனால் சொறி, கட்டிகள், தழும்புகள், குஷ்டங்கள், வீக்கம் இவை நிவ்ருத்தியாகும். 65, 66.

முஸ்தாதி லேபம். கோரைச் கிழங்கு, சீந்திற்கொடி ஸமூலம், மரமஞ்சள், அன்னபேதி, கம்பில்லம், கோஷ்டம், வெள்ளிலோத்தி, கந்தகம், சாம்பிராணி, வாய்விடங்கம், மனச்சிலை, தாளகம், அலரிமரப்பட்டை இவற்றைச் சூர்ணம் செய்து கொள்ளவும்; தைலத்தை உடம்பிற் பூசிக்கொண்டு, பிறகு இச்சூர்ணத்தைத் தேய்க்கவும்; தத்ருவென்கிற படை, சொறி, கிடிபமென்கிற தழும்பு, சிரங்கு, விசர்ச்சிகையென்கிற சர்மவியாதி இவையெல்லாம் நிவாரணமாகும். 67,68.

ஸர்ஷப லேபம். கடுகின் கல்கத்தைக் கள்ளித்தண்டுகளில் பரப்பி, உமித்தணலில் பக்குவம் செய்து, லேபநமாயுபயோகிக்க, விசர்ச்சிகையென்கிற சர்மரோகமானது, வெட்கத்தை பலமான காதல் போலப் போக்கிவிடும். 69.

மனச்சிலாதி லேபம். மநச்சிலை, தாளகம், மிளகு இவற்றை எண்ணெயிலும் எருக்கம் பாலிலும் அரைத்து, குஷ்டத்தைப் போக்குவதற்கு லேபமாக உபயோகிக்கலாம். 69½.

கரஞ்ஜபீஜாதி லேபம். புங்கம்விதை, தகரவிதை, கோஷ்டம் இவற்றைப் பசுமூத்திரம் சேர்த்து அரைத்து, கல்கமாகச் செய்து உபயோகிக்க முற்கூறிய லேபம் போலவே குஷ்டத்தைப் போக்கும். 70.

குக்குல் வாதி லேபம். குங்கிலியம், மிளகு, வாய்விடங்கம், கடுகு, அன்னபேதி, ஸர்ஜரஸம், கோரைக்கிழங்கு, ஸரள தேவதாரு, காரகில், மனச்சிலை, கோஷ்டம, கம்பில்லம், மஞ்சள், மரமஞ்சள் இவற்றை அப்பொழுதே ஆட்டியெடுத்து, சூடுள்ளதான தைலத்தில் அரைத்து; சூரியபுடம் வைத்து, குஷ்டத்தின்மேல் பலமாகத் தேய்க்க அவ்வியாதி தீரும். 71,72.

மரிசாதி லேபம். மிளகு, பச்சிலை, கோஷ்டம், மனச்சிலை, அன்னபேதி இவற்றைத் தைலத்திற் கலக்கி,ஒரு செப்புப் பாத்திரத்தில் ஏழு நாட்கள் வைத்திருந்து, அப்பால் அதை தேஹத்திற் பூசிக்கொண்டு வரவும்; இவ்விதம் உபயோகித்துக் கொண்டு வெயிலில் இருந்து வர ஏழு நாட்களில் ஸித்மம் என்கிற வெண்குஷ்டம் நீங்கும். அதிக நாட்படாத வெண்குஷ்டத்தில் இவ்வௌஷதத்தை மேற்பூச்சாக உபயோகித்து வர ஒரு மாஸ காலத்திலேயே ஸ்நாநமில்லாமலே நன்கு சுத்தியடைந்து அப்பிணியாளி வியாதியிலிருந்து நிவ்ருத்தியடைவான். 73,74.

ஜ்யோதிஷ்மதீ தைல லேபம். ஏழு முறை வடிக்கட்டியெடுத்த நாயுருவி க்ஷாரம் கரைத்த ஜலத்தில் வாலுளுவைத் தைலத்தைப் பக்குவம் செய்து, அப்யங்கம் செய்து வர, வெண்குஷ்டம் தீரும். 75.

வாயஸஜங்காதி லேபம். தக்காளிவேர், சங்கங்குப்பி யிலை, தாமரைமணி இவற்றை மோர்விட்டு அரைத்து, மங்கள வாரத்தில் லேபநம் செய்ய வெண்குஷ்டம் தீரும். 76.

ஜீவந்த்யாதி லேபம். சிறுபாலை, மஞ்ஜிஷ்டி, மரமஞ்சள், கம்பில்லம், பால்துத்தம்; இவற்றை க்ருதத்திலும் தைலத்திலும் சேர்த்து பக்குவம் செய்யவும்; பக்குவமான பிறகு ஸர்ஜரஸமும், தேன் மெழுகும் சேர்த்து ஒருமிக்கக் கூட்டவும். இதை யுபயோகிக்க கால் சுருங்கி வெடித்துப் போதல், ஏககுஷ்டம், கிடிமம் என்னும் ஜமூம்பு, மற்றுமுள்ள குஷ்டவிகாரம், சேற்றுப் புண் இவை நிவாரணமாகும். 77, 78.

வஜ்ர தைலம். ஏழிலம்பாலையின் வேர், காட்டு வாகையின் பட்டை, அலரியின் பட்டை, எருக்கம் பட்டை, ஜாதிமல்லிகைக் கொடியின் பட்டை, சித்திரமூலப்பட்டை, செம்மந்தாரையின் பட்டை, வேப்பம்பட்டை, புங்கம் விதை, கடுகு, தகரவிதை, த்ரிபலை, வாய்விடங்கம், த்ரிகடு, மஞ்சள், மரமஞ்சள் இவற்றையும் பசுமூத்திரத்தையும் நல்லெண்ணெயிற் சேர்த்துக் காய்ச்சி அப்யங்கம் செய்யவும்; வாதகபங்களின் கோளாறுலுண்டான சர்மவியாதிகளையும், கெட்டுப்போன நாடீவ்ரணங்களையும் துலைப்பதற்கு வஜ்ராயுதம் போன்றதான இவ்வௌஷதம் 'வஜ்ரதைலம்' எனப்படுகிறது. 79,80.

மஹாவஜ்ர தைலம். ஆமணக்கு வேர், இரஸாஞ்ஜநம், காட்டுக் கடம்பு, கடம்பு, கண்டு பாரங்கி, கம்பில்லம், வாய் விடங்கம், ஞாழல், துமட்டி, நொச்சிலி, சேராங்கொட்டை, தேவதாரு, பிரம்மதண்டி, ஸரளதேவதாரு, குங்கிலியம், மனச்சிலை, இந்துப்பு, தாளகம், சுக்கு இவற்றையும், ஸம அளவாக எருக்கம்பால் கள்ளிப்பால் இவற்றையும் சேர்த்துத் தைலம் காய்ச்சவும்; இதுவெண்குஷ்டம், அர்சஸ், கிரந்திகள், கண்டமாலை இவற்றைப் போக்கும்; முற்கூறிய வஜ்ரதைலத்தினும் குணத்திற் சிறந்தது; ஆகவே இது "மஹாவஜ்ர தைலம்" எனப்படுகிறது. 81, 82.

**குஷ்டாதி தைலம்.**

கோஷ்டம், அலரி, கரிசலாங்கண்ணி, எருக்கு, பசுமூத்திரம், கள்ளிப்பால், இந்துப்பு இவற்றின் கஷாயத்தில் தைலம் பக்குவம் செய்யவும்; வத்ஸநாபியைக் கல்கமாகச் சேர்க்கவும். இதை அப்யங்கம் செய்துகொள்ளவும்; குஷ்டத்தைப் போக்குவதற்கு இது சிறந்த தைலம். 83.

**ஸிக்த்தகாதி லேபம்,**

தேன் மெழுகு, ஸிந்தூரம், குங்கிலியம், துத்தம், இரஸாஞ்ஜநம்; இவற்றைக் கடுகெண்ணெயிற் சேர்த்து பக்குவம் செய்து கொள்ளவும்; இது சிரங்கு, விசர்ச்சிகையென்னும் சர்மவியாதி இவற்றை ஜடிதியில் நிவாரணம் செய்யும். 84.

**லாக்ஷாதி லேபம்.**

அரக்கு, த்ரிகடு, தகரவிதை, ஸாளதேவதாருப்பட்டை, கோஷ்டம், வெண்கடுகு, மஞ்சள் தாமரைமணி இவற்றைச் சூர்ணம் செய்து, மோரில் கலந்து லேபநம்செய்ய தத்ருவென்கிற படை தீரும். 85.

**வாத-கப குஷ்டஹரமான ஆறு லேபங்கள்.**

(1) சித்திரமூலம், முருங்கவிதை; (2) சீந்தில், நாயுருவி, தேவதாரு; (3) சருங்காலி, அகில்; (4) சிவதைவேர், நேபாளம், எலியால்; (5) அரக்கு, இரஸாஞ்ஜநம், ஏலம்; (6) சாறடை; இந்த ஆறுவிதமான முறைகளில் எதையாவது சூர்ணம் செய்து, தயிரின்மேலுள்ள ஆடையிற் குழைத்து, வாத குஷ்டத்திலும் கபகுஷ்டத்திலும் வருந்துபவர் மேலே லேபநம் செய்து கொள்ளலாம். 86,87.

**வாலகாதி லேபம்.**

வெட்டிவேர் ஒரு பங்கு, கோஷ்டம் இரண்டு பங்கு, அயப்பொடி மூன்று பங்கு, நாககேஸரம் நாலு பங்கு, இலவங்கப்பத்திரி ஐந்து பங்கு, சந்தனம் ஆறு பங்கு, தாமரைக்கிழங்கு ஏழு பங்கு; இவற்றை பித்த-கபங்களாலுண்டான குஷ்டங்களில் லேபமாக உபயோகிக்கலாம். 88.

**கடுமையான குஷ்டங்களில் சில லேபநாதிகள்.**

திக்தரஸமுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதங்களாலும், ஜலத்திற் கழுவியெடுத்த க்ருதத்திலும் அழற்சியுடன் கூடிய குஷ்டங்களில் அப்யங்கம் செய்யலாம். துர்நீர்ப் பொருக்குள்ளதும், அவயவங்களைச் சிதறச்செய்வதும், அழற்சியுண்டு பண்ணுவதும், கொப்புளங்களோடு கூடியதும், அவயவங்களைப் பிளக்கச் செய்யும் சர்மதளம் என்கிற நிலைமையைப் பெற்றதுமான குஷ்டங்களில் சந்தனம், அதிமதுரம், வறள்தாமரை, நைதல் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்துள்ள தைலங்களை அப்யஞ்ஜநத்திற்கு உபயோகிக்கலாம்; குளிர்ச்சி பொருந்திய பிரதேஹங்களும், லேபநங்களும், ஸிராவ்யதையும், விரேசநமும், திக்தரஸமுள்ள வஸ்துக்களால் பக்குவம் செய்த க்ருதமும் இவற்றில் உபயோகமானவை. 89,90.

**கிருமிகுஷ்டத்தில் கதிராதி யோகம்.**

கருங்காலி, ஆடாதோடை, வேம்பு, வெட்பாலை, த்ரிபலை, வாய்விடங்கம், பேய்ப்புடல், சீந்தில் இவற்றைப் பசுமூத்திரத்தில் கூட்டியரைத்து உட்கொள்வதற்கும், மேலே லேபநம் செய்வதற்கும் உபயோகிக்க, கிருமி குஷ்டம் நீங்கும். 91.

**வாதாதி குஷ்டங்களில் முக்கியமான சிகிச்சைகள்.**

(1) வாதம் அதிகரித்துண்டான குஷ்டங்களில் முதலில் க்ருதப் பிரயோகமும், (2) கபம் அதிகரித்துள்ள குஷ்டங்களில் வமநமும், (3) பித்தம் அதிகரித்துள்ள குஷ்டங்களில் இரக்த மோக்ஷணமும் விரேசநமும் ஹிதமாம். 92.

இரத்தத்திலுள்ள தோஷங்களை வெளிப்படுத்தி, ஆசயங்களைச் சுத்தி செய்து கொண்ட குஷ்ட ரோகிகளுக்கு உபயோகிக்கப்படும் லேபங்களால் உடனே நல்ல பலனுண்டாகும். 93.

குஷ்டத்தில் நல்ல பலனுண்டாகுமாறு லேபங்களைப் பிரயோகித்தல்.

சோதந சிகித்ஸைகளால் தோஷம் வெளிப்படுத்தப்பட்டு, இரக்த மோக்ஷணம் செய்து, வெளிப்புற உட்புற விகாரங்களுக்குச் சமநம் செய்து, காலம் தவறாது ஸ்நேஹமும் பிரயோகிக்கப்படுமானால், ஸாதாரணமாக நிவ்ருத்திக்கக்கூடிய குஷ்டம் தவறாமல் நிவாரணமாகும். 94.

ஸாதாரண குஷ்டத்தைப் போக்கும் ஸாதாரண உபாயம்.

மிகவும் தோஷம் அதிகரித்த குஷ்டரோகிக்கு அநேக முறை சோதந சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும்; ஆனால் சோதநங்களால் பிணியாளிக்குப் பிராணாபாயம் நேரிடாதபடி ஜாக்கிரதையாக சிகித்ஸை செய்யவேண்டும். தோஷத்தை மிதமிஞ்சி வெளிப்படுத்தி விட்டால், ரோகி மிகவும் துர்பலமாகப் போவான்; அப்பொழுது பிரகோபமடையும் வாயு பலஹீனமான அப் பிணியாளியை எளிதில் இறக்கச் செய்யும். 95.

குஷ்டத்தில் சோதநம் செய்யு முறை.

(1) குஷ்டத்தில் ஒவ்வொரு பக்ஷம் தோறும் வமநம் செய்விக்க வேண்டும்; (2) விரேசநத்தை மாஸத்திற் கொரு முறையாகச் செய்விக்கவேண்டும்; (3) மூன்று நாட்களுக்கு ஒரு தடவை சிரோ விரேகம் செய்விக்க வேண்டும்; (4) ஆறு மாஸங்களுக்கு ஒரு முறை இரக்த மோக்ஷணம் செய்விக்கவேண்டும். 96.

குஷ்டத்தில் வமநாதிகள் பிரயோகிக்கும் கால நிர்ணயம்.

எந்த குஷ்டரோகிக்கு வமநமாவது விரேகமாவது போதுமாறு நிறைவேற்றப்படவில்லையோ அவனது தேஹத்தில் தோஷங்கள் முன்னிலும் அதிகமாக வியாபித்துவிடும்; இதனால் அந்த வியாதி சிகித்ஸிக்கக் கூடாததாய்விடும். ஆகையால் இவனது தேஹத்திலிருந்து தோஷமனைத்தையும் வெளிப்படுத்திவிடவேண்டும். 97.

குஷ்டத்தில் தோஷங்களை முற்றிலும் வெளிப்படுத்தல்.

விரதாநுஷ்டாநம், யம-நியம ஸேவை, தாநம், நல்ல ஆசாரம் இவற்றைச் சரிவரவே செய்தல், அந்தணர்களையும் - தேவதைகளையும்-குருமார்களையும் பூஜித்தல், ஸர்வப் பிராணிகளிடமும் அன்பு பாராட்டல், ஜினதேவர் - ஜினதேவ புத்திரர் [1] - தாரகைகள்-சூரியன்-இவர்களை ஆராதிப்பது ஆக இவைகள், தோஷங்களாலும் தீவினைகளாலும் ஸம்பவித்ததாகத் தெரியவரும் குஷ்டத்தை முற்றிலும் போக்கிவிடும். 98.

குஷ்டத்தில் யம-நியம-விரதாதிகளைச் செய்தல்.

---

1 நிர்ணய ஸாகர அச்சுக்கூடத்தில் வெளியான அஷ்டாங்க ஹ்ருதயத்தில் "சிவ சிவஸுத" என்றிருக்கிறது; அஷ்டாங்க ஸங்க்ரஹத்தில் "ஜிந ஜிநஸுத" என்றிருக்கிறது; அஷ்டங்க ஸங்கரஹ பாடம் முற்றிலும் பிழையற்றதென்பது நமது கொள்கை. அஷ்டாங்க ஹ்ருதயம் முதற்பாகத்தின் முகவுரையில் இது ஸம்பந்தமாக வேறு சில விவரங்கள் கூறப்பட்டுள்ளன.

# இருபதாவது அத்தியாயம்.

இனி ச்வித்ரசிகித்ஸை[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

ச்வித்ரத் திற்கு ஆரம்பத்திலேயே பலமான சிகித்ஸை அவசியம்.

ச்வித்ரம் என்னும் வெண்குஷ்டம் குஷ்டத்தை விட கோரமானதும், அதைவிட அதி சீக்கிரமாக அஸாத்தியமான நிலைமையைப் பெறுவதுமான வியாதி. ஆகையால் கிருஹத்தில் தீப்பற்றியதற்குச் செய்வதுபோல் வெகு சீக்கிரத்தில் அவ்வியாதியைப் போக்குவதற்கு முயலவேண்டும். 1.

ச்வித்ரத்தில் முதலில் விரேசநம் முக்கியம்.

ச்வித்ரத்தில் முதலிலேயே தேஹத்திற்கு விசேஷமாக சோதந சிகித்ஸையையே பிரயோகிக்க வேண்டும். ஆட்லாங் கொடியின் கஷாயத்தை வெல்லம் கூட்டி உட்கொள்ளச் செய்வது ச்வித்ரத்தில் சிரேஷ்டமான ஸ்ரம்ஸந சிகித்ஸையாம்.[2] இதைப் பருகிய பிறகு, தேஹத்தில் தைலத்தைப் பூசிக்கொண்டு, சக்திக்கியன்ற வளவு வெயிலில் இருக்கவும்; விரேகமான பிறகு நாவறட்சியுண்டாகும்; அதற்காக மூன்று நாட்கள் பேயாவைப் பானம் செய்யவும். 2, 3.

ச்வித்ரத்தில் கொப்புளங்களுக்கு சிகித்ஸைகள்.

வெண்குஷ்டத்தில் தேஹத்தில் கொப்புளங்கள் உண்டானால் அவற்றைக் குத்தி யுடைத்துவிட வேண்டும். கொப்புளங்களிலுள்ள துர்நீர் வடிந்து போனபிறகு, (1) சந்தனம், கருங்காலி, ஞாழல் இவற்றை ஜலம் விட்டுக் காய்ச்சி இக்கஷாயத்தையாவது, (2) அவரவரது தேஹபலத்திற்கேற்றவளவில் பலாசக்ஷாரத்தை[1] பாணிதத்துடன்[2] கலந்தாவது ஒவ்வொரு நாளும் விடியற் காலையில் பிணியாளி யுட்கொள்ளவேண்டும். (3) பேயத்திப்பட்டை, தான்றி மரத்தின் பட்டை இவற்றைக் கஷாயமிட்டு, அதில் கற்பூரம், கடுகு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, அதைப் பருகிய பிறகு வெண் குஷ்டமுள்ளவன் வெயிலில் இருக்க, அதனால் உடம்பில் கொப்புளங்கள் கிளம்பும்; அப்பொழுது உப்பில்லாமல் மோர் கலந்து போஜனம் செய்யவும். 4—6.

கோமூத்ராரிஷ்டம் முதலியன.

(1) நெய் வைத்துப் பழகிய பாத்திரத்தில் பசுவின் மூத்திரம் ஊற்றி, அதில் சித்திரமூலம், த்ரிகடு இவற்றைச் சேர்த்து, தேன் கூட்டிப் பதினைந்து நாட்களளவும் சேமித்து வைத்திருந்து, வெண் குஷ்டிகள் இதைப் பருகவும்; இப்பிணியாளருக்குக் குஷ்டத்திற் கூறியுள்ள மற்ற உபசாரமும் செய்யலாம். (2) தைலத்திற் பொரித்து, இரும்புப் பாத்திரத்தில் வைத்திருந்த கரிசிலாங்கண்ணியையாவது புஜிக்கலாம்; கருங்காலிப் பட்டையிட்டுக் காய்ச்சிய பாலையும் அதற்கு அனுபானமாயுட் கொள்ளலாம். இது ச்வித்ரத்தைப் போக்கும். 7, 8.

பூதீகிலைபாதி லேபம்.

புங்கு, எருக்கு, கொன்றை, கள்ளி, ஜாதிமல்லி இவற்றின் தளிர்களைப் பசுமூத்திரத்தில் ஆட்டியெடுத்து, மேலே லேபமாகப் பூசி வந்தால் வெண் குஷ்டம், தத்ரு வென்னும்

1 ச்வித்ரம்-வெண் குஷ்டம்.

2 ஸ்ரம்ஸநம்-ஸுகவிரேசநம்.

1. பலாசக்ஷாரம்—பலாசமரத்தின் எல்லா பாகங்களையும் (ஸமூலமாகச்) சுட்டு, ஸூத்திர ஸ்தாநத்தின் முப்பதாவது அத்தியாயத்திற் கூறியிருப்பதுபோல் க்ஷாரம் பக்குவம் செய்தல்.

2. பாணிதம்-முதற் புத்தகம் 37-ம் பக்கம் பார்க்க.

படை, அர்சஸ், சிரங்கு, கோடம், கெட்டுப்போன நாடிவிரணம் இவை நிவ்ருத்தியாகும். 9

வ்யாக்ர சர்ம கஜ சர்ம லேபங்கள்

புலியின் சர்மத்தையாவது, யானையின் சர்மத்தையாவது சுட்டு, அதன் கரியைத் தைலம் விட்டுக் குழைத்து, வெண் குஷ்டத்தில் லேபமாக உபயோகிப்பது நலம். 9½.

பூதிகீடலேபம்.

கொன்றையின் க்ஷாரத்தோடு நாகப் பூச்சியைச் சேர்த்து கல்கம்போல் ஆட்டி, தைலமும் கூட்டிக் குழைத்துப் பூசலாம்; வெண் குஷ்டத்தைப் போக்குவதற்கு இந்த ஒரு லேபமே போதுமானது. 10.

பல்லாதக லேபம்.

சேராங்கொட்டைகளை உடைத்து, இரவெல்லாம் பசுமூத்திரத்தில் ஊறவைத்து, மறு நாள் பகலெல்லாம் நிழலில் உலர்த்தியெடுத்துக் கொள்ளவும்; இவ்விதமே மூன்று முறை பக்குவம் செய்த பிறகு, அவ்வித்துகளை மைபோல ஆட்டியெடுத்து, கள்ளிப்பால் விட்டுக் குழைத்து, வெண்குஷ்டத்தைப் போக்குவதற்கு லேபமாக உபயோகிக்கலாம். 11.

கிருஷ்ண ஸர்ப்ப சர்மலேபம் முதலியன.

(1) கருநாகத்தின் உடலிலிருந்து உரிந்த சர்மத்தை எரித்தெடுத்த மையைத் தான்றிக் காயெண்ணெயிற் குழைத்து வெண் குஷ்டத்தின்மேல் லேபநம் செய்யலாம். (2) மயிலின் பித்தத்தையாவது லேபமா யுபயோகிக்கலாம். (3) வெட்டி வேரை எரித்தெடுத்த கரியையாவது தான்றிக்காயெண்ணெயிற் குழைத்து லேபமாயுபயோகிக்கலாம். 12.

அவல்குஜபீஜாதி லேபங்கள்.

(1) வாலுளுவை அரைச்சேர், அரிதாளம் அதிற் காற்பங்கு; இவற்றைப் பசு மூத்திரம் விட்டு அரைத்து, வெண் குஷ்டத்தின்மேல் லேபநம் செய்ய; சர்மத்திற்கு இயற்கை நிறம் உண்டாகும். (2) யானையின் சாணத்தை யுலர்த்தி, நன்றாக எரித்து, யானையின் மூத்திரத்திலேயே அந்த சாம்பரைக் கரைத்து வடிக்கட்டி, அதிலிருந்து வரும் க்ஷாரத்தை ஒரு திரோணப் பிரமாணமெடுத்து, வாலுளுவை வித்தை அதில் பத்து பங்கு சேர்த்துச் சமைக்கவும். மிகவும் பிசுக்குள்ள இந்த லேபத்தை வெண் குஷ்டியின் தேஹத்தில் பலதடவை தேய்த்துவர, வெண்குஷ்டம், மஷகம், திலகாலகம், மாம்ஸ வளர்ச்சியி னுலுண்டான விரணம் இவற்றில் எதுவும் நிவ்ருத்தியாகும். 13—15.

பல்லாதகாதி லேபம்.

சேராங்கொட்டை, சித்திரமூலம், கள்ளிவேர், எருக்கம் வேர், குன்றுமணி, த்ரிகடுகம், சங்குப்பொடி, மயில் துத்தம், கோஷ்டம், பஞ்சலவணம்,[1] த்விக்ஷாரம்,[2] நீர்த்திப்பிலி இவற்றைக் கள்ளிப்பாலிலும் எருக்கம் பாலிலும் சேர்த்துக் காய்ச்சி, தடிப்பாகப் பக்குவமானதும், இரும்புப் பாத்திரத்தில் எடுத்துவைத்துக்கொண்டு, ஒரு சலாகையினுல் எடுத்து, குஷ்டம், வெண்குஷ்டம், திலகாலகம், துர்மாம்ஸ வளர்ச்சி, அர்சஸ், சர்ம கீலகம் இவற்றில் லேபமாக உபயோகிக்கலாம். 16, 17.

ச்வித்ரம் நிவாரணமாவது அரிது.

சோதந சிகிஸ்தை, இரக்த மோக்ஷணம், ரூக்ஷத்தன்மையுண்டாக்கும் சிகித்சை, ஸக்துவென்னும் மாப்பண்டங்களை புஜித்தல் இச்சிகித்ஸைகளால் எவனே ஒருவனுக்கே, தீவினைப்பயன் தீர்ந்திருக்குமாயின் வெண்குஷ்டம் நிவ்ருத்தியாகும். 18.

1. பஞ்ச லவணங்கள்—முதற் புத்தகத்தில் 62-ம் பக்கம் பார்க்க.

2. த்விக்ஷாரம்—அல்லது க்ஷாரத்வயம்; யவக்ஷாரம் ஸர்ஜக்ஷாரம் என்பவையாம்.

## கிருமி சிகித்ஸை.

வயிற்றுக் கிருமிகளை வெளிப்படுத்தும்சிகித்ஸை.

வயிற்றில் கிருமிகளையுடைய பிணியாளிக்கு ஸ்நேஹ-ஸ்வேத சிகித்ஸைகளைச் செய்து, வெல்லம்-பால் - மத்ஸ்யம் இவற்றை யுட்கொள்ளச் செய்து, கிருமிகளும் கபமும் இடம் விட்டுக் கிளப்பப்பட வேண்டும்; பிறகு அவ்விரவெல்லாம் ஸுகமாயிருந்து, மறு நாள் அடியிற் கூறப்படும் திரவத்தினால் வஸ்தியைப் பிரயோகிக்கவும். சரிபாதி ஜலம் கலந்த பசு மூத்திரத்தில் ஸுரஸாதிகணச் சரக்குகளைச் [1] சேர்த்து கஷாயம் காய்ச்சி, அதில் திப்பிலி, மருக்காரை, வாய் விடங்கம் இவற்றின் கல்கத்தைக் கூட்டி, தைலமும் ஸர்ஜ க்ஷாரமும் கலந்து கொண்டு வஸ்தியில் உபயோகிக்கவும். அவ்விதம் நிருஹம் செய்த பிறகு அதே தினத்திற் பகலில் மருக்காரை, திப்பிலி இவற்றின் கஷாயத்தில் சிவதை வேரின் கல்கத்தைக் கலக்கி விரேசநமாவதற்காக உட்கொள்ளச் செய்யவும். அங்ஙனம் மேலும் கீழும் சோதந சிகித்ஸையை நிறைவேற்றிய பிறகு, பஞ்ச கோலங்களைச் சேர்த்த பேயா-விலேபி முதலியவற்றை முறைப்படி யுபயோகிக்கவும். கடுரஸமாகவும் - திக்தரஸமாகவும் - கஷாயரஸமாகவுமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்த கஷாயங்களை மேலே ஊற்றிக் குளிப்பாட்டவும். பிறகு அடுத்தாற்போல வாய்விடங்கம்சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தினால் அவனுக்கு அநுவாஸனம் செய்துவைக்கவும். 19—23.

சிரஸ்ஸைப் பற்றிய கிருமிகளுக்கு சிகித்ஸை.

சிரஸ்ஸைப் பற்றிய கிருமி ரோகத்தில் சிரோரோகப்ரதிஷேதவிதி அத்தியாயத்திற்[2] கூறப்படும் சிகித்ஸையைச் செய்யவேண்டும். பிறகு திக்தரஸமும் கடுரஸமும் மிகுதியாயுள்ள சரக்குகளையும் சொற்ப ஸ்நேஹத்தையும் சேர்த்து பக்குவம் செய்த போஜனத்தைக் கொடுக்கலாம். 24.

கிருமிகளைப் போக்கும் யவாகூ முதலிய முறைகள்.

(1) வாய்விடங்கம், திப்பிலி, மிளகு, மோடி, முருங்கை இவற்றை மோரில் சேர்த்துப் பக்குவம் செய்த யவாகூவென்கிற கஞ்சியில் ஸர்ஜக்ஷாரம் சேர்த்து பானம்செய்யலாம். (2) காட்டுவாகை, நாயுருவி, வேம்பு, பாக்கு இவைகளின் ஸ்வரஸத்தை உட்கொள்ளக் கொடுக்கலாம். (3) பலாசம் வித்து, நீர்த்திப்பிலி, புங்கு இவற்றின் தனித்தனி ஸ்வரஸத்தையாவது இதனுடன் பருகலாம். (4) ஸுரஸாதி கணத்திற் கூறிய சரக்குகளின் தனித்தனி ஸ்வரஸத்தையாவது தேன் கூட்டியுட்கொள்ளலாம். (5) குதிரையின் மலத்தை உலர்த்தி, அச்சூர்ணத்தை வாய் விடங்கக் கஷாயத்திலாவது, த்ரிபலையின் கஷாயத்திலாவது நூறு முறை பாவனை செய்தெடுத்து, கிருமிரோகி, அதைத் தேனிற் கலந்து புஜிக்கலாம். (6) சிரஸ்ஸைப் பற்றிய கிருமிகளில் சிரோரோக ப்ரதிஷேதாத்தியாயத்திற் கூறுகிறபடியே ப்ரதமநம் என்கிற நஸ்ய சூர்ணத்தையும் நாசியினுள் பிரயோகிக்க வேண்டும். (7) எலியால் என்னும் ஔஷதியின் தளிர்களை நன்கு அரைத்து, அதனுடன் மாவையும் கலந்து, பூபலிகை யென்கிற அடையாக அதைப் பக்குவம் செய்து புஜிக்கவும்; அதற்கு தான்யாம்லம் என்கிற காடியையாவது, பஞ்சகோலம் இந்துப்பு இவற்றைக் கலந்த குழம்பான மோரையாவது அநுபானமாய் உட்கொள்ள வேண்டும். (8) கடம்பு, கரிசிலாங்கண்ணி, நொச்சி இவற்றின் தளிர்களையும் அதே முறையில் பக்குவம் செய்துபயோகிக்கலாம். (9) வாய்விடங்கத்தின் சூர்ணத்தையும் மாவையும் கலந்து பக்ஷ்யங்கள் செய்தாவது உபயோகிக்கலாம். 25—30½.

1. ஸுரஸாதி கணம்—முதற் புத்தகம் 126-ம் பக்கம் பார்க்க.

2. உத்தர ஸ்த்தாநத்தில் 24-வது அத்தியாயம்.

(1) சேராங்கொட்டைத் தைலத்தில் அதற்குச் சரிபாதி அளவு வாய்விடங்கத்தைச் சேர்த்து, ஒரு நாள் முடிய வெயிலில் வைத்திருந்து, பானம் செய்யவும, வஸ்தியில் பிரயோகிக்கவும் அத்தைலத்தை உபயோகிக்கவும். (2) இங்ஙனமே தேவதாருவின் தைலத்தையும், (3) ஸரள தேவதாருவின் தைலத்தையும் பக்குவம் செய்துபயோகிக்கலாம். 31, 32.

கிருமி ரோகத்தில் உபயோகிக்கக்கூடிய தைலங்கள்.

மலத்தை ஆச்ரயித்துண்டாகும் கிருமிகளைப் போக்குவதற்கு வஸ்தியும் விரேசநமும் பிரயோகிக்க வேண்டும். 32½.

புரீஷஜக் கிருமிகளுக்கு சிகித்ஸை.

கிருமிகள் கபத்தைப் பற்றி யுண்டானவைகளாயிருந்தால் அவற்றைப் போக்குவதற்கு சிரோவிரேசநம், வமநம், சமந சிகித்ஸை இவற்றைச் செய்ய வேண்டும். 33.

கபஜக் கிருமிகளுக்கு சிகித்ஸை.

கிருமிகள் இரத்தத்தைப் பற்றியவைகளாயிருந்தால், அவற்றிற்குக் குஷ்ட சிகித்ஸையிற் கூறியுள்ள பரிஹார முறைகளைச் செய்ய வேண்டும். 33½.

இரக்தஜக் கிருமிகளுக்கு சிகித்ஸை.

ரோமராஜி யெனப்படும் கிருமிகளில் இந்த்ரலுப்தத்திற்குக் கூறிய சிகித்ஸாக்கிரமம் செய்யப்பட வேண்டும். 34.

ரோமராஜி சிகித்ஸை.

கிருமிகளைப் போக்க சிகித்ஸை செய்து கொள்பவன் பால் வகைகள், இறைச்சிகள், நெய், வெல்லம், தயிர் வகைகள், இலையுருவமான கீரை முதலிய சாகங்கள், அம்லரஸமுள்ள வஸ்துக்கள், மதுரரஸமுள்ள வஸ்துக்கள் இவற்றைப் பரிஹரிக்கவேண்டியது சுருக்கமான பத்தியமுறையாம். 35.

கிருமிரோகி பரிஹரிக்க வேண்டிய வஸ்துக்கள்.

---

## இருபத்தோராவது அத்தியாயம்.

இனி வாத வியாதி சிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப் படுகின்றது:—

உபத்திரவங்களேற்படாத கேவல வாத தோஷத்தினு லுண்டான ரோகத்தில் முதலில் க்ருதம், வஸை, மஜ்ஜை, தைலம் இவற்றைப் பானம் செய்விப்பதென்கிற ஸ்நேஹ சிகித்ஸைகளையும் பிரயோகிக்க வேண்டும். பிறகு சரீரத்தில் நன்கு ஸ்நேஹம் ஊறிய அப்பிணியாளிக்குப் பாலை தாராளமாகக் கொடுத்து ஆச்வாஸம் செய்விக்க வேண்டும். மீண்டும் ஸ்நேஹம் கூட்டிய யூஷ மென்னும் கஞ்சியினங்களையாவது, நாட்டுமிருகங்களுடையவும், நீர்வாழும் ஜந்துக்களுடையவும், ஆநூப மிருகங்களுடையவும் மாம்ஸரஸங்களையாவது பருகக் கொடுத்து ஸ்நிக்த்தமாகச் செய்யவும். அப்பால் அதிக ஸ்நேஹம் கூட்டிய அம்ல-லவணங்களையும் சேர்த்த மாம்ஸங்களையும், க்ருஸராக்களையும் [1], வாதஹரம்-தர்ப்பணம் [2] என்னும குணங்களுள்ள அன்னங்களையும்கொடுத்து அவ்வித குணமுள்ள வஸ்துக்களால் அநுவாஸனங்களையும் பிரயோகித்து நன்கு

கேவல வாதத்தில் முதலிற் செய்யவேண்டிய சிகித்ஸா கிரமம்.

1. க்ருஸரா—முதற்புத்தகம் 135-ம் பக்கம் பார்க்க.
2. தர்ப்பணம்—முதற்புத்தகம் பார்க்க.

ஸ்நேஹநம் செய்விக்கவும். பிறகு நன்கு அப்ய ங்கம் செய்து வைத்து, அடிக்கடியும் ஸங்கரம் முதலிய ஸ்வேத முறைகளின்படி [3] ஸ்வேத சிகித்ஸைகளையும் நிறைவேற்றவும். 1—3½.

வாத ரோகத்தில் ஸ்நேஹ ஸ்வேதங்களாலுண்டாகும் பலன்கள்.

ஒழுங்கீனமாகவும், விறைத்துக் கொண்டும், வேதனையோடு கூடியதாகவுமுள்ள அவயவத்தில் ஸ்நேஹத்தைத் தேய்த்து, ஸ்வேதமும் செய்துவைத்தபிறகு, அவ்வவயவம் இஷ்டப்படியெல்லாம் ஸுகமாகவே அசைத்து வேலை செய்வதற்கு அநுகூலமானதாய்விடும். உலர்ந்துபோன கட்டைகளைக்கூட தைலம் போட்டு ஆவி முதலியவற்றைக்கொண்டு வாட்டியெடுத்தோமானல் அவை இயன்றவாறு வளைத்து வேலைகளி லுபயோகிக்கக்கூடியவைகளாகின்றன; அங்ஙனமிருக்க, உயிருள்ள பிராணிகளின் அவயவங்கள்விஷயத்தில் ஸ்நேஹ-ஸ்வேதாதிகளால் ஸௌகரியமுண்டாகுமென்பதைக் கேட்கவேண்டுமா? அவயவங்கள் சிலிர்த்துப்போதல், குத்தல், வலி, இசிவு, வீக்கம், விறைப்பு, பிடித்தல் முதலிய அவக்குறிகள் ஸ்வேதம் செய்தபிறகு சீக்கிரம் நன்கு தணிவடையும்; தேஹம் மிருதுத் தன்மையையும் அடையும். இப்பிணியாளிக்குப் பிரயோகிக்கப்பட்ட ஸ்நேஹமும் சுஷ்கமாயுள்ள தாதுக்களை சீக்கிரம் போஷிக்கச் செய்வதோடு, இப்பிணியாளியின் தேஹ பலத்தையும், ஜாடராக்னியையும் விருத்திசெய்து புஷ்டியைக் கொடுத்து, ஆயுள் பலத்தையும் அபிவ்ருத்தி செய்யும். இந்த ரோகிக்கு அடிக்கடியும் ஸ்நேஹங்களையும் ஸ்வேதங்களையும் தொடர்ந்து பிரயோகித்துவரவேண்டும்; அங்ஙனம் ஸ்நேஹத்தினல் மிருதுத்தன்மையடைந்த கோஷ்டத்தில் வாத ஸம்பந்தமான ரோகங்கள் நிற்கமாட்டா. 4-8.

மிருதுியான வாத தோஷத்தில் சோதந சிகித்ஸை.

தோஷம் மிருதியாயிருந்து இச்சிகித்ஸையினல் வியாதி தணியாவிட்டால், ஸ்நேஹங்களைக் கூட்டிய மிருதுவான ஔஷதங்களைப் பிரயோகித்து அவனுக்கு சோதந சிகித்ஸையைச் செய்யவேண்டும். (1) வெள்ளிலோத்திரையைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, (2) பொன்னலம் பட்டையைச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தையாவது, (3) பாலிற் கலந்த ஆமணக்கெண்ணெயையாவது பானம் செய்யலாம்; இவை தோஷங்களை வெளிப்படுத்தி நல்ல குண முண்டுபண்ணும். 9-10½.

வாதத்தில் அநுலோமநம் செய்யவேண்டிய அவசியம்.

ஸ்நிக்த்தமாகவும், அம்லமாகவும், இலவணமாகவும், உஷ்ணமாகவுமுள்ள ஆஹாராதிகளால் தேஹத்தில் மலமானது திணிந்துப் போய்விடுகின்றது; அது ஸ்ரோதோ மார்க்கத்தை அடைத்து, வாயுவையும் தகைந்து விடுகின்றது; ஆகையால் அத்தோஷத்தைக் கீழ்முகமாக வெளிப்படுத்தி விடவேண்டும். 11½.

விரேசநத்திற்குத் தகாத வாத ரோகிக்கு நிரூஹ வஸ்தி.

எவனொருவன் பலஹீனமாயிருந்து விரேசநத்திற்குத் தகாத நிலைமையுடையவனே அவனுக்கு நிரூஹங்களைப் பிரயோகித்து உபசரிக்க வேண்டும்; நிரூஹ வஸ்திக்கு தீபந குணங்களும் பாசநகுணங்களுமுள்ள சரக்குகளை உபயோகிக்கவேண்டும், அல்லது அவ்வித குணமுள்ள சரக்குகள் கூட்டிய போஜநங்களைக் கொடுத்

1. ஸங்கரஸ் வேதம்—எருமைச்சாணம், குதிரையின் சாணம், பசுமூத்திரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி யிடப்படும் ஒற்றடம். இதில் மற்றொரு சாரார் சொல்லும் முறை பின் வருமாறு:—பருத்திக் கொட்டை, கொள், எள் வாற்கோதுமை, ஆமணக்கு வேர், ஆழிவிதை, சாறடை, சணல்வித்து—இவற்றைத் தனித்தனியாகவோ ஒருமிக்கச் சேர்த்தோ காடியிற் கலந்து வெதுப்பி ஒற்றடமிடுவதும் ஸங்கரஸ் வேதமாம். இதையே சங்கர ஸ்வேதமென்றும் கூறுவர்.

தாவது அப்பிணியாளியை யுபசரிக்கவேண்டும். சிகித்ஸைகளால் நன்கு சுத்தியடைந்த பிணியாளிக்கு ஜாடராக்னி விருத்தியான பிறகு மீண்டும் ஸ்நேஹ-ஸ்வேதங்களைப் பிரயோகிப்பது ஹிதமாம். 12, 13.

ஆமாசயத்தைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாததோஷம் ஆமாசயத்தைப் பற்றியதாயிருந்தால், அப் பிணியாளிக்கு வமநம் செய்வித்து, உடனே போஜனமும் செய்வித்து, அப்பால் ஷட்சரண யோகத்தையாவது,[1] வசாதிகணச் சரக்குகளையாவது[2] இளஞ்சூடான ஜலத்துடன் கொடுக்கவும். ஜாடராக்னி நன்கு தூண்டப்பட்டதும், பிறகு கேவல வாத ரோகத்திற்குக் கூறிய சிகித்ஸையைச் செய்யவேண்டும். 14, 14½.

நாபியைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாததோஷம் நாபியைப் பற்றியதாயிருந்தால், பில்வப் பிஞ்சுகளோடு சேர்த்து பக்குவம் செய்த மத்ஸியங்களை புஜிக்கக் கொடுப்பது நலம். 15.

நாபிக்குக் கீழ்ப் புறத்தைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாயுவானது நாபிக்குக் கீழ் பாகத்தைப் பற்றியதாயிருந்தால் வஸ்தி சிகித்ஸை செய்வதும், அவபீடக நஸ்யத்தைப் பிரயோகிப்பதும் நலம்.[3] 15½.

கோஷ்டத்தைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாததோஷம் கோஷ்டத்தைப் பற்றியதாயிருந்தால், பாசநகுணமும் தீபநகுணமுமுள்ள க்ஷாரங்களென்ன, சூர்ணங்களென்ன இவை முதலியவைகள் அநுகூலமானவையாம். 16.

இருதயத்தைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாததோஷம் இருதயத்தைப் பற்றியதாயிருந்தால், மல்லிகையின் வேரைச் சேர்த்துக் காய்ச்சியெடுத்த பாலை உட்கொள்ளலாம். 16¼.

சிரஸ்ஸைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

சிரஸ்ஸைப்பற்றிய வாதத்தில் சிரோவஸ்தியைச் செய்யலாம்; ஸ்நேஹ நஸ்யமும், தூமபானமும், செவிமுதலிய அவயவங்களுக்குத் தர்ப்பண சிகித்ஸையும் செய்யலாம். 17.

சர்மத்தைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாததோஷம் சர்மத்தைப் பற்றியதாயிருந்தால் ஸ்வேத சிகித்ஸை, அப்யங்கம், அதிக காற்றோட்டமில்லாத விடத்தில் வஸிப்பது இவையும், இருதயத்திற்கு பலந்தரக்கூடிய உணவும் உபயோகமானவையாம். 17½.

இரத்தத்தைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

வாததோஷம் இரத்தத்தைப் பற்றியதாயிருந்தால் சீதளமான பிரதேஹங்களெனப்படும் பூச்சுகளும், விரேசநமும், இரக்தமோக்ஷணமும் ஹிதமானவையாம். 18.

மாம்ஸ மேதஸ்ஸுகளைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

மாம்ஸத்தையாவது, மேதஸ்ஸை யாவது வாததோஷம் பற்றியிருந்தால் விரேசநமும், நிரூஹ வஸ்திகளும், சமந சிகித்ஸைகளும் பிரயோகிக்கத் தகுந்தனவாம். 18½.

அஸ்த்தி - மஜ்ஜாக்களைப் பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.

அஸ்த்தியையும், மஜ்ஜாவையும் பற்றியுள்ள வாதத்தில் தேஹத்தின் மேற்புறத்திலும் உட்புறத்திலும் ஸ்நேஹங்களைப் பிரயோகித்து, அத்தகைய வியாதியைப் போக்க வேண்டும். 19.

1. ஷட்சரண யோகம்—மரமஞ்சள், வாலுளுவை, கடுகரோஹிணீ, அதிவிடயம், சித்திரமூலம், வட்டத்திருப்பி இவற்றின் சூர்ணமுறை.

2. வசாதிகணம்—முதற் புத்தகம் 126-ம் பக்கம் பார்க்க.

3. இதற்கு முன் நாபியைப்பற்றிய வாததோஷத்திற்குக் கூறிய மத்ஸியபோஜனமும் இங்கு அநுகூலமானது என்று ஸர்வாங்கஸுந்தரீ வியாக்கியாநம்.

*சுக்ரத்தைப்பற்றிய வாதத்திற்கு சிகித்ஸை.*

வாத-தோஷம் சுக்ரத்தை ஆச்ரயித்ததாயிருந்தால், மனக்களிப்பூட்டும் உபசாரமும், பலத்தையும் சுக்ரத்தையும் விருத்தி செய்யக்கூடிய உணவும் அனுகூலமானவையாம். சுக்ரம் வெளிவருவதற்கான வழி தடைபட்டிருப்பதாகத் தெரியவந்தால், விரேசநம் செய்விக்கவேண்டும்; இங்ஙனம் விரேசநம் செய்விக்கப்பட்டு, அடுத்தாற்போல ஆஹாரத்தையும் கொடுத்துவிட்டு, முற்கூறியுள்ள சிகித்ஸையையும் செய்ய வேண்டும். 20, 20½.

*வாதத்தினால் கர்ப்பம் அல்லது பாலர் சுஷ்கித்தால் செய்யும் சிகித்ஸை*

வாததோஷத்தினால் ஸ்த்ரீயின் கர்ப்பம் சுஷ்கித்துப் போனாலும், அத்தோஷத்தினால் பாலர்கள் இளைத்துக் கொண்டு வந்தாலும் சர்க்கரை, குமுமுன், அதிமதுரம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பாலைப் போஷணையின் பொருட்டு உபயோகிக்க வேண்டும். 21½.

*ஸ்நாயு முதலியவற்றைப் பற்றிய வாதாதி விகாரங்களில் சிகித்ஸை*

வாததோஷம் ஸ்நாயுக்களையும், ஸந்திகளையும், ஸிரைகளையும் பற்றியதாயிருந்தால், ஸ்நேஹ சிகித்ஸை, தாஹசிகித்ஸை, உபநாஹ சிகித்ஸை இவற்றைச் செய்யலாம். அவயவங்கள் குறுகிக்கொண்டு வந்தால் உளுந்தையும் இந்துப்பையும் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தை அப்யங்கத்திற்கு உபயோகித்து வரவும். 22½.

*திமிருண்டாக்கும் வாதத்திற்கு சிகித்ஸை.*

வாத ரோகத்தில் அவயவம் பரிசவுணர்ச்சியற்று திமிர்த்துப் போனால், இரக்த மோக்ஷணம் செய்து ஒட்டடை, உப்பு, தைலம் இவற்றை லேபநம் செய்து, அவ்வவயவத்தில் வஸ்திரத்தையும் சுற்றி, உபநாஹஸ்வேதமும் செய்யலாம். 23½.

*அபதாநக சிகித்ஸை.*

இனி அபதாநகம்[1] என்கிற வாத விகாரத்தினால் வருந்துபவனுக்குச் சிகித்ஸை கூறுவோம். இந்த்ரியங்கள் உணர்ச்சியற்றுப் போகாமலும், நடுக்க மேற்படாமலும், ஆண் குறிதடித்துக் கொள்ளாமலும், தேஹம் வியர்க்காமலும், கட்டில் படுக்கைகளை உதறியுதைத்துத் தள்ளாமலும் இருக்கையிலேயே, பாஹ்யாயாமத்தைத் [2] தவிர்த்து மற்ற அபதாநக வியாதியில் உடனே தாமதமின்றி சிகித்ஸை செய்ய வேண்டும். அவ்வபதாநக வியாதியில் முதலில் அவயவங்களுக்கு நன்கு ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்து, சிரஸ்ஸைப்பற்றிய ஸ்ரோத்ஸஸுகளைச் சுத்தம் செய்வதன் பொருட்டு, தீக்ஷ்ண நஸ்யத்தைப் பிரயோகிக்கவும். அச்சபேயாவையும், பிறகு விதார்யாதி கணச்சரக்குகளின்[3] கஷாயத்திலும் தயிரிலும் பாலிலும் மாம்ஸரஸத்திலும் பக்குவம் செய்த க்ருதத்தையும் பருகக் கொடுக்கலாம். இவ்விதம் செய்ய, வாயுவானது வெகு அதிகமாய் தேஹத்தில் பரவாமலிருக்கும்; அல்லது வெகு ஜடிதியிலாவது கெடுதியுண்டு பண்ணுமலிருக்கும். 24—27.

*மஹா ஸ்நேஹம்*

கொள், யவதானியம், இலந்தங்கொட்டை, பத்ரதார்வாதிகணம், [4] ஆநூபமாம்ஸம் இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, அக்கஷாயத்தில் காடியையும் பாலையும் கூட்டி, மதுரத்ரவ்யகணத்தைக் [5] கல்கமாகவும் சேர்த்து, "மஹாஸ்நேஹம்" என்கிற தைலத்தைப் பக்

1. அபதாநகம்—அபதந்த்ரகம் என்றும் கூறப்படும்; முதற்புத்தகம் 395-ம் பக்கம் பார்க்க.
2. பாஹ்யாயாமம்—முதற்புத்தகம் 396-ம் பக்கம் பார்க்க.
3. விதார்யாதிகணம்—முதற்புத்தகம் 124-ம் பக்கம் பார்க்க.
4. பத்ரதார்வாதி கணம்—முதற்புத்தகம் 123-ம் பக்கம் பார்க்க.
5. மதுரத்ரவ்ய கணம்—முதற்புத்தகம் 90-ம் பக்கத்திலுள்ள மதுரத்ரவ்ய வர்க்கத்தைப் பார்க்க.

குவம் செய்யவும். இதுஸேசநம் செய்தல், அப்யங்கம் செய்தல், அமிழ்தல், அன்ன-பானங்களில் உபயோகித்தல், நஸ்யம் செய்தல், அநுவாஸநம் செய்தல் என்கிற இவ்வித உபயோகங்களால் வாததோஷத்தைப் போக்குகின்றது; மேலும் முற்கூறிய அந்தந்த ஸ்நேஹ-ஸ்வேத சிகித்ஸைகளும் நன்கு பிரயோகிக்கப் படுமானால் வாததோஷத்தை நிவ்ருத்தி செய்யும். 28—29½.

அபதாநக வாதத்தில் வேகங்களுக்கு இடையிடையே இப்பிணியாளிக்கு அடிக்கடியும் தீக்ஷ்ணமாகவும் கபத்தைப் போக்கக் கூடியவையுமான அவபீடகநஸ்யங்களாலும், ப்ரதமந நஸ்யங்களாலும் சிரோவிரேசநம் செய்விக்கவும்; இவ்வுபசாரங்களால் ச்வஸநங்கள் என்கிற பிராணநாடிகளில் அல்லது ச்வாஸநாடிகளில் அடைபட்டுள்ள கபம் வெளிப்பட்டுப்போனால் ரோகிக்குப் பிரஞ்ஞை யுண்டாகும். 30½

*அபதாநகத்தில் சிரோவி ரேசநம்.*

ஸௌவர்ச்சல லவணம், கடுக்காய், த்ரிகடு இவற்றைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தை வாதம் மிகுதியாயுள்ள அபதாநகத்தில் உபயோகிக்கலாம். 31.

*ஸௌவர்ச்சலாதிக் ருதம்.*

வெள்ளிலோத்திப் பட்டை எட்டு பலம், த்ரிபலை பதினாறு பலம், மஹாபஞ்சமூலம், ஆமணக்கு வேர், கண்டங்கத் திரிவேர், சிவதை இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; இவற்றை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, அது நாலிலொரு பங்காக வற்றும்படி காய்ச்சி யெடுக்கவும்; அதில் ஒரு ஆடகப் பிரமாணம் தயிர் சேர்த்து, மூன்று பலம் யவக்ஷாரமும் கூட்டி ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தை அதில் பக்குவம் செய்யவும். இந்த கிருதத்தைப் பருக ஓர் அவயவத்தை அல்லது ஸர்வாவயவங்களையும் பற்றிய மிகக் கேடான நிலைமையிலுள்ள வாதரோகங்களும், யோநிரோகங்களும், குல்மரோகமும், விருத்தியென்கிற அண்டவீக்கமும், மஹோதரமும் நீங்கும். 32,33.

*தில்வக க்ருதம்.*

பெருவாகையின் பட்டையையும், அசோகம் பட்டையையும், வெள்ளிலோத்தியைப் போலவே பக்குவம் செய்து, (தில்வக க்ருதம் போலவே) க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க, அதைப் போலவே குணமுண்டாகும். 33½.

*சம்யாக க்ருதமும்-அசோக க்ருதமும்.*

முற்கூறிய சிகித்ஸைகளைக் கேவல வாயுவினாலுண்டான அபதாநகத்திற் செய்யலாம். ஸம்ஸர்க தோஷங்களா லுண்டான கோளாறுகளில், தனித்தனி தோஷத்தினா லுண்டாகும் கோளாறுக்குக் கூறியவற்றையே ஏற்றவாறு சேர்த்துச் சேர்த்துப் பிரயோகிக்கவும். (1) கபத்துடன் கூடிய அபதாநகாதி வாதரோகத்தில் தும்புருவென்னும் ஒருவகை அசோகம் பட்டை, கடுக்காய், காயம், தாமரைக்கிழங்கு, இந்துப்பு, கடலுப்பு, ஸௌவர்ச்ச லவணம் இவற்றின் சூர்ணத்தையவதானியத்தின்கஷாயத்துடன் பானம் செய்யலாம். (2) இருதய நோய், பார்ச்வசூலை இவற்றுடன் கூடிய அபதந்த்ரக வியாதியில் காயம், ஸௌவர்ச்ச லவணம், சுக்கு, மாதளை, புளிவஞ்சி இவற்றின் சூர்ணத்தையாவது யவதானியக்வாதத்துடன் உட்கொள்ளலாம். (3) கப-வாதக் கோளாறுகளிலும், ஹ்ருத்ரோகத்திலும் கூறப்பட்டுள்ள ஔஷதங்களையாவது உட்கொள்ளலாம். 34—36½.

*மிச்ர தோஷங்களாலான அபதந்த்ரகத்திற்கு சிகித்ஸை.*

**பாஹ்ய - அந்தராயாமங்களுக்கு சிகித்ஸை.** பாஹ்யாயாமம் அந்தராயாமம் இவ்வாதரோகங்களில் அர்திதவாதத்திற்குக் கூறும் சிகித்ஸையைச் செய்யவேண்டும்; தைலத் தொட்டியிலும் அப்பிணியாளியைப் படுக்கச் செய்யவும். இவ்விரு ஆயாம வாதங்களுள் அந்தராயாமம் மிகவும் கஷ்ட ஸாத்தியமான வியாதி. 37½.

**தநுர் வாதத்தில் அஸாத்தியக்குறிகள்.** பற்களும் முகமும் கறுத்துப் போய், அவயவங்களெல்லாம் துவண்டு விழ, நினைவற்றுப் போய், உடலெல்லாம் வியர்த்து, ஆக இந்நிலைமையைப்பெற்றுள்ள தநுர்வாத ரோகி பத்து நாட்களில் இறந்து விடுவான். 38½.

**தநுர் வாதத்தில் ஸாத்தியக்குறிகள்.** முற்கூறிய துர்க்குணங்களில்லாமலும், வேகங்கள் மந்தமாகவும் இருந்தால் அவன் ஜீவிப்பான்; மேலும் உடல் வணைந்தும், உணர்ச்சி யற்றும், ஒருகால் நொண்டியாகவும், கை முடமாகவும், ஒரு பாரிசம் வீழ்ந்து போயும், இரண்டு கால் விழுந்து முடமாகவும் போயிருந்தால், அல்லது அநேக அவயவங்கள் ஸ்வாதீன மற்றுப் போனால் அவன் பிழைத்து விடுவான். 39½.

**ஹநுஸ்ரம்ஸ - ஹநுஸ்தம்பங்களுக்கு சிகித்ஸை.** (1) முகவாய்க்கட்டை நழுவி விட்டால், கீழ்-மேல் தவடைகளில் ஸ்நேஹ - ஸ்வேதங்களைச் செய்து, முகவாய்க் கட்டையை மெதுவாக அதன் ஸ்தானத்தில் தள்ளவேண்டும். (2) வாய் திறந்து போய் மூட முடியாததா யிருக்கையில், இவ்வேலையில் நிபுணனுயுள்ள வைத்தியன் ஸ்நேஹ-ஸ்வேதாதிகளைச் செய்து முகவாய்க் கட்டையை மேலுக்குத் தூக்கித் தகுந்த நிலைமையில் வைக்கவும். (3) வாய் மூடிக்கொண்டு திறக்க முடியாத நிலைமை யேற்பட்டால், முகவாய்க் கட்டையைத் தகுந்தவாறு கீழே இழுத்துச் சரிப்படுத்த வேண்டும். (4) ஏகாயாமத்திற்குச் செய்வதுபோல மற்ற சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும். 40, 41.

**ஜிஹ்வாஸ்தம்ப சிகித்ஸை.** ஜிஹ்வாஸ்தம்பம் என்கிற நாக்கு அசைவற்றுப் போகும் கோளாறில் நிலைமைகளுக் கேற்றவாறு வாத ரோகத்திற்கான சிகித்ஸையைச் செய்ய வேண்டும். 41½.

**அர்தித சிகித்ஸை.** அர்தித வாதத்தில் (1) நஸ்ய சிகித்ஸை மூர்த்த தைலமென்கிற சிரஸ்ஸில் தைலப் பிரயோகம், கர்ண தர்ப்பணம், நேத்திர தர்ப்பணம் இச்சிகித்ஸைகளைச் செய்யவும். (2) இதே ரோகம் வீக்கத்துடன் கூடியதாயிருந்தால், வமநம் செய்விக்கவும். (3) இதில் அழற்சியும் சிவப்புங்கூட ஏற்பட்டிருந்தால், ஸிராவ்யதை செய்யவும். 42½.

**பக்ஷவாத சிகித்ஸை.** பக்ஷாகாத மென்கிற பார்ச்வ வாயுவில் ஸ்நேஹ சிகித்ஸையையும், ஸ்நேஹங் கலந்த ஔஷதங்களைக் கொண்டு விரேசநமும் செய்விக்க வேண்டும். 43.

**அபபாஹுக சிகித்ஸை.** அபபாஹுக வாதத்தில் நஸ்ய சிகித்ஸையைச் செய்வது ஹிதமாம். போஜனம் செய்த பிறகு ஸ்நேஹபானம் செய்வதும் இப்பிணியாளிக்கு அனுகூலமானதாம். 43½.

**ஊருஸ்தம்ப சிகித்ஸை.** ஊருஸ்தம்ப வாதத்தில் கபமும் ஆமதோஷமும் அதிகரிப்பதால் ஸ்நேஹ சிகித்ஸையும் கூடாது; சோதந சிகித்ஸையும் அனுகூலமானதல்ல. ஆகவே கபத்தையும் ஆமதோஷத்தையும் முறைப்படி வெளிப்படுத்தக்கூடிய சிகித்ஸைகளைச் செய்யவும்; ரூக்ஷோபசாரமும் செய்யத்தகுந்தது. யவதானியம், சாமை, கோத்ரவம் இவற்றைச் சிறிது ஜலமும் சொற்பம் தைலமும் சேர்த்து

உப்பில்லாமல் பக்குவம் செய்த சாகங்களோடு புஜிக்கலாம்; மேலும் ஜாங்கலமாம் ஸங்களையும் அச்சாகங்களுடன் கலந்து நெய்யில்லாமற் பக்குவம் செய்யவேண்டும்; இவற்றைப் புஜிப்பவன் தேன், ஜலம், அரிஷ்டமென்கிற மது இவற்றை அநுபானமாகப் பருகவேண்டும். (1) வத்ஸகாதிகண சூர்ணத்தையாவது, (2) ஹரித்ராதி கணசூர்ணத்தையாவது, (3) வசாதிகண சூர்ணத்தையாவது, (4) ஷட்சரண சூர்ணத்தையாவது இந்துப்பைக் கூட்டிய உஷ்ண ஜலத்துடன் இவ்வாத ரோகத்தில் உட்கொள்ளலாம். (5) த்ரிபலை, சவ்யம், கடுகரோஹிணீ, கோரைக் கிழங்கு இவற்றின் கல்கத்தையாவது தேனுடன் புஜிக்கலாம். (6) சவ்யம், கடுக்காய், சித்திரமூலம், தேவதாரு இவற்றின் கல்கத்தையாவது அங்ஙனமே தேனுடன் உட்கொள்ளலாம். (7) கடுக்காய், குங்கிலியம், சிலாஜது இவற்றின் கல்கத்தையாவது பசுமூத்திரத்துடன் உபயோகிக்கலாம் 44—48

வ்யோஷாதி குக்குலு.

த்ரிகடுகம், சித்திரமூலம், கோரைக் கிழங்கு, த்ரிபலை, வாய்விடங்கம் இச்சரக்குகள் ஸமபாகம்; இவ்வனைத்துக்கும் ஸம அளவாக மஹிஷாக்ஷி குக்குலுவைச் சேர்த்து, குளிகைகளாகச் செய்து புஜிக்க, மேதோ தோஷம், கபதோஷம், ஆம தோஷம், வாத தோஷம் இவற்றாலுண்டாகும் எல்லா வியாதிகளும் தீரும். 49½.

ஊருஸ்தம்பத்தில் ஸ்வேத ஸேக லேபங்கள்.

இவ்விதம் முற்கூறிய சிகித்ஸைகளால் கபத்தினால் கவரப்பட்டதும், மேதோ தோஷத்துடன் கூடியதுமான வாயு தணிவடையும். க்ஷாரங்கள், கோமூத்திரம் இவற்றைக் கலந்த சரக்குகளைக் கொண்டு ஸ்வேதங்களையும், ஸேகங்களையும், உத்வர்த்தநமென்கிற பூச்சுக்களையும் பிரயோகிக்கலாம். புங்கங்காய், கடுகு இவற்றை அதிக அளவான பசுமூத்திரத்திற் கலந்து லேபமாயுபயோகிக்கலாம். அல்லது எருக்கு, தழுதாழை, வேம்பு, தேவதாரு இவற்றின் வேர்களை, தேன், கடுகு, நன்கு வேகாத மண் ஓடு, புற்றுமண் இவற்றுடன் கலந்து லேபமாயுபயோகிக்கலாம். 50—52.

ஊருஸ்தம்பத்தில் வியாயாமங்கள்.

கபத்தை க்ஷீணிக்கச் செய்வதற்காக இப்பிணியாளியை அடியில் கூறப்படும் வியாயாமங்களில் ஸாத்தியமானதைச்செய்யத் தூண்டவும்:— ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு தாண்டச் செய்யலாம். சக்திக்கியன்றவளவு ஸ்த்ரீகளிடம் புணரச் செய்யலாம் ஸ்த்திரமான தண்ணீர்த் தேக்கத்தை யுடையதும், எவ்வித அபாயமில்லாததுமான குளத்தில், அல்லது பிரவாஹத்திற்கு எதிரிடையாக ஆற்றில் நீந்தச் செய்யலாம். கபமும், மேதோதோஷமும் நீங்கிய பிறகு ஊருஸ்தம்ப வாயுவென்னும் இவ்வியாதியில் ஸ்நேஹாதி சிகித்ஸைகளைப் பிரயோகிக்கலாம். 53, 54.

மற்ற வாதரோகங்களுக்கு சிகித்ஸை.

மற்ற வாத ரோகங்களிலும் அவை எந்த ஸ்த்தாநத்தைப் பற்றியவையாகவும், எந்த தாதுவை ஆச்ரயித்தவையாகவும் இருக்கின்றனவோ அதனதன் தன்மைக்கேற்றவாறு சிகித்ஸைகளைச் செய்யவும். 54½.

ஸஹசராதி தைலம்.

மருதோன்றி, தேவதாரு, சுக்கு இவற்றை ஜலத்திற் சேர்த்து கஷாயமாகக் காய்ச்சி, அதில் தைலம் கூட்டி, வாத விகாரங்களால் அவயவங்களை அசைத்து நடக்கச் சக்தியற்றவன் உட்கொள்ளவும். பிறகு அவன் தனதிஷ்டப்படி துரிதமாகவோ மெதுவாகவோ நடந்து தாராளமாய் ஸஞ்சரிக்கக் கூடிய சக்தியைப் பெறுவன். 55.

சிற்றரத்தை, சுக்கு, சித்திரமூலம், திப்பிலி, கச்சோரம், தாமரைக் கிழங்கு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்து உட்கொள்ளலாம். இது வாத ரோகத்தைப் போக்குவதில் மிகச் சிறந்த ஔஷதம். 56.

ராஸ்நாதி க்ருதம்.

வேம்பு, சீந்தில், ஆடாதோடை, பேய்ப்புடல், கண்டங்கத்திரி இவற்றை வகைக்குப் பத்து பலம் அளவாக எடுத்து ஒரு பிரஸ்த்தம் நெய்யிற் சேர்த்து பக்குவம் செய்யவும்; இதில் ஒரு கர்ஷம் (கால் பலம்) அளவாக அடியிற் குறிப்பிடப்படும் சரக்குகளைக் கல்கமாகக் கூட்ட வேண்டும்; அவையாவன:- வட்டத்திருப்பி, வாய் விடங்கம், தேவதாரு, யானைத் திப்பிலி, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், சுக்கு, மஞ்சள், ஜடாமாம்ஸி, சவ்யம், கோஷ்டம், வாலுழுவை, மிளகு, வெட்பாலை, ஜீரகம், சித்திரமூலம், கடுகரோஹிணீ, சேராங்கொட்டை, வசம்பு, மோடி, மஞ்ஜிஷ்டி, அதிவிடயம், எலிச்செவிப் பூண்டு, ஓமம் இவையும், ஐந்து பலம் சுத்தி செய்த மஹிஷாக்ஷிகுக்குலுவுமேயாம். இந்த க்ருதத்தை உட்கொள்ள இது பிரபலமான வாததோஷத்தையும், ஸந்திகள்-எலும்புகள்-மஜ்ஜை இவற்றைப் பற்றிய குஷ்டத்தையும் போக்கும்; மேலும் நாடீவிரணம் என்கிற குழிப்புண், அர்புதம், பகந்தரம், கண்டமாலை, கழுத்துக்கு மேலுள்ள எல்லா அவயவங்களையும் பற்றிய ரோகங்கள், குல்மம், அர்சஸ், மேஹம், க்ஷயம், அரோசகம், ச்வாஸம், பீநஸம், காஸம், சோகை, இருதய ரோகம், பாண்டு ரோகம், மதமென்கிற வெறி, வித்ரதி, வாதரக்தம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 57—60.

நிம்பாதி க்ருதம்.

சிற்றாமுட்டி, பில்வவேர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் நெய்யின் மேல் படர்ந்துள்ள ஆடையைச் சேர்த்து பக்குவம் செய்யவும்; இந்த க்ருதமண்டத்தை அரைப்பலம் அல்லது ஒரு பலம் அளவில், சிரஸ்ஸைப் பற்றிய வாத ரோகத்தில் நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். 61.

சிரோவாதத்தில் க்ருத மண்டநஸ்யம்.

அங்ஙனமே முதலை, மத்ஸியம், ஆமை, சுஹுகம் என்கிற மத்ஸியம் இவற்றின் கொழுப்பை கேவல வாததோஷத்தினுலான கோளாறில் விசேஷமாகப் பிரயோகிக்கலாம். 62.

கேவல வாதத்தில் வஸாபானம்.

பழைய பிண்ணாக்கையும், ப்ருஹத் பஞ்சமூலத்தையும் தனித்தனியாகக் கஷாயம் காய்ச்சவும்; இவ்விரண்டு கஷாயத்தையும் பிறகு ஒன்றாகச் சேர்த்து, அதில் பாலையும் தைலத்தையும் கூட்டி பக்குவம் செய்யவும்; இதில் சேர்க்கப்படும் தைலம் பாலின் அளவில் எட்டில் ஒரு பங்காக இருக்கவேண்டும். இத்தைலத்தைப் பானம் செய்து வந்தால் வாத ரோகங்கள் நிவ்ருத்தியாகும்; முக்கியமாய் கபத்துடன் கூடிய வாத ரோகங்கள் நீங்கும். 63.

கபத்துடன் கூடிய வாதத்தில் ஜீர்ணபிண்யாகாதி தைலம்.

நூறு பலம் முதியார் கூந்தலைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் தைலத்தையும், அதற்குச் சம அளவு பாலையும் கூட்டிக் காய்ச்சவும். பிறகு மேதா, மஹாமேதா, ஜடாமாம்ஸி, மஞ்ஜிஷ்டி, கோஷ்டம், சிற்றரத்தை, இரத்த சந்தனம், ஜீரகம், ருஷபகம், காகோலீ, க்ஷீரகாகோலீ, தேவதாரு இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும்; இத்தைலம் எல்லா வாத ரோகங்களையும் நிவாரணம் செய்யும். 64, 65.

பிரஸாரிணீ தைலம்.

நூறு பலம் மருதோன்றியை ஸமூலமாயெடுத்து, அதற்குச் சமநிறை தசமூலத்தையும், ஐம்பது பலம் தண்ணீர் விட்டாங் கிழங்கையும் எடுத்து, ஒரு திரோணம்

ஸஹசராதி தைலம்.

ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்காக மிகும்படி கஷாயத்தைச் காய்ச்சி யெடுக்கவும். இதில் ஒரு ஆடகப் பிரமாணம் தைலத்தையும், அதற்குச் சம பாகம் பாலையும் கூட்டி பக்குவம் செய்யவும். இதில் வெட்டிவேர், நகம் என்கிற கந்தத் திரவ்யம், கோஷ்டம், சந்தனம், ஏலக்காய், சிறு நாகப்பூ, ஞாழல், நளியென்னும் ஸுகந்தத்திரவ்யம், கோரைக் கிழங்கு, சிலாஜது, சிவப்புச் சாறடை, ஜடாமாம்ஸி, அயம், தேவதாரு, செவ்வலரி, சதகுப்பி, மட்டிப்பால், நதமென்கிற ஸுகந்தத் திரவ்யம் இவற்றை வகைக்கு ஒவ்வொரு பலம் அளவில் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இதை யுபயோகிக்க நடுக்கம், ஆக்ஷேபக மென்கிற இசிவு, வாயு உள்ளே அடைபட்டுப் போதல், உடல் சுஷ்கித்தல் முதலிய உபத்திரவங்களோடு கூடிய கஷ்டஸாத்தியமான வாத ரோகங்களும் நிவாரணமாகும். குல்மம், உந்மாதமென்கிற பித்து, பீநஸம், யோனி ரோகங்கள் இவைகளும் நிவ்ருத்தி யடையும். 66—68.

பேள தைலம். நூறு பலம் மருதோன்றியின் ஸ்வரஸத்தில், ஒரு ஆடகம் தைலத்தைப் பக்குவம் செய்யவும்; இதில் தசமூல கல்கம் பத்துப்பலமும், தைலத்திற்கு நான்கு மடங்கு பாலும் சேர்த்துக் காய்ச்ச வேண்டும். அல்லது நத மென்கிற கந்தத் திரவ்யம், கச்சோரம், மல்லிகை, கோஷ்டம், தேவதாரு, ஏலக்காய், ஜடாமாம்ஸீ, கல்மரம், சதகுப்பி, செஞ்சந்தனம் இவற்றையாவது கல்கமாகச் சேர்க்கலாம். பக்குவமானதும் இதில் பதினெட்டு பலம் சர்க்கரையைக் கூட்டிக்கொள்ளவும். இது பேளமுனிவரால் அங்கீகரிக்கப் பட்டது; இத்தைலம் கஷ்ட ஸாத்தியமான வாத ரோகங்களையும் போக்கும்; வாத குண்டலிகா, உந்மாத மென்கிற பித்து, குல்மம், அண்ட ரோகம் முதலியவற்றையும் தீர்க்க வல்லது. 69—71½.

பலா தைலம். சிற்றாமுட்டி நூறு பலம், சீந்திற் கொடி இருபத்தைந்து பலம், சிற்றரத்தை பன்னிரண்டரைப்பலம்; இவற்றை நூறு ஆடகம் ஜலத்தில் சேர்த்து, நூற்றில் ஒரு பங்கு கஷாயமாக மிகும்படி அதைக் காய்ச்சி யெடுத்து, அதில் ஒரு ஆடகம் தைலத்தையும், தயிர்-தயிராடை-கருப்பஞ்சாறு-சுக்த மென்னும் காடி இவற்றைத் தைலத்திற்குச் சம அளவாகக் கூட்டி, வெள்ளாட்டுப் பாலைத் தைலத்தினும் அரைப் பங்காகச் சேர்க்கவும். கச்சோரம், ஸரள தேவதாரு, தேவதாரு, ஏலம், மஞ்ஜிஷ்டி, அகில், சந்தனம், தாமரைக் கிழங்கு, பேராமுட்டி, கோரைக் கிழங்கு, பெருமல்லி, அரேணுகம், அதிமதுரம், கருந்துளஸி, புலியுகிர், ருஷபகம், ஜீவகம், முருக்கம்பிசின், கஸ்தூரி, கருஞ்சாறடை, ஜாதிபத்திரி, சிறு நாகப்பூ, குங்குமப்பூ, கல்மரச்சத்து, ஜாதிக்காய், சிறு தேக்கு, கோரைக் கிழங்கு, இலவங்கப் பட்டை, குந்துருக மென்கிற கந்தத்திரவ்யம், கர்ப்பூரம், மட்டிப்பால், ஸ்ரீவாஸ மென்கிற ஒருவித ஸுகந்தமான குங்கிலயத்தைலம், இலவங்கம், நகமென்கிற ஸுகந்த வஸ்து, தக்கோலம், கோஷ்டம், ஜடாமாம்ஸீ, ஞாழல், சாமந்தி, கிரந்தி தகரப், தமனம், வசம்பு, மருக்காரை, பெருங்கோரைக் கிழங்கு, நாககேஸரம்; இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் கல்கமாகச் சேர்க்கவும். இவ்விதம் பக்குவம் செய்து இறக்கியதும், வடிக்கட்டி, அதில் பத்ரகல்கத்தைச் சேர்க்கவும்[1]. இத்தைலத்தை முறைப்படி யுபயோகித்தால் காஸம், ச்வாஸம், ஜ்வரம், வாந்தி, மூர்ச்சை, குல்மம், க்ஷதகாஸம், ப்லீஹ மென்கிற மண்

1. தைலம் முதலியதைப் பக்குவம் செய்து இறக்கியவுடனே, சூடான நிலைமையிலேயே, அதற்கு விசேஷ மணத்தையுண்டுபண்ணுவதற்காகக் கர்ப்பூரம், கஸ்தூரி முதலியதைக் குழம்பாக ஆட்டி அதில் சேர்ப்பது 'பத்ர கல்கம்' எனப்படுகிறது.

ணீரலின் வீக்கம், க்ஷயம், அபஸ்மாரம் இவையும், வறுமையுங்கூட தீரும். இது "பலாதைலம்" எனப்படுகிறது. இது வாத ரோகங்களைப் போக்குவதில் மிகவும் சிறந்தது. 72—80.

வாதரோகாத்தியாயத்திற் கூறிய ஸ்நேஹங்களின் பிரபாவம்.

இங்ஙனம் முற்கூறிய ஸ்நேஹங்கள் பானம் செய்யவும், நஸ்யமிடவும், அப்யங்கம் பண்ணவும் காலந்தவறாமல் நன்கு உபயோகிக்கப்படுமாயின், நீங்கு விளைவிக்கக் கூடிய வாத ரோகங்கள் சீக்கிரம் நிவ்ருத்தியாகும்; மலட்டு ஸ்த்ரீகளும் புத்திரப் பேறுடையவராவர். 81.

வாத ரோகத்திற்கான ஸ்நேஹாதிகளால் திரவிக்கும் கபபித்தங்களைப் பரிஹரித்தல்.

முற்கூறிய ஸ்நேஹ சிகித்ஸைகளாலும், ஸ்வேத சிகித்ஸைகளாலும் கபம் ஊறித் திரவித்து எப்பொழுது பக்வாசயத்தையடைந்ததாகக் குறி ஏதேனும் தோன்றுகிறதோ, பித்தமும் அங்ஙனமே மேலிட்டு அதன் குறியைக் காட்டுகிறதோ, அப்பொழுது அக்கபத்தை அல்லது பித்தத்தை வஸ்திகளைப் பிரயோகித்து வெளிப்படுத்தி நிவாரணம் செய்யவேண்டும். 82.

---

## இருபத்திரண்டாம் அத்தியாயம்.

இனி வாத-சோணித சிகித்ஸை[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

வாத-சோணிதத்தில் இரக்த மோக்ஷணம் செய்தல்.

வாத-சோணிதரோகிக்கு முதலில் ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்து, அப்பால் அந்தந்த தோஷ நிலைமைகளுக்கும் சரீரபலாதி நிலைமைகளுக்கும் ஏற்றவாறு, வாத தோஷமும் அதிகரிக்காத வண்ணம் பராமரித்துக் கொண்டு, இரத்தத்தைச் சொற்ப அளவாக அடிக்கடியும் வெளிப்படுத்திவரவேண்டும். (1) வாத-சோணிதத்தில் அவயவங்களில் வலியும், செந்நிறமும், அழற்சியும் உண்டானால், அட்டைகளைக் கொண்டு இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். (2) சிமசிமா வென்கிற உணர்ச்சியும், தினவும், வலியும் உண்டாய் கஷ்டப்படுகிற நிலைமையில் சிருங்கமென்கிற பீச்சாங்குழல்களால் அல்லது அலாபு கடிகைகளாலாவது[1] இரத்தத்தை உறிஞ்சலாம். (3) ஓரிடம் விட்டு மற்றோரிடத்தில் பரவும் அசுத்த இரத்தத்தை பிரச்சாநமென்கிற உபகரணத்தினாலாவது, ஸிரைகளைக் கீண்டாவது வெளிப்படுத்தலாம். 1-2½.

வாத-சோணிதத்தில் இரக்தமோக்ஷணத்திற்குத்தகாத நிலைமைகள்.

வாத-சோணித ரோகிக்கு அவயவங்கள் வாடியிருந்தால் இரத்தத்தை வெளிப்படுத்தலாகாது; எவனுடைய இரத்தம் ருக்ஷமாகவும், ஆகவே வாதம் அதிகரித்ததாகவும் இருக்கின்றதோ அவனுக்கும் இரக்த மோக்ஷணம் செய்யக்கூடாது. இவர்களுக்கு இரத்தம் வெளிப்படுவதால் வாதம் அதிகரித்து, அத்தோஷம் ஆழமான வீக்கத்தையும், திமிர்ப்பையும், நடுக்கலையும் ஸ்நாயு-ஸிரைகள் இவற்றைப்பற்றிய ரோகங்களையும், ஆயாஸத்தையும், மற்றும் வாதத்தினாலேற்படக்கூடிய கோளாறுகளையும் உண்டுபண்ணும். 3,4.

---

1. வாத-சோணிதம்—என்றால் வாத-ரக்தம். வாத-சோணித ரோகத்தைப்பற்றிய விவரங்களை நிதாநஸ்த்தாநத்தின் கடைசி அத்தியாயத்திற் காண்க. வாதரக்தத்திற்கான சிகித்ஸைகளைக் கூறும் அத்தியாயம் வாத-சோணித சிகித்ஸாத்தியாயம் எனப்படுகிறது.

1. அலாபுகடிகை—இதைப்பற்றிய விவரங்களை முதற் புஸ்தகத்தில் 104-ம் பக்கம் பார்க்க.

வாத-சோணித ரோகத்தில் வியாதிக்ரஸ்தன் விரேசநம் செய்விக்க வேண்டியவனா யிருந்தால், முதலில் ஸ்நேஹ சிகித்ஸை செய்வித்து, ஸ்நேஹம் கலந்த ஔஷதங்களால் விரேசநம் செய்விக்க வேண்டும். $4\frac{1}{2}$.

வாத-சோணிதத்தில் விரேசநம் செய்விக்கு முறை.

வாதம் அதிகரித்த வாத ரக்தத்தில், ரோகிக்கு (1) புராண க்ருதத்தைப் பானம் செய்யக் கொடுக்கலாம்.(2) ச்ராவணீ, க்ஷீர காகோலீ, பிரம்ம தண்டு, ஜீரகம், கடுகு இவற்றைச் சம அளவாகச் சேர்த்து, பாலும் கூட்டி பக்குவம் செய்த க்ருதம வாத-ரக்தத்தைப் போக்கும். (3) திராக்ஷை, இலுப்பைப்பூ இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்தெடுத்த க்ருதத்தை யாவது கற்கண்டு கூட்டி பானம் செய்விக்கலாம். (4) அங்ஙனமே சீந்திற்கொடியின் ஸ்வரஸத்திற் காய்ச்சிய பாலையும் பருகலாம். (5) தைலம், பால், சர்க்கரை இவற்றை ஒன்றோடொன்று நன்றாகக் கலந்தாவது பானம் செய்விக்கலாம் (6) சிற்றாமுட்டி, தண்ணீர் விட்டாங்கிழங்கு, சிற்றரத்தை, தசமூலம், பெருஞ்ஜீரகம், சிவதைவேர், ஆமணக்கு, மல்லிகை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையும் உபயோகிக்கலாம்; இது வாத ஸம்பந்தமான விகாரங்களையும் போக்க வல்லது. (7) தாரோஷ்ணமான பாலை கோமுத்திரம் கலந்தாவது உட்கொள்ள, அது, வாததோஷத்தை அநுலோமநமாக வெளிப்படுத்தும். 5—9.

வாதாதிகமானவாத சோணிதத்திற்கு சிகித்ஸைகள்.

பித்தம் அதிகரித்துண்டான வாத சோணிதத்தில் (1) தண்ணீர் விட்டாங் கிழங்கு, கடுக ரோஹிணீ, பேய்ப்புடல், த்ரிபலை, சீந்தில் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தைப் பருகலாம். (2) மதுரமாகவும், கைப்பாகவுமுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, (3) அச்சரக்குகளாலேயே பக்குவம் செய்த பாலையாவது பானம் செய்விக்கலாம்.(4)பித்த தோஷம் மிக்க அதிகரித்திருந்தால்,விரேசநமாவதற்காக அம்மனிதன் பாலுடன்ஆமணக்கெண்ணெயைமுறைப்படிபானம்செய்யலாம்; அது ஜீர்ணமானதும் பாலும் அன்னமும் புஜிக்கலாம். (5) கடுக்காய்களைக் கஷாயமாகக் காய்ச்சி, அக்கஷாயத்தை நெய்யிலிட்டு பக்குவம்செய்தாவது பருகலாம். (6) சிவதை வேரின் சூர்ணத்தைப் பாலின் அநுபானத்தோடாவது உட்கொள்ளலாம். (7) அப்பிணியாளிக்கு நெய் கூட்டிய பாலைக் கொண்டு வஸ்திகளைப் பிரயோகித்தாவது மலத்தை வெளிப்படுத்தவேண்டும்; வாத-ரக்தத்திற்கு வஸ்திக்கு ஸமானமாக வேறு சிகித்ஸை கிடையாது; அதிலும் விசேஷமாக குதத்தில் வலியும், பார்ச்வசூலையும், அஸ்த்திகளில் வலியும், வயிற்று நோயும் ஏற்பட்டிருந்தால், அந்நிலைமைகளில் வஸ்தி சிகித்ஸையே மிகவும் சிறந்தது. $10—13\frac{1}{2}$

பித்தாதிகமான வாத-சோணிதத்திற்கு சிகித்ஸைகள்.

கபம் அதிகரித்துண்டான வாத-சோணிதத்தில் (1)கோரைக்கிழங்கு, திராக்ஷை, மஞ்சள் இவற்றின் கஷாயத்தைத் தேன் கூட்டி புட்கொள்ளலாம். (2) த்ரிபலா கஷாயத்திலாவது தேன் கலந்து பருகலாம். (3) சீந்திலையாவது, எந்த விதமாகவேனும் பக்குவம் செய்து பானம் செய்யலாம். (4) அவனவனது நிலைமைக்குத் தகுந்த ஸ்நேஹத்தைப் பருகச் செய்து, வமநமும் செய்வித்து, அப்பால் மெதுவாக தேஹம் ரூக்ஷமாகக்கூடிய சிகித்ஸையைச் செய்ய வேண்டும். 14, 15.

கபாதிகமான வாத-சோணிதத்திற்கு சிகித்ஸைகள்.

த்ரிபலை, த்ரிகடு, இலவங்கப் பத்திரி, ஏலம், மூங்கிலுப்பு, சித்திர மூலம், வசம்பு, வாய்விடங்கம், மோடி, ஜடாமாம்ஸி, ஆடாதோடை, இலவங்கப்பட்டை, ருத்தி, கீர்த்திப்பிலி,

த்ரிபலாதி அயஸ்க்ருதி.

சவ்யம் இவற்றைச் சமபாகமெடுத்து, தண்ணீரைச் சேர்ந்து நன்றாக ஆட்டி, காலையில் எடுத்து ஓர் இரும்புப்பாத்திரத்தினுள் இக்கல்கத்தை லேபநம் செய்து வைத்து, பகற் பொழுதில் புஜிக்கவும். எல்லா தோஷங்களாலுமுண்டான வாத-ரக்தத்தில் அதிலும் முக்கியமாய் வலியுடன் கூடிய வாத-ரக்தத்தில் இக்கல்கம் மிகவும் அனுகூலமானது. 16—17½.

வாத-சோணிதத்தில் சில பொது சிகித்ஸைகள்.

(1) நீர் முள்ளியிலையைச் சமைத்து புஜித்துக்கொண்டு, நீர்முள்ளியையே கஷாய மிட்டும் பருகிவந்தால், எப்பொழுதும் பொறுமையுடனிருக்கப் பழகியவனிடம் சினம் பற்றறுவதுபோல, வாத-ரக்தம் தீர்ந்து விடும். (2) பிணியாளி பிரஹ்மசர்யவிரதமனுஷ்டித்தவனாய். லேலீதக வஸையை பஞ்ச மூலஸ்வரஸத்தோடாவது, நெல்லிக்கனியின் ஸ்வரஸத்தோடாவது உட்கொண்டுவர, தேஹத்தில் வெகு நாட்களாய் ஊறிப்போயுள்ள வாத-ரக்தமும் நிவாரணமாகும். 18—19½.

வாத-சோணிதத்திற்கு பாஹ்ய சிகித்ஸை.

வாத-ரக்தத்திற்கு இதுகாறும் ஆப்யந்தர சிகித்ஸை யென்கிற உள்ளே ஔஷதமுபயோகிக்கும் சிகித்ஸை கிரமமாகக் கூறப்பட்டது. இனி இவ்வியாதிக்கு பாஹ்ய சிகித்ஸை யென்னும் சர்மத்தின் மேல் பிரயோகிக்கக்கூடிய சிகித்ஸை விவரிக்கப்படும். 20.

ஆரநாளாதி தைலம்.

சாத்தீர்த்தம் என்கிற அன்னம் ஊறவைத்தஜலத்தை ஓர்ஆடகமளவு எடுத்து, அதிற் காற்பங்கு தைலம் சேர்த்து, ஸாம்பிராணியையும் கூட்டிக் காய்ச்சி, ஒரு பெரிய பாத்திரம் நிரம்பிய ஜலத்தில் ஊற்றிக் கடைந்து, வாதரக்தரோகிக்கு மேலே உபயோகிக்க, ஜ்வரம், அழற்சி, வலி இவை நீங்கும். 21.

பிண்ட தைலம்.

முற்கூறிய தைலத்தில் தேன் மெழுக்கைச் சேர்த்து உருக்கி, அதில் மஞ்சிஷ்டியின் சூர்ணத்தையும் கல்கமாகக் கூட்டி பக்குவம் செய்து, அப்யங்கத்திற்கு உபயோகித்து வந்தால், வாத-ரக்த நோய் தீரும். 22.

வாத-சோணிதத்தில் பலவித பாஹ்யோபசாரங்கள்.

(1) தசமூலம் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பெரிதும் வாதம் அதிகரித்த வாத-சோணிதத்தில் மேலே ஊற்றிவந்தால், உடனே வலி நிவாரணமாகும். (2) இளஞ் சூடான நெய்யை அங்ஙனமே ஊற்றினாலும், அவ்விதமான குண முண்டாகும். (3) மதுரரஸமுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த நான்கு விதமான ஸ்நேஹங்களையும்[1] ஒன்று கூட்டி இளஞ்சூடாக மேலே ஊற்ற, பிடிப்பு, இசிவு, வலி இவை நீங்கும். (4) தேஹத்தில் அழற்சியிருந்தால், அந்த ஸ்நேஹங்களையே குளிரச் செய்து மேலே ஊற்றலாம். (5) பசுவின் பால், செம்மறியாட்டுப்பால், வெள்ளாட்டுப்பால், இவற்றில் தைலம் கலந்து முன்போலவே பிடிப்பு முதலிய வற்றிற்கு இளஞ்சூடாகவும், அழற்சிக்குச் சீதளமாகவும்உபயோகிக்கலாம். (6) ஜீவநீய கணச் சரக்குகளாலான கஷாயத்தையும், (7) இலகு பஞ்சமூல கஷயத்தையும் பிடிப்பு முதலியவற்றில் இளஞ் சூடாகவும், அழற்சியில் குளிர்ச்சியாகவும் மேலே ஊற்றலாம். (8) திராக்ஷாரஸம், (9) கருப்பஞ்சாறு, (10) மத்யங்கள், (11) தயிர், (12) தயிராடை, (13) காஞ்ஜிக மென்னும் காடி, (14) அரிசி கழுவிய நீர், (15) தேன் கலந்த ஜலம், (16) சர்க்கரை கரைத்த நீர் இவை யெல்லாம் வாத-ரக்தத்தில் தேஹத்தின் மேலே ஊற்றுவதற்குச் சிறந்தவையாம். (17) அன்பார்ந்தவரும், இன்பமுறப் பேசுமியல்பினரும்,

1. க்ருதம்,தைலம், வஸா, மஜ்ஜா என்பவை"நான்கு வித ஸ்நேஹங்கள்."

குளிர்ச்சியும் மிக்க மிருதுத் தன்மையும் பொருந்திய அங்கங்களைப் பெற்றவருமான பெண் மணிகள் கரங்களிலும் ஸ்தநங்களிலும் சந்தனக்குழம்பைப் பூசிக்கொண்டு அணைத்துக்கொள்ள, இப்பிணியாளியின் தேஹத்திலுள்ள தாபமும், நோவும், வாட்டமும் தானே விலகும். 23—27.

வாத - சோணிதத்தில் லேபங்களும் உபநாஹாதிகளும்.

வாத-ரக்தத்தில் சர்மம் சிவந்து, வலியும் அழற்சியும் மிகுதியா யிருக்கையில் இரக்தமோக்ஷணம் செய்து, அடியில் வரும் லேபநத்தைப் பிரயோகிக்கவும்: (1) வறள்தாமரை, மஞ்ஜிஷ்டி, மரமஞ்சள், அதிமதுரம், சந்தனம்,கற்கண்டு, ஞாழல், கரும்பு, பெருங்கடலை, ஆமணக்கு, மா இவற்றை லேபமாகச் செய்யவும். இந்த லேபம் வலி, அழற்சி, விஸர்ப்பம், சிவப்பு, வீக்கம் இவற்றைப் போக்கும். (2) வாதஹர குணமுள்ள சரக்குகளைச் சேர்த்து ஸ்நிக்த்தமாகப் பக்குவம் செய்யப் பட்ட க்ருஸராவும், [1] (3) எள்ளு, கடுகு இவற்றின் கல்கத்தைச் சேர்த்த பயற்றம் பாயஸமும் உபநாஹமாகப் [2] பிரயோகிக்கப் படுமானால், வலியை நன்றாகப் போக்கும். (4) நீர்வாழும் ஜந்துக்களென்ன, ப்ரஸஹங்களென்ன [3], ஆநூபஜந்துக்களென்ன, வேஸவாரங்களென்ன இவற்றை ஜீவநீயௌஷதங்களோடும் ஸ்நேஹங்களோடும் கலந்து உபநாஹம் செய்ய உபயோகிக்கலாம். இதனால் திமிர்ப்பு, குத்தல் வலி, இசிவு, வீக்கம், அவயவப்பிடிப்பு இவை நிவ்ருத்தியாகும். (5) நீர்வாழும் ஜந்துக்கள் முதலியவற்றின் கொழுப்பை ஜீவநீயச் சரக்குகளோடு பக்குவம் செய்து, பாலுடன் கலந்து உபநாஹமாக உபயோகித்தாலும் அதே பயனுண்டு. (6) மருதோன்றி வேரையும், ஜீவந்தீ மூலத்தையும் நெய் விட்டு அரைத்து, செம்மறியாட்டின் பாலில் கூட்டி லேப மிடலாம். (7) அங்ஙனமே பொரித்த எள்ளைப் பாலில் சேர்த்து, அரைத்து லேபமாகப் பிரயோகிக்கலாம். 28—33.

வாதாதிகமானவாத-சோணிதத்திற்கு லேபாதிகள்.

வாதம் அதிகரித்த வாத-சோணிதத்தில் (1) ஆழிவிதையைப் பால் விட்டு அரைத்து மேலே லேபநம் செய்யலாம். (2) அல்லது ஆமணக்கு விதைகளைப் பால் சேர்த்து அரைத்து லேபநமா யுபயோகிக்கலாம். இந்த லேபநங்கள் வலியை நிவ்ருத்தி செய்யும். (5) பசுவின் மூத்திரம், யவக்ஷாரம், ஸுரை இவற்றிற் பக்குவம் செய்த க்ருதம் அப்யங்கம் செய்வதற்கு ஹிதமாயிருக்கும். (5) நன்கு பக்குவம் செய்யப் பட்ட சுக்த மென்கிற காடியையும் தேன் கூட்டி ஸேசநம் செய்யவும், அப்யங்கம் செய்யவும் உபயோகிக்கலாம். 34, 35.

கபாதிகமான வாத-சோணிதத்திற்கு லேபம்.

கபாதிகமான வாத-சோணிதத்தில் ஒட்டடை, வசம்பு, கோஷ்டம், சதகுப்பி, மஞ்சள், மரமஞ்சள், இவற்றை லேபமாகச் செய்து மேலே உபயோகிக்க வலி நிவாரணமாகும். 36.

வாத - கபாதிகமான வாத-சோணிதத்திற்கு லேபம்.

(1) செம்முருங்கையின் வித்துகளை தாந்யாம்ல மென்கிற காடி விட்டு ஆட்டி, வாதகபாதிகமான வாத-சோணிதத்திற்கு மேலே லேபநம் செய்ய உபயோகித்தால் அங்ஙனமே நல்ல குணமுண்டாகும். (2) வாதகபம் அதிகரித்த இவ்வாத-ரக்த ரோகிக்கு செம்முருங்கை வித்தின் லேபத்தையுபயோகித்தபின் முகூர்த்த நேரம் கழித்துக் காடிகளை ஊற்றி குளிப்பாட்டவும். 37.

---

1. க்ருஸரா - முதற் புத்தகம் 135-ம் பக்கம் பார்க்க.
2. உபநாஹம்-முதற் புத்தகம் 136 ம் பார்க்க.
3 ப்ரஸஹங்கள்—முதற் புத்தகம் 50-ம் பக்கம் பார்க்க.

உத்தான-வாத-சோணிதத் திற்கு பாஹ்யோபசாரம்.

வாத-ரக்தம் சர்மத்தில் சிறிது மேற்புறமாக மாத்திரம் உண்டாயிருந்தால் அது, லேபநங்களென்ன, அப்யங்கமென்ன, ஸேகமென்ன, மூழ்குதலென்ன இவற்றால் பரிஹரிக்கக் கூடியதாம். 37½.

கம்பீர - வாத-சோணிதத்திற்குப் பரிஹாரம்.

தேஹத்தில் ஆழமான பாகங்களை ஆச்ரயித்துண்டான வாத-சோணிதத்திற்கு விரேசநம், ஆஸ்த்தாபநவஸ்தி, ஸ்நேஹபாநங்கள் இவற்றைப் பிரயோகித்து பரிஹாரம் செய்யவேண்டும். 38

வாத-கபாதிகமான உத்தான வாத-சோணிதத்திற்கேற்ற லேபநங்கள்.

வாத-கபங்கள் அதிகரித்த மேற்புறமாயுண்டான வாத-சோணிதத்தில் லேபம் முதலியவற்றை இளஞ்சூடா யுபயோகிக்க வேண்டும். அதில் குளிர்ச்சியான ஔஷதப் பிரயோகங்களால் ஸ்தம்பநம் என்கிற பிடிப்பு ஏற்பட்டு, அழற்சியும், வீக்கமும், வலியும், அரிப்பும் மிக்க அதிகரித்துவிடும் 39.

பித்த-ரக்தாதிகமான வாத-சோணிதத்திற்கேற்ற லேபாதிகள்.

பித்தமும் இரத்தமும் மிகுதியாயுள்ள வாத-சோணிதத்தில் லேபம் முதலியவை குளிர்ச்சியாயிருக்கவேண்டும். அவை உஷ்ணமாயிருந்தால் கொப்புளித்தல், நோவு, சிவப்பு, வியர்த்தல், வெடிப்பு இக்கோளாறுகள் ஸம்பவிக்கும். 40.

மதுயஷ்ட்யாதி தைலம்.

நூறு பலம் அதிமதுரத்தை பத்துப் பங்கு ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்கு கஷாயம் மிகும்படியாகக் காய்ச்சி யெடுத்து அக்கஷாயத்தில் ஒரு ஆடகம் தைலம் சேர்த்து, அதற்குச் சமமாகப் பாலையும் கூட்டி பக்குவம்செய்யவும். இதில் அடியில் வரும் கல்கத்திரவ்யங்களை ஒவ்வொரு பலம் அளவில் சேர்க்க வேண்டும்:—பெருமல்லிகை, நெல்லி, அறுகம்புல், கொக்குமந்தாரை, தண்ணீர்விட்டான் கிழங்கு, சந்தனம், அகில், ஹம்ஸபாதி அல்லது சீடபாரி யென்கிற பூண்டு, ஜடாமாம்ஸீ, மேதா, மஹாமேதா, சீந்தில், காகோலீ, க்ஷீரகாகோலீ, சதகுப்பி, ருத்தி, தாமரைக் கிழங்கு, ஜீவந்தி, ஜீவகம், ருஷபகம், இலவங்கப் பட்டை, இலவங்கப் பத்திரி, நகமென்கிற கந்தத் திரவ்யம், வெட்டிவேர், வெள்தாமரை, மஞ்சிஷ்டி, நன்னாரி, பேய்த்துமட்டி, பெருங்கோரைக் கிழங்கு, இவைகளேயாம். இத்தைலத்தை நான்கு விதமாக தேஹத்தில் பிரயோகிக்க[1] வாத-ரக்தம், பித்த யெரித்தல், ஜ்வரம், வலி இவை தீரும். 41—44.

சிற்றாமுட்டி பலா தைலம்.

சிற்றாமுட்டியைக் கஷாயமிட்டு, சிற்றாமுட்டியையே கல்கமாகவும் சேர்த்து, அதில் தைலத்தையும் பாலையும், ஸம அளவாகக் கூட்டி பக்குவம் செய்யவும். இத்தைலத்தையே இதே கஷாயத்தில் ஆயிரமுறை அல்லது நூறுமுறை காய்ச்சி யெடுக்க, வாதரக்தம் வாதரோகங்கள் இவைகளைப் போக்கும். இது மிகவும் சிறந்த இரஸாயநௌஷதம்;[2] இந்த்ரியங்களுக்குத் தெளிவையுண்டாக்கும்; ஜீவநம்,[3] ப்ருஹ்மணம்,[4] ஸ்வர்யம்[5] என்கிற குணங்களுமுண்டு; புருஷர்களின் சுக்ரம், ஸ்த்ரீகளுடைய சோணித மென்கிற ஆர்த்தவம்[6] இவற்றின் தோஷங்களையும் போக்க வல்லது. 45, 46.

---

1. பானம், நஸ்யம், லேபநம் அநுவாஸந வஸ்தி என்கிற நான்குவகையிற் பிரயோகித்தல்.

2. இரஸாயநம்—முதற்புத்தகம் 28, 270 இப்பக்கங்களிற் பார்க்க.

3. ஜீவநம்—முதற்புத்தகம் 20, 55-ம் பக்கங்களைப் பார்க்க.

4. ப்ருஹ்மணம்-முதற்புத்தகம் 28, 117, 118-ம் பக்கங்களைப் பார்க்க.

5. ஸ்வர்யம்—முதற்புத்தகம் 51-ம் பக்கம் பார்க்க.

6. சோணிதம் அல்லது ஆர்த்தவம்—முதற்புத்தகம் 3, 100, 231 இப்பக்கங்களைப் பார்க்க.

மேதஸ் என்கிற கொழுப்பாவது அல்லது கபமாவது மிகவும் விருத்தியடைந்து, வாதத்தின் மார்க்கம் அடைபட்டுப் போக, அதனால் வாதம் பிரகோபித்து விடுமானால், அதில் முதலில் ஸ்நேஹநமும், ப்ருஹ்மணமும் செய்வது நலம்; பிறகு ஆட்யவாதத்திற் கூறியுள்ள[1] சிகித்ஸையையும், அப்பால் வாத-சோணிதத்திற்கான சிகித்ஸையான ஸ்நேஹநாதி சிகித்ஸையையும், இரத்தம் சுத்தியாவதற்கான சிகித்ஸையையும் செய்ய வேண்டும். 47, 48.

மார்கரோதத்தினால் வாதம் பிரகோபித்த வாத-சோணிதத் திற்கு சிகித்ஸை.

பிராணவாயு முதலிய ஐந்து வாயுக்களும்[2] ஒருமிக்கப் பிரகோபித்திருந்தால், வாத வியாதியிற் கூறியுள்ளபடி, வியாதியின் நிலைமைகளுக்குத் தகுந்தவாறு எந்த வாயுவுக்குச் சிகித்ஸை செய்யவேண்டுமோ அந்த வாயுவுக்கு ஸமீபமாயுள்ள விடத்தை அனுஸரித்து, அந்தந்த வாயுவுக்கேற்ற ஔஷதத்தை அல்லது சிகித்ஸையைப் பிரயோகிக்க வேண்டும்; மேலும் பஞ்ச வாயுக்களில் எதெது மற்றவைகளை விட அதிக பலமுள்ளவையெனத் தெரிய வருகின்றதோ, அவ்விதம் அதிக பலமுள்ள அந்தந்த வாயுவுக்குக் கிரமமாக முதலில் சிகித்ஸை செய்யவேண்டும். 49.

வாத-சோணிதத்தில் பிராணாதிவாயுக்கள் பிரகோபித்திருந்தால் செய்யும் சிகித்ஸா முறைகள்.

ஆமதோஷத்துடன் கூடிய வாத-சோணித ரோகம் ஸ்வேதநம், இலங்கநம், பாசநம் இச்சிகித்ஸைகளாலும், ரூக்ஷகுணமுள்ள லேபந-ஸேசநாதிகளாலும் ஆமதோஷம் நீங்கியதாகச் செய்யப்பட்டதும், அப்பால் ஸாதாரண வாததோஷத்தைப் பரிஹரிக்கக் கூடிய சிகித்ஸையைச் செய்ய வேண்டும். 50.

வாத-சோணிதத்தில் ஆமதோஷம் நீங்கிய பிறகு செய்யும் சிகித்ஸை.

க்ஷயம், ஆக்ஷேபகம் என்கிற இசிவு, அவயவங்கள் சுருங்கிப் போதல், உணர்ச்சியற்றுப் போதல் நடுக்கம், ஹநுஸ்ரம்ஸம் என்கிற முகவாய்க்கட்டை நெகிழ்தல், அர்திதவாதம், கஞ்ஜத்தன்மை, பங்குத்தன்மை,[1] வாத-ரக்தம், ஸந்திநழுவிப் போதல், பக்ஷவாதம், மேதஸ்-மஜ்ஜை இவற்றைப்பற்றிய நோய்கள்; இந்த வியாதிகள் ஆழமான ஸ்தாநங்களைப் பற்றியுண்டாவதால் மிகப் பிரயாஸையின் பேரில் ஒருக்கால் நிவ்ருத்தியானாலும் ஆகலாம்; அல்லது நிவ்ருத்திக்க முடியாதனவாகவும் போகலாம்; ஆகையால் நல்ல தேஹவலிமையுள்ளவனுக்கு உண்டானவுடனே, உபத்திரவங்கள் ஏற்படாமலிருக்கையிலேயே இவ்வியாதிகளுக்குச் சிகித்ஸை செய்ய வேண்டும். 51, 52.

வாத-சோணிதம் முதலியவற்றிற்கு ஆரம்பத்திலேயே சிகித்ஸை செய்தல்.

வாயுவானது பித்தத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், அப்பொழுது சீதசிகித்ஸையையும் உஷ்ணசிகித்ஸையையும் அநேகமுறை மாற்றி மாற்றி உபயோகிக்கவேண்டும். ஜீவநீயகணச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம்செய்யப்பட்ட க்ருதத்தைப் பானம் செய்விக்கலாம். ஜாங்கல தேசத்திய ஜந்துக்களின் மாம்ஸத்தையும் வாற்கோதுமையையும், சம்பா அரிசியையும் இப்பிணியாளிக்கு உபயோகிக்கலாம். மிருதுவாக விரேசநமாகக் கூடிய ஔஷதத்தையும் பால் கூட்டிக் கொடுக்கலாம். பாலுடன் கூடிய திரவத்திரவ்யங்களால் வஸ்திகளைப் பிரயோகிக்கலாம். பஞ்சமூலம் சிற்றாமுட்டி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையும் பருகக் கொடுக்

வாத-சோணிதத்தில் வாதம் பித்தாவ்ருதமாயிருப்பதற்கேற்ற சிகித்ஸை.

1. ஆட்யவாதம்—ஊருஸ்தம்பம்; ஊருஸ்தம்ப சிகித்ஸையைப் பற்றி இப்புத்தகம் 192-ம் பக்கம் பார்க்க.

2. பிராணவாயு, அபாநவாயு, உதாநவாயு, வியாநவாயு, ஸமாநவாயு என்னும் இவை பஞ்ச வாயுக்களாம்.

கலாம். மதுரரஸமுள்ள ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த தைலங்களால் காலமறிந்து அநுவாஸந வஸ்தியைப் பிரயோகிக்கலாம். அதிமதுரம் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தையும், பலாதைலத்தையும், பஞ்சமூல கஷாயத்தையும், குளிர்ந்த ஜலத்தையும் மேலே ஊற்றலாம். 53—56.

வாத - சோணிதத்தில் வாதம் கபாவ்ருத மாயிருப்பதற்கேற்ற சிகித்ஸை.

வாயு கபத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், வாற்கோதுமையினாலான அன்னமும், ஜாங்கல தேசத்திய மிருக-பக்ஷிகளின் மாம்ஸங்களும், ஸ்வேத சிகித்ஸையும், தீக்ஷ்ணமான நிரூஹ வஸ்திகளும், வமந-விரேசநங்களும், புராண க்ருதமும், நல்லெண்ணெயும், கடுகெண்ணெயும் அநுகூலமானவையாம். 57, 57½.

வாத - சோணிதத்தில் வாதம் கப - பித்தாவ்ருத மா யிருப்பதற்கு சிகித்ஸை.

கப-பித்தங்களால் வாதம் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், அந்த நிலைமையில் முதலில் பித்தத்தை நிவ்ருத்தி செய்ய முயல வேண்டும். 58.

வாத - சோணிதத்தில் வாதம் தாது முதலியவற்றால் ஆவரணம் செய்யப் பட்டிருப்பதற்கு சிகித்ஸைகள்.

(1) வாதமானது இரத்தத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், ஸாதாரணமாய் வாத-சோணித வியாதிக்குச் செய்யப்படும் சிகித்ஸையைச் செய்ய வேண்டும். (2) வாதம் மாம்ஸ தாதுவினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், ஸ்வேத சிகித்ஸையும், அப்யங்கமும், மாம்ஸரஸத்தின் உபயோகமும் அநுகூலமானவையாம்; பாலும் ஸ்நேஹமுங்கூட உபயோகிக்கத் தகுந்தவையாம். (3) வாதம் மேதஸ்ஸினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், பிரமேஹ சிகித்ஸையும், மேதோரோக சிகித்ஸையும், வாதஹர சிகித்ஸையும் ஏற்ற பரிஹாரங்களாம். (4) வாயுவானது அஸ்த்தியினால் ஆவரணம் செய்யப் பட்டிருந்தாலும், (5) மஜ்ஜையினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தாலும் மஹா ஸ்நேஹங்களை[1] உபயோகிக்கவேண்டும். (6) வாதம் சுக்ரத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், முற்கூறியுள்ள சிகித்ஸையைச்[2] செய்ய வேண்டும். (7) அன்னத்தினால் வாதம் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால் பாசநம், வமநம், தீபநம் என்கிற சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும். இதில் தீபந-பாசந ஔஷதங்கள் இலகுகுணமுள்ளவையாகவும் இருத்தல் அவசியம். (8) வாதம் மூத்திரத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், மூத்திரத்தை விருத்தி செய்யக்கூடிய ஔஷதங்களையும், ஸ்வேத சிகித்ஸைகளையும், உத்தர வஸ்திகளையும் பிரயோகிக்க வேண்டும். (9) மலத்தினால் வாதம் ஆவ்ருதமாயிருந்தால் ஆமணக்கெண்ணெயும், பேதியென்கிற குணமுள்ள வஸ்திப் பிரயோகங்களும், ஸ்நேஹப் பிரயோகங்களும் ஏற்றவையாம் (10) வாதம் ஸர்வதோஷங்களாலும், ஸகல தாதுக்களாலும் ஆவரணம் செய்யப்பட்டுள்ள நிலைமையில் எந்த சிகித்ஸை கப-பித்தங்களுக்கு விரோதமுண்டு பண்ணாமலிருக்குமோ, எது வாதத்தை ருஜுவான மார்க்கத்தினால் வெளிப்படுத்துமோ, அவ்வித சிகித்ஸையை ஜடிதியிற் செய்ய வேண்டும். இந்த நிலைமையில் அபிஷ்யந்தி யென்கிற[3] தன்மையற்றதும், ஸ்நிக்தமானதும், ஸ்ரோதோ மார்க்கங்களைச் சுத்தி செய்யக் கூடியதுமான ஔஷதமும் பானமும் ஏற்றவையாம்; பாசந குணமுள்ள நிரூஹவஸ்திகளும், பெரும்பாலும்

1. க்ருத-தைல-வஸா-மஜ்ஜா வென்கிற நான்கு விதமான ஸ்நேஹங்களையும் ஒருமிக்க உபயோகித்தல்; அல்லது நாராயண தைலம் முதலியதையுபயோகித்தல்.

2. வாதரோகசிகித்ஸையில் சுக்ராவ்ருதமான வாதத்திற்குச் செய்யும் சிகித்ஸை யெனக் கருத்து.

3. அபிஷ்யந்தி—முதற் புத்தகம் 33-ம் பக்கம் பார்க்க.

மதுரரஸமுள்ள வஸ்துக்களாலான தைலாதிகளால் அநுவாஸந வஸ்திகளும் பிரயோகிக்கத் தகுந்தவையாம்; போதுமாறு நல்ல தேஹவன்மை யிருக்கின்றதா வென்பதை யறிந்து, மிருதுவாக விரேசநம் செய்விக்க வேண்டும். இரஸாயநௌஷதங்களை யெல்லாம் உபயோகிப்பதும் நலம். அதிலும் விசேஷமாய் சிலாஜதுவைப் பாலின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம்; சுத்தமான மஹிஷாக்ஷி குக்குலுவையாவது பாலுடன் உபயோகிக்கலாம்; ச்யவநப்ராசலேஹ்யத்தையாவது உட்கொள்ளலாம்; அல்லது ப்ராஹ்மரஸாயநப் பிரகரணத்தில் முதலிற் கூறப்படுகிற சர்க்கரை கூட்டிய அல்லது சர்க்கரை சேர்க்காத பதினொரு ரஸாயநௌஷதங்களில்[1] எதையும் உபயோகிக்கலாம். 59-65½.

வாத-சோணிதத்தில் அபாநாதிவாதங்கள் ஆவரணமா யிருந்தால் செய்ய வேண்டிய சிகித்ஸைகள்.

அபாநவாயுவானது ஏதேனுமொன்றால் ஆவரணம் செய்யப்பட்டுப் போனால் தீபநம், க்ராஹி என்கிற குணமுள்ள எல்லா ஔஷதத்தையும் பிரயோகிக்கலாம். மேலும் வாதம் ருஜுவான மார்க்கத்திலிருந்து வெளியாகும்படியும் செய்ய வேண்டும்; மூத்திராசயத்தையும் சுத்தி செய்யவேண்டும். ஆவரணவாத விகாரங்களுக்கு இங்ஙனம் சுருக்கமாய் சிகித்ஸா முறை கூறப்பட்டது. கற்றறிந்த வைத்தியன் தானாகவே பிராணாதிவாதங்களுக்கும் ஆவரணாதி விகார நிலைமைகளைப் பகுத்தறிந்து, அததற்கேற்ற சிகித்ஸையை முறைப்படி நிறைவேற்றுவானாக. விஷயமுணர்ந்த வைத்தியன் உதாநவாயு அடைபட்டிருந்தால், அதை மேல் நோக்கி வெளிபடுத்த முயலவேண்டும். அபாநவாயுவைக் கீழ்நோக்கி வெளியாகுமாறு தூண்டவேண்டும். ஸமாநவாயுவை வாதஹரமான ஔஷதங்களால் சமநம் செய்விக்கவேண்டும். வ்யாநவாயுவை மேல் நோக்கியோ, கீழ் நோக்கியோ, அல்லது மத்தியத்தில் சமநமாக்கியோ உசிதப்படி கோளாறடைந்த நிலைமையிலிருந்து இயற்கை நிலைமைக்குக் கொண்டுவர வேண்டும். மற்ற நான்கு வாயுக்களிடமிருந்தும் பிராணவாயுவைக் காத்து வரவேண்டும்; ஏனெனில் அவ்வாயு தேஹத்தில் நிலைத்திருந்தால்தான் சரீரமும் நிலைத்திருக்கும். இவ்வாறு தகாத மார்க்கங்களிற் பரவியுள்ள பிராணாதிவாயுக்களை அததற்குற்ற ஸ்த்தாநங்களிற் சேர்க்க வேண்டும். 66—69½.

வாத சோணிதத்தில் ஆவரணவாத விகாரங்களுக்ெல்லாம் பொது சிகித்ஸை.

பித்தாவரணம், இரத்தாவரணம் இவ்விரண்டைத் தவிர்த்து மற்றஎல்லா ஆவரணவாத ஸம்பந்தமான கோளாறுகளிலும் வெள்ளுள்ளியை இரஸாயநமுறைப்படி யுபயோகிக்க அக்கோளாறுகள் தீரும். பித்தத்தினால் ஆவரணம் செய்யப்பட்ட வாதத்தில் பித்தஹரமான சிகித்ஸையும், வாதத்தைக் கீழ் நோக்கச் செய்யும் சிகித்ஸையும் ஏற்றவையாம். இரத்தத்தினால் வாதம் ஆவரணம் செய்யப்பட்டிருக்கையிலும் அதே சிகித்ஸைகளைச் செய்வதோடு, வாத-சோணிதத்திற்கான மற்ற ஸாதாரணசிகித்ஸைகளையும் செய்யலாம்; இதில் இரத்த தோஷம், பித்த தோஷம், வாத தோஷம் இவற்றைப் பரிஹரிக்கக்கூடிய பலவிதமான இரஸாயநப் பிரயோகமும் அநுகூலமானதாம். 70—72.

1. இந்த பதினொரு இரஸாயநங்களும் உத்தரஸ்த்தாநத்தில் 39-வது அத்தியாயத்தின் ஆரம்பத்திற் கூறப்படுகின்றன.

நிதாந ஸ்த்தாநத்திற் கூறிய கிரமப்படி வியாதிகளுக் கெல்லாம் இங்ஙனம் சிகித்ஸைகள் விளங்க மொழியப்படலாயின. ஆயுர்வேத வித்யையின் பலனெனக் கூடிய இந்த ஸ்த்தாநம், இதைக் கற்பவருக்கு வியாதிகளோயுடனே போக்கிவிடக் கூடிய பெருமை பொருந்தியது 73.

சிகித்ஸா ஸ்த்தாநத்தின் முடிவுரை.

சிகித்ஸிதம் அல்லது சிகித்ஸை, ஹிதம் பத்தியம், பிராயச்சித்தம், பிஷக்ஜிதம், பேஷஜம், சமநம், சஸ்தம் இவை யெல்லாம் ஔஷதம் அல்லது சிகித்ஸையென்பதைக் குறிப்பிடுவதற்கான ஓரினச் சொற்களாம். 74.

ஔஷதம் என்பதற்குப் பர்யாய சொற்கள்.



# கல்ப ஸ்த்தாநம்.

## முதல் அத்தியாயம்.

இனி வமந கல்பம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும். ஆத்ரேயாதி மஹர்ஷிகள் இங்ஙனம் மொழிந்தருளினர்:—

வமநத்திற்கும் விரேசநத்திற்கும் முறையே சிறந்த சரக்குகள்.

வமநம் செய்விப்பதற்கு மருக்காரை யென்னும் மருக்களாம்பழமும், விரேசநம் செய்விப்பதற்குச் சிவதை வேரும் எப்பொழுதும் சிரேஷ்டமானவை. இவற்றைத் தவிர மற்ற வமந-விரேசநகுணமுள்ள சரக்குகளை வியாதிகளின் விசேஷமான அந்தந்த நிலைமைகளில் உற்றவாறு உபயோகிக்கலாம். 1.

மதந பலத்தைப் பக்குவம் செய்யு முறை.

அதிக பசுமையில்லாமலும் மிகக் கனியாமலுமுள்ள மதந மென்கிற அம்மருக்களாம்பழங்களை க்ரீஷ்ம - வஸந்தருதுக்களுக்கு [1] இடையில், நல்ல நக்ஷத்திரத்தில், பகற் காலத்திற் கொண்டு வந்து, நன்றாகத் துடைத்து சுத்தம் செய்து, தர்ப்பைகளாலாகிய கவசம் போன்ற கூண்டில் அவற்றைப் போட்டு, நன்றாகக் கட்டி, பசுஞ்சாணத்தை மேலே பூசி, அப்பால் அக்கவசத்தை தானியக் களஞ்சியத்திற் புதைத்து விடவும். தர்ப்பைகளால் மூடப்பட்டிருப்பதால் எட்டு நாட்கள் சென்ற பிறகு அவை மிருதுவாகவும், தேன் மணம் அல்லது வேறு இஷ்டமான மணமுமுள்ளவைகளாகப்பக்குவமாயிருக்கக் கண்டு, அவற்றை வெளியிலெடுத்து, வெயிலில் உலர்த்தவேண்டும். அவை நன்றாக உலர்ந்த பிறகு, அவற்றின் உள்ளிருந்து வித்துகளை கிரஹித்து, தயிர், தேன், நெய், இறைச்சி இவற்றைக் கூட்டி அரைத்து உலர்த்தவும். பிறகு அவற்றை யெடுத்து, சேமித்து வைத்துக் கொண்டு அவசியமான ஸமயங்களில் உபயோகிக்கவும். 2—5½.

மதந பலத்தை உட்கொள்ளும் முறை.

பிறகு சேமித்து வைத்துள்ள அவ்வித்துகளிலிருந்து தேவையான அளவு சரக்கை யெடுத்து, நன்கு சூர்ணம் செய்து கொள்ளவும். அதிமதுரம் செம்மந்தாரை, நறுவிலி, கோவை, கடம்பு, வஞ்சி, சணப்பு, செவ்வெருக்கு, நாயுருவி இவற்றுள் ஏதேனு மொன்றின் கஷாயத்தில் ஓரிரவெல்லாம் அச்சூர்ணத்தை ஊறவைக்கவும். பிறகு மறு நாட் காலையில் அவ்வணத்தையும் பிசைந்து வடிக்கட்டி, ஸூத்திர ஸத்தாநத்திற் கூறிய முறைப்படி [1] அக்கஷாயத்தைப் பருகவும். அங்ஙனம் செய்ய, அதனால் நன்கு வாந்தியுண்டாகும். 6—8½.

வமநஞ்செய்விக்கத்தகுந்த வியாதிகளும் வமநத்தின் அளவும்.

கபஜ்வரம், ப்ரதிச்யாயம், குல்மம், அந்தர் வித்ரதி இவ்வியாதிகளில் விசேஷித்து வமநம் செய்விக்க வேண்டும். பித்தம் வெளிப்படும் வரையில் வாந்தியாகச் செய்வது, வமநத்திற்கான பொது பரிமிதியாகும். 9½.

மதந பலத்தை ஜ்வராரோசக கிரந்தியாதிகளில் உபயோகிக்கும் வகை.

மருக்காரை வித்துகளின் கஷாயத்திலேயே மருக்காரைவித்துகளின்சூர்ணத்தை பாவனைசெய்யவும். இச்சூர்ணத்துடன் அதற்கு மூன்றில் ஒரு பங்கு த்ரிபலா சூர்ணத்தைக் கூட்டி, செம்மந்தாரைமுதலியதின் [2] கஷாயத்

1. வஸந்த-க்ரீஷ்மங்களின் ருதுஸந்தி யென்று பொருள். ருதுஸந்தி யென்பதன் விவரத்தை முதற் புத்தகத்தின் 24-வது பக்கத்திற் காண்க.

1. ஸூத்திர ஸ்த்தாநத்தில் 18-வது அத்தியாயத்தில் வமநவிதிகளைப் பார்க்க.

2. இதனால், முன்கூறிய அதிமதுரம், நறுவிலி, கோவை முதலியவைகளும் கிரஹிக்கப்படுகின்றன.

தின் அனுபானத்தோடு இதை ஜ்வரத்தினுலேற்பட்ட அரோசகத்தில் உட்கொள்ளலாம். கிரந்தி, அபசி, அர்புதம், உதரரோகங்கள் இவற்றால் வருந்துபவனும், பித்தம் கபஸ்தானத்தை அடைந்திருக்கையிலும் தேவதாளீ முதலியவற்றின் [1] கஷாயத்தோடு அதை யுபயோகிக்கலாம். 10—11½.

இருதயதாப-இரக்த பித்தங்களில் மதநபலத்தை யுபயோகிக்கும் முறை.

இருதயத்தில் அழற்சியுண்டாகையிலும், கீழ் நோக்கிய இரக்த பித்தத்திலும் மருக்காரையின் வித்துகளைச் சேர்த்து பக்குவம் செய்த பாலையாவது, அவ்விதம் பக்குவம் செய்த பாயஸத்தையாவது பருகலாம். 12.

கபச்சர்தி - ப்ரஸேகங்களில் மதநபலத்தையுபயோகிக்கும் வகை.

கபாதிக்யத்தினுலுண்டான வாந்தியிலும், வாயில் மிதமிஞ்சி யுமிழ் நீரூறுகையிலும், தமகச்வாஸத்திலும் மருக்காரவித்தைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்துண்டான தயிரின் ஆடையையாவது, அல்லது அவ்விதமான தயிரையாவது பானம் செய்யலாம். 13.

தேஹம் சுஷ்கித்தல் முதலியதில் மதந பலாதிகளை யுபயோகித்தல்.

மருக்காரை முதலிய சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்தெடுத்த நெய்யை, மருக்காரை முதலியவற்றின் கஷாயத்தினுலும், அதே சரக்குகளின் கல்கத்தினுலும் பக்குவம் செய்து, கபத்தினுல் ஜாடராக்னி தாக்கப்பட்டிருக்கையிலும் தேஹம் சுஷ்கித்துப் போகையிலும் வமநமாவதற்காக உபயோகிக்கலாம். 14.

1. தேவதாளி முதலிய என்பதால், வமநகுணமுள்ள அவ்விதமான இதர சரக்குகளும் உபயோகிக்கத் தகுந்தவை யெனக் குறிப்பிடப்படுகின்றன.

ஸுகவமநத்திற்கேற்ற மதநபல ரஸக்ரியை.

மருக்களாம் பழத்தின் வித்துகளைச் சேராங்கொட்டைகளைப் பக்குவம் செய்யு முறைப்படி [1] கஷாயம் காய்ச்சி, கரண்டியில் ஒட்டும் வரையில் மிகக் குழம்பான பாகுபதமாகப் பக்குவம் செய்து, இந்த லேஹ்யத்தைச் சிறிதளவு பருக ஸுகமாய் வாந்தி யாகும். இந்த லேஹ்யத்தை பக்ஷணங்களிலும், மற்ற போஜனங்களிலும் கலந்து வமநத்திற்காக உட்கொள்ளக்கொடுக்கலாம்; அல்லது மருக்காரையின் அக்கஷாயங்களையாவது உணவுகளோடு உபயோகிக்கலாம். 15, 15½.

ஸந்தர்ப்பணங்களாலான கோளாறுகளில் மதந பலப் பிரயோகம்.

மருக்களாம் பழக் கொட்டைகளைக் கஷாயமிடவும். அதில் வத்ஸகாதி கணத்திற் கூறியுள்ள சரக்குகளைக் கல்கமாகச் சேர்க்கவும். இக்கஷாயத்தை வேம்பு, எருக்கு இவற்றுள் ஏதேனும் ஒன்றின் கஷாயத்தோடு கூட்டிப் பருகவும். இந்த முறை தர்ப்பண சிகித்ஸை களால் நேரிடும் கோளாறுகளை—அவை வேரூன்றி விருத்தி யடைந்திருந்த போதிலும்—போக்கிவிடும். 16, 17.

மதநபல - புஷ்பங்களை ஸுகவமநமாவதற்குபயோகிக்கும் மற்றொரு முறை.

பலமான வமநம் முதலியதைத் தாங்க முடியாத ஸுகபுருஷன், வயிறு நிரம்ப மாம்ஸரஸம், பாலேடு முதலியதைப் பருகி, மருக்காரையின் புஷ்பம், கனி இவற்றை நன்றாகச் சூர்ணம் செய்து, அச்சூர்ணத்

1. பல்லாதகாவலேஹம்:—ஒரு திரோணம் ஜலத்தில் ஆயிரம் சேராங்கொட்டைகளைச் சேர்த்துச் சமைக்கவும். ஜலம் நாலில் ஒரு பங்காகச் சுண்டிய பிறகு வடிகட்டி, அந்த ஜலத்தில் ஒரு துலாம் வெல்லத்தையும், சமைத்து வடிகட்டி யெடுத்த சேராங்கொட்டையினின்றும் 500 கொட்டைகளையும் நன்றாகச் சிதைத்துப்போட்டு த்ரிபலை, த்ரிகடு, ஓமம் இவற்றை வகைக்குக் கால்பலம் அளவாகச் சேர்த்து லேஹ்யம் செய்தெடுக்கவும். இது சேராங் கொட்டைகளை லேஹ்யம் செய்யு முறை.

தில் ஏதேனும் நல்ல வாஸனையுள்ள புஷ்பத்தைப் போட்டு நன்கு ஸூக்ஷ்மமாகச் செய்தெடுத்து, அதை முகர்ந்து எளிதில் வாந்தி செய்யலாம். மருக்களாம்பழம் கிடைக்காவிடில் இங்ஙனமே புஷ்பத்தையாவது காயையாவது பக்குவம் செய்து [1] வாந்தியாவதற்கு உபயோகிக்கலாம். 18, 18½.

*தேவதாளீ முதலியதை வமநமாவதற்குபயோகித்தல்.*

(1) மருக்களாம் பழத்தைப் போலவே தேவதாளீ முதலியவற்றையும் [2] பக்குவம் செய்து வமநம் செய்விப்பதற்கு உபயோகிக்கலாம். (2) அவற்றுள் ஜீமூதமென்கிற தேவதாளியோ, ஜ்வரம், ச்வாஸம், காஸம், விக்கல் முதலிய ரோகங்களால் வருந்துபவருக்கு விசேஷமாய் உபயோகிக்கத் தகுந்தது. (3) தேவதாளி நன்கு புஷ்பித்திருக்கையில், அதன் புஷ்பத்தைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை வமநம் செய்விப்பதற்கு உபயோகிக்கலாம். (4) தேவதாளி நன்றாகக் காய்த்துப் பழுத்திருந்தால், அக்கனியைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவைப் பருகக் கொடுக்கலாம். (5) சுணையுள்ள தேவதாளியைச் சேர்த்துக் காய்ச்சிய பால் மிருதுவாயிருந்தால், அதன் மேலுண்டாகும் ஆடையையும், (6) தேவதாளியின் சூர்ணத்தைச் சேர்த்துக் காய்ச்சிய பால் கடினமாயிருந்தால் அத்தயிரின் மேற்புறத்திற்படியும் ஆடையையும் வமந முண்டாவதற்காகப் பருகலாம். (7) தேவதாளியைச் சேர்த்துக் காய்ச்சப்படும்போது பாலானது மிருது கடின நிலைமைகளுக்கு நடுத்தரமான நிலைமையில் பக்குவமடைந்தால், அதைப் புளிப்பான தயிராகச் செய்து உட்கொள்ள வேண்டும். (8) தேவதாளிக் கனியை வாருணீ யென்னும் மதுவில்—மதுவைப் பக்குவம் செய்யு முறைப்படி—சேர்த்து, அவ்வாருணியின் மேலே படரும் ஆடையைக் கடைந்து வடிக்கட்டி பானம் செய்யலாம். கபம் அதிகரித்திருக்கையிலும், அரோசகத்திலும், காஸத்திலும், பாண்டுவிலும், க்ஷயத்திலும் இம்முறைகள் உபயோகமானவை. (9) பேய்ச்சுரை, பேய்ப்பீர்க்கு இவற்றின் வித்துக்களையும் முற்கூறிய இம்முறைகளின்படி பக்குவம் செய்துபயோகிக்கலாம். 19—22½.

*வாத-பித்தங்களாலும் பலவித ஜ்வரங்களாலும் வருந்துகையில் தேவதாளியையுபயோகிக்கும் முறை.*

(1) நன்றாகப் பழுத்து உலர்ந்துள்ள தேவதாளீ பலங்களைச் சூர்ணம் செய்து, அதை அரைப் பலம் அளவு பாலில் சேர்த்து, வாதபித்தங்களால் பீடிக்கப்படும் பிணியாளி உட்கொள்வானாக. (2) வேப்பங் கஷாயத்தில் இரண்டு அல்லது மூன்று தேவதாளிக் கனிகளைச் சிதைத்துப் போட்டு, அதை நன்றாகப் பிசைந்து, வடிக்கட்டி, அக்கஷாயத்தையாவது பித்த-கபஜ்வரங்களால் வருந்துபவன் பருகலாம். (3) அல்லது ஆரக்வதாதி கணத்தில் முதலிற் கூறியுள்ள ஒன்பது சரக்குகளில் ஏதேனும் ஒரு பதார்த்தத்தினுடைய கஷாயத்தில் இரண்டு மூன்று தேவதாளீ பலங்களை யுடைத்துப் போட்டு, அரிஷ்டம் செய்யும் வகையில் பக்குவம் செய்து, அக்கல்கத்தை அதில் மர்த்தநம் செய்து வடிக்கட்டி, பித்த சிலேஷ்ம ஜ்வர முள்ளவன் பரு

1. மருக்களாம் புஷ்பம், காய் இவைகளை யுலர்த்தி இடித்து, அதிமதுரக் கஷாயத்திலாவது, செம்மந்தாரையின் கஷாயத்திலாவது சேர்த்து, ஓர் இரவெல்லாம் ஊறவைத்து எடுப்பது அதைப் பக்குவம் செய்யு முறையாம்.

2. தேவதாளீ முதலியது என்பதால் பேய்ச்சுரை, பேய்ப்பீர்க்கு முதலிய வமநகுணமுள்ள இதர சரக்குகள் குறிப்பிடப்படுகின்றன.

1. தேவதாளியைப் பாலில் சேர்த்துக் காய்ச்சும்போது, பாலானது தேவதாளியின் தன்மைக்கேற்றவாறு இரண்டு வகையில் பக்குவமாகும். ஒன்று மிருது அல்லது லோமசம் என்றும், மற்றொன்று அலோமசம் அல்லது கடினமென்றும் வழங்கப்படும். இவ்விரண்டுக்கும் நடுத்தரமான பாகம் ஹரித பாண்டுரம் (வெண் பசுமை) எனப்படும்.

கலாம். (4) தேவதாளியின் சூர்ணத்தையாவது அதன் கல்கத்தையாவது பித்த ஜ்வரத்தில் குளிர்ந்த ஜலத்தோடும் (5) அவற்றையே கப-வாதஜ்வரத்திலும், கபஜ்வரத்திலும் இளஞ்சூடான ஜலத்தோடும் பருகலாம். 23—26.

பேய்ச்சுரையைப் பலவித ரோகங்களில் வமனத்திற்கு உபயோகிக்கும் பலவிதமான முறைகள்.

(1) காஸம், ச்வாஸம், வாந்தி, ஜ்வரம் இவற்றால் பீடிக்கப்படுகையிலும், கபத்தினால் பிணியாளி மிகவும் க்ஷீணித்திருக்கையிலும், ப்ரதமக ச்வாஸத்தினால் மனிதன் மிகவும் துன்புறுகையிலும் பேய்ச்சுரையின் வித்துகளைக் கொண்டு வமநம் செய்விப்பது நலம். (2) காய்க்காமலும் புஷ்பிக்காமலுமுள்ள பேய்ச்சுரைச் செடியின் இளந்தளிர்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை பித்தம் மிக்க மேலெழுந்துள்ள பித்த-கபஜ்வரத்தில் பருகலாம். (3) நன்றாகப் பழுத்த சுரைக்காயின் உட்சதைகளை யெல்லாம் வெளிப்படுத்தி விட்டு, அக்குடுவையில் பால் ஊற்றித் தயிராகச் செய்து, கப காஸத்திலும் கபச்வாஸத்திலும் வமநம் செய்விக்கத் தகுந்த ரோகிக்கு அத்தயிரைக் கொடுக்கலாம். (4) பாண்டு ரோகத்தினாலும், விஷ ஸம்பந்தத்தினாலும் வருந்துபவன் பேய்ச் சுரையின் உட்சதையை மோரின் தெளிவு நீருடன் புஜித்து வமநம் செய்யலாம். (5) அல்லது அச்சதையை மோரில் சேர்த்து பக்குவம் செய்து, தேனையும் இந்துப்பையும் கூட்டி யுட்கொள்ளலாம். (6) பேய்ச் சுரையின் விதையை வெள்ளாட்டுப்பாலில் பாவனை செய்து, அவ்வித்தை ஆட்டுப்பாலின் அநுபானத்தோடேயே உட்கொள்ளலாம் இதை விஷப்பற்றிலும், குல்மத்திலும், உதரரோகத்திலும், கிரந்திகளிலும், கண்டமாலையிலும், ச்லீபதமென்கிற யானைக்கால் ரோகத்திலும் உபயோகிக்கக் கூடும். (7) பேய்ச்சுரையின் ஸ்வரஸத்தில் பாவனை செய்த ஸக்துக்களோடு[1] தயிரின் மேலுள்ள ஆடையை கபஜ்வரத்திலும், கபகாஸத்திலும், கபத்தினாலுண்டான தொண்டையைப்பற்றிய வியாதிகளிலும், அரோசகத்திலும் பருகலாம். (8) குல்மத்திலும், நெடுநாட்களாய் அநுஸரிக்கும் ஜ்வரத்திலும் பேய்ச்சுரையின் கல்கத்தை மாம்ஸரஸங்களோடு உட்கொள்ளலாம். இவ்விதம் செய்ய அந்த நோயாளி நன்கு வாந்தி செய்வான்; துர்பலத்தையும் அடையமாட்டான். (9) நறுமணங்களை யுபயோகிக்கும் வழக்கமுடையவனும், செல்வத்திலும் ஸுகத்திலும் ஈடுபட்டவனுமான பிணியாளியானவன், பேய்ச்சுரைக்காயின் ஸ்வரஸத்தில் உலர்ந்த பேய்ச்சுரைப் பூக்களைப் பொடித்துச் சேர்த்து, வேறு ஏதேனும் வாஸனையுள்ள புஷ்பத்தை அந்த இரஸத்தில் போட்டெடுத்து முகர்ந்தால் ஸுகமாக வாந்தியுண்டாகும். 27—34.

பேய்த்தும் மட்டியை வெவ்வேறு வியாதியில் வமனமாவதற்கு வெவ்வேறு முறைகளில் உபயோகித்தல்.

(1) காஸம், குல்மம், மஹோதரம், விஷஸம்பந்தமான கோளாறு இவற்றிலும், வகதோஷ கபாசயத்தி லிருக்கையிலும் தொண்டையிலும் வாயிலும் கபம் நிரம்பியிருக்கையிலும், கபம் சயாவஸ்த்தையை அடைந்திருக்கும்போதும், வெகு நீடித்த காலமாயுள்ள அல்லது பலைத்தமான வியாதிகளிலும், பேய்த்தும்மட்டி வமநம் செய்விக்க ஏற்றது. (2) ஜீவகம், ருஷபகம், வீரா, காஞ்சொறி, தண்ணீர்விட்டான்கிழங்கு, காகோலீ, ச்ராவணீ, மேதா, மஹாமேதா, அதிமதுரம் இவற்றைத் தனித்தனியே சூர்ணம் செய்து, ஒவ்வொரு சூர்ணத்தையும் தனித்தனியே லேஹ்யமாகச் செய்து, பேய்த்தும்மட்டியின் சூர்ணத்தை ஒவ்வொன்றிலும் கலந்து, தேன் சர்க்கரைகளைக் கூட்டி, காஸத்திலும், இருதயத்தைப்பற்றிய அழற்சியிலும் உபயோகிக்க நல்ல குணம் தரும். (3) கபமா

1. ஸக்து-வாற்கோதுமை, அரிசி முதலிய வற்றின் பொரிகளாலான மாப்பண்டம்.

னது பித்தத்துடனும், உஷ்ணத்தோடும் கூடியிருக்கையில் அநேக வைஷம்யங்களை இளஞ்சூடான ஜலத்தின் அநுபானத்தோடு உபயோகிக்கலாம். (4) பேய்த்தும்மட்டியின் கல்கமானது கொத்தமல்லி விதையினுடையவும், தும்புருவென்கிற ஒருவித அசோகம்பட்டையினுடையவும் கஷாயத்தின் அநுபானத்தோடு உபயோகிக்க விஷங்களைப் பரிஹரிக்கும். (5) கோவை, சாறணை, தகரை இவற்றுள் ஏதேனும் ஒன்றின் ஸ்வரஸத்தில் ஒன்று அல்லது இரண்டு பேய்த்தும்மட்டிக் காயைச் சிதைத்துப் போட்டு நன்கு பிசைந்து, மானஸ ரோகத்தில் பருகலாம். (6) அப்பேய்த் தும்மட்டியைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்து எடுக்கப்படும் நெய்யையாவது, (7) மதநபலாதிகளைச்[1] சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது மானஸ ரோகங்களில் பானம் செய்யலாம். 35—40.

பேய்ப்பீர்க்கை பலவேறு ரோகங்களில் வமநமாவதற்கு உபயோகிக்கும் முறைகள்.

(1) பேய்ப்பீர்க்கு குணத்தில் அதிக கடு அல்லது கைப்பாகவும், அதிக தீக்ஷ்ணமாகவும், அதிக உஷ்ண வீர்யமுள்ளதாயும் இருக்கும். அது மிகவும் பலமான குஷ்டம், பாண்டு, ப்லீஹமென்கிற மண்ணீரல் வியாதி, சோபை, குல்மம், க்ருத்திம விஷம் இவற்றில் வமநம் செய்விப்பதற்கு உபயோகிக்கத் தகுந்தது. (2) மதநபலம் முதலிய ஆறு சரக்குகளைத்[2] தனித்தனியே கஷாயமாகக் காய்ச்சி, அவற்றில் ஒவ்வொன்றிலும் ஆநூபமாம்ஸத்தைப் பேய்ப்பீர்க்குடன் சேர்த்து பக்குவம் செய்து, அந்த மாம்ஸரஸத்தை உப்புடன் கலந்து பானம் செய்யலாம். (3) அல்லது மதநபலம் முதலிய ஆறு சரக்குகளின் வித்துகளையும், அவற்றிற்குச் சம பாகம் மாம்ஸத்தையும் பேய்ப்பீர்க்கின் ஸ்வரஸத்தில் கூட்டி, பக்குவம்செய்து பருகலாம். (4) அல்லது பேய்ப்பீர்க்கின் கஷாயத்தில் பக்குவம் செய்த மாம்ஸத்தைக் கருப்பஞ்சாற்றுடன் கலந்தாவது உபயோகிக்கலாம். 41—43.

வெட்பாலரிசியை வமநத்திற்குபயோகிக்கும் நிலைமைகள்.

ஸுகுமாரமான மனிதர்களுக்கும் பித்தம், இரத்தம், கபம் இவை விருத்தியாயிருக்கையிலும், ஜ்வரத்திலும், விஸர்ப்பத்திலும், இருதய ரோகங்களிலும், குடமென்கிற வாதரோகத்திலும், குஷ்டத்திலும் வெட்பாலரிசியைக் கொண்டு வாந்தி செய்விப்பது நலம். வெட்பாலரிசியைக் (1) கடுகின் கஷாயத்துடனாவது, (2) இலுப்பைப்பூவின் கஷாயத்தோடாவது, (3) உப்பு நீருடனாவது கலந்து உபயோகிக்கலாம். (4) அல்லது அதை க்ருஸராவென்கிற கஞ்சியுடனாவது[1] உட்கொள்ளலாம். (5) அல்லது வெட்பாலரிசியின் சூர்ணத்தை ஏழு நாட்கள் எருக்கம்பாலில் ஊறவைத்து, அச்சூர்ணத்தை மருக்காளாம் பழம், தேவதாளீ, பேய்த்தும்மட்டி, ஜீவந்தீ, ஜீவகம் இவற்றின் கஷாயத்தோடு தனித்தனியே உட்கொள்ளலாம். 44—46.

வமந கல்ப முடிவுரை.

வாந்தியுண்டாக்குவதில் பிரதானமாயுள்ள சரக்குகளைப் பக்குவம் செய்துபயோகிக்கும் கல்பநா முறைக்கு இங்ஙனம்வழிகாட்டப்பட்டது; அறிவாளியான வைத்தியன் இவ்வழியை ஆதாரமாகக் கொண்டு வேறு சரக்குகளையும் இவ்விதமே பக்குவம் செய்வானாக. 47.

1. மதநபலம்—மருக்காளம் பழம்; மதநபலாதிகள் என்பதால் மருக்காரை, தேவதாளீ, பேய்த்தும்மட்டி, பேய்ச்சுரை, பேய்ப்பீர்க்கு, வெட்பாலை இச்சரக்குகளும் குறிக்கப்படுகின்றன.

2. இதற்கு முன் டிப்பணியிற் குறிப்பிட்டுள்ள மருக்காரை முதலிய ஆறு சரக்குகள்.

1. க்ருஸரா—முதற்புத்தகம் 135-ம் பக்கம் பார்க்க.

## இரண்டாவது அத்தியாயம்.

இனி விரேசந கல்பம் என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

*சிவதைவேரின் குணவிசேஷங்கள்.*

சிவதைவேரானது சுவையில் ஒருவாறு இனிப்பும், துவர்ப்புமுள்ளது; ரூக்ஷத்தன்மையும், விபாகத்தில் கடுரஸமும் உடையது; கப-பித்தங்களைத் தணிக்கத்தகுந்தது; ரூக்ஷத்தன்மையுடையதாகையால் வாயுவைப் பிரகோபிக்கச் செய்யும். அத்தகைய குணங்களைப் பெற்ற சிவதையானது வாத-பித்த-கபங்களின் கோளாறுகளைப் போக்குங்குணமுடைய ஔஷதங்களோடு கூட்டி யுபயோகிக்கப்படுமானால், கல்பம் அல்லது சேர்க்கும் முறைகளின் விசேஷங்களுக்கேற்றவாறு ஸர்வரோகங்களையும் நிவ்ருத்தி செய்யக்கூடியதாய் ஆகிறது. 1, 2.

*சிவதைவேர் இரண்டு விதம்.*

சிவதைவேரில், கறுப்பான ஓர் இனமும் கருஞ்சிவப்பாக மற்றோரினமும் வழங்கப்பட்டு வருகின்றன. கறுப்பாயிருப்பது ச்யாமம் என்றும், கருஞ்சிவப்பாயிருப்பது த்ரிவ்ருத் என்றும் கூறப்படுகின்றன. அவற்றுள் த்ரிவ்ருத் என்பது அபாடமுண்டுபண்ணுததாகவும், ஸுகமாக அதன் வேலையைச் செய்யக்கூடியதும், ஆகவே வெகு சிரேஷ்டமுமான சரக்கு; ஆகையினாலேயே ஸுகுமார தேஹிக்கும், குழந்தைகளுக்கும், கிழவர்களுக்கும், மிருதுகோஷ்டமுடையவர்களுக்கும் த்ரிவருத் என்கிற சிவதை அனுகூலமானது 3, 3½.

*கருஞ்சிவதையினாலுண்டாகக்கூடிய துன்பங்களும் அதையுபயோகிக்கும் நிலைமையும்.*

ச்யாமம் என்கிற கருஞ்சிவதையானது தீக்ஷ்ணமாகவும், அதிதுரிதமாய் வேலை செய்யுந் தன்மையதாகவுமிருப்பதால் மூர்ச்சை, மயக்கம், இருதயத்திற்கும் தொண்டைக்கும் பலக்குறைவு, மரணம் இவற்றை உண்டுபண்ணும். ஆயினும் இச் சிவதையையும் க்ரூரகோஷ்டம் என்கிற கெட்டிக் குடலினும், தோஷம் மிகுதியாகச் சேர்ந்திருக்கும் நிலைமையிலும், வியாதிக்ராந்தன் கஷ்டத்தைத் தாங்கக்கூடிய சக்தியுள்ளவனாயிருக்கையிலும் உபயோகிக்கலாம். 4, 5.

*எவ்விதமான சிவதையைக் கிரஹிக்கலாம்?*

பூமியில் வெகு ஆழத்தில் இறங்கியிருப்பதாகவும், காடு முரடாயில்லாததும், நாற்புறமும் குறுக்கு நெடுக்கா யோடாமல் ஒழுங்காயிருப்பதுமான சிவதையைக் கொண்டுவந்து, அதன் உட்புறத்திலுள்ள தண்டை உடைத்து எறிந்து விட்டு, அதன் தோலை யெடுத்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும். 6.

*கருஞ் சிவதையை எந்தெந்த வியாதியில் எவ்விதம் உபயோகிக்கவேண்டும்?*

பிறகு அச்சிவதையின் சூர்ணத்தைச் சிறிது சுக்கு இந்துப்பு இவற்றின் பொடியோடு கலந்து விரேசனம் செய்விப்பதற்கேற்ற காலத்தில் அடியில் வருமாறு அந்தந்த அனுபானங்களோடு உபயோகிக்கலாம்:– (1) வாதரோகத்தில் காடிகளுடன் உட்கொள்ளலாம். (2) பித்தரோகத்தில் நெய், சர்க்கரை, தேன், பால், திராக்ஷாரஸம், கருப்பஞ்சாறு, குமிழம்பழரஸம், மற்றுமுள்ள இனிய சுவையான சரக்குகளின் ஸ்வரஸங்கள், த்ரிபலையின் கஷாயம் இவற்றுடன் உபயோகிக்கலாம். (3) கபஸம்பந்தமான வியாதியில் சிறுகளர்வாயின் ஸ்வரஸத்தோடும், பசுமூத்திரத்தோடும், மதுவோடும், காடிகளோடும், கபஹரமான பஞ்சகோலாதி சூர்ணங்களோடும் முறைப்படி பிரயோகிக்கலாம். 7—8½.

*த்ரிவ்ருத் லேஹ்யம்.*

த்ரிவ்ருத் என்கிற கருஞ் சிவப்பான சிவதை வேரைக் கஷாயமிட்டு, அதையே கல்கமாகவும் சேர்த்து, சர்க்கரை கூட்டி, குளிர்ந்த பிறகு, தேனும் த்ரிஜாதக சூர்ணமும்

கலந்து லேஹ்யமாகச் செய்துகொள்ளவும். இந்த லேஹ்யம் ஸுகமாக விரேசநமுண்டு பண்ணும். 9½.

அஜகந்தாதி சூர்ணம்.

காட்டு ஜீரகம், மூங்கிலுப்பு, கிலப்பனங் கிழங்கு, த்ரிவ்ருத் இவற்றைச் சூர்ணம் செய்யவும்; சர்க்கரையும் கலந்து கொள்ளவும். இச்சூர்ணத்தைத் தேனுடனும், நெய்யோடும் கூட்டி யுட்கொள்ள நன்கு விரேசநமாகும்; ஸந்நிபாதஜ்வரம், அவயவங்கள் விரைத்துப் போதல், நாவறட்சி, அழற்சி இவற்றால் பீடிக்கப்படுபவனுக்கு இது ஹிதமானது. 10, 11.

இக்ஷு கண்டயோகம்.

கருப்பங்கழிகளை இரண்டாகப் பிளந்து, த்ரிவ்ருத் சூர்ணத்தை அவற்றின் உட்புறமெல்லாம் பூசிவிடவும்; பிறகு இரண்டையும் ஒன்றாகக் கூட்டி புடபாக முறைப்படி அக்னியில் வெதுப்பவும். இங்ஙனம் வாட்டியெடுத்த கருப்பங்கழிகளை மென்று விரேசநமாவதற்கு உபயோகிக்கலாம். 12.

லவங்கத்வகாதி சூர்ணம்.

இலவங்கப்பட்டையும், ஏலமும் ஸம பாகம்; இவ்விரண்டுக்கும் ஸமபாகம் அவிரி; இம்மூன்றுக்கும் ஸம அளவு த்ரிவ்ருத்; இவற்றைச் சூர்ணம் செய்து, இவ்வனைத்துக்கும் ஸமபாகமாகச் சர்க்கரையையும் கூட்டிக் கொள்ளவும். இச்சூர்ணத்தை எலுமிச்சம்பழ ரஸத்தோடும், தேனுடனும், ஸக்துவோடும் உட்கொள்ள தர்ப்பணகுணத்தோடு விரேசநம் செய்விக்கும். இது வாத-பித்த-கபங்களால் உண்டாகிற ரோகங்களிலும், அக்னிமாந்தியத்திலும், ஸுகுமாரமான சரீர நிலைமைகளைப் பெற்றவர்களுக்கும் அபாயமின்றி விரேசநம் செய்விப்பதற்கு ஏற்ற ஔஷதம். 13, 14.

விடங்காதி சூர்ணம்.

வாய்விடங்கம், த்ரிபலே, யவக்ஷாரம், திப்பிலி, இவை ஸமபாகம்; த்ரிவ்ருத் என்னும் கருஞ்சிவப்பு நிறமான சிவதைவேர் அனைத்திலும் அரைப் பங்கு; இவற்றைச் சூர்ணம் செய்யவும்; இதைத் தேனுடனாவது, நெய்யோடாவது, வெல்லத்தோடாவது உட்கொள்ள குல்மம், ப்லீஹோதரம், காஸம், ஹலீமகம், அரோசகம், இவையும் கப-வாதங்களாலுண்டாகிற இதரமாயுள்ள அநேகம் வியாதிகளும் நிவ்ருத்தியாகும். 15, 16.

கல்யாணக குடம்.

வாய்விடங்கம், மோடி, த்ரிபலே, கொத்தமல்லிவிதை, சித்திரமூலம், மிளகு, வாலுழுவை, ஜீரகம், திப்பிலி, யானைத்திப்பிலி, ஓமம், பஞ்சலவணம்[1] இவற்றை வகைக்குக் கால் பல மளவாக எடுத்துச் சூர்ணம் செய்யவும்; நல்லெண்ணெய் எட்டு பலம்; த்ரிவ்ருத்தின் சூர்ணமும் எட்டு பலம்; நெல்லிக்கனியின் சாறு மூன்று பிரஸ்த்தங்கள்; வெல்லம் ஐம்பது பலம்; இவற்றையெல்லாம் ஒருமிக்கக் கூட்டி, மிருதுவான தீயிட்டு எரித்து பாகம் செய்யவும். இதைத் தகுந்த அளவில் பத்தியம் முதலிய நிர்பந்தங்களின்றி உபயோகிக்கவும். இது குஷ்டம், அர்சஸ், காயாலே, குல்மம், பிரமேஹம், உதரரோகங்கள், பகந்தரம், கிரஹணீ, பாண்டு ரோகம் இவற்றைப் போக்கும். இது பும்ஸவநம்[2] என்னும் விசேஷ குணத்தையும் உடையது. "கல்யாணக குடம்" என்கிற இவ்வௌஷதம் எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கக் கூடியது. 17—20½.

வ்யோஷாதி குளிகை.

த்ரிகடு, த்ரிஜாதகம், கோரைக் கிழங்கு வாய்விடங்கம், நெல்லிக்கனி இவை ஸமபாகம்; இவற்றிற்கெல்லாம ஸமபாகமாக த்ரிவ்ருத்தைச் சேர்க்கவேண்டும்; இவைகளைச்

1. பஞ்ச லவணம்—முதற்புத்தகம் 62-ம் பக்கம் பார்க்க.

2. பும்ஸவநம்—புத்திரோத்பாதநகுணம்: என்றால் புருஷருக்குண்டாகும் சுக்ரதோஷங்களையும், ஸ்த்ரீகளுக்கு ஆர்த்தவதோஷங்களையும் போக்கி, ஸ்த்ரீகளை கர்ப்பம் (முக்கியமாக புருஷகர்ப்பம்) தரிக்கச் செய்வதற்கான குணம் பும்ஸவநம் எனப்படுகிறது.

சூர்ணம் செய்து, இவ்வனைத்துக்கும் ஸம அளவாகச் சர்க்கரைசேர்த்து,தேன்கூட்டி குளிகைகளாகச்செய்யவும். இக்குளிகைகள், மூத்திரக்ருச்சிரம் என்கிற நீர்ச்சுருக்கிலும், ஜ்வரத்திலும்,வாந்தியிலும், இருமலிலும்,தேஹம்க்ஷீணித்து வருவதிலும், தலைச்சுற்றலிலும், க்ஷய ரோகத்திலும், தேஹ அழற்சியிலும், பாண்டு ரோகத்திலும், அக்னி மாந்தியத்திலும், ஸகல விதமான விஷப்பற்றுகளிலும் சிரேஷ்டமானவை. 21—22½.

அந்தந்த ருதுவுக்கேற்ற த்ரிவ்ருத்சூர்ண கல்பங்கள்.

(1) த்ரிவ்ருத் என்கிற கருஞ்சிவப்பான சிவதை, வெட்பாலரிசி, திப்பிலி, சுக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, தேனுடனும் திராக்ஷையின் இரஸத்துடனும் உட்கொள்ளலாம்; இது வர்ஷாகாலத்தில் உபயோகிக்கக்கூடிய விரேசநௌஷதமாகும். (2) த்ரிவ்ருத், காஞ்சொறி, கோரைக்கிழங்கு, வெட்டிவேர்,சந்தனம், அதிமதுரம், பொன்னுலங்காய் இவற்றைச் சூர்ணம் செய்து, சர்க்கரை கலந்து, திராக்ஷையின் இரஸத்துடன் உபயோகிக்கலாம்; இது சரத் ருதுவுக்கேற்ற விரேசநமாகும். (3) த்ரிவ்ருத், சித்திர மூலம், வட்டத்திருப்பி, ஓமம், ஸரளதேவதாரு, வசம்பு, பிரம்மதண்டுவிதை இவற்றைச் சூர்ணம் செய்து, உஷ்ண ஜலத்தின் அனுபானத்தோடு ஹேமந்தருதுவில் விரேசநமாவதற்கு உபயோகிக்கலாம். (4) த்ரிவ்ருத்தைச் சூர்ணம்செய்து, ஸம அளவு சர்க்கரையும் கூட்டி, க்ரீஷ்மருதுவில் விரேசநத்திற்காக உபயோகிக்கலாம். 23—26.

ஸர்வ ருதுக்களிலும் உபயோகிக்கக்கூடிய த்ரிவ்ருத்சூர்ணமுறை.

த்ரிவ்ருத், சரக்கொன்றை, கொட்டைக்கரந்தை, பொன்னுலங்காய், கடுகரோஹிணீ, பிரம்மதண்டுவிதை; இவற்றை நன்கு சூர்ணம் செய்து, மூன்று நாட்கள் பசு மூத்திரத்தில் பாவனை செய்து எடுக்கவும். இது எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கத்தகுந்த முறை, தேஹத்தை ஸ்நிக்த்தமாகச் செய்து கொண்டவர்களுக்கு இது மலதோஷங்களைப் போக்கும். 27½.

ருக்ஷ தேஹிகளுக்கு ச்யாமாதி சூர்ணம்.

ச்யாமா வென்கிற கருஞ்சிவதை, த்ரிவ்ருத் என்கிற கருஞ்சிவப்பான சிவதை, காஞ்சொறி, யானைத்திப்பிலி, வெட்பாலரிசி, கருஞ்சாறடை, கடுகரோஹிணீ, கோரைக்கிழங்கு, த்ரிபலை இவற்றை நன்கு சூர்ணம் செய்து, மாம்ஸரஸம், நெய், உஷ்ணஜலம் இவைகளோடு அச்சூர்ணத்தை உபயோகிக்கலாம். ருக்ஷதேஹிகளுக்குகூட எப்பொழுதுமே இது சிறந்த விரேசநௌஷதமாகும். 28,29.

சரக்கொன்றை சாந்தமான சிறந்த விரேசநச்சரக்கு.

சரக் கொன்றைப் புளியானது குணத்தில் மிருதுவாகவும், சுவையில் இனிப்பாகவும், சீதவீர்யமாகவும் இருக்கின்றது. ஜ்வரம், இருதயத்தைப்பற்றியரோகங்கள், வாதாஸ்ரம், உதாவர்த்தம் முதலிய ரோகங்களில் மிகவும் அனுகூலமானது. சரக்கொன்றைப்புளி எவ்வித அபாயமும் உண்டு பண்ணாத சிறந்த சரக்காகையால், இதை பாலர், வயது சென்றவர், க்ஷதகாஸமுள்ளவர், க்ஷீணித்துப் போகிறவர், ஸௌகுமாரமான தேஹமுள்ளவர் இவர்களுக் கெல்லாம் விசேஷமாய் உபயோகிக்கலாம். 30, 31.

சரக்கொன்றையைச் சேமித்து வைத்தல்.

தகுந்த காலத்தில் நன்றாகப் பழுத்த சரக்கொன்றைக் கனிகளைக் கிரஹித்துக்கொள்ளவும். அவற்றுள் சிறந்தவைகளாயிருப்பதவத்தில் ஒரு பாரம் நிறையுள்ள கனிகளை யெடுத்து மணலில் புதைத்து விடவும்; ஏழு நாட்களுக்குப் பிறகு அதை வெளியிலெடுத்து, அப்பால் வெயிலில் உலர்த்தவும். அக்கனிகளிலிருந்து சோற்றையும் கொட்டைகளையும் எடுத்து, ஒரு சுத்தமான பாத்திரத்தில் சேமித்து வைக்கவும். 32, 33.

*சரக்கொன்றையை விரேசநத்திற்காக உபயோகிக்கும் முறைகள்.*

(1) தேஹ அழற்சி, உதாவர்த்தம் இவற்றால்பீடிக்கப்படுபவருக்கும், நான்கு வயது முதற்கொண்டு பன்னிரண்டாவது வயது வரையிலுமுள்ள பாலர்களுக்கும் சரக்கொன்றைப்புளியை திராக்ஷையின் இரஸத்தோடு ஸுகவிரேசனமாவதற்குக் கொடுக்கலாம். (2) சரக்கொன்றையின் சதையுடன் கூடிய கொட்டையை ஹிமகஷாயமாகப் பக்குவம் செய்தாவது, தயிரின் ஆடை, ஸுரையென்னும் மதுவின் ஆடை, நெல்லிக்கனியின் ஸ்வரஸம் இவற்றின் தனித்தனி அனுபானத்தோடு உபயோகிக்கலாம். (3) அச்சீத கஷாயத்தையே காஞ்ஜிகமென்கிற காடியுடனாவது, த்ரிவ்ருத்தின் கல்கத்துடனாவது உட்கொள்ளலாம். 34-35½.

*ஆரக்வதாரிஷ்டம்.*

சரக்கொன்றையின் சதையுடன் கூடிய கொட்டைகளை நேபாள கஷாயத்தில்சேர்த்து,பழகிய வெல்லத்தையும் அதில் கூட்டி, ஒரு மாஸம் அல்லது பதினைந்து நாட்களாவது மட்பாண்டத்தில் சீலமண் செய்து வைத்திருந்து, அப்பால் எடுத்து அந்த அரிஷ்டத்தை விரேசநத்திற்காக உபயோகிக்கலாம். 36½.

*விரேசநத்திற்கு தில்வக சூர்ணம்.*

வெள்ளிலோத்தியின் வேர்களைக் கொண்டுவந்து, மேல் தோல்களைச் சீவித்தள்ளி, வேர்களின் உட்புறச் சதைகளை யெடுத்து உலர்த்தி சூர்ணம் செய்யவும். இச்சூர்ணத்தை மூன்று பங்குகளாகச் செய்து, அதில் இரண்டு பங்கு சூர்ணத்தை வெள்ளிலோத்தியின் கஷாயத்திலேயே சேர்த்துக் கலக்கி வடிக்கட்டவும். மிகுந்துள்ள மூன்றாவது பங்கை அவ்விதம் வடிக்கட்டிய கஷாயத்திலேயே சேர்த்து பாவனை செய்யவும். பிறகு அதை தசமூலகஷாயத்திலும் பாவனை செய்து, அதை மறுபடி யுலர்த்தி யெடுக்கவும். இச்சூர்ணத்தை கால் பலம் அளவில் தயிரின் ஆடை, பசுமூத்திரம், ஸுரையென்னும் மதுவின் ஆடை, இலந்தம் பழச்சாறு, நெல்லிக்கனியின் சாறு இவற்றுள் ஏதேனுமொன்றை அனுபானமாகக் கொண்டு உபயோகிக்கலாம். 37—39½.

*தில்வக லேஹ்யம்.*

வெள்ளிலோத்தியைக் கஷாயமிட்டு,அதில் வெள்ளிலோத்தியையே கல்கமாகவும் சேர்த்து, சர்க்கரையும் நெய்யும் கூட்டி லேஹ்யம் பக்குவம் செய்யவும். இந்த லேஹ்யம் சிறந்த விரேசநௌஷதமாம். 40½.

*கள்ளிப்பால் கடுமையான விரேசநச்சரக்கு.*

கள்ளியானது மிகுதியாகச் சேர்ந்துள்ள தோஷத் திரளையும் சீக்கிரம் உடைத்து வெளிப்படுத்தி விடும். அது குடலையும்வெளிப்படுத்தி விடக்கூடிய அவ்வளவு தீக்ஷ்ணத் தன்மையதாகையால், அதை மிருது கோஷ்டமுள்ளவனுக்கும், துர்பலனுக்கும்,பாலனுக்கும், கிழவனுக்கும், நெடு நாட்களாக ரோகங்களால் பீடிக்கப்படுகிறவனுக்கும் பிரயோகிக்கக் கூடாது. 41, 42.

*விரேசநத்திற்குச் சிறந்த கள்ளியும் அதையுபயோகிக்கும் நிலைமைகளும்*

குல்மரோகம், உதரரோகங்கள், சர்மரோகங்கள், மதுமேஹம், பாண்டுரோகம், [1] தூஷீவிஷக் கோளாறு, சோபை, தோஷங்களின் பிரகோபாவஸ்தைகளால்மனம் கலங்கிப் போதல், இந்நிலைமைகளில் கள்ளி விரேசநத்திற்கு உபயோகிக்கத் தகுந்தது; கூர்மையான அநேகம் முட்களோடு கூடிய கள்ளி இதற்குச் சிறந்ததாகும். 43, 43½.

*கள்ளிப்பாலைக் கிரஹித்து உபயோகிக்கவேண்டிய முறை.*

இதற்கு இரண்டு வருஷம் அல்லது மூன்று வருஷ் காலம் முதிர்ந்துள்ள கள்ளியைக் கிரஹிக்க வேண்டும். இதைக் கிரஹிப்பதற்கு விசேஷமாய் சிசிருதுவின் கடைசீ காலமே ஏற்றதாகும். சஸ்திரத்தினால் அக்கள்ளியைப் பிளந்து, அதிலிருந்து பாலை யெடுத்துக் கொள்

1. தூஷீவிஷம்—முதற்புத்தகம் 376-ம் பக்கம் பார்க்க.

ளவும். பில்வம் முதலியவற்றினுடைய [1] அல்லது கண்டங்கத்திரி-சிறுவழுதுணைகளுடைய ஸம அளவான கஷாயத்தோடு ஒன்றாகக் கள்ளிப்பாலைக் கூட்டி, அப்பால் தழலில் காட்டி சோஷணம் செய்யவும். பிறகு இதை குளிகைகளாகச் செய்து, மஸ்து, பசு மூத்திரம், ஸுரை இவை முதலியவற்றின் அநுபானத்தோடு உட்கொள்ளவும். 44—46.

கள்ளிப்பாலில் சில சரக்குகளை விரேசநமாவதற்கேற்றவாறு பாவனை செய்தல்.

த்ரிவ்ருத் முதலிய ஒன்பது சரக்குகளையும், [2] த்ரிபலையையும், பிரம்மதண்டு விதையையும், பொன்னூலங்காயையும் கள்ளிப்பாலில் ஒன்பது நாட்கள் பாவனை செய்து எடுக்கவும். பிறகு அவற்றை மாம்ஸரஸத்தின் அநுபானத்தோடாவது, நெய்யின் அநுபானத்தோடாவது உட்கொள்ளலாம். அங்ஙனமே த்ரிகடு, கோரைக் கிழங்கு, த்ரிவ்ருத், நேபாளம் முதலிய சரக்குகளையும் கள்ளிப்பாலில் பாவனை செய்து உபயோகிக்கலாம். 47, 47½.

விரேசநத்திற்குச் சங்கங்குப்பியும் சீய்க்காயும்.

சங்கங்குப்பியின் கனிகளைச் சிறிது உலர்த்தி, காம்பு முதலியவற்றின் கலப்பில்லாமல் ஆய்ந்தெடுத்துக்கொள்ளவும். அங்ஙனமே சீய்க்காய் மரத்தின் வேரையும் கிரஹித்துக் கொள்ளவும். இவ்விரண்டு சரக்குகளும் தீக்ஷ்ணமான விகாஸி யென்கிற குணமுள்ளவை. கபரோகம், உதர ரோகங்கள், சோகை முதலியவற்றில் விரேசநத்திற்காக இவற்றைப் பிரயோகிக்கலாம். இவ்விரண்டு சரக்குகளையும் ஒன்றாகக் கூட்டியரைத்து, கால்பல மெடையில் குளிகைகளாகச் செய்து மத்யம், உப்பு இவற்றுடன் வாதகபங்களாலுண்டாகும் இருதயத்தைப் பற்றிய ரோகங்களிலும் அவ்விதமான குல்மத்திலும் உள்ளுக்குக் கொடுக்கலாம். 48—50.

விரேசநத்தில் நேபாளவேரின் உபயோகங்கள்.

(1) யானையின் தந்தத்தைப் போல உரத்ததாகவும், பருத்ததாகவுமுள்ள நேபாளவேரை கிரஹித்துக் கொள்ளவும்; அது சிறிது சிவந்தும், சிறிது கறுப்பாகவும் காணப்படும்; தீக்ஷ்ண குணமும், உஷ்ண வீர்யமும், வெகு ஜடிதியில் வேலை செய்யக்கூடிய ஆசுகாரி யென்னும் குணமும், விகாஸியென்னும் தன்மையும், குரு குணமும் அதற்குண்டு. அது வாத தோஷத்தைப் பிரகோபிக்கச் செய்யும் தன்மையையும், பித்தகபங்களை திரவிக்கச் செய்யும் சக்தியையும் உடையது. (2) அந்த வேரின் மேல் தேனையும் திப்பிலியையும் அரைத்துப் பூசி, மேலே தர்ப்பங்களைச் சுற்றி, மண் பூசி, அக்னியில் வாட்டி, பிறகு இளம் வெயிலில் உலர்த்தி யெடுக்கவும்; அக்னியும் வெயிலும் இச்சரக்குக்குள்ள விகாஸி யென்கிற விஷத் தன்மையைப் போக்குகின்றன. குல்மரோகம், பிரமேஹ ரோகம், மஹோதரம் முதலிய உதர ரோகங்களுள்ளவன், கிருத்ரிம விஷப்பற்றுள்ளவன் இப்பிணியாளிகள் ஸ்நேஹ ஸ்வேதங்களைச் செய்துகொண்டு, முற்கூறிய சரக்கை மஸ்து, மதிரை யென்னும் மது, மோர், பில்லாந்தியின் ஸ்வரஸம் இவற்றில் ஏதேனுமொன்றின் அநுபானத்தோடு உபயோகிக்கலாம்; பாண்டு ரோகியும், குடலிற் கிருமிகளை யுடையவனும், பகந்தர ரோகியும் அதே சரக்கை பசுவின் மோர், மானின் அல்லது வெள்ளாட்டின் மாம்ஸரஸம் இவற்றின் அநுபானத்தோடு உபயோகிக்கலாம். (3) அந்த நேபாளவேரின் கஷாயத்தில் அதன் கல்கத்தையும், தசமூல ஸ்வரஸத்தையும் சேர்த்து, க்ருதம் பக்கு

1. பில்வம், தழுதாழை, பெருவாகை, சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, நெரிஞ்சி, பாதிரி, குமிழன் என்கிற தசமூலச் சரக்குகள் "பில்வம் முதலிய" என்பதால் குறிப்பிடப் படுகின்றன.

2. கருஞ்சிவப்பான சிவதை, கருஞ்சிவதை, சரக்கொன்றை, வெள்ளிலோத்தி, கள்ளி, சங்கங்குப்பி, பொன்னூல், நேபாளம், எலிச்செவி என்கிற இவை "த்ரிவ்ருத் முதலிய ஒன்பது" சரக்குகளாம்.

வம் செய்து உபயோகிக்க விஸர்ப்பம், வித்ரதி, அலஜியென்னும் சர்ம வியாதி, அக்குளில் உண்டாகும் கக்ஷ்யா யென்னும் கட்டி, அழற்சி இவை நிவ்ருத்தியாகும். (4) இவ் விதமே பக்குவம் செய்த தைலமானது, குல்ம ரோகம் மேஹங்கள், அர்சஸ், மலபந்தம், கபதோஷம், வாததோஷம் இவற்றைப் பரிஹரிக்கும். (5) இவற்றால் பக்குவம் செய்த மஹாஸ்நேஹமானது மலபந்தம், சுக்ரம் தடையுறுதல், அபாநவாதம் அடைபட்டுப் போதல் இவற்றைப் போக்கும். 51—56.

விரேசநத்திற்கு முக்கியமான ஒன்பது சரக்குகள்.

இங்ஙனம் முற்கூறிய சிவதைவேர் முதலான ஒன்பது சரக்குகளும்[1] விரேசநம் என்கிற மலத்தைக் கழிக்கும் வேலையில் மிகவும் பிரதானமானவை. 56½.

விரேசநத்திற்குக் கடுக்காயை உபயோகித்தல்.

முன் த்ரிவ்ருத்தைப் பக்குவம் செய்வதற்குக் கூறிய முறைகளின்படி கடுக்காயையும் பக்குவம் செய்து விரேசநத்திற்கு உபயோகிக்கலாம். 57.

ஹரீதகீமோதகம்.

இருபது கடுக்காய்கள், நேபாளம் சித்திரமூலம் இவ்விரண்டும் வகைக்கு ஒரு பலம், திப்பிலி-த்ரிவ்ருத் என்னும் சிவதை இவை ஒவ்வொன்றும் கால் பலம்; ஆக இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டு பலம் வெல்லம் கூட்டி, பத்துஉருண்டைகளாகச் செய்யவும். பத்து நாட்களுக் கொரு முறை ஒவ்வொரு மோதகமாக வெந்நீர் அநுபானத்தோடு புஜித்து விடவும்; இவ்விதப்படி எல்லா குளிகைகளையும் உபயோகிக்க வேண்டும். இவ்வௌஷதத்திற்குப் பத்திய நியம ஸம்பந்தமான விலக்குகள் ஒன்றுமில்லை. எல்லா வியாதிகளையும் போக்குவதற்கு இக் குளிகைகள் ஏற்றவையாம். முக்கியமாக கிரஹணீரோகம், பாண்டுரோகம், சொறி, கோடம் என்கிற சர்ம வியாதி, அர்சஸ் இவற்றைப் போக்குவதற்கு இது அநுகூலமானது. 58—60.

விரேசநௌஷதங்களில் சொற்பத்துக்கு அதிக குணத்தையும், அதிகத்துக்குச் சொற்ப குணத்தையும் உண்டாக்குவது.

ஓர் ஔஷதச் சரக்கு அல்லது ஔஷதம் வீர்யத்திலாவது அளவிலாவது சொற்பமாயிருந்தால் அதை வேறு சரக்குகளோடு சேர்ப்பதாலோ, அல்லது இதர சரக்குகளிலிருந்து பிரித்தப்பதாலோ, கால விசேஷத்தினாலோ, பக்குவம் செய்யும் முறையினாலோ, மற்றுமுள்ள சேர்க்கை முறைகளாலோ அச்சரக்கு அல்லது ஔஷதம் பெரிய குணங்களை யுண்டுபண்ணக் கூடியதாகும். அங்ஙனமே வீர்யத்திலாவது அளவிலாவது ஓர் சரக்கு அல்லது ஔஷதம் மஹத்தாயிருந்தால் அதை மற்றவையோடு சேர்ப்பதாலாவது, மற்றவைகளிலிருந்து பிரிப்பதாலாவது, கால வேற்றுமையினாலாவது, ஸம்ஸ்கார விசேஷத்தாலாவது, வேறுவிதமான சேர்மான முறைகளாலாவது காரியத்தில் மந்தமாகச் செய்து விடக்கூடும். 61.

விரேசநௌஷதங்களின் அருவருப்பைப் போக்குதல்.

இலவங்கப்பட்டை, நாககேஸரம், காட்டுமா, மாதளை, ஏலம், கற்கண்டு, தேன், கொடி மாதளை இவற்றோடும், மதுவகைகளோடும், மனதுக்கு இன்பமளிக்கக்கூடிய மற்றுமுள்ள வஸ்துக்களோடும் விரேசநௌஷதங்களைக் கூட்டிக் கொடுப்பதால் நன்மை அதிகரிக்கும். 62.

1. விரேசநத்திற்கு முக்கியமான ஒன்பது சரக்குகளைப்பற்றி இதற்கு முன் பக்கத்தில் டிப்பணியில் விவரம் காண்க.

# மூன்றுவது அத்தியாயம்.

இனி வமந-விரேசந வியாபத்ஸித்தி[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:

வமநம் சிறை வேறுதசன் காரணமும், அதைப் பயனுறச் செய்யு முறையும்.

மிருதுவான கோஷ்டமுள்ளவன், பசித்தவன், சொற்ப கபத்தையுடையவன், அஜீர்ணமுள்ளவன், பலஹீனன் இவர்கள் அதிக தீக்ஷ்ணமாகவும், அதிக குளர்ச்சியாகவும், மிகச் சொற்பமாகவு முள்ள வமநௌஷதத்தை யுட்கொண்டால், அது கீழ் நோக்கிச் சென்றுவிடும்; அப்பொழுது கோரிக்கை நிறைவேறுவதில்லை; கபதோஷமும் அதிகரிக்கும். அம்மனிதனுக்கு ஏற்கனவே ஸ்நேஹந சிகித்ஸை செய்து வைத்திருப்பினும் மீண்டுமொரு முறை ஸ்நேஹம் செய்து முன்னால் வமநக்ரியைப் பயன் பெறாமல் தவறிப்போயிருப்பதை மனதில் எண்ணிக் கொண்டே மறுபடியும் வமநம் செய்விக்க வேண்டும். 1, 2.

விரேசநம் சிறை வேறுத தன் காரணங்களும், அதைப் பயனுறச் செய்யு முறையும்.

அஜீர்ண ரோகமுள்ளவனுக்கும் அதிக கபதோஷ முடையவனுக்கும் விரேசநௌஷத முபயோகிக்கப்படுமானால், அது மேல் நோக்கியே வாந்தியை யுண்டுபண்ணி விடும்; மேலும் வமநௌஷதம் அதிக தீக்ஷ்ணமாகவும், அதிக சூடாகவும், அதிக உப்புள்ளதாகவும், மனதுக்கு அருவருப்பைத் தரக்கூடியதாகவும், அளவில் மிகுதியாகவு மிருந்தாலும் வாந்தியாய் விடும். அதில் வமந வியாபத்திற்குக் கூறியது போலவே கோரிய பலனுண்டாகாமற் போவதோடு தோஷமும் அதிகரித்துவிடும்; அதற்குப் பரிஹாரமுறையும் வமந வியாபத்திற்குக் கூறியது போலவேயாம். அங்ஙனம் இரண்டாமுறை விரேசநௌஷத முபயோகித்து அதுவும் வயிற்றில் தங்காமற் போனால், மூன்றுமுறை அவ்வௌஷதத்தைக் கொடுக்கக்கூடாது; ஆனால் ஸாத்மியமாகவும், இருதயத்திற்கு பலந்தரக் கூடியதாகவும், அபாயம் விளைவிக்காததாகவும், மனதுக்கின்பமாகவுமுள்ள ஏதேனும் வேறுவித ஔஷதத்தை உபயோகிக்கலாம். 3, 4.

விரேசநௌஷதத்தின் அயோகத்தினால் உண்டாகும் கெடுதிகள்.

(1) ஸ்நேஹந ஸ்வேதங்களால் ஸம்ஸ்காரம் செய்யப்படாதவனுக்கு விரேசநௌஷதத்தைப் பிரயோகித்தாலும், அவ்வௌஷதம் வெகு பழையதாகவும் ருக்ஷமாகவும் இருப்பினும் அது தோஷங்களைக் கல்வி வெளிப்படுத்துவதற்கான சக்தியற்றதாயிருக்கும்; ஆகவே அது சரீரம் துவண்டுப்போய் விழுவதென்ன, வீக்கமென்ன, விக்கலென்ன, கண்கள் இருளடைவதென்ன, நாவறட்சி யென்ன, நாபியிலுளைத்தலென்ன, சொறியென்ன, துடைகளின் சுருக்கமென்ன, தேஹம் கருத்துப் போவதென்ன இவ்விகாரங்களை யுண்டுபண்ணும். (2) ஸ்நேஹந-ஸ்வேதங்களைச் செய்து வைத்த பின்பு நல்ல ஜாடராக்னி யுள்ளவனுக்கு மிகச் சொற்ப அளவாகக் கொடுக்கப்படும் ஔஷதமும் ஜீர்ணித்துப் போய் பலனுண்டாக்க மாட்டாது. (3) விரேசநௌஷதமானது மிகக் குளிர்ச்சியான வஸ்துக்களின் ஸம்பந்தத்தால் அல்லது குளிர்ச்சியான நிலைமைகளால் அங்ஙனமே ஆமதோஷம் அதிகரித்துள்ள நிலைமையில் குடலில் ஸ்தம்பித்துப்போய், பிறகு தோஷங்களை அவ்வவ்

1. வமந-விரேசந சிகித்ஸைகளைச் செய்கையில் உண்டாகக்கூடிய தீமைகளையும், அவற்றிற்கான பரிஹார முறைகளையும் விவரிக்கும் அத்தியாயம் எனக் கருத்து.

விடங்களிலிருந்து கிளப்பி வமந ரூபமாகவாவது வெளிப்படுத்தும். இஃதனைத்தும் அயோகம் எனப்படும்.[1] இவ்வயோக மென்னும் ஔஷதப் பிரயோகம் முற்கூறிய அதே ரோகங்களை யுண்டுபண்ணும். 5-7½

விரோசநத்தின் அயோகத்தினலான கெடுதிகளுக்குப் பரிஹாரம்.

அம்மனிதனுக்குத் தைலத்தையும் உப்பையும் கூட்டி அப்யங்கம் செய்து வைத்து ப்ரஸ்தாரஸ்வேதம், ஸங்கரஸ்வேதம் இவற்றால் ஸ்வேதசிகித்ஸையையும் செய்வித்து, நிரூஹ வஸ்தியைப் பிரயோகித்து, ஜாங்கல தேசத்து மாம்ஸரஸங்களைப் பருகக் கொடுத்து, மதநபலம்-திப்பிலி-தேவதாரு இவற்றால் பக்குவம் செய்த தைலத்தைக் கொண்டு அளவறிந்து அநுவாஸநவஸ்தியையும் பிறகு பிரயோகிக்க வேண்டும். வாதஹரமான ஸ்நேஹங்களால் ஸ்நிக்த்தமாகச் செய்து, மறுபடியும் தீக்ஷ்ணமான விரேசநௌஷதத்தினல் சுத்திசெய்விக்கவும். 8—9½.

பலமான தோஷங்களில் சொற்ப ஔஷதப்ரயோகத்தால்விளையும் தீங்குகளும் பரிஹாரமும்.

தோஷம் மிகுதியாகச் சேர்ந்துள்ள சரீரமுடையவன், ரூக்ஷசரீரமுள்ளவன், ஜாடராக்னிமந்தித்திருப்பவன், உதாவர்த்தரோகி இவர்களுக்குச்சொற்ப அளவான அல்லது சொற்ப வீர்யமுடைய ஔஷதத்தை யுபயோகித்தால், அது தோஷங்களைக் கிளறிவிட்டு, அவற்றைக் கொண்டு மார்க்கங்களை அடைத்து, நாபிக்கு ஸமீபத்தில் மிகவும் பொருமலை யுண்டுபண்ணுவதோடு, ப்ருஷ்டபாகம்-விலாப்பக்கங்கள்-சிரஸ் இவற்றில் வலியையும் உண்டாக்கும். மேலும்வாஸம், மலமூத்திர- அபாநவாயுக்களின் பந்தம் இவற்றையும் கடுமையாக உண்டாக்கும். இவ்வாறு ஆத்மாந மென்கிற பொருமலுடன் கூடிய இப்பிணியாளிக்கு அப்யங்கம், ஸ்வேதம், வர்த்திப் பிரயோகம், நிரூஹ வஸ்தி, அநுவாஸந வஸ்தி, இவை முதலிய மற்றும் உதாவர்த்தஹரமான ஸகல சிகித்ஸையும் மிகச் சிறந்ததாகும். 10—12½.

பஞ்ச மூலாதி யவாகூ.

பஞ்சமூலம், யவக்ஷாரம், வசம்பு, சுக்கு நாறிப்புல், இந்துப்பு இவற்றைச் சேர்த்து நன்றாக யவாகூ வென்கிற கஞ்சியைப் பக்குவம் செய்து உபயோகிக்க வயிற்றுவலி, மலம் முதலிய வற்றின் பந்தநம், வயிற்றுப் பொருமல் இவை தீரும். 13½.

பிரவாஹிகை வயிற்றுக் கடுப்பு முதலிய வற்றில் செய்யக் கூடிய சிகித்ஸை.

திப்பிலி, மாதளை, யவக்ஷாரம்,காயம், சுக்கு புளிவஞ்சி, இந்துப்பு இவற்றை மதுவகைகளோடு கூட்டியாவது, நெய் அல்லது உஷ்ண ஜலத்துடனாவது கூட்டி பிரவாஹிகை யென்கிற சீதபேதியில், அடிக்கடி மலம் கழியும் நிலைமையிலும், வயிற்றுளைத்தலிலும், குதத்தில் கடுப்பும் வலியும் உண்டாயிருக்கையிலும் உட்கொள்ளலாம். 14, 15.

தோஷ சோதநத்திற்கு ஔஷதபாநம்செய்து வேகங்களைரோதம் செய்வதாலான தீங்குகளும் பரிஹாரமும்.

ஔஷத பாநம் செய்தவன் வேகங்களை அடக்குவதால் வாதம் முதலியவை பிரகோபித்து, இருதயத்தைப் போயடைந்து, கடுமையான மாரடைப்பை யுண்டாக்குகின்றன; அப்பொழுது விக்கல்,பக்கசூலை, இருமல், இளைப்பு, வாயில் உமிழ் நீரூறுதல், கண் சுழலமிடுதல் இவ்விகாரங்கள் உண்டாவதோடு, ஞாபகமிழந்து, பற்களை நறுநற வெனக் கடித்து, நாக்கையும் கடித்துக் கொள்வான். அந்த நிலைமையில் வைத்தியன் மதி மயக்கங் கொள்ளாமல் தாமதமின்றி உடனே பிணியாளிக்கு வாந்தி செய்விக்கவும்; அதில் பித்த ஸம்பந்தமான மூர்ச்சையில் மதுரவஸ்துக்களாலும், கபஸம்பந்தமான மூர்ச்சையில் கடுரஸமான வஸ்துக்களாலும் வமநம் செய்

1. அயோகம்—குறைந்த அளவில் உபயோகிக்கப் படுவதால் பலன் தரக்கூடாத முறை; இதுவே ஹீநயோகம் எனப்படும்.

விக்கவேண்டும். பிறகு இப்பிணியாளியின் தேஹத்தில் மிச்சமுள்ள தோஷத்தை பாசந குணமுள்ள ஔஷதங்களால் பக்குவம் செய்விக்கவும்; அப்பால் இவனது உடற்சூட்டையும், தேஹ வன்மையையும் கிரமமாக விருத்தி செய்துவரவேண்டும். 16—19.

வாதாதி தோஷங்களால் இருதயம் பீடிக்கப்படுகையில் செய்யுமுபசாரம்.

வாத தோஷம் மேலிட்டு அதனால் அதிகமாய் வாந்தி செய்கிற எவனுக்கு இருதயம் மிகப் பீடிக்கப்படுகிறதோ, அவனுக்கு ஸ்நிக்த்தமாகவும் அம்லமாகவும், இலவணரஸ முள்ளதுமான ஔஷதத்தைக் கொடுக்கவேண்டும். பித்த-கபங்களால் வமநம் அமிதமாய் உண்டானால் வாத தோஷத்தினாலேற்பட்டதற்கான சிகித்ஸைக்கு மாறான குணமுடைய ஔஷதங்களை யுட்கொள்ளக் கொடுக்கவும். 20.

ஔஷத பாநம் செய்தவன் வேகவிரோதாதிகள்செய்வதாலாகும் தீங்குகளும் பரிஹாரமும்.

ஔஷதபாநம் செய்தவன் வேகங்களை அடக்குவதால் அல்லது கபத்தினால் வாதம் தகையப்பட்டு அல்லது நன்கு சுத்தியான பிறகு வாயு அவயவங்கள்தோறும் பிடிப்பை யுண்டுபண்ண, அதனால் ஸ்தம்பித்தல், நடுக்கல், குடைத்தல், இளைத்தல், உளைத்தல், இடித்தல் இவ்விகாரங்கள் உண்டாகும். அதில் வாதஹரமான ஸ்நேஹ-ஸ்வேதம் முதலிய ஸகலவித வாதஹரமான சிகித்ஸையும் சிறந்ததாம். 21, 22.

விரேசநத்தில் அதியோகத்தினாலுண்டாகும் கெடுதிகளும் பரிஹாரமும்.

பசியால் வருந்துபவனுக்கும், மிருதுவான குடலைப் பெற்றவனுக்கும் அதிக அளவாகவும் தீக்ஷ்ணமாகவுமுள்ள ஔஷதத்தைப் பிரயோகிப்பதால், அது மலம், பித்தம், கபம் இவற்றை ஜடிதியில் வெளிப்படுத்தி விடுவதோடு, திரவமான தாதுக்களையும்[2] ஸ்ரவிக்கச் செய்யும். அவ்விதமான அதியோகமென்கிற மிதமிஞ்சிய அல்லது கடுமையான ஔஷதப் பிரயோகத்தினாலேற்படும் கெடுதிகளில் (1) மதுரரஸமுள்ள திரவியங்களைக்கொண்டு குடலிலிருந்து மிச்சமுள்ள ஔஷதத்தைக் கல்லி வெளிப்படுத்தி விடவும். (2) வமநம் அதிகமானால் விரேசநமும், விரேசநம் அதிகமானால் வமநமும் மிருதுவாகச் செய்விக்கவேண்டும். (3) மிகக் குளிர்ச்சி பொருந்திய நீர்களை மேலே ஊற்றுவது, அவ்வித நீர்களில் மூழ்கச் செய்வது என்னும் இவை முதலியவற்றால் அவ்வமந விரேகத்தைக் கட்டி விடவும் வேண்டும். (4) அஞ்ஜநமிடலாம். (5) சந்தநம், வெட்டிவேர், மஜ்ஜை யென்னும் எலும்புச்சத்து, இரத்தம், சர்க்கரை இவற்றைத் தண்ணீரிற் கரைத்து உட்கொள்ளச் செய்யலாம். (6) மந்த மென்கிற கஞ்சியை நெற்பொரிமாவுடன் பருகலாம். இவையெல்லாம் விரேசநங்களின் அதியோகத்தினாலுண்டாகும் தீங்குகளைப் பரிஹரிப்பதிற் சிறந்தவையாம். 23—25½.

வமநத்தில் அதியோகத்தினாலுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும்.

வமநம் மிதமிஞ்சி யானால் (1) அவ்விதப் பிணியாளியின்மீது குளிர்ந்த ஜலத்தைத் தெளித்து எலும்மிச்சம்பழரஸமும், நெய்யும், தேனும், சர்க்கரையும் கூட்டி மந்தம் என்கிற கஞ்சியைப் பருகக் கொடுக்கலாம். (2) மேல் நோக்கி எதிர்த்து ஏப்பமும் வந்து, வாந்தியும் மிதமிஞ்சியிருந்தால், பெருங் குரும்பை, கொத்தமல்லி விதை, கோரைக்கிழங்கு, இலுப்பைப்பூ, ஸௌவீராஞ்ஜநம் இவற்றின் சூர்ணத்தைத் தேனுடன் கூட்டிப் பருகலாம். (3) கடினமாக வாந்தியாவதால் நாக்கு உட்புறமாக இழுத்துக் கொள்ளப்படுமானால், அதற்கு ஸ்நிக்த்தமாகவும், அம்லமாகவும், இலவணரஸமுள்ளதும், இருதயத்திற்கு பலந்தரக் கூடியதுமான கபளக்கிரஹங்களும், யூஷமென்னும் கஞ்சிகளும், மாம்ஸரஸங்களும் அநுகூலமானவையாம். (4) அங்ஙனம் உட்புறமாக

1. மதுரரஸம், சீத வீர்யம் முதலிய குணங்களுடன் கூடிய ஔஷதங்கள்.

2. திரவதாதுக்கள்—இரஸம், இரத்தம் முதலியவை.

இழுத்துக் கொண்ட நாக்குக்கு முன்புறமாகப் புளிப்பான பழங்களை வைத்துக் கடிப்பது நலமென்றும் வேறு சிலர் கூறுவர். (5) அதிவமந வேகத்தால் நாக்குத் தொங்கிட்டு விட்டால் எள்ளு, திராக்ஷை இவற்றின் கல்கத்தை நாக்கில் தேய்த்து, அதை உட்செலுத்தவேண்டும். (6) வாக்கிரஹம் என்கிற வாக்குப் பிடித்தல் முதலிய வாதரோகங்களில் கிருதம்-மாம்ஸம் இவற்றால் பக்குவம் செய்யப்பெற்ற கனமில்லாத (மிகத்திரவமான) யவாகூவைக் கொடுக்கலாம். (7) காலமறிந்து சிகித்ஸை செய்யும் திறமையுள்ள வைத்தியன் ஸ்நேஹ ஸ்வேதங்களையும் செய்விக்கலாம். 26. 30½.

விரேசநத்தின் அதியோகத்தால் ஜீவசோணிதம் வெளிப்படுதல்.

எந்த ஔஷதம் அளவுக்குமிஞ்சி யுபயோகிக்கப்படுவதால் 'ஜீவ சோணிதம்' என்கிற இரத்தத்தை வெளிப்படுத்தி விடுகிறதோ, அதுஜீவனை ஆகர்ஷிக்குமியல் புடையதாதலால் "ஜீவாதாநம்" என்று கூறப்படுகிறது. விரேசநம் மிதமிஞ்சியானதால் வெளியாகும் அந்த இரத்தத்தை அன்னத்திற் கூட்டி, அதை நாய்க்காவது காக்கைக்காவது இடவும்; அந்த ஜந்து அதைப் புசித்தால் அது ஜீவரத்தம் என்றும், பரிஹரித்து விட்டால் பித்த மென்றும் கூறலாம்;[1] அல்லது வெண்மையான வஸ்திரத்தை ஸந்தேஹிக்கப்படும் அந்த இரத்தத்தில் நனைத்து, உலரவைத்து, அப்பால் சிறிது சூடான ஜலத்தை ஊற்றிக் கழுவ, அது பித்தமானால் கறை பிடித்திருக்கும்; அப்படிக்கின்றி இரத்தமானால் துணி சுத்தமாய் விடும். 31—33½.

ஜீவசோணிதம் வெளிப் படுகையில் செய்யவேண்டிய உபசாரங்கள்.

(1) அங்ஙனம் உயிர் நீங்கும் வரையிலும், ஜீவசோணிதம் வெளிப்படுகையில் நாவறட்சி, மூர்ச்சை, வெறி இவற்றால் வருந்த நேரிடும் மனிதனுடைய உயிரைக் காப்பதற்குபயோகமான இரத்த-பித்தஹர சிகித்ஸையை சீக்கிரம் செய்ய வேண்டும். (2) உயிருடனுள்ள மான், பசு, எருமை இவற்றின் உடம்பிலிருந்து அப்பொழுதே கிரஹிக்கப்பட்ட ஜீவனை நிலைநிறுத்தக்கூடிய இரத்தத்தைப்பருகச் செய்யலாம்; ஏனெனில் அது வெகு சீக்கிரத்தில் உயிர் நிலைகளிற் சென்று பிராணனைக் காக்குமியல் புடையது. (3) அதே இரத்தத்தைத் தர்ப்பைகளால் கடைந்து, வஸ்தியென்கிற மூத்திரப்பையின் மேல் ஊற்றலாம். (4) சாமை, பெருங்குமிழன், அதிமதுரம், அறுகம்புல், வெட்டிவேர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் நெய்யின் ஆடையையும், ஸௌவீராஞ்ஜநத்தையும் சிறிதளவு கூட்டி, குளிர்ச்சியாக வஸ்தியையாவது பிரயோகிக்கலாம். (5) நெய்யின் ஆடையைக் கொண்டு அநுவாஸநத்தை அல்லது மிகவும் சீதளமான பிச்சா வஸ்தியையாவது பிரயோகிக்கலாம். 34—37½.

குதப்ரம்ச சிகித்ஸை.

அதிவிரேசநத்தினால் குதம் நழுவி வெளிப்படுமானால், அதைத் துவர்ப்பான சரக்குகளால் பக்குவம் செய்த கஷாயங்களால் ஸ்தம்பநம் செய்து மெதுவாக உட்செலுத்தி விட வேண்டும். 38.

அதிவிரேகாதிகளால் மூர்ச்சித்தவனுக்குச் செய்யுமுபசாரம்.

அதிவிரேகாதிகளால் நினைவு தப்பி மூர்ச்சை யடைந்துள்ள பிணியாளிக்கு வேணுகாநம் முதலிய இனிய ஸ்ரங்களைச் செவியுறச் செய்து மதுரமான மொழிகளால் தேறுதல் சொல்ல வேண்டும். 38½.

1. பித்தம், இரத்தம் இவ்விரண்டும் மணத்திலும் நிறத்திலும் ஸமானமா யிருப்பதால், அதிவிரேசநத்தில் வெளியாவது இரத்தமா பித்தமா வென்று ஸந்தேஹமுண்டாகுமாகையால், அச்சந்தேஹத்தைப் போக்குவதற்கு இப்பரீக்ஷை கூறப்பட்டது.

## நான்காவது அத்தியாயம்.

இனி தோஷங்களைப் பற்றறப் பரிஹரிப்பதை விளக்கும் வஸ்தி கல்பம் என்னும் அத்தியாயம் கூறப்படுகின்றது:—

ஸர்வரோக ஹரவஸ்தி.

சிற்றாமுட்டி, சீந்தில், த்ரிபலை, சிற்றரத்தை, ப்ருஹத் பஞ்சமூலம், இலகு பஞ்சமூலம் இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; மறுக்களாம் பழம் எட்டு; செம்மறியாட்டின் மாம்ஸம் ஐம்பது பலம்; இவற்றைத் தண்ணீரிற் சேர்த்துக் காய்ச்சி, அதை நாலில் ஒரு பங்கு மிகும்படியாகச் செய்து, அதை வடிக்கட்டிக் கொள்ளவும்; ஓமம், மறுக்களாம் பழம், பில்வம், கோஷ்டம், வசம்பு, சதகுப்பி, கோரைக் கிழங்கு, திப்பிலி இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும்; பிறகு வெல்லம், தேன், எண்ணெய் இவற்றையும், உப்பையும், கூட்டி, இளஞ்சூடாக வஸ்தியைப் பிரயோகிக்கவும். இது எல்லா வியாதிகளையும் போக்கக்கூடிய சிறந்த வஸ்தி முறை; ஆரோக்கிய நிலைமையிலுள்ளவருக்கும் ஹிதமானது; ஜீவநம், ப்ருஹ்மணம் என்கிற குணங்களையும் உடையது. வஸ்திப் பிரயோகத்திற்கான எந்த முறையில் கல்கம் கூறப்படவில்லையோ அவ்வித முறையிலெல்லாம் இந்த கல்கத்தைக் கூட்டிக் கொள்ளலாம். 1—3.

ஸர்வ வாதரோக ஹர வஸ்தி.

தசமூலத்தையும் ஆட்டு மாம்ஸத்தையும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, அதில் காடியைக் கூட்டி, முன் வஸ்தி முறைக்குக் கூறிய கல்கங்களையும் சேர்த்து, மூன்று ஸ்நேஹங்களையும்[1] அதிற் கலக்கிக்கொள்ளவும். எல்லா வாத ரோகங்களையும் போக்குவதில் இது மிகச் சிறந்த நிரூஹவஸ்தி முறையாக நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. 4.

பலாதி நிரூஹம்.

சிற்றாமுட்டி, பேய்ப்புடல், இலகு பஞ்சமூலம், கொன்றை, ஆமணக்கு, வாற்கோதுமை இவற்றை ஜலத்திற் சேர்த்து நன்றாகப் பக்குவம் செய்து, அக் கஷாயத்தில் ஒரு பிரஸ்தமளவு எடுத்து, அரை பிரஸ்தம் அதில் ஆட்டு மாம்ஸத்தைக் கூட்டி, ஒரு பிரஸ்தம் கஷாயமாகச் சுண்டக் காய்ச்சியெடுக்கவும். பிறகு ஞாழல், திப்பிலி, கோரைக்கிழங்கு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, தைலம், க்ருதம், தேன் இந்துப்பு இவற்றையும் அதிற் கூட்டிக்கொள்ளவும். இதைக்கொண்டு வஸ்திப் பிரயோகம் செய்யவும்; ஜாடராக்னியை உத்தீபநம் செய்யும்; மாம்ஸங்களுக்கு வன்மையைக் கொடுக்கும்; வெகு ஜடிதியில் கண்களுக்கும் பலத்தைக் கொடுக்கும். 5, 6.

ஏரண்ட மூலாதி நிரூஹம்.

ஆமணக்கு வேர் மூன்று பலம், பலாசம் வேர் மூன்று பலம், இலகு பஞ்சமூலச் சரக்குகள் ஒவ்வொரு பலம், சிற்றரத்தை, சிற்றாமுட்டி, சீந்தில், அமுக்கிறாங் கிழங்கு, சாறணை, கொன்றை, தேவதாரு, மறுக்களாம் பழம் இவை வகைக்கு எட்டு பலம், இவற்றை இரண்டு ஆடகம் அளவான ஜலத்திற் சேர்த்துக் காய்ச்சி, அதை எட்டில் ஒரு பங்காகச் சுண்டவைத்து எடுக்கவும். அப்பால் வசம்பு, சதகுப்பி, கொட்டைக்கரந்தை, ஞாழல், அதிமதுரம், திப்பிலி, வெட்பாலரிசி, கோரைக்கிழங்கு, இரஸாஞ்ஜநம் இவற்றை வகைக்குக் கால்பலம் வீதம் கிரஹித்து நன்றாகக் கல்கமாக்கி அக்கஷாயத்துடன் கூட்டவும்; இதில் வீசம் பலம் உப்பையும், தேன், தைலம், பசு மூத்திரம் இவற்றையும் கலந்து வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். லேகநம், தீபநம் என்கிற குணங்களையுடைய இவ்வஸ்தி முறையானது கால்கள், தொடை, பாதம், பிடரி,

1. க்ருதம், வஸை, மஜ்ஜை என்கிற மூன்று ஸ்நேஹ வஸ்துக்கள் இங்கு குறிக்கப்படுவதாய் அறிக.

முதுகு, குடல், மார்பு, குஹ்யப் பிரதேசங்கள் இவற்றிலுண்டாகும் வலிகளையும், குருத்வத்தையும், மல பந்தத்தையும், குல்மம்-அச்மரீ-பீஜகோசங்களின் வீக்கம்-கிரஹணீ-அச்மரீ இந்த ரோகங்களையும், கப-வாத தோஷங்களால் உண்டாகும் மற்றுமுள்ள அநந்த வியாதிகளையும் நிவாரணம் செய்யவல்லது. 7—10.

யஷ்ட்யாதி நிரூஹம்.

அதிமதுரம், வெள்ளிலோத்தி, கடுக்காய், வெட்டிவேர், செஞ் சந்தனம், தாமரை, கரு நெய்தல் இவற்றையும், ஜீவநீயகணச் சரக்குகளையும் சேர்த்துக் காய்ச்சிய பாலில் சர்க்கரையும், தேனையும் கூட்டி, நன்றாகக் குளிர்ந்த பிறகு, அதைக்கொண்டு வஸ்தி பிரயோகிக்க பித்த ரோகங்கள் நீங்கும். 11.

ராஸ்நாதி நிரூஹம்.

சிற்றரத்தை, ஆடாதோடை, செம்மரம், அறுகம்புல், சிற்றாமுட்டி, இலகுபஞ்ச மூலம், த்ருணபஞ்சமூலம், நன்னாரி, சந்தனம், தாமரைக் கிழங்கு, ருத்தி, அதிமதுரம், வெள்ளிலோத்தி இவற்றை வகைக்கு அரைப்பலம் வீதம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; இக் கஷாயத்தில் அரை ஆடகமளவு பால் சேர்த்து, ஜலம் முற்றிலும் வற்றிப் போகும் வரையில் காய்ச்சியெடுக்கவும்; இதில் ஜீவந்தீ, மேதா, தண்ணீர்விட்டாங்கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, வீரா, காகோலீ, க்ஷீரகாகோலீ, தட்டைக்கோரை, கற்கண்டு, ஜீவகம், தாமரைப் பூவின் உட்புறப் பொடிகள், தாமரை, அகில், காஞ்சொறி, அதிமதுரம், நாககேஸரம், முஞ்ஜியென்னும் தர்ப்பை, சந்தனம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, க்ருதமும், தேனும், இந்துப்பும் கூட்டி, நன்றாகக் குளிர்ந்த பிறகு நிரூஹ வஸ்தியாகப் பிரயோகிக்கவும். அங்ஙனம் குடலிற் செலுத்திய நிரூஹவஸ்தி வெளிவந்ததும், தேஹத்தைக் குளிப்பாட்டி, சம்பா அரிசியினாலான அன்னத்தை ஜாங்கல மாம்ஸரஸத்திற் கலந்து புஜிக்கக் கொடுக்கலாம்; அல்லது குளிர்ந்த பிறகு அன்னமும் பாலும் கலந்து உபயோகிக்கச் செய்யலாம். இந்த நிரூஹ முறையானது அழற்சி, அதிஸாரம், ப்ரதாம் என்கிற பெரும்பாடு, இரத்த பித்தம், இருதயரோகம், பாண்டுரோகம், விஷமஜ்வரம், குல்மம், மூத்திரத்தின் அடைப்பு, காமாலை இவைகளையும், பித்தத்தினால் உண்டாகும் மற்ற எல்லா வியாதிகளையும் நிவ்ருத்தி செய்ய வல்லது. 12—16.

கோசாதகாதி நிரூஹம்.

பேய்ப்பீர்க்கு கொன்றை, தேவதாரு, பெருங் குரும்பை, நெரிஞ்சி, வெட்பாலை, எருக்கு, வட்டத்திருப்பி, கொள், கண்டங்கததிரி இவற்றை ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; அக்கஷாயத்திற் பத்து பிரஸ்ருதம்[1] அளவு எடுத்து, அதில் வெண் கடுகு, ஏலக்காய், மறுக்களாம்பழம், கோஷ்டம் இவற்றைக் கால் பலமளவாகவும், தேனும், மதநபலமும் அம்லங்களும் சேர்த்துப் பக்குவம் செய்த தைலம், யவக்ஷாரம், நெய் இவைகளை வகைக்கு ஒரு பிரஸ்ருதம் அளவாகவும் சேர்த்து பக்குவம் செய்துகொண்டு, கப தோஷத்தினால் லேற்பட்ட வியாதிகளால் வருந்துபவர்களுக்கும் மந்தாக்னியுள்ளவர்களுக்கும், அன்னத்வேஷமுடையவர்களுக்கும் நிரூஹ வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். 17—18½.

ஸுகுமார தேஹிகள் முதலியவருக்கு ஏற்ற நிரூஹங்கள்.

பலமான ஔஷதப் பிரயோகங்களைத் தாங்க வியலாத ஸுக சரீரிகளுக்கு அனுகூலமான மிருதுவாயுள்ள ஸ்நேஹங்களாலான நிரூஹவஸ்தி முறைகளை ப்ரஸ்ருதம் என்கிற அளவுகளில் இனி விவரிக்கப் போகின்றோம். மேலும் ஸுகுமாரமான தேஹமுடையவருக்கு ஸ்நேஹநம் செய்யக்கூடிய மிருதுவான நிரூஹ வஸ்திகளையும், வமநாதி சிகித்ஸைகள் உபயோகப்படாமல் தவறிப்போனவர்களுக்கு அனுகூலமான வஸ்தி முறைகளையும் வெவ்வேறாக இனி பிரஸ்ருதம் என்கிற அளவுமுறையில் விவரித்துக் கூறுவோம். 19,20.

---

1. பிரஸ்ருதம்—இரண்டு பலங்கள் கொண்ட அளவு.

ஸுகுமாரதேஹிகளுக்கேற்ற மிருதுவான நிரூஹவஸ்திகள்.

(1) பால் இரண்டு பிரஸ்ருதம், தேன்-தைலம்-நெய் இவை வகைக்கு மூன்று பிரஸ்ருதங்கள்; இவற்றை ஒன்றாகக் கூட்டி துடுப்பால் குழப்பி வஸ்திப் பிரயோகம் செய்ய வாதஹரமாகவும், பல வர்ணகாரியாகவும் வேலை செய்யும். (2) தைலம், காடி, தேன், நெய் இவை வகைக்கு ஒவ்வொரு பிரஸ்ருதம், பில்வம் முதலியவற்றின் மூலங்களின் [1] கஷாயம் இரண்டு பிரஸ்ருதம், கொள்ளுக் கஷாயம் இரண்டு பிரஸ்ருதம்; ஆக இவை வஸ்தியாக உபயோகிக்கப்படுமானால் வாத விகாரங்களைப் போக்கும். (3) பேய்ப்புடல், வேம்பு சுக்கு நாறிப்புல், சிற்றரத்தை, ஏழிலம்பாலை இவற்றின் ஒவ்வொன்றினுடையவும் கஷாயம் வகைக்கு ஒரு பிரஸ்ருதம், நெய் ஒரு பிரஸ்ருதம்; இவற்றில் கடுகையும், பஞ்சதிக்தங்களையும் [2], கல்கமாகக் கூட்டி, அதைக் கொண்டு வஸ்தி செய்ய அபிஷ்யந்தம் [3], கிருமி, குஷ்டம், பிரமேஹம் இவை நிவ்ருத்தியாகும். (4) தைலம், பசு மூத்திரம், தயிரின் ஆடை, காடி இவற்றை ஒவ்வொன்றையும் நான்கு பிரஸ்ருதங்கள் அளவாகக் கூட்டி, அதில் கடுகைக் கல்கமாகச் சேர்த்து வஸ்தியாகப் பிரயோகிக்க மலச்சிக்கல், வயிற்றுப் பொருமல் இவை தீரும். (5) க்ஷீரகாகோலீ, கரும்பு, பெருமல்லிகை, சிற்றரத்தை, நிலப்பனங்கிழங்கு இவற்றில் ஒவ்வொன்றினுடையவும் கஷாயம் ஒவ்வொரு பிரஸ்ருதம், தேன்-நெய் இவை தனித்தனியே ஒவ்வொரு பிரஸ்ருதம் இவற்றைக் கூட்டி, அதில் திப்பிலியைக் கல்கமாகச் சேர்த்து வஸ்தியாகப்பிரயோகிக்க வ்ருஷத்வம் என்கிற சுக்ர விருத்தியைச் செய்யும் [4]. $21—25\frac{1}{2}$.

ஸித்த வஸ்திகள்.

இதன் பிறகு "ஸித்த வஸ்திகள்" என்கிற வஸ்தி முறைகளை விவரிக்கப்போகின்றோம்; [1] இவ் வஸ்திகளை எப்பொழுதுமே நன்கு உபயோகிக்கலாம். இந்த ஸித்த வஸ்திகள் தீங்கிழைக்காதவை; அதிக பலன்களை யுண்டுபண்ணும்; சரீரத்திற்கு வன்மையையும் புஷ்டியையும் உண்டுபண்ணும்; மேலும் நல்ல ஸௌகத்தைத் தருபவை. $26\frac{1}{2}$.

மது தைலக வஸ்தி.

(1) தேனும் தைலமும் ஸம பாகம்; இந்துப்பு கால் பலம்; சதகுப்பி அரைப் பலம்; இவற்றை ஒருமிக்கக் கூட்டி, ஆமணக்கன்வேரின் கஷாயத்தையும் கலந்து [2] நிரூஹமாகப் பிரயோகிக்கவும். மதுதைலகவஸ்தியென்கிற இதற்கு இரஸாயநம் என்கிற குணமும், பிரமேஹம்-அர்சஸ்-கிருமி-குல்மம்-அந்த்ரவ்ருத்தி யென்னும் குடலிறக்கம் இவற்றை நிவ்ருத்தி செய்யும் தன்மையும் முக்கியமாயுண்டு [3]. (2) இதில் அதிமதுரத்தையும்கூட்டி வஸ்தி செய்ய சக்ஷுஷ்யமாகவும், [4] இரத்தபித்தஹரமாகவும் இம்முறை உபயோகப் படும். $27—28\frac{1}{2}$.

யாபந வஸதி.

தேன், தைலம், மாம்ஸரஸம், நெய், இவற்றின் கூட்டால் ஆகியதும், கோரைக்கிழங்கின் கல்கத்துடன் கூடியதுமான இந்த முறையைக் கொண்டு செய்யப்படும் வஸ்தியானது "யாபந

1. பில்வம் முதலிய என்பதால் இலகு பஞ்ச மூலம் இங்கு குறிக்கப்படுகின்றது.

2. பேய்ப்புடல், நன்னாரி, கோரைக்கிழங்கு, வட்டத் திருப்பி, கடுக கோஹிணீ இவ்வைந்தும் பஞ்ச திக்தம் எனப்படும்.

3. அபிஷ்யந்தம்; கண்ணில் நீர்வழிந்து சிவந்து வீங்கியுள்ள ஒரு நேத்திர ரோகம்.

4. இந்த ஐந்து யோகங்களிலும் பிரஸ்ருதம் என்கிற அளவில் சரக்குகள் சேர்க்கப்படுவதைக் கருதி இம்முறைகள் "பிரஸ்ருத நிருஹங்கள்" என்றும் கூறப்படும்.

1. இதன் கீழ் கூறப்படும் வஸ்தி முறைகள் குறிப்பிட்ட குணங்களைச் செய்வதாகத் தெரிந்திருப்பதால் "ஸித்த வஸ்திகள்" எனப்படுகின்றன.

2. இங்கே தேன் நான்கு பலமும், தைலம் நான்கு பலமும் சேர்க்கப்படவேண்டும். ஆமணக்கன் வேரின் கஷாயம் எட்டு பலம் கூட்டப்படவேண்டும்.

3. இவ்வஸ்தியில் தேனும் தைலமும் பிரதானவஸ்துக்களாகையால் மதுதைலக வஸ்தி யெனப்படுகிறது.

4, சக்ஷுஷ்யம்-நேத்திரத்திற்கு ஹிதமானது.

வஸ்தி" எனப்படும்; இது குதத்திலும், கால்களிலும், தொடைகளிலும், பீஜத்திலும், மூத்திரப்பையிலும், ஆண் குறியிலும் உண்டாகிற வலியைப் போக்கவல்லது. இந்த யாபநவஸ்தியில் நெய், தேன், கொழுப்பு, தைலம் இவற்றைச் சேர்ப்பதானால் ஒவ்வொரு பிரஸ்ருதம் அளவில் சேர்க்க வேண்டும். 29, 30.

யுக்தரத வஸ்தி. ஆமணக்கன் வேரின் க்வாதம், தேன், இந்துப்பு, வசம்பு, திப்பிலி, மருக்காரை இவற்றைக்கொண்டு செய்யப்படும் வஸ்தி "யுக்த ரத வஸ்தி" என்று வழங்கப்படும். 31.

தோஷஹர வஸ்தி. ஆமணக்கன் வேரின் க்வாதம், தேன், வசம்பு, சதகுப்பி, பெருங்காயம், இந்துப்பு, தேவதாரு, வசம்பு, சிற்றரத்தை இவற்றைக்கொண்டு பிரயோகிக்கப்படும் வஸ்தியானது தோஷங்களை நன்றாகப் பரிஹரிக்குங் குணமுடையதாகையால் "தோஷஹர வஸ்தி' என்று கூறப்படும், 32.

ஸித்த வஸ்தி. பஞ்சமூல கஷாயம், தைலம், திப்பிலி, தேன், இந்துப்பு, அதிமதுரம் இவற்றைக்கொண்டு பிரயோகிக்கப்படும் வஸ்தியானது "ஸித்தவஸ்தி" என்று கூறப்படும்,[1] 33.

த்விபஞ்சமூலாதி நிருஹம். இலகுபஞ்ச மூலம், ப்ருஹத் பஞ்ச மூலம், த்ரிபலை, மருக்காரை, பில்வம், இவற்றைப் பசுவின் மூத்திரத்திற் சேர்த்து கஷாயம் காய்ச்சவும்; இதில் வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, கோரைக்கிழங்கு, மருக்களாம்பழம், யவக்ஷாரம், இந்துப்பு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, தேனும் தைலமும் கூட்டி வஸ்தியாகப் பிரயோகிக்கவும்; இது கப ஸம்பந்தமான வியாதிகள், பாண்டு ரோகம், விஷூசி, சுக்ரம் அடைபடுதல், அபாநவாயு ஸ்தம்பித்தல், மூத்திரப் பையில் பொருமல் முதலிய கோளாறுண்டாதல் இவற்றைப் பரிஹரிப்பதிற் சிறந்த முறை. 34—35½.

இரஸாயன வஸ்தி. கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, சீந்தில், ஆமணக்கு, சிற்றாமுட்டி, சிற்றரத்தை, சாறடை, மஞ்ஜிஷ்டி, சரக்கொன்றை, வெட்டிவேர், கொன்றை, தான்றிக்காய், கடுகரோஹிணீ, இலகுபஞ்ச மூலம் இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; மருக்களாம்பழம் எட்டு பலம்; இவற்றை ஒரு ஆடகம் ஜலத்தில் சேர்த்துப் பக்குவம் செய்து, நாலில் ஒரு பங்காக மிகும்படியாகச் செய்து, அக்கஷாயத்தில் இரண்டு பிரஸ்த்தம் பால் கூட்டி, பால் மிகும்படியாக மீண்டும் காய்ச்சவும்; இதில் கால் பங்கு ஜாங்கல தேசத்து மிருகங்களின் மாம்ஸரஸத்தையும், நெய்யையும், தேனையும், இந்துப்பையும் சேர்த்துக்கொள்ளவும்; பிறகு அதிமதுரம், சதகுப்பி, கருஞ்சிவதை, வெட்பாலரிசி, இரஸாஞ்ஜநம், இவற்றைக் கல்கமாகக் கூட்டிக்கொள்ளவும் இளஞ்சூடான நிலைமையில் இதைக்கொண்டு வஸ்தி பிரயோகிக்க தேஹத்தில் மாம்ஸபுஷ்டி, ஜாடராக்னி பலம், சுக்ரவ்ருத்தி இவை உண்டாகும்; வாதரக்தம், மூர்ச்சை, மேஹம், அர்சஸ், குலமம், மலபந்தம்,மூத்திரபந்தம், விஷம ஜ்வரம், விஸர்ப்பம், அண்டவிருத்தி, வயிற்றுப் பொருமல், சீதபேதி, தொடையிடுக்குவலி, தொடைவலி, இடுப்புவலி, வயிற்றுவலி, பிடரிவலி, காதுவலி, தலைவலி, பெரும்பாடு, உந்மாத மென்னும் பித்து, சோகை, காஸம், அச்மரீ யென்னும் மூத்திர மார்கத்திலுண்டாகும் ஒருவித கல்லடைப்பு, குண்டலமென்கிற மூத்திர ரோகம் இவற்றையும் இது நிவ்ருத்தி செய்யவல்லது; நேத் திரத்திற்கு ஹிதமானது; புத்திர ஸந்தாந மளிக்குந் தன்மையது; ச்ருங்கார

1. 'மது தைலக வஸ்தி' முதற்கொண்டுள்ள ஆறு வஸ்தி முறைகளுடைய குணங்களும் கைகண்டவையாகையால் பொதுவில் ஸித்த வஸ்திகள் என்று கூறப்படினும், முக்கியமாய் இந்த முறையே இதர வைத்திய நூல்களிலும் "ஸித்த வஸ்தி" என வழங்கப்படுகிறது.

ரஸத்தில் மூழ்கிய அரசர்களுக்கு இரஸாயந மாய் உபயோகமாகக்கூடியது. 36—42.

(1) பெரிய மான்களுடையவும் சிறிய மான் குட்டிகளுடையவும் மாம்ஸ ரஸங்களையும், தசமூல கஷா யத்தையும் கூட்டி, அதில் கொட்டைக்கரந்தை - சதகுப்பி - கோரைக் கிழங்கு இவற்றின் கல்கத்தையும் மஹா ஸ்நேஹத் தையும் சேர்த்து, நிரூஹ வஸ்தியாகப் பிரயோ கிக்க, நன்கு வாதஹரமாக வேலை செய்யும்; வ்ருஷ்யமென்கிற குணத்தையும் இது மிகுதி யாகக் காட்டக்கூடியது. (2) மயிலின் சரீரத் திலிருந்து இறகுகள், பித்தம், குடல், பாதங் கள், வயிற்றிலடங்கிய மலம், அலகு இவற் றை விலக்கிவிட்டு மற்ற பாகங்களை கிரஹித் துக்கொள்ளவும்; இத்துடன் இலகுபஞ்ச மூலச் சரக்குகளை ஒவ்வொரு பலம் கூட்டி பாலையும் ஜலத்தையும் கலந்து, அதில் அச் சரக்குகளையும் மயிலின் இறைச்சியையும் சேர்த்து, நெய்யும் தேனும் கூட்டி, பால் மிஞ் சும்படியாகக் காய்ச்சி யெடுத்து, அதில் நிலப் பனங்கிழங்கு, திப்பிலி, அதிமதுரம், சத குப்பி, மருக்களாம்பழம் இவற்றைக் கல்கமா கச் சேர்த்து, சிறிது உப்பையும் கூட்டி வஸ் தியாகப் பிரயோகிக்கவும். இது சரீர வன் மையையும், சுக்ர தாதுவையும் விருத்தி செய் வதில் மிகச் சிறந்தது. (3) தித்திரி முதலிய விஷ்கிர ஜாதியைச் சேர்ந்த ஜந்துக்களையும் ப்ரதுதங்கள் ப்ரஸஹங்கள் என்கிற ஜாதிக ளைச் சேர்ந்த மற்ற எல்லா ஜந்துக்களையும் நீர்வாழும் ஸகல ஜந்துக்களையும் இக்காரியத் திற்கு முன்போலவே வஸ்தி முறைகளில் உபயோகித்துக் கொள்ளலாம்[1]. ஆனால் நீர் வாழும் இனத்தைச் சேர்ந்த மத்ஸியங்களை உபயோகிக்கையில் பாலை அந்த முறைகளில் சேர்க்கக்கூடாது. (4) உடும்பு, கீரி, பூனை, முள்ளம்பன்றி, மூஞ்சூறு இவற்றின் இறைச் சி வகைக்குப் பத்து பலம், இலகுபஞ்ச மூலம் அவ்வளவு; இவற்றைப் பாலில் சேர்த்துக் கா ய்ச்சவும்; அதில் மருக்களாம் பழம், திப்பிலி, உப்பு, இந்துப்பு இவற்றைக் கல்கமாகச் சேர் த்து, அப்பால் சர்க்கரை-தேன்-நெய் இவற்றை யுங் கூட்டி, வஸ்தியாகப் பிரயோகிக்கவும்; இது சிறந்த இரஸாயநமாகும்; பலமான வியாயாமத் தினால் மார்பு நசுங்கியிருக்கையிலும், இந்த்ரிய ங்கள் க்ஷீணித்திருக்கையிலும், தேஹவன்மை யும் ஓஜஸ்ஸும் ஒடுங்கிப் போயிருக்கையிலும் இவ்வஸ்தி மிக்க உபயோகமானது; மேலும் சுக்ரம் கட்டிப்போவதென்ன, மலபந்தமென் ன, மூத்திரம் தடையுறுதலென்ன, ஆமவாத மென்ன, வாதரோகங்களென்ன இவ்வியாதி களிலும், யானை-குதிரை- இரதம் இவற்றில் ஏறிச் சவாரி செய்து குலுங்கியசைந்து அலு த்துப் போய் தேஹம் மிகத் துவண்டு போன வர்களுக்கு மீண்டும் புதிய பலத்தையும் தென் பையும் உண்டுபண்ணக்கூடியது; வாஜீகரண மென்கிற குணத்தில் மிகச் சிறந்தது. (5) காஞ் சொறி, குன்றுமணி, நீர்புள்ளி இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பாலுடன் உண வுண்ணலாம். (6) கைகண்ட பலன் தரக் கூடிய சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செ ய்யப்பட்டவையும் பத்தியம் முதலிய நிர்பந்த ங்களுக்கு இடந்தராத குணமுடையவைகளு மான ஸ்நேஹங்களைக் கொண்டு அநுவாஸந வஸ்திகளையும் பிறகு பிரயோகிக்க வேண்டும். 43—52½

இனி ஸ்நேஹ வஸ்திகள் என்கிற அநுவா ஸந வஸ்தி முறைகள் கூறப் படுகின்றன; அவை தோஷ ஹரங்களாயிருப்பதோடு, ப ரிஹாரக்ரமங்களோடு கூடியவையாகவும்

(மார்ஜினில்: வ்ருஷ்ய குணத் திற் சிறந்த வஸ்தி முறைகள். / தோஷஹர ஸ் நேஹ வஸ்திகள்.)

1. விஷ்கிரம், ப்ரதுதம், ப்ரஸஹம் என்கிற இவற் றின் விவரத்தை முதற்புத்தகத்தில் ஸூத்திர ஸ்த் தாநத்திற் காண்க.

(என்றால் பத்திய முறைகளோடு உபயோகிக் கவேண்டியவைகளாய்) இருக்கும். 53.

தசமூலாதி அநுவாஸநம்.

தசமூலம், சிற்றுமுட்டி, சிற்றரத்தை, அமுக்கிருங்கிழங்கு, சாறணை, சீந்தில், ஆமணக்கு, சுக்குநாறிப்புல், கண்டுபாரங்கி, ஆடாதோடை, காவட்டம்புல், தண்ணீர் விட்டாங்கிழங்கு, மருதோன்றி, தக்காளி இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; வாற்கோதுமை, உளுந்து, ஆழிவிதை, இலந்தை, கொள் இவை வகைக்கு ஒவ்வொரு பிரஸ்ருதம்; இவற்றை நாலு திரோணம் ஜலத்தில் சேர்த்து ஒரு திரோணம் கஷாயமாகச் சுண்டும்படியாகக் காய்ச்சி, அதில் ஒரு ஆடகம் தைலத்தைப் பக்குவம் செய்யவும்; இதில் ஜீவநீய கணச் சரக்குகளை ஒவ்வொரு பலம் அளவில் கல்கமாகக் கூட்டிக் கொள்ளவேண்டும். இதை அநுவாஸநவஸ்தியாகப் பிரயோகிக்க எல்லா வாதரோகங்களும் தீரும். 53—56½.

ஆநூபவஸாதி அநுவாஸநம்.

ஆநூபதேசங்களில் வஸிக்கும் மிருகங்களுடைய கொழுப்பை ஜீவநீயகணச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்து அநுவாஸநமாகப் பிரயோகிக்க, முன் தைலத்திற்குக் கூறிய குணங்களையுண்டாகும். 57.

சதாஹ்வாதி அநுவாஸநம்.

சதகுப்பியையும், புங்கம் பட்டையையும், காடியையும் கூட்டி, அதில் தைலம் பக்குவம் செய்து அநுவாஸநவஸ்தியாகப் பிரயோகிக்க வாதரோகங்களைப் போக்கும். 57½.

ஸைந்தவ க்ருதாநுவாஸநம்.

நெருப்பைப் போல் சென்னிறமாயுள்ள இந்துப்பைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை அநுவாஸநமாகப் பிரயோகித்தாலும் வாதஹரமாக வேலை செய்யும். 58.

ஜீவந்த்யாதி அநுவாஸநம்.

ஜீவந்தீ, மருக்காரை, மேதா, சிராவணீ, அதிமதுரம், சிற்றுமுட்டி, சதகுப்பி, ருஷபகம், திப்பிலி, தக்காளி, தண்ணீர்விட்டாங்கிழங்கு, காஞ்சொறி, க்ஷீரகாகோலீ, கர்க்காடகச்ருங்கி, கச்சோரம், வசம்பு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, தைலமும் நெய்யும் கூட்டி, அவற்றிற்கு நாலு பங்கு பாலில் இத்தைல-க்ருதங்களைப் பக்குவம் செய்யவும். இதை அநுவாஸநமாகப்பிரயோகிக்க ப்ருஹ்மணம், வாத-பித்தஹரம், பலவர்த்தநம், சுக்ரவர்த்தநம், அக்னிவர்த்தநம், ரஜோதோஷஹரம், சுக்ரதோஷஹரம், புத்ரீயம்[1] என்கிற குணங்களை யுண்டுபண்ணும். 59—61.

ஸைந்தவாதி அநுவாஸநம்.

இந்துப்பு, மருக்காரை, கோஷ்டம், சதகுப்பி, நீர்வஞ்சி, வசம்பு, வெட்டிவேர், அதிமதுரம், கண்டுபாரங்கி, தேவதாரு, சிறுதேக்கு, சுக்கு, தாமரைக் கிழங்கு, மேதா, சவியம், சித்திரமூலம், கச்சோரம், வாய்விடங்கம், அதிவிடயம், கருஞ்சிவதை, அரேணுகம், அவிரி, பெருமல்லிகை, பில்வம், ஓமம், திப்பிலி, நேபாளம், சிற்றரத்தை இவற்றைச் சம அளவாக எடுத்து, இவற்றைக் கொண்டு ஆமணக் கெண்ணெயையாவது நல்லெண்ணெயையாவது பக்குவம் செய்து, அதனால் அநுவாஸநம் செய்யவும். இது கபரோகங்களைப் போக்கவல்லது; மேலும் அண்டவிருத்தி, உதாவர்த்தம், குல்மம், அர்சஸ், ப்லீஹம், மேஹரோகம், ஊருஸ்தம்பம் வயிற்றுப்பொருமல், அச்மரியென்கிற மூத்திரத்திற் கல்லடைப்பு இவற்றை ஜடிதியிற் பரிஹரிக்கும். 62—65.

1. புத்ரீயம்—புத்திரஜநகம்.

(1) பஞ்சமூல கஷாயத்தினுலாவது, [1] பில்வாதி கஷாயத்தினுலாவது [2] கபதோஷத்தைப் போக்குவதற்கு ஏற்ற தைலத்தைப் பக்குவம் செய்யவும்; (3) அல்லது கபஹரமான வேறு சரக்குகளாலும், மதநபலங்களாலும், எட்டு மடங்கு காடிகளாலும் பக்குவம் செய்யப்பட்ட தைலத்தையும் கபதோஷத்தில் அநுவாஸநமாகப் பிரயோகிக்கலாம். 66—66½.

கபஹரமான சில அநுவாஸநங்கள்.

(1) மிருது குணமுள்ள வஸ்துக்களைக்கொண்டு பிரயோகிக்கப்பட்ட வஸ்தியினுல் குடல் மந்தித்து ஸ்தம்பநமடைந்து போமாஞல், தீக்ஷ்ணகுணமுள்ள வஸ்துக்களால் மற்றொரு வஸ்தியைப் பிரயோகிக்கவும். (2) தீக்ஷ்ண குணமுள்ள வஸ்துக்களால்-வஸ்தி பிரயோகிக்கப்பட்டு, குடல் அல்லது குதம் வெளியில் தள்ளப்படுமானல், ஸ்நிக்த்தமாகவும், மதுரரஸமாகவும், குளிர்ந்ததாகவும், ஆகவே மிருதுவாகவுமுள்ள வஸ்துக்களைக் கொண்டு வேறொரு வஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும். 67½.

தீக்ஷ்ண-மிருது வஸ்திகளை மாற்றிமாற்றிப் பிரயோகிக்கும் நிலைமைகள்.

(1) பசுவின் மூத்திரம், பெருஞ் ஜீரகம், சித்திரமூலம், இந்துப்பு, யவக்ஷாரம், கடுகு இவற்றைக் கொண்டு வஸ்திக்கு தீக்ஷ்ணத்தன்மையையும், (2) நெய், பால் இவை முதலியவற்றால் அதற்கு மிருதுத் தன்மையையும் உண்டாக்கி, அந்தந்த காலத்தில் யுக்தப்படி அந்தந்த முறையைப் பிரயோகிக்க வேண்டும். 68.

தீக்ஷ்ண-மிருது வஸ்திகளுக்கேற்ற வஸ்துக்கள்.

தேஹபலம், காலம், ரோகம், தோஷம், பிரக்ருதி இவற்றின் நிலைமைகளைப் பருத்தறிந்து, அவற்றிற்கு ஏற்ற ஔஷதவர்க்கங்களைக் கொண்டு வஸ்தி பிரயோகிக்கப் படுமாஞல், அந்தந்த ஔஷதங்கள் எந்தெந்த வியாதிகளைப் பரிஹரிக்கு மியல்புடையனவோ அவ் வியாதிகள் நிவ்ருத்தி செய்யப்படும். 69.

பல-காலாதிகளுக்கேற்ற ஔஷதங்களால் வஸ்திகளைப் பிரயோகித்தல்.

உஷ்ணத்தினுல் வருந்துபவருக்குச் சீதளமான வஸ்திகளையும், கடுங் குளிர்ச்சியால் வருந்துபவருக்கு இளஞ்சூடான வஸ்திகளையும் பகுத்தறிந்து அந்தந்த நிலைமைகளுக்கேற்ற ஔஷதங்களைக் கூட்டி பிரயோகிக்க வேண்டும். 70.

உஷ்ண-சீதளங்களால் வருந்துபவருக்கு ஏற்ற வஸ்திகள்.

(1) தோஷங்களை வெளிப்படுத்தி சோதந சிகித்ஸை செய்வதற்கேற்ற வியாதிகளில் ப்ருஹ்மண குணமுள்ள வஸ்திகளைப் பிரயோகிக்கக் கூடாது; மேஹோ ரோகிகளென்கிற கொழுப்பு அதிகரித்தவர்களும், குஷ்டரோகங்களால் பிடிக்கப்படுபவர்களும் சோதந சிகித்ஸைக்கு யோக்கியமானவர். (2) இளைத்துப் போகுபவர், க்ஷதகாஸமுள்ளவர், துர்பலர், மூர்ச்சித் திருப்பவர், க்ஷீணிக்கும் தேஹமுடையவர், சுஷ்கிப்பவர், ஏற்கனவே சோதந சிகித்ஸை செய்து கொண்டவர், தோஷங்கள் சேர்ந்திருப்பதாலேயே ஆயுளுடனிருப்பவர் இவர்களுக்கு சோதந வஸ்திகளைப் பிரயோகிக்கக் கூடாது. 71, 72.

ப்ருஹ்மண சோதந வஸ்திகளுக்குத் தகுந்தவர்களும் தகாதவர்களும்.

1 பஞ்சமூலம் என்பதால் லகு பஞ்சமூலம் கிரஹிக்கப்படுகிறது.

2. பில்வாதி என்பதால் பில்வத்தை முதலாவதாக வுடைய மஹாபஞ்சமூலம் குறிக்கப்படுகிறது.

# ஐந்தாவது அத்தியாயம்.

இனி வஸ்தி வியாபத் ஸித்தி யென்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

*வஸ்தியின் அயோகமும் அதனால் ஏற்படும் துர்குணங்களும்.*

ஸ்நேஹ- ஸ்வேதங்களால் ஸம்ஸ்காரம் செய்யப்படாத தேஹமுடையவனுக்கும், குருவான கோஷ்டமுள்ளவனுக்கும் சீதமாகவும், ஸ்நேஹம்-இலவணம்-திரவ்யம் அளவு இவைகளில் அற்பமாகவுமுள்ள அல்லது கநமாயுள்ள வஸ்தியைப் பிரயோகிக்க, அவ்வஸ்தியானது குணத்தில் அல்லது வீர்யத்தில் துர்பலமாயிருப்பதால் தோஷத்தைக் கிளப்பிவிட்டு அதை வெளிப்படுத்த முடியாததாய் அயோகம்[1] என்கிற பரிணாம விகாரத்தை யுண்டுபண்ணும்; அவ்வயோகத்தினால் அபாநவாதம், மூத்திரம், மலம் இவை கட்டப்படும்; நாபியிலும், வஸ்தியிலும் நோவும் அழற்சியும் உண்டாகும்; இருதயத்தில் ஏதோ பூசப்பட்டது போன்ற உணர்ச்சியும், குதத்தில் வீக்கமும் உண்டாகும்; மேலும் தினவு, கட்டிகள், கறுநிறம், வேதனை, அக்னிமாந்தியம் இக்கோளாறுகளும் அவ்வயோகத்தினால் ஸம்பவிக்கும். 1-3

*வஸ்தியின் அயோகத்தினாலான துர்குணங்களுக்குப் பரிஹார முறைகள்.*

(1) முன்னால் மத்திம தோஷமான அதிஸாரத்தில் முதலிற் கூறியுள்ள இரண்டு கஷாயங்களுள் ஏதேனு மொன்றை[2] இவ்வயோகக் கோளாறில் சூடாகப்பருகுவது நலம். (2) பலவர்த்திகளும்[3], (3) அங்ஙனமே ஸ்வேதசிகித்ஸைகளும், (4) காலமறிந்து விரேசநமும் செய்விக்கலாம். (5) பில்வவேர், த்ரிவ்ருத் என்னும் சிவதை, தேவதாரு, வாற்கோதுமை, இலந்தங் கொட்டை, கொள்ளு இவை சேர்ந்த வஸ்தியும் (6) ஸுரை யென்கிற மது முதலியது சேர்ந்த வஸ்தியும் முற்கூறிய கல்கங்களுடன்[4] கூடியதாய் பிரயோகிக்கப்படுமானால், அடைபட்டுள்ள தோஷங்களை வெளிப்படுத்திவிடும். 4—5½.

*மிகுதியான தோஷாதிகளுள்ளவனுக்குச் சொற்ப வீர்யமுள்ள வஸ்தியால் உண்டாகும் கெடுதிகள்.*

தோஷம் மிகுதியாகச் சேர்ந்துள்ளவனென்ன, ரூக்ஷசரீர முடையவனென்ன, க்ரூரகோஷ்டமுள்ளவனென்ன இவர்களுக்குச் சொற்ப வீர்யமுடைய வஸ்தி பிரயோகிக்கப் படுமானால், அது தோஷங்களால் கவரப்பட்டு குதமார்கத்தை அடைத்து அபாந வாயுவையும் தடுத்துப் போடும்; தவறுதலான வழியில் செல்ல முயன்ற அவ்வாயுவானது வயிற்றுப் பொருமலையும், மர்ம ஸ்த்தாநங்களில் வலியையும், குதம் குடல் இவற்றில் அழற்சியையும், பீஜம் துடையிடுக்கு இவற்றில் வேதனையையும் உண்டுபண்ணும்; இருதயத்தை அடைக்க முயலும்; இங்கு மங்குமாய் வலியை யுண்டுபண்ணிக் கொண்டு ஓடித்திரியும். 6—8.

*மிகுதியான தோஷாதிகளில் சொற்ப வஸ்தியைப் பிரயோகிப்பதாலான தீங்குகளுக்குப் பரிஹாரம்.*

அத்தகைய கோளாறில் நன்கு அப்யஞ்ஜநம் செய்து வைத்து, ஸ்வேத சிகித்ஸையும் செய்து, (1) பலவர்த்தியைப் பிரயோகிக்கவும். (2) பெருஞ்ஜீரகம், கடுகு, பசுமூத்திரம் இவற்றைக் கூட்டிய பில்வாதி கஷாய நிரூஹமாவது பிரயோகிக்கலாம். (3) ஸரள தேவதாரு, தேவதாரு இவற்றைக் கூட்டி பக்குவம் செய்த தைலத்தைக் கொண்டு அநுவாஸந வஸ்தியையாவது பிரயோகிக்கலாம். 9, 9½.

*விஷம நிரூஹ வஸ்திகளும் அவற்றா லுண்டாகும் கெடுதிகளும்.*

வேகங்களை அடக்குபவனுக்கு வஸ்தியைப் பிரயோகிப்பதும்; அதிக அளவாக அதைப் பிரயோகிப்பதும், ஸ்நிக்தத் தன்மை-இலவணரஸம்-சூடு இவ்வித வஸ்தியைப் பிரயோகிப்பதும், அற்ப அளவான வஸ்தியும், சொற்ப

1. அயோகம்—முதற்புத்தகம் 146-ம் பக்கம் பார்க்க.
2. சிகித்ஸாஸ்த்தாநத்தில் 99 ம் பக்கம் பார்க்க.
3. பலவர்த்தி முதற்புத்தகம் 76-ம் பக்கம் பார்க்க.
4. இதற்கு முன் 220-ம் பக்கம் ஸர்வரோகஹர வஸ்தியில் கூறியுள்ள கல்கமுறை.

ஔஷதம் கலந்த வஸ்தியும், அல்லது மிருது வான வஸ்தியும் உட்புறத்தில் வாயுவினல் மேலாகச் சிதறடிக்கப்பட்டு, வாய்-நாசி இவற்றின் வழியாக வெளிப்படுகிறது; அப்பொழுது மூர்ச்சை, இருதயத்தின் இயற்கைக்கு மாறுன துடிப்பு, நாவறட்சி, அழற்சி, இவை முதலியவற்றையும் அக்கோளாறு உண்டாக்குகின்றது. 10—11½.

விஷம நிரூஹ வஸ்திகளா லுண்டான கெடுதிகளுக்குப் பரிஹார முறைகள்.

(1) முற்கூறிய விதமான இப்பிணியாளிக்கு மூர்ச்சை ரூபமான விகாரத்தைக் கண்டதும் குளிர்ந்த ஜலமெடுத்து அவனது முகத்தில் தெளிக்கவும். (2) சோர்வு தணியும் வரையில் ஆலவட்ட மெடுத்து வீசவும். (3) அவனைப் பிராணுயாமமும் செய்யச் சொல்லவும். (4) கைகளை உஷ்ணமாகச் செய்து கொண்டு, அவற்ருல் மேலிருந்து கீழ் நோக்கியவாறு முதுகு-பாரிசங்கள்-வயிறு இவற்றை உருவிவிடவும். (5) தலை மயிர்களைப் பிடித்துத் தூக்கி அப்பிணியாளியை உதரச் செய்யலாம். (6) புலி,மற்றும் கோரப் பற்களையுடைய விலங்குகள், ஆயுதங்கள், கொள்ளி இவைகளைக் காட்டி அச்சமுறச் செய்யலாம்; இவ்வுபாயங்களால் உள்ளிருந்து வஸ்தியானது கீழ்நோக்கி வெளிப்படும். (7) உயிருக்கு அபாயம் நேரிடாதபடி கைகளலாவது வஸ்திரத்தினுலாவது தொண்டையை ஒருவாறு அழுத்தலாம்; இவ்விதம் செய்வதால் பிராணவாயுவும் உதாந வாயுவும் தகையப்பட்டுப் போக, அதனல் அபாந வாயுவானது மிகவும் தட்டுத் தடங்கலில்லாத விசாலமான அவகாசத்தைப் பெற்று, உள்ளடங்கிய அவ்வஸ்தி யௌஷதத்தை ஜடிதியில் இழுத்து வெளிப்படுத்துகின்றது. (8) கோஷ்டம், கமுகு இவற்றின் கல்கத்தை அம்லவஸ்துக்களுடன் கூட்டியும் பருகச் செய்யலாம்; உஷ்ணத்தன்மையினுலும், தீக்ஷ்ணத் தன்மையினுலும், மலத்தை இளக்கி நெகிழச் செய்யுங் குணத்தினுலும் பிணியாளியின் குடலிலுள்ள வஸ்தியௌஷதத்தை அநுலோமநயாகச் செய்து வெளிப்படுத்தும். (9) சிவதை, கடுக்காய் இவற்றின் கல்கத்தைப் பசுமூத்திரத்தில் கலக்கி உட்கொள்ளக் கொடுக்க அதுவும் மலாதிகளை கீழ் நோக்கப் பண்ணி அநுலோமநம் செய்யும். (10) மலாதிகள் பக்வாசயத்தில் வந்து தங்கியிருக்கையில், அவ்விடத்தில் ஸ்வேதம் செய்வித்து, தசமூலகஷாயத்தினுல் நிரூஹவஸ்தியைப் பிரயோகிக்கலாம்; யவதானியம், இலந்தை, கொள் இவற்றைப் பசுமூத்திரத்திற் பக்குவம் செய்து, அதைக் கொண்டும் வஸ்தியைப் பிரயோகிக்கலாம்; அல்லது சீந்தில், மூங்கில் தளிர், புங்கம்பட்டை, புங்கயிலை, கச்சோரம், தேவதாரு, செம்மரம் இவற்றைப் பசுமூத்திரத்திற் கஷாயமாகக் காய்ச்சி, தைலம், வெல்லம், இந்துப்பு இவற்றைக் கூட்டி, விரேசந குணமுள்ள ஔஷதங்களைக் கல்கமாகவும் சேர்த்து வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். (11) தோஷம் மார்புக்கு அருகிலிருப்பதாகத் தெரிந்தால் பில்வம் முதலிய பஞ்சமூல கஷாயத்தினுல் வஸ்தி செய்யலாம். (12) அதுவே சிரஸ்ஸை ஆச்ரயித்திருந்தால் நஸ்யமும், தூமபாநமும் செய்வதோடு, கடுகை அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் தடவி அதனுல் சிரஸ்ஸை மூடலாம். 12—20½.

நிரூஹ வஸ்தியின் அதியோகமும் அதனுலுண்டாகும் தீங்கும் பரிஹாரமும்.

அதிக உஷ்ணமாகவும், அதிக தீக்ஷ்ணமாகவும், அதிக அம்லமாகவும், அதிக கனமாகவும் பிரயோகிக்கப்படுகிற வஸ்தியும், மிகவும் பலமாக ஸ்வேத சிகித்ஸை செய்து கொண்டவன்-அற்பதோஷமுடையவன்-மிருது கோஷ்டமுள்ளவன் இவர்களுக்கு அடிக்கடியும் பிரயோகிக்கப்படும் வஸ்தியும் அதியோகத்தை யடைந்து, வயிற்றில் வலியை யுண்டுபண்ணும்; விரேசநத்தை அமிதமாகப் பிரயோகிப்பதால் ஏற்படக்கூடிய குறிகள் இதற்குண்டாகும்; விரேசநாதி யோகத்திற்குச் செய்யப்படும் பரிஹார முறைகளே இதற்கும் ஏற்றவையாம். 21—22½.

க்ஷாரத்தன்மை, அம்லம், தீக்ஷ்ணம், உஷ்ணம், இலவணம் இத்தகைய குணமுள்ள வஸ்துக்களால் வஸ்தி பிரயோகிக்கப் படுமாகுலும், பித்ததோஷம் மிகவும் அதிகரித்தவனுக்கு வஸ்தி செய்யப்படுமாகுலும், அவ்வஸ்தியானது ஆஸநத்வாரத்தில் எரித்தலை யுண்டுபண்ணிக் கொண்டும், பீறிக்கொண்டும், அவ்வவயவத்தை அறுத்துத் தள்ளுவதுபோன்ற உணர்ச்சியை யுண்டுபண்ணிக் கொண்டும் அப்பிணியாளியின் குதத்திலிருந்து துர்நீர்க்கசிவையும் உண்டுபண்ணும்; அப்பிணியாளிக்கு அழுகின்றுபோன இரத்தமும், பலவித நிறமுள்ள பித்தமும் அடிக்கடியும் மிக்க விசையோடும் வெளியாகும். அவன் அடிக்கொருமுறை மூர்ச்சை யடைவான். அவ்விதமான வஸ்தி வியாபத்தில் (1) இரத்த-பித்த ஹரமாகவும், அதிஸாரத்தைப் பரிஹரிக்கக் கூடியவையுமான சிகித்ஸைகளைச் செய்வது நலம். (2) அழற்சி முதலியவற்றில் சிவதைவேரின் கல்கத்தை திராக்ஷையின் இரஸத்தோடு உட்கொள்ளலாம்? அது பித்தத்தையும், மலத்தையும், வாயுவையும் வெளிப்படுத்தி, அழற்சி முதலியவற்றையும் தணியச் செய்யும். (3) நன்கு சுத்தியான பிறகு குளிர்ந்ததும், சர்க்கரை கலந்ததுமான யவாகூவைப் பருகலாம். (4) மிதமிஞ்சி விரேசநமாய், மலமெல்லாம் வெளியாய் விட்டவனுக்கு சிறு கடலையை உளுத்தங்கஞ்சியோடு உணவாகக் கொடுத்து, தயிரையாவது ஸுரையென்னும் மதுவையாவது பானமாக அருந்துவதற்கும் கொடுக்கலாம். 23—27½.

க்ஷாராதிகளால் அழற்சி முதலியவை யுண்டுபண்ணும் விருஹமும் அதற்குப் பரிஹாரமும்.

இங்ஙனம் நிருஹவஸ்தி முறைகளால் ஸம்பவிக்கக்கூடிய ஆபத்துக்களுக்கு அவசியமான பரிஹார கிரமங்கள் கூறப்பட்டன; இனி ஸ்நேஹவஸ்தி யென்கிற அநுவாஸந வஸ்திகள் பிரயோகிக்கப் படுகையில் நேரிடக்கூடிய ஆபத்துக்களுக்கு யோக்கியமான பரிஹார முறைகள் மொழியப்படும். 28.

அநுவாஸந வியாபத் விதிகள்.

வாததோஷம் அதிகமா யிருக்கையில் சீதளமாகவாவது; சொற்ப அளவாகவாவது அநுவாஸந வஸ்தியைப் பிரயோகித்தாலும், பித்தம் அதிகரித்திருக்கையில் உஷ்ணமான வஸ்தியைப் பிரயோகித்தாலும், கபம் மேலோங்கியிருக்கையில் மிருதுவான வஸ்தியைப் பிரயோகித்தாலும் இவையெல்லாம் அயோகமாக ஆய்விடும். அதிகமாக போஜனம் செய்திருக்கும்போது குருவான வஸ்தியைப் பிரயோகிப்பதும், அதிக மலம் சேர்ந்திருக்கையில் விசேஷ வீர்யமில்லாத வஸ்தியைப் பிரயோகிப்பதும் அவ்விதமேயாம். இவ்வயோக வஸ்தியானது வாதாதி தோஷங்களால் ஆவரணம் செய்யப்பட்டு, மிக்க பலவந்தமாக முயற்சி செய்தும் வெளிவராமல் அடைபட்டுப் போகும். ஸ்தம்பித்தல், துடைமெலிவு, வயிற்றுப் பொருமல், ஜ்வரம், வயிற்று நோய், உடல் வேதனை, பக்கச்சூலை, பார்ச்வங்களில் இசிவு இவ்வித லக்ஷணங்கள் உண்டாவதைக் கண்டு, வாயுவினால் ஸ்நேஹம் குடலில் ஆவரணம் செய்யப்பட்டதாய் அறியலாம். காஞ்ஜிகமென்கிற காடி, ஸுரை யென்கிற மது, இலந்தை, கொள், வாற்கோதுமை இவற்றையும் பஞ்ச மூலங்களையும் சேர்த்து பச்குவம் செய்த ராஸ்நாதைல மென்ன, ஸரள தேவதாருவின் தைலமென்ன இவற்றில் பசுமூத்திரமும் கூட்டி நிருஹவஸ்தியாகப் பிரயோகித்து, குடலிற் சேர்ந்துள்ள ஸ்நேஹாதிகளை நன்கு வெளிப்படுத்தி விடவேண்டும். மாலை நேரத்தில் போஜநம் செய்வித்து, அவ்விரண்டு தைலங்களையே அநுவாஸநமாகவும் பிரயோகிக்கலாம். 29—32½.

அநுவாஸநம் வாதாவ்ருதமானால் செய்யும் பரிஹாரமுறை.

நாவறட்சி, உடலழற்சி, உடலில் சென்னிறமுண்டாதல், மூர்ச்சை, அல்லது தேஹம் கறுநிறமாதல், தமகச்வாஸம், ஜ்வரம் இக்குறிகள் கண்டால், அப்பொழுது அநுவாஸநவஸ்தி பித்

அநுவாஸநம் பித்தாவ்ருதமானால் செய்யும் பரிஹாரமுறை.

த்தினுல் ஆவரணம் செய்யப்பட்டதாய் அறிக. அப்பொழுது மதுரமாகவும் கைப்பாகவுமுள்ள சரக்குகளைக் கொண்டு நிரூஹம் செய்து, அடைபட்டுள்ள அவ்வநுவாஸநத்தை வெளிப்படுத்தி விடலாம். 33½.

அநுவாஸநம் கபாவ்ருதமானுல் செய்யும் பரிஹார முறை.

சோம்பல், தேஹத்தில் சீதளம் அதிகரித்தல், ஜ்வரம், ஆலஸ்யம், வாயில் நீரூறுதல், அரோசகம், தேஹம் கனத்துப்போதல், விசேஷமாக மூர்ச்சை, சோர்வு இக்குறிகளைக் கண்டு அநுவாஸந ஸ்நேஹம் குடலில் கபத்தினுல ஆவரணம் செய்யப்பட்டிருப்பதாய் அறியலாம். துவர்ப்பும், கைப்பும், காரப்புமான சரக்குகள் சேர்ந்துள்ளவையும், ஸுரை-பசு மூத்திரம் இவை கூடியவையும், மருக்காரை-தைலம்-அம்லவர்க்கம் இவை கலந்தவையுமான கஷாயங்களை நிரூஹவஸ்தியாகப் பிரயோகித்து அடைபட்டுள்ள ஸ்நேஹத்தை நன்கு வெளிப்படுத்தி விடலாம். 34—35½.

அநுவாஸநம் ஆமாவ்ருதமானுல் செய்யும் பரிஹாரமுறை.

வாந்தி, மூர்ச்சை, அரோசகம், சோர்வு, வயிற்றுவலி, அநித்திரை, உடல்வலி, அழற்சி, மற்றும் ஆமதோஷக் குறிகள் இவற்றைக் கொண்டு அதிபோஜந தோஷத்தினுல் ஆவரணம் செய்யப்பட்ட கோளாருகக் கருத வேண்டும். அதில் கடுரஸமும் இலவணரஸமுமுள்ள க்வாதங்களாலும், அவ்வித சூர்ணங்களாலும் பாசநம் செய்விக்க வேண்டும்; மிருதுவான விரேசநமும், ஆமதோஷ பரிஹாரத்திற்கு ஏற்ற மற்ற சிகித்ஸைகளெல்லாமும் இதற்கு அநுகூலமானவையாம். 36—37½.

அநுவாஸநம் மலாவ்ருதமானுல் செய்யும் பரிஹார முறை.

மலபந்தம், மூத்திரம் அடைபடுதல் அபாநவாயு வயிற்றில் தடைபுறுதல், வயிற்று வலி, குருத்வம், வயிற்றுப் பொருமல், இருதயவேலை தடையுறுதல் இக்குறிகளைக் கண்டு ஸ்நேஹம் மலத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டிருப்பதாய் அறிந்து, ஸ்நேஹசிகித்ஸைகளாலும், ஸ்வேத சிகித்ஸைகளாலும், பல வர்த்திகளாலும், கருஞ்சிவதை-பில்வம் முதலியவற்றுல் பக்குவம் செய்த கஷாய வஸ்திகளாலும், அநுவாஸந வஸ்திகளாலும், உதாவர்த்த ஹரமான மற்ற சிகித்ஸைகளாலும் முறைப்படி அம்மலங்களை வெளிப்படுத்திவிட வேண்டும். 38—39½.

அநுவாஸநம் வெளிவராமல் ஊர்த்வாங்கங்களை வியாபிப்பதும் அதற்குப் பரிஹாரங்களும்.

போஜனம் செய்யாமலிருக்கையிலும், ஆஸநத்வாரம் அழுன்று வீங்கியிருக்கையிலும் ஸ்நேஹ வஸ்தி பிரயோகிக்கப்படுமானுல், அல்லது பேயா என்கிற கஞ்சியை மாத்திரமாவது பருகியவனுக்கு அவ்வஸ்தி பிரயோகிக்கப்படுமானுல் ஸ்நேஹமானது கீழ்நோக்கி வெளிக்கிளம்பாமல் மேல்நோக்கி விசையாக ஓடிப் பரவும்; பிறகு கழுத்துக்கு மேற்பட்ட த்வாரங்களின் மூலமாகவும் வெளிவரும். பசுவின் மூத்திரம், கருஞ்சிவதை, கருஞ்சிவப்பான சிவதை, வாற்கோதுமை, இலந்தை, கொள் இவற்றின் கஷாயத்தையும், இக்கஷாயத்தில் பக்குவம் செய்த தைலத்தையும் முறையே நிரூஹமாகவும், அநுவாஸநமாகவும் முற்கூறிய வஸ்தி வியாபத்தில் பிரயோகிக்கலாம். ஸ்நேஹம் தொண்டையிலிருந்து வெளிவருமானுல் அவ்வேகத்தை அடக்குவது, கழுத்தைச் சிறிது அழுத்துவது, விரேசநம் செய்விப்பது இவ்வுபாயங்களாலும், வாந்தியைத் தணிப்பதற்கான சிகித்ஸைகளாலும் அவ்விதம் ஸ்நேஹம் தொண்டையிலிருந்து வெளிவருவதைத் தடுக்கலாம். 40-43.

அபக்வ ஸ்நேஹவஸ்தியால் உண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும்.

பக்குவமாகாத ஸ்நேஹத்தை வஸ்தியாகப் பிரயோகிக்கக் கூடாது; ஏனெனில் அது குதத்தில் பிசுபிசுப்புடன் லேபநம் செய்யப்பட்டதாய் வலியோடு கூட மூர்ச்சையையும்,

தினவையும், வீக்கத்தையும் உண்டுபண்ணும். இதில் தீக்ஷ்ணமான வஸ்தியும், எருக்கிலைச் சாற்றில் சேர்த்துக் காய்ச்சிய தைலப் பிரயோகமும் ஏற்ற சிகித்ஸைகளாம். 44, 44½.

வஸ்தி யந்திரத்தைப் பலவாறு அழுத்துவதா லுண்டாகும் கெடுதிகளுக்குப் பரிஹாரங்கள்.

(1) வஸ்தி யந்திரத்தின் வாய் ஊதப்படாமல் கட்டப்பட்டாலும், ஸ்யந்திரத்தில் ஔஷதம் சிறிதும் மிச்சப்படாமல் பிரயோகிக்கப்பட்டாலும் வாயுவானது குடலிற் பிரவேசித்து வலியையும் குடைத்தலையும் உண்டுபண்ணும். இதில் அப்யங்கமும், குதத்தில் ஸ்வேதமும் செய்வித்து,வாதஹரமான உணவுகளையும் கொடுக்கலாம். (2) வெகு ஜடிதியில் வஸ்தியைப் பிரயோகித்து உடனே அதை வெளிப்படுத்தி விட்டாலும், திடீரென்று வஸ்திப் பிரயோகம் செய்தாலும் இடுப்பு, குதம், கால்கள், தொடைகள், வஸ்தி இவற்றில் ஸ்தம்பநமும், வலியும், பிளக்கப்படுவது போன்ற வேதனையும் உண்டாகும். இதில் வாதஹரமான போஜனமும், வஸ்தி சிகித்ஸைகளோடு ஸ்வேதமும் அப்யங்கமும் செய்யலாம். (3) வஸ்தியைப் பிரயோகித்துக் கொண்டிருக்கையிலேயே இடையில் விடப்பட்டுப் போனால், அப்பொழுது அதிலிருந்து விசையுடன் கிளம்பும் வாயுவானது குதத்தைத் தாக்கி, மார்பிலும் சிரஸிலும் வலியை யுண்டு பண்ணுவதோடு, தொடைகளையும் சுருங்கச் செய்யும். அதில் பில்வாதி பஞ்சமூலங்களையும், கருஞ்சிவதை-மருக்களாம்பழம்-பசுமூத்திரம் இவற்றையும் கூட்டி வஸ்தி பிரயோகிக்கலாம். (4) வஸ்தியை வெகு அதிகமாக அழுத்திப் பிரயோகித்தால், அது குடலிலேயே தங்கி விடலாம், அல்லது தொண்டையிலாவது எதிர்த்து வரலாம். இதில் வஸ்தியும், விரேசநமும், தொண்டையை அழுத்துவது முதலிய சிகித்ஸையும் அநுகூலமானவையாம். 45-50½.

வமநாதிசளால் சுத்தி யடைந்தவனைப் பரிபாலித்தல்.

வமநாதி சோதந சிகித்ஸைகளால் சுத்தியடைந்த மனிதனுக்கு தேஹமும், சரீர பலமும், ஜாடராக்னியும் க்ஷீணித்திருந்தால் அவனை, வைத்தியனானவன், முதிராத முட்டையையும் தைலம் நிரம்பிய பாத்திரத்தையும் காப்பாற்றுவது போல் எவ்வித அபாயம் அல்லது சீர்கேடும் நேரிடாதபடி பெரு முயற்சியெடுத்துக்கொண்டு வெகு ஜாக்கிரதையாய் பாதுகாக்க வேண்டும். 51, 51½.

வஸ்தியாதிகளால்சுத்தியானவனை இயற்கைக்குக் கொண்டு வருதல்.

முற்கூறியவாறு சுத்தி யடைந்தவனுக்கு முதலில் மதுரமாகவும் ஹ்ருத்யமாகவுமுள்ள உணவுகளைக் கொடுத்து, பிறகு அம்லரஸமும் இலவணரஸமும் பொருந்திய வஸ்துக்களையுபயோகிக்கலாம்; பிறகு மீண்டும் மதுரரஸமும் திக்தரஸமுமான உணவுகளைக் கொடுத்து, அப்பால் துவர்ப்பும் கார்ப்புமான வஸ்துக்களைக் கொடுக்கலாம். ஒன்றுக்கொன்று எதிரிடையான இரஸங்களையும், ஸ்நிக்த்த-ரூக்ஷங்களையும் மாற்றி மாற்றி யுபயோகித்து, கிரமமாக அம்மனிதனுடைய தேஹத்திற்கு இயற்கை நிலைமையை யுண்டுபண்ணவும். 52-53½.

இயற்கை நிலைமையைப் பெற்றவனுடைய இலக்ஷணம்.

எதையும் தாங்கக்கூடிய துணிவுள்ளவனாகவும், நிலையான தேஹவன்மையைப் பெற்றவனாகவுமுள்ள மனிதன் பிரக்ருதியென்கிற இயற்கை நிலைமையைப் பெற்று விட்டான் என்றறியலாம். 54.

## ஆறுவது அத்தியாயம்.

இனி பேஷஜ கல்பம் என்னும் அத்தியாயம்[1] விவரிக்கப்படும்:—

ஔஷதங்களுக்கு உபயோகமான சிறந்த மூலிகைகள்.

மருவென்கிற சதுப்பில்லாத நிலம், ஸாதாரண பூமி, ஸமவெளிப் பிரதேசம், நல்ல ஸாரமான மண்ணுள்ள நிலம் இவற்றிலும், சுடலை - பூஜைக்குரிய கிராம விருக்ஷங்கள் - ஆலயங்கள்-பாழி-புற்று இவற்றை விலக்கி மற்றப் பிரதேசங்களிலும், மிருதுவான பூமியிலும், பிரதக்ஷிணமாக ஜலம் சுற்றியோடும் ஸ்தலத்திலும், தர்ப்பை-வாஸனைப்புல் இவைகள் அடர்ந்த விடங்களிலும்,கலப்பைகளிட்டு உழப்படாத பூமியிலும், மிகப் பெரிய விருக்ஷங்களால் சூழப்படாத நிலத்திலும் முளைத்து விருத்தியான ஓஷதிகள் சிறந்தவையாகும்; மேலும் இயற்கையான சிறந்த நிறம் சுவை முதலியவைகளைப் பெற்றவையும், கிருமிகளால் அரிக்கப்படாதவையும், காட்டுத்தீயால் எரிக்கப்படாதவையும், துஷ்ட பூதங்களால் கெடுக்கப்படாதவையுமான மூலிகைகளைக் கிரஹிக்க வேண்டும்; நிழல், வெயில், தண்ணீர் இவை முதலியவற்றை அந்தந்த காலத்திற் பெற்றுச் செழித்தவையும், வெகு ஆழத்தில் இறங்கி மிகப் பெரிதாயுள்ள வேர்களைப் பெற்றவையும், வடதிசையை ஆச்ரயித்திருப்பவையுமான ஓஷதிகளும் ஔஷதங்களுக்குச் சிறந்தவையாம். 1-4.

மூலிகைகள்

மூலிகை முதலியவற்றை கிரஹிக்க வேண்டிய காலாதிகள்.

முற்கூறிய சிறப்புகளுள்ளவையென்பதையறிந்து கொண்ட பிறகு ஸ்வஸ்த்யயநம் முதலிய மங்களச் சடங்குகளைச் செய்து கொண்டவனும், சிரத்தை மேலிட்டவனும், பரிசுத்தமானவனும், போஜனம் செய்யாதவனும் நல்ல நிலைமையிலுள்ள மூலிகையைக் காலமறிந்து கிரஹிக்கவும்; அம்மூலிகைகளைப் பாலுணராமலிருக்கையிலேயே ஔஷதமாய் பக்குவம் செய்யவேண்டும்; அப்படிக்கு முடியாவிடில் கிரஹித்து ஒரு வருஷத்திற்கு மேற்படாமலுள்ள சரக்குகளை யுபயோகிக்கலாம்; ஆனால் வெல்லம், நெய், தேன், கொத்தமல்லிவிதை, திப்பிலி, வாய்விடங்கம் இவற்றை ஒரு வருஷம் வைத்திருந்து உபயோகிக்கக் கூடாது. 5, 6.

கிரஹிக்கக் கூடியபால் கோமூத்திரம் முதலியன.

வெகு நாட்களுக்கு முன்பு கன்றையீன்ற பசுவின் சுத்தமான பாலையும், தோஷமற்றதாயுள்ள மலம் அல்லது சாணத்தையும், இளம்வயதைப் பெற்று நல்ல பலசாலிகளாயுமுள்ள ஜந்துக்களின் தாதுக்களென்ன-பிசுபிசுப்புள்ள மற்ற பாகங்களென்ன - கொம்புகளென்ன - குளம்புகளென்ன இவை முதலானவற்றையும் ஔஷதங்களுக்காக கிரஹித்துக் கொள்ளலாம். 7.

பஞ்ச கஷாயங்கள்.

இவைணத்தைத் தவிர்த்து மற்ற ஐந்து இரஸங்களும் கஷாயங்களுக்கு ஆதாரமாய் அமைந்துள்ளன; ஸ்வரஸம், கல்கம், க்வாதம், ஹிமம், பாண்டம் என்று கஷாயங்களுடைய முறை ஐந்து வகைப்படும்; இவ்வைந்திலும் பாண்டத்திலும் ஹிமகாஷாயமும், ஹிமத்திலும் க்வாத கஷாயமும், க்வாதத்திலும் கல்கமும், கல்கத்தைவிட ஸ்வரஸமும் மேன்மேலும் வீர்யத்திற் சிறந்தவையாம். (1) அப்பொழுதே பசுமையாகக் கொண்டுவந்த ஓஷதிகளை இடித்து, வஸ்திரத்திலிட்டுப் பிழிந்து, வடிக்கட்டின இரஸம்

1. ஔஷதோபயோகமான சிறந்த மூலிகைகள், ஔஷதங்களை கிரஹிக்கும் காலாதிகள், கஷாயாதி பரிபாஷைகள், மாநபரிபாஷை இவை முதலியவற்றைவிவரிக்கும் அத்தியாயம்.

யாதொன்றுண்டோ அது ஸ்வரஸம் என்று வழங்கப்படும். (2) ஔஷதச் சரக்குகளை நன்றாக இடித்து, ஏதேனும் தகுந்த திரவ வஸ்துவைக் கலந்து செய்யப்படுவது கல்க கஷாயம் என்றும், அச் சீத கஷாயமே திரவ வஸ்துவின் சேர்க்கை யில்லாவிடில் சூர்ணம் என்றும், (3) நன்றாகக் கொதிக்க வைத்து பக்குவம் செய்துகொள்ளப்படுவது க்வாதம் என்றும், (4) இரவில் ஏதேனும் திரவத்தில் சேர்த்து ஊறவைத்து, மறு நாட்காலையில் வடிக்கட்டி யெடுக்கப்படுவது சீதகஷாயம் என்றும், (5) கஷாயத்திரவ்யங்களை ஒரு பாத்திரத்திலிட்டு, அதில் கொதிக்கும் ஜலத்தை ஊற்றி, அப்பொழுதே வடிக்கட்டிக் கொள்ளப்படுவது பாண்டகாஷயம் என்றும் வழங்கப்படும். 8—10¼.

பஞ்ச கஷாயங்களை யுபயோகிக்கும் பிரமாணங்கள்.

அப்பஞ்ச கஷாயங்களைப் பக்குவம் செய்யவும், உபயோகிக்கவும் அளவுகளையும், செய்முறைகளையும் வியாதி முதலியவற்றின் பலாபலங்களுக்கேற்ப ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்; அங்ஙனமே முனிவரது வசநமும் பின்வருமாறு:- 'ஔஷதங்களைப் பக்குவம் செய்யவும், உபயோகிக்கவும், அளவுகள் இவைதானென்று நிர்ணயிக்கமுடியாது; வியாதி, கோஷ்டம், தேஹவன்மை, வயது, தேசம், காலம் இவற்றின் நிலைமைகளை ஆலோசித்து அவ்வவற்றிற் கேற்றவாறு கஷாயாதிகளின் பிரமாணங்களையும், அவற்றின் பல வேறு முறைகளையும் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். பொதுப்பட்ட அளவைக் கூறு மிடத்து, ஸ்வரஸத்தின் அளவு நான்கு பல மாகவும், கல்கம் கால் பலமாகவும் உபயோகிக்கப்படலாம்; அதில் கல்கத்துடன் மூன்று பலம் திரவத்திரவ்யத்தையும் கூட்டி யுபயோகிக்கவேண்டும். 11—13.

க்வாதாதிகளைச் செய்யுமளவுகள்.

ஒரு பலமளவான கஷாயத்திரவியத்திற்கு எட்டு பலம் நீர் சேர்த்து, அதை நாலிலொரு பங்காக வற்றும்படியாகக் காய்ச்சி, க்வாதமென்கிற கஷாயத்தைப் பக்குவம் செய்து கொள்ளவும்; சீத கஷாயத்தில் ஒரு பலம் சரக்குக்கு ஆறு பலம் திரவம் சேர்த்து பக்குவம் செய்து கொள்ளவும். அப்பால் ஒரு பலங்கொண்ட சரக்குக்கு நான்கு பலம் திரவம் சேர்த்து பாண்ட கஷாயத்தைப் பக்குவம் செய்து கொள்ளவேண்டும். 14.

ஸ்நேஹ பாகங்களில் கல்காதிகளின் அளவுகள்.

ஸ்நேஹங்களைப் பக்குவம் செய்வதற்கான முறைகளைக் கூறுமிடத்து, அவற்றில் சேர்க்க வேண்டிய வஸ்து முதலியவற்றிற்கு அளவுகள் கூறப்படாமலிருந்தால், கல்கம் எவ்வளவு உண்டோ அதினும் ஸ்நேஹத்தை நான்கு பங்காகவும், ஸ்நேஹத்தினும் கஷாயாதி திரவவஸ்துக்களை நான்கு பங்காகவும் செய்து கொள்க. இதைப்பற்றி சௌநகர் என்கிற ஆசிரியர் கூறுவதாவது:— 'ஸ்நேஹமானது சுத்த ஜலத்தினாலும், க்வாதத்தினாலும், ஸ்வரஸத்தினாலும் பக்குவம் செய்யப்படுவதுண்டு; அவற்றுள் ஸ்நேஹம் சுத்த ஜலத்திற் பக்குவம் செய்யப்படுகையில் கல்கத்திரவ்யத்தை ஸ்நேஹத்தினும் நாலில் ஒரு பங்காகவும், க்வாதத்தில் பக்குவம் செய்யப்படுகையில் கல்கத்தை ஆறில் ஒரு பங்காகவும், ஸ்வரஸத்தில் பக்குவம் செய்யப்படுகையில் எட்டிலொரு பங்காகவும் சேர்க்கவேண்டும். ஸ்நேஹத்தில் சேர்க்கப்படும் திரவத்திரவ்யங்கள் நான்குக்கு அதிகப்படுமானால் அப்பொழுது ஒவ்வொரு திரவவஸ்துவையும் ஸ்நேஹத்திற்குச் சமஅளவாகச் சேர்க்கவேண்டும். 15—16½.

ஸ்நேஹ- லேஹ்ய பாகங்களுக்குள்ள பலவித நிலைமைகள்.

ஸ்நேஹம் பக்குவம் செய்யப்படுகையில் அதில் சேர்த்துள்ள கல்கத்தை விரல்களால் எடுத்துத் திரட்ட, அது விரல்களில் ஒட்டிக் கொள்ளாமல் எளிதில் திரண்டுவரவேண்டும்; ஸ்நேஹத்தைச் சிறிதளவு நெருப்பில் ஊற்ற அது சடசட வென்று சப்திக்கக் கூடாது; ஸ்நேஹத்தின் நிறமும் மணமும்

பரிசமும் இரம்யமாயிருக்க வேண்டும்; அந்த நிலைமையில் ஸ்நேஹம் நன்கு பக்குவமாய் விட்டதாகக் கருதி, அடுப்பிலிருந்து அதை இறக்கி விடவேண்டும். (1) இவற்றுள் க்ருதம் பக்குவமாகையில் நுரை முற்றிலும் அடங்கிப்போவது பாகமாய்விட்டதென்பதற்கு அறிகுறியாம். (2) தைலத்திற்கு முடிவில் நுரையுண்டாவது அதன் பாகக் குறியாகும். (3) லேஹ்யம் பக்குவமாகையில், அதை யெடுக்கும் போது நூல் போல் நீண்டு நெகிழ்ந்துவருவதும், ஜலத்தில் விட்டால் மூழ்கிப் போவதும், அதில் சிதறிப் போகாமல் திரண்டு நிற்பதும்அது தகுந்தவாறு பக்குவமானதற்கு அறி குறியாம். ஸ்நேஹ பாகங்களில் பாகமானது மந்தமென்றும், சிக்கணமென்றும், கரசிக்கணமென்றும் மூவகைப்படும்; (1) ஸ்நேஹத்தில் சேர்க்கப்பட்டுள்ள கல்கமானது விரல்களால் திரட்டக்கூடியதும் திரட்டமுடியாததுமான நிலைமையிலிருக்கும் போது அது மந்தபாக மென்றும், (2) சிறிது பிசுபிசுப்புடன் கூடியதாய் திரட்டும்போது விரல்களில் ஒட்டிக் கொள்ளக்கூடிய நிலைமையைப் பெற்றிருந்தால் அது சிக்கண மென்றும், (3) விரல்களால் திரட்டப்படுகையில் சிதறிப் போவதாகவும், சிறிது கறுநிறமாகவும் இருந்தால் அது கரசிக்கண மென்றும் கூறப்படும். அதற்கு மேல் அக்னியில் பக்குவம் செய்யப்படுமாஞல் அது தக்த்தபாக மாகும்; அது பரிஹரிக்கத் தகுந்த பாகம். மந்த பாகத்திலும் குறைவான நிலைமையிலுள்ள பாகம் ஆமபாகம் எனப்படும்; அது ஜாடராக்னிக்கு மாந்த்யத்தையுண்டுபண்ணி விடும். இவற்றுள் மந்தபாகமென்கிற மிருதுபாகம் நஸ்யசிகித்ஸைக்கும், கரபாகமானது அப்யங்கத்திக்கும், சிக்கண பாகம் பானம் செய்வது, வஸ்தி இவற்றிற்கும் உபயோகமானவையாம். 17—21.

சாணதி மானங்கள்.

சாணம்,[1] பாணிதலம்,[2] முஷ்டி,[3] குடவம்,[4] பிரஸ்த்தம்,[5] ஆடகம்,[6] திரோணம்,[7] வஹம்,[8] என்கிற இவை முறையே ஒன்றன்மேலொன்று நான்கு மடங்கு அதிக அளவு கொண்டவை யென்றறிக. 22.

சுஷ்க வஸ்துக்களிலும் ஆர்த்ர-திரவங்களை இரண்டு பங்காகச் சேர்த்தல்.

ஒரு யோகத்தில் சுஷ்கவஸ்துவைச் சேர்க்க வேண்டியிருக்க அதற்குப் பதிலாக ஈரச்சரக்கைச் சேர்க்கவேண்டி நேரிட்டால், உலர்ந்த வஸ்துவை எந்த அளவில் சேர்க்கவேண்டுமோ அதற்கு இரண்டு பங்கு அளவில் ஈரமான சரக்கைச் சேர்க்க வேண்டும். அங்ஙனமே சுஷ்கவஸ்துக்களும் ஒரு ஔஷதமுறையில் சேர்க்கப்படவேண்டுமென்று பொதுவாகக் கூறப்படுமாஞல், திரவத்திரவ்யங்களையும் குடவம் என்கிற அளவு முதற்கொண்டு இரண்டு மடங்காகவே[9] சேர்க்கவேண்டும். $22\frac{1}{2}$.

1. சாணம்—இரண்டு மாஷப் பிரமாணம்; இதுவே கோலம், க்ஷுத்ரகம், வடகம், திரங்க்ஷணம் என்றும் கூறப்படும்.

2. பாணிதலம்—இதற்கு கர்ஷம், அக்ஷம், பிசு, திந்துகம், ஷோடசிகா, ஹம்ஸபதம், சுமத்யம், ஸுவர்ணம், கவளக்ரஹம், உதும்பரம் என்றும் பெயர்.

3 முஷ்டி—ஒரு பலம்; சதுர்த்திகை, பிரகுஞ்சம், பில்வம் என்றும் கூறப்படும்.

4. குடவம்—அரைச் சேர்; அர்த்த சராவம், அஞ்ஜலி என்றும் கூறப்படும்.

5. பிரஸ்த்தம்—பதினறு பலம்; இரண்டு சராவம் (சேர்) கொண்ட அளவு.

6. ஆடகம்—இதற்கு பாஜநம், காம்ஸ்யபாத்திரம் என்றும் பெயர்.

7. திரோணம்—கடம், கலசம், இராசி, நல்வண்ம், உந்மானம் என்றும் கூறப்படும்.

8. வஹம்—திரோணீ, கோணீ என்றும் கூறப்படும்.

9. குடவ அளவாகவும் அதற்கு மேற்பட்ட அளவாகவும் திரவவஸ்துக்களைச் சேர்ப்பதாஞல், அப்பொழுதுதான் அவற்றை இரண்டு மடங்காகச் சேர்க்க வேண்டுமென்பது கருத்து.

ஔஷதமுறைகளில் திரவமோ அளவு முதலியவையோ குறிப்பிடாவிடில் செய்ய வேண்டிய வகை.

(1) ஒரு ஔஷத முறையில் சரக்குகளை அரைக்கவேண்டியிருக்கையிலும், அல்லது கிளறிப்பக்குவம் செய்ய வேண்டியிருந்தாலும் அவற்றில் இன்ன திரவவஸ்து சேர்க்கவேண்டுமென்று குறிப்பிடாமலிருந்தால், ஜலத்தையே அதற்கு உபயோகித்துக் கொள்ளவேண்டும். (2) ஸ்நேஹங்களைப்பக்குவம் செய்கையில் திரவவஸ்து குறிப்பிடப்படாவிட்டாலும்,ஜலத்தைத்தான் ஊற்றி பக்குவம் செய்ய வேண்டும். (3) எந்த ஔஷத முறையில் சரக்குகளுக்கு அளவுகள் குறிப்பிடப்படவில்லையோ, அங்கு அச்சரக்குகளையெல்லாம் ஸமபாகமாகச் சேர்க்கவேண்டும். (4) ஔஷதச்சரக்குகளைக் கூறிவிட்டு, அவற்றை இன்ன விதமாகப் பக்குவம் செய்யவேண்டுமென்று குறிப்பிடாத பக்ஷத்தில், அதைக் கல்கௌஷதமாகப் பக்குவம் செய்து கொண்டு விடலாம். 23, 24.

வடகம்முதலிய மாநங்கள்.

இரண்டு சாணங்கள் கொண்ட அளவு வடகம் எனப்படும்; அதுவே கோலம், பதரம், திரங்க்ஷணம் என்றும் கூறப்படும் இரண்டு வடங்கள் கொண்ட அளவு அக்ஷம் எனப்படும்; இது பிசு, பாணிதலம், ஸுவர்ணம், கவளக்கிரஹம், கர்ஷம், பிடாலபதகம், திந்துகம், பாணிமாநிகை என்றும் கூறப்படும்; இங்ஙனம் கூறும்போது ஒவ்வொரு அளவின் பெயருக்கும் வெவ்வேறு சொற்கள் கூறப்படுகின்றனவாயினும், பொருளில் வேற்றுமை கிடையாது இரண்டு பிசுக்கள் கொண்டது சுக்தி யென்றும், அஷ்டமிகை யென்றும் வழங்கப்படும். ஒரு பலம் என்பதற்கு பிரகுஞ்சம், பில்வம், முஷ்டி, ஆம்ரம், சதுர்த்திகை என்பவை பிரதி பதங்கள். இரண்டு பலங்கள் கொண்டது ஒரு பிரஸ்ருதம் எனப்படும். இரண்டு பிரஸ்ருதங்கள் சேர்ந்தது ஓர் அஞ்ஜலியாகும். இரண்டு அஞ்ஜலிகள் கொண்டது ஒரு மாநிகையாகும். ஆடகம் என்பதே பாஜநமென்றும், கம்ஸமென்றும் கூறப்படும். இரண்டு ஆடகங்கள் கொண்டதான திரோணமென்பதே கும்பம், கடம், அர்மணம் என்றும் வழங்கப்படும். நூறு பலங்கொண்ட அளவு ஒரு துலாம். இருபது துலாங்கொண்டது ஒரு பாரமாகும். 25—28.

இமய - விந்திய மலைகளைச் சார்ந்த ஔஷதிகளின் குணபேதங்கள்.

இமயமலையாலும், விந்தியமலையாலும் பாரத பூமியின் பெரும்பான்மையான பாகமும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது; இவற்றுள் முதலிற் கூறிய பர்வதப் பிராந்தத்தை ஆச்ரயித்துள்ள ஔஷதிகள் சீதவீர்யாதி ஸௌம்ய குணங்கள் அடங்கியவையாகவும், பத்தியமாகவும் இருக்கும்; விந்தியபர்வதப் பிராந்தங்களை ஆச்ரயித்தவை ஆக்நேயமென்கிற உஷ்ணவீர்யமுள்ளவையாம். 29.



# பிழை திருத்தம்.

[குறிப்பு:—கீ-கீழிருந்து படிப்பது. மே-மேலிருந்து படிப்பது. மா-மார்ஜனில் சேர்ந்தது.]

| பிழை. | திருத்தம் | பக்கம். | பகுதி. | | வரி. |
|---|---|---|---|---|---|
| பஞ்ரமூலம் | பஞ்சமூலம் | 15 | இடது | பகுதி. | 2 கீ |
| பாணிங்யாதி | பர்ணிங்யாதி | 16 | ஷை | ,, | 15-கீ-மா |
| ப்ரியானம் | ப்ரியாளம் | 39 | வலது | ,, | 7-கீ |
| க்வதம்ஷ்ட்ரா | ச்வதம்ஷ்ட்ரா | 40 | ஷை | ,, | 22மே-மா |
| பஞ்சகோலா க்ருதம் | பஞ்சகோலாதி க்ருதம் அல்லது ஷட்பல க்ருதம் | 55 | இடது | ,, | 8-மே-மா |
| மேத்மம் | மேத்யம் | 56 | ஷை | ,, | 9-மே |
| ராரிஷ்டம் | தக்ராரிஷ்டம் | 86 | ஷை | ,, | 5-கீ-மா |
| கலங்கள் | காலங்கள் | 101 | வலது | ,, | 9-மே-மா |
| கச்சுய்பட்டை | கச்சுப்பட்டை | 103 | ஷை | ,, | 5-கீ |
| நாவில் | நாவில் | 144 | இடது | ,, | 6-மே |
| செய்யவிக் | செய்விக் | 156 | ஷை | ,, | 1-கீ |
| திரக்ஷாதி | திராக்ஷாதி | 164 | வலது | ,, | 7-மே-மா |
| படாதி | பாடாதி | 168 | இடது | ,, | 14 மே-மா |
| அஷ்டங்க ஸங்காஹ | அஷ்டாங்க ஸங்க்ரஹ | 183 | ஷை | ,, | 4-கீ |
| கருஞ்சிவதை | கருஞ்சிவதை | 210 | வலது | ,, | 6-கீ-மா |
| ஐந்தாவது | ஆறுவது | 232 | இடது | ,, | தலைப்பில் |

# அஷ்டாங்க ஹ்ருதயத்தின்

## சிகித்ஸா - கல்ப - ஸ்த்தாநங்களுக்கு

# விஷய அகராதி.

உ

கா



கி

வீ



வெ



வே



வை



வ்



ஜா

வி

## வீ



## வெ



## வே



## வை



## வ்



## ஜா

## வீ



## வெ



## வே



## வை



## வ்



## ஜா